# சங்க இலக்கியத்தில் பண்பாட்டுப் பதிவுகள்

திருச்சிராப்பள்ளி, பாரதிதாசன் பல்கலைக்கழக
முனைவர் பட்டப் படிப்பிற்காக
அளிக்கப்பெறும் ஆய்வேடு


ஆய்வாளர்:

**இரா.ஜயப்பன், எம்.ஏ.**

**பதிவெண்: 35100**

ஆய்வு நெறியாளர்

**முனைவர் வீ.சிவபாதம்**

இணைப் பேராசிரியர்






தமிழ் உயராய்வு மையம்

**அ.வீரையா வாண்டையார் நினைவு**

**திரு புட்பம் கல்லூரி [தன்னாட்சி],**

பூண்டி – 613 503, தஞ்சாவூர் மாவட்டம்.


**ஜூன் – 2011**

**முனைவர் வீ.சிவபாதம்,** எம்.ஏ., எம்.ஃபில்., பிஎச்.டி.
இணைப் பேராசிரியர் - ஆய்வு நெறியாளர்,
தமிழ் உயராய்வு மையம்,
அ.வீரையா வாண்டையார் நினைவு
திரு புட்பம் கல்லூரி (தன்னாட்சி),
பூண்டி-613 503, தஞ்சாவூர் மாவட்டம்.

# நெறியாளர் சான்றிதழ்

**"சங்க இலக்கியத்தில் பண்பாட்டுப் பதிவுகள்"** என்ற தலைப்பில் **திரு.இரா.ஜயப்பன்** (பதிவெண்: 35100) அவர்களால் எனது மேற்பார்வையில் 2006-2011 ஆம் கல்வியாண்டில் பிஎச்.டி., முழுநேர ஆய்வாளராக ஆய்வு நிகழ்த்தியதின் விளைவே இந்த ஆய்வேடு. இஃது இதற்கு முன் வேறு எந்த ஆராய்ச்சிப் பட்டத்திற்காகவும் அளிக்கப்பெறவில்லை என்று சான்றளிக்கிறேன்.

இடம் : பூண்டி
நாள் : 29/6/2011

(வீ.சிவபாதம்)
ஆய்வுநெறியாளர் கையொப்பம்
முனைவர். வீ. சிவபாதம்,
இணைப்பேராசிரியர்,
அ.வீ.வா.நி. திரு புட்பம் கல்லூரி (தன்னாட்சி)
பூண்டி, தஞ்சாவூர் - 613 503.

**இரா.ஜயப்பன்,**
முனைவர் பட்ட ஆய்வாளர்,
(பதிவெண்: 35100)
தமிழ் உயராய்வு மையம்,
அ.வீரையா வாண்டையார் நினைவு
திரு புட்பம் கல்லூரி (தன்னாட்சி),
பூண்டி 613 503,
தஞ்சாவூர் மாவட்டம்.

# ஆய்வாளர் உறுதிமொழி

**“சங்க இலக்கியத்தில் பண்பாட்டுப் பதிவுகள்”** என்னும் தலைப்பில் முனைவர் பட்டத்திற்காக எழுதப்பட்ட இவ்வாய்வேடு எனது சொந்த முயற்சியால் உருவானது என்றும், இதற்குமுன் வேறு எந்த ஆராய்ச்சிப் பட்டத்திற்கும் இவ்வாய்வேடு அளிக்கப்பெறவில்லை என்றும் உறுதியளிக்கிறேன்.



இடம் : பூண்டி

நாள் : 29/6/2011

(இரா.ஜயப்பன்)
ஆய்வாளர்

இடக்கை பெருவிரல் பதிவு

# நன்றியுரை

முனைவர் பட்ட ஆய்வு மேற்கொள்ள அனுமதி வழங்கிய திருச்சிராப்பள்ளி, பாரதிதாசன் பல்கலைக்கழகத்திற்கு நன்றி

என் போன்றோர் உயர்கல்வி கற்க வாய்ப்பினை நல்கிய அ.வீரையா வாண்டையார் நினைவு திரு புட்பம் கல்லூரியின் செயலாளர் மற்றும் தாளாளர் **"மனிதருள் புனிதர்" ஸ்ரீமான் ஐயா கி.துளசி ஐயா வாண்டையார்** அவர்களுக்கு என் முதல் நன்றியை தெரிவித்துக் கொள்கிறேன்.

கல்லூரியின் முதல்வர் **முனைவர் சி.சின்னையன்** அவர்களுக்கும், தமிழ்த்துறை முன்னால் தலைவர் **முனைவர் ஆ.த.முத்தையா** அவர்களுக்கும், தமிழ்த்துறைத் தலைவர் **முனைவர் க.மனோகரன்** அவர்களுக்கும் காலத்தின் அருமையைக் கனிவாக உணர்த்தி என்னை நெறிப்படுத்திய நெறியாளர் **முனைவர் வீ.சிவபாதம்** அவர்களுக்கும் என் பணிவான நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

பல்கலைக்கழகம் நியமித்த ஆய்வுக்கான அறிஞர் குழுவில் இடம் பெற்று இயல் பாகுபாட்டில் அரிய செய்திகளையும் ஆலோசனைகளையும் வழங்கிய திருப்பனந்தாள் **எஸ்.கே.எஸ்.எஸ்.கலைக்கல்லூரியின்** தமிழ்த்துறை இணைப்பேராசிரியர் **முனைவர் சி.மனோகரன்** அவர்களுக்கு என் நன்றி என்றும் உரியது.

ஆய்வு தொடர்பான அரிய கருத்துக்களை எனக்கு வழங்கி வழி காட்டிய பேராசிரியப் பெருமக்கள் அனைவருக்கும் என் பணிவான நன்றியை உரித்தாக்கிக் கொள்கிறேன்.

கல்வி மேம்பாட்டிற்காக அயராது உழைத்து என்னை உயர்த்திய என் தந்தை **திரு.ரெ.இராசேந்திரன்,** ஈன்ற பொழுதிலும் பெரிதுவக்கும் தாய் **திருமதி.இரா.யசோதா** அவர்களுக்கும், என் நெஞ்சார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். ஆய்வுப்பணிக்காக எனக்கு புத்தகங்களைப் படித்துக் காண்பித்தும். என் அறிவுறுத்தலின்படி எழுத்துப் பணியை செய்தும் முழு ஒத்துழைப்பு நல்கிய என் உடன்பிறந்த சகோதரன் **இரா.செல்வேந்திரன்** அவர்களுக்கு என் நன்றி என்றென்றும் உரியது.

ஆய்வின் பொருட்டு எனக்கு அவ்வப்போது ஆக்கமும் ஊக்கமும் அளித்த **ம.இராமகிருட்டிணன்** அவர்களுக்கும் என் நன்றி. மேலும் செவ்வனே ஆய்வுப்பணி சிறக்க உதவி புரிந்த நண்பர்கள் அனைவருக்கும் என் உளமார்ந்த நன்றி.

எனது ஆய்வேட்டினை நன்முறையில் அச்சிட்டுக் கொடுத்த **சந்தோஷ் கம்ப்யூட்டர்ஸ், செல்வி.குறள் தமிழ்மொழி** அவர்களுக்கும் என் நன்றியை உரித்தாக்கிக் கொள்கிறேன்.

**இரா.ஜயப்பன்**

## சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| அக | - | அகநானூறு |
| அகத் | - | அகத்திணை இயல் |
| இளம் | - | இளம்பூரணர் |
| உ.வே.சா. | - | டாக்டர் உ.வே.சாமிநாதையர் |
| ஐங். | - | ஐங்குறுநூறு |
| கலி. | - | கலித்தொகை |
| கற். | - | கற்பியல் |
| குறள் | - | திருக்குறள் |
| குறிஞ்சி | - | குறிஞ்சிப்பாட்டு |
| குறுந். | - | குறுந்தொகை |
| சிலம்பு | - | சிலப்பதிகாரம் |
| சிறுபாண். | - | சிறுபாணாற்றுப்படை |
| சை.சி.நூ.ப.கழகம் | - | சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் |
| தொல். | - | தொல்காப்பியம் |
| நற். | - | நற்றிணை |
| நெடுநல். | - | நெடுநல்வாடை |
| பட்டினம் | - | பட்டினப்பாலை |
| பதிற். | - | பதிற்றுபத்து |
| பரி | - | பரிபாடல் |
| பெரும்பாண் | - | பெரும்பாணாற்றுப்படை |
| மேலது | - | மேலே உள்ளது |

# பொருளடக்கம்

# முன்னுரை

ஒவ்வொரு காலக்கட்டத்திலும் நிலவும் காலச்சூழலுக்குத் தக்கவாறு ஒரு சமூகம் பல மாற்றங்களைப் பெற்றுத் திகழ்வது உலக இயல்பாகும். இலக்கியங்கள் தான் தோன்றிய காலத்தில் உள்ள சமூகச் சூழலை ஒளிவு மறைவின்றிப் பேச வேண்டும். அத்தகைய இலக்கியங்களே எல்லா தரப்பினராலும் புகழ்ந்து பாராட்டப்படும். தமிழ்ச் சமுதாயம் பல காலங்களைக் கடந்து பண்பட்டு வளர்ச்சியடைந்துள்ளது.

ஏறத்தாழ இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு தமிழகத்தில் பாண்டிய மன்னர்களால் சங்கம் வைத்துத் தமிழ் வளர்த்த காலம் சங்க காலம் ஆகும். அப்போது தோன்றியவைதான் நற்றிணை முதலான எட்டுத்தொகை நூல்களும், திருமுருகாற்றுப் படை முதலான பத்துப்பாட்டு நூல்களுமாகிய சங்க இலக்கியங்களாகும். இவை தாம் தோன்றிய காலத்தில் இருந்த சமூக நிலையைத் தெளிவாகக் கூறுகின்றன.

சங்க இலக்கியம் மனிதன் பின்பற்ற வேண்டிய பண்பாட்டுக் கூறுகளையும் சங்க காலத் தமிழர்கள் தங்கள் வாழ்வில் கடைபிடித்து வந்த பண்பாட்டு நெறிகளையும் தன்னகத்தே பதிவு செய்துள்ளது. அச்செய்திகளை மையமாகக் கொண்டு சங்க இலக்கியத்தில் பண்பாட்டுப் பதிவுகள் என்னும் பொருளிலான ஆய்வு மேற்கொள்ளப் பட்டுள்ளது.

**ஆய்வு எல்லை :**

சான்றோர்களாலும், அறிஞர் பெருமக்களாலும், வகுக்கப்பட்டுள்ள சங்க இலக்கியங்களான பத்துப்பாட்டும், எட்டுத்தொகையுமாகிய மூலநூல்களும் அவை தொடர்பாக எழுந்த ஆய்வு நூல்களும் எல்லைகளாக அமைகின்றன.

**ஆய்வு நோக்கம் :**

ஆய்வுப் பார்வையின்றிச் சங்க இலக்கியம் பயில்வார்க்கு அக்கால நிகழ்வுகள் குறித்த சில மாயத்தோற்றம் புலப்படுவது இயல்பாகும். எடுத்துக்காட்டாக, அக இலக்கியங்களைப் பயிலும் போது பெருவழி காதல் திருமணம் நிகழ்ந்தது போலும் என்ற சிந்தனை தோன்றும். ஆனால், இது போன்ற தெளிவின்மையைக் களைவதே இவ்வாய்வின் நோக்கமாகும்.

சங்கக் காலத்தின் பழக்கவழக்கங்கள், பண்பாடு, நாகரிகம் போன்றவற்றை உலகறியச் செய்ய வேண்டும். மாறிவரும் உலகச் சூழலுக்கேற்ப மக்களின் வாழ்வில் நிலைத்த அமைதியையும், மகிழ்ச்சியையும் ஏற்படுத்த சங்க இலக்கியம் கூறும் பண்பாட்டுச் செய்திகள் துணை நிற்கும் என்பதால் அவற்றை வெளிக்கொணர்வது இன்றியமையாததாகிறது. தமிழின் வளர்ச்சிக்கும், தமிழின மேம்பாட்டுக்கும் சங்க இலக்கியம் ஒரு பெட்டகமாகத் திகழ்வதால் அதைப் போற்றிப் பாதுகாத்துப் பல ஆய்வுகள் நிகழ்த்தப்பட வேண்டியது நம் கடமையாகும்.

**ஆய்வு அணுகுமுறை :**

பகுப்பாய்வு முறையில் செய்திகளைப் பகுத்தும், தேவையான இடங்களில் தக்க சான்றுகளைக் காட்டிச் சான்று விளக்க ஆய்வுமுறையிலும், வரலாற்று ஆய்வு முறையிலும், திறனாய்வு முறையிலும் இந்த ஆய்வேடு அமைந்துள்ளது.

**ஆய்வுப் பயன் :**

பண்பாடு பற்றிய தெளிவினைப் பெறவும், தனிமனிதப் பண்பாடு, அறம் குறித்து தமிழர்கள் கொண்டிருந்த சிந்தனைகளை அறிந்து கொள்ளவும், மனையறம் பற்றியும் சங்கக் கால மகளிர் பற்றியும் விளக்கிக் கொள்ளவும் இந்த ஆய்வு பயன்படும். இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு இருந்த சமூகம் பற்றியும், அதில் காணப்பட்ட சமயக் கோட்பாடுகள் பற்றியும் தெளிவுபடுத்துகிறது. வாழ்வின் அடிப்படைத் தேவைகளான உணவு, உடை,

உறையுள் ஆகியவற்றைச் சங்கக் கால மக்கள் உருவாக்கிய திறம் குறித்தும், சங்கத் தமிழரின் வாழ்வியல் சூழலைக் காணவும், பண்டைக் காலத்தில் கலைகளின் செல்வாக்கு, மகிழ்வினைகள் குறித்துத் தெரிந்து கொள்ளவும் இந்த ஆய்வு பயன்படும்.

**கருதுகோள் :**

சங்க இலக்கியம் அக்காலச் சமூக நிகழ்வுகளை உள்ளது உள்ளபடி படம்பிடித்துக் காட்டுகின்றது. இது சங்க இலக்கியத்தின் உண்மைத்தன்மை, தூய்மைநிலை ஆகியவற்றைக் காட்டுகின்றது. அதனடிப்படையில் சில இடங்களில் பண்பாட்டுக்கு முரண்பட்ட செய்திகள் பதியப்பட்டுள்ளன. பரத்தமை ஒழுக்கம், கொடுங்கோள் ஆட்சி, போர் முடிவின் நிகழ்வுகள், பெண்கொலை புரிந்தமை போன்றவற்றை இதற்குச் சான்றாகக் காட்டலாம். இவை அக்காலத்திய சமூக நிகழ்வுகளாகும் என்பதைக் கருத்திற் கொண்டு பண்பாடு சார்ந்த பதிவுகளை மட்டும் வெளிக்கொணர இவ்வாய்வு நிகழ்த்தப்பட்டுள்ளது.

**இயல் பகுப்பு :**

சங்க இலக்கியத்தில் பண்பாட்டுப் பதிவுகள் என்னும் பொருளிலான இவ்வாய்வு ஐந்து இயல்களாகப் பகுத்து மேற்கொள்ளப்பட்டுள்ளது. அவை வருமாறு,

- *இயல் 1 :* தனிமனிதப் பண்பாடும், தமிழர் போற்றிய அறமும்.
- *இயல் 2 :* மனைமாட்சியும் மகளிர் மாண்பும்.
- *இயல் 3 :* சமூக அமைப்பும், சமயக் கோட்பாடும்.
- *இயல் 4 :* வாழ்வியல் ஆதாரங்களும், வாழ்க்கைப் போக்கும்.
- *இயல் 5 :* கலையும் களிப்பும்.

# இயல் - ஒன்று

## தனிமனிதப் பண்பாடும் தமிழர் போற்றிய அறமும்

**முன்னுரை :**

ஒவ்வொரு அமைப்பிலும் தனிமனிதனே அதன் தொடக்க நிலையாகத் திகழ்வதால் அவ்வமைப்புத் திறன்பட செயலாற்றத் தனிமனிதப் பண்பாடு இன்றியமையாததாகிறது. இதனைக் கருத்தில் கொண்டும், தமிழர்கள் பின்பற்றிய, உலகோர் பின்பற்ற வேண்டிய அறங்கள் சங்க இலக்கியத்தில் காணப்படுகின்றன. அவை தனிமனிதப் பண்பாட்டோடு கொண்ட இயல்பு காரணமாகவும் இவ்வியல் முதலில் வைக்கப்பட்டுள்ளது.

உலக நலன் கருதி பண்டைத் தமிழர்கள் வாழ்ந்ததால் ஒவ்வொரு தனிமனிதனும் உயர்ப் பண்பாளராகவும் அறச்சிந்தனையாளராகவும் இருத்தல் தேவையான ஒன்று என்று கருதினர். இவர்களின் சிந்தனையை வெளிப்படுத்தும் வகையில் சங்க இலக்கியம் அமைந்துள்ளது. உலகையே ஒரு குடையின் கீழ் இணைக்கும் ஐ.நா. அமைப்பில், 'யாதும் ஊரே யாவரும் கேளிர்' (புறம் 192:1)என்ற வரி இடம்பெற்றிருப்பதை இதற்குச் சான்றாகக் கூறலாம். தமிழர்களின் சிந்தனையை உலகமே அவாவுகிறது என்பதை இந்நிகழ்வு காட்டுகிறது. இந்த அடிப்படையில் தனிமனிதன் போற்றிய உயர் பண்புகளையும், அறச்சிந்தனைகளையும், வெளிப்படுத்துவதே இவ்வியலின் நோக்கமாக விளங்குகிறது.

**பண்பாடு சொல்லும் பொருளும் :**

'பண்பு எனப்படுவது பாடறிந் தொழுகல்' என்பர்.[1] பண்பாடு எனுஞ்சொல் அண்மைக்கால ஆக்கமாகும்.[2] எனினும் பண்பு, பண்புடைமை பண்படுத்துதல் முதலிய சொற்கள் இதற்குமுன் வழக்கில் உள்ளவையாகும். திருவள்ளுவர் அன்பு, நாண், ஒப்புரவு, கண்ணோட்டம், வாய்மை ஆகிய ஐந்து பண்புகளின் கூட்டையே பண்புடைமை என்பார்.[3] வித்திடற்கும்,

விளைதற்கும் ஏற்றவாறு நிலந்திருந்துதலையும், நற்கருத்துகள் ஊன்றுதற்கும், தோன்றுதற்கும் இசைந்தவாறு மனம் செம்மைப்படுதலையும் குறிக்கப் 'பண்படுதல்' என்னும் சொல்லைக் கையாள்வதை ஆங்கிலம், தமிழ் இரண்டிலும் காணலாம்.

பண்பாடு என்பதற்குரிய விளக்கத்தை முதன்முதலாக ஆங்கிலேயத் தொல்லுயிர் நூல் அறிஞர் சர் எட்வர்ட் டைலர் என்பவர் கி.பி. 1871 இல் எடுத்துரைத்தார். "சமூக உறுப்பினன் என்ற முறையில் மனிதன் பெற்ற அறிவு, நம்பிக்கை, கலை, சட்டம், ஒழுக்க நெறிகள், வழக்கங்கள், தகுதிகள், பழக்கங்கள் ஆகியவற்றின் முழுத் திரட்சியே பண்பாடாகும்" என்பது அவரின் விளக்கமாகும்.[4] 1950 ஆம் ஆண்டில் ஆல்பர்ட் நோபல், கிளைடு கிளக்கான் என்னும் அறிஞர் இருவர், பண்பாடு என்பதற்குத் தொல்லுயிர் நூலாரும், சமூக அறிவியல் நூலாரும் அளித்த இருநூறு விளக்கங்களை ஆராய்ந்த பின்னர் மொழி, கலை ஆகியவற்றின் வழியாகப் பெறப்படும் மரபுவழிப் பண்புகள், ஒழுகலாறுகள், கருத்துகள் ஆகியவை குறிப்பிட்ட மனிதக் குழுவின் அடையாளமாக விளங்குவதே 'பண்பாடு' என்று குறித்தனர்.[5]

வழிமுறை வழிமுறையாக மனிதக்குழுக்கள் தம்பிறங்கடையினரும் கடைபிடிக்கும் வகையில் ஒழுகிவரும் ஒழுகலாறு அல்லது வாழ்நெறியே பண்பாடு என்று சிலர் விளக்கம் கூறினர்.[6] அறிவாற்றல், சிந்தனைத்திறன், நம்பிக்கைகள் ஆகியன பண்பாட்டின் அடித்தளங்கள் எனினும் மக்கள் வாழுகின்ற சூழலும் இவற்றோடு எண்ணத்தக்கதாகும். வட்டமான வீடுகளையே கட்டிப் பழக்கப்பட்ட எஸ்கிமோ இனத்தவரின் குழந்தைகளுக்கு 'வீட்டு மூலை' என்பது தெரிவதில்லை. பாலை நிலத்தில் வாழும் எயினர்களுக்கு ஆற்றுப்பாய்ச்சல், நிலத்தடிநீர் போன்றவற்றின் அறிமுகம் குறைவாகவே இருக்கிறது.[7] மேற்கூறியன எல்லாம் ஆராய்ந்த நிலையில் சமூகத்தின் வாழ்நெறியாக வெளிப்படுவதே பண்பாடு என்பது விளங்கும்.

ஒரு சமூகத்தின் மதிப்புகளைப் பாதுகாத்து வழிமுறையினரும் பேணத்தகும் அளவில் கற்பிப்பது. அச்சமூகத்தின் பண்பாடாகும். பண்பு, பண்பாடு என்னும் சொற்களை ஒத்த 'நாகரிகம்' என்னும் சொல் தமிழிலக்கியங்களில் காணப்படுகிறது. நகர்தல், ஊர்தல் என்று இயங்குதல் குறித்த சொற்களுக்கும் திருந்திய வாழ்க்கைச் செம்மைக்கும் தொடர்புள்ளது. உயிரின் இயற்கை தொழிற்படுதல் ஆதலின், இயக்கமின்றிக் கிடவாது செயற்படும் தன்மையை இச்சொற்கள் காட்டுகின்றன. நகர வாழ்க்கையே திருந்திய வாழ்க்கை என்ற கருத்தின் அதனடிப்படையாக நாகரிகம் என்ற சொல் தோன்றியதென்பர்.[8] நாகரிகத்திற்கும், பண்பாட்டிற்கும் உள்ள வேறுபாட்டை அறிஞர் தேவநேயப் பாவாணர் கீழ்க்கண்டவாறு விளக்கியுள்ளார்.

''நாகரிகம் என்பது திருந்திய வாழ்க்கை. அது எல்லா பொருள்களையும் தமக்கே பயன்படுத்துவது. பண்பாடு என்பது திருந்திய ஒழுக்கம். அது எல்லா பொருள்களையும் தமக்கும், பிறர்க்கும் பயன்படுத்துவது. இலக்கணப் பிழையின்றிப் பேசுவதும், எல்லா வகையிலும் துப்புரவாய் இருப்பதும், காற்றோட்டமுள்ளதும் உடல்நலத்திற்கு ஏற்றதுமான வீட்டிற் குடியிருப்பதும், நன்றாய்ச் சமைத்து உண்பதும் பிறருக்குத் தீங்கு செய்யாமையும், நாகரிகக் கூறுகளாம் எளியாரிடத்தும், இனியதாகப் பேசுவதும், புதியதாய் வந்த ஒழுக்கமுள்ள அயலாரை விருந்தோம்புவதும், இரப்போர்க்கிடுவதும் இயன்றவரை பிறருக்குதவுவதும், கொள்கையும் மானமுங்கெடின் உயிரை விடுவதும் பண்பாட்டுக் கூறுகளாம். நாகரிகமில்லாதவரிடத்தும் பண்பாடிருக்க வாய்ப்பு உண்டு'' என்பதையும் இவ்வாசிரியர் விளக்கியுள்ளார்.[9]

**சான்றாண்மை :**

உலகம் அல்லவை தவிர்த்து நல்லவை போற்றி ஒழுக வழிகாட்டிச் செல்லும் பெரியோரே சான்றோர் ஆவர். தெய்வ வழிபாடாயினும், மக்கள் வாழ்க்கையில் நடைபெறும் திருமணம் முதலிய சடங்குகளாயினும் எல்லாம்

சான்றோரை முன்னிட்டே ஆற்றப்பெறுகின்றன. பெரியோர் சென்ற நெறியே பின்புள்ளாருக்கும் மேல்வரிச் சட்டமாக விளங்கும். தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் தன் பகைவரை வென்று அவரை அறநெறியில் நிறுத்த காலத்து, பெரியோர் நடந்த அடிப்பாட்டின் வழிகாட்டித் திருத்துகிறான் என்று மதுரைக் காஞ்சி கூறுகிறது.[10]

சான்றோர், ஆன்றோர் என்பன நிறைவு என்னும் பொருள் தரும் சால், ஆல் என்னும் பண்பின் அடியாக வந்த பெயராகும். இப்பெயர்களுக்கு எல்லா வகை நற்குண நற்செயல்களாலும் நிரம்பியவர் என்பது பொருள். இவர் நூலறி புலவர் ; உலக நடப்புகளை நன்குணர்ந்தவர் ; குற்றமற்ற சிறப்புடைய பெருங்குணங்களுக்கு நிலைக்களமானவர். எனவே, இவர் ▯புகர் அறு சிறப்பின் செம்மைச் சான்றோர்' (மதுரை 764-765) எனப் புகழப்படுவர். இவர்கள் சால்பும் மேம்பாடும் ஒருங்கே கொண்டவர் ஆவர்.[11] இவர்கள் ஐம்புலனும் அடங்கிய கோட்பாட்டினராய் விருப்பு வெறுப்பு இன்றி யாவர்க்கும் ஒத்த பெருநெறியில் செல்லும் பெற்றியராவர். புலவர் பிசிராந்தையார் தமக்கு யாண்டு பல ஆகியும் நரை இல்லாமைக்குக் கூறிய காரணங்களில், எல்லாவற்றிற்கும் மேலாகத் தாம் வாழும் ஊரில் சான்றோர் பலராக வாழ்வதுதான் என்கிறார்.[12]

இதனால் சான்றோர்களால் அமைதியான வாழ்வு உளதாதல் பெறப்படும். இவர், 'சால்பு எதிர்கொண்ட செம்மையோர்'[13] ஆவர்.

'அறிகரி பொய்த்தல் ஆன்றோர்க்கு இல்லை'[14]

'.................................... சான்றோர்

புகழும் முன்னர் நாணுப ;

பழியாங்கு ஒல்பவோ காணுங்காலே'[15]

'பேணுப பேணார் பெரியோர் என்பது

நாணுத் தக்கன்று, அது காணுங்காலை'[16]

'..................................... சான்றோர்

கடன்நிலை குன்றலும் இலர்' என்று உடன் அயர்ந்து

உலகம் கூறுவது உண்டு.[17]

'கழியக் காதலர் ஆயினும், சான்றோர்

பழியொடு வரூஉம் இன்பம் வெஃகார்.'[18]

என வருவன சான்றோருடைய பண்பின் விழுப்பத்தைக் காட்டும். சான்றோர் தம் நலனைச் சிந்தை செய்யாது சமுதாய நலன் நாடும் பேரருளாராக விளங்கும் பண்பாட்டினர். இப்பண்பாட்டினை, நற்றிணையும், அகநானூறும், புறநானூறும் புகழ்ந்துரைக்கின்றன.[19]

சான்றோர் பிறர்க்கு ஏற்படும் துன்பத்தையும் தமக்கு ஏற்பட்டது போலக் கருதி, அதனைப் போக்க முனைவர் என்பதை, கலித்தொகையும், அகநானூறும் உரைக்கின்றன.[20]

பேரும், புகழும், பொன்னும், பொருளும், ஊர்தி முதலிய போகப் பொருள்களும் ஒருவர் பெற்றிருப்பினும் அவை செல்வம் எனப்படா. அவை எல்லாம் செய்வினைப் பயனால் உண்டானவையாகும். சான்றோர் மதிக்கும் செல்வமாவது பிறர் துன்பம் கண்டு அஞ்சி அத்துன்பத்தைப் போக்குவதற்கு ஆவன செய்வதுவேயாகும்[21]. எந்த இடத்தில் சான்றோர் வாழ்கின்றனரோ அந்த இடம்தான் நல்ல இடம். நிலத்தின் வளமையினால் ஒரு நிலத்திற்குச் சிறப்பு வருதல் இல்லை. சான்றோர்கள் வாழ்தலினால்தான் ஒரு நாடு சிறப்புடன் போற்றப்படுவதாகிறது.[22]

சால்பு என்பதைத் தம்மகத்தே நிறுத்தி அதனை ஆளும் தகுதி பெற்ற உயர்ந்தோர் சான்றோர் எனப் பெற்றார். இச்சான்றோரை

'மையறு சிறப்பின் உயர்ந்தோர்'[23]

என்று தொல்காப்பியம் புகழ்கின்றது.

சான்றோர்களில் புலவர் பெருமக்களும் சிறந்த இடம் பெறுகின்றனர். புலவர்கள் இலவ மலர் போன்ற அழகிய செந்நாவையும் புலமையால் வரும் புகழ்ந்து போற்றும் பெருங்கீர்த்தியையும் கொண்ட உயர்ந்தோர் ஆவர்.

'இலமலர் அன்ன அம் செந்நாவின்
புலம் மீக்கூறும் புரையோர்'.[24]

என்று புகழப்படுகின்றனர். இவர்களால் பாடப்பெறும் புகழ்ச்சியையே மன்னர்களும் மற்றையோரும் வேண்டி நிற்கின்றனர். புலவர்கள் பெருமையற்ற வாழ்வுடையாரைக் கண்ணெடுத்தும் பார்ப்பதில்லை.[25]

'பாடு அறிந்து ஒழுகும் பண்பினாரையே அவர்கள் விரும்பினர். தீமை புரிந்தாரையும் அவர் மரபினையும் அவர்கள் வெறுத்தனர். ஏதேனும் ஒரு புலவர்க்குச் செய்த தீங்கைக் கூடப் புலமைக்குச் செய்த பெருங்குற்றமாகக் கருதி, அவர்களை வேறு புலவர் யாருமே வாழ்த்திப் பாடுதல் இல்லை. 'இளங்கண்டீரக்கோவும், இளவிச்சிக்கோவும்' ஒருங்கிருந்த வழிச்சென்ற பெருந்தலைச்சாத்தனார் இளங்கண்டீரக் கோவைப் புல்லினார் இளவிச்சிக் கோவைத் தழுவிப் போற்றவில்லை. 'அவன் என்னை என் செயப் புல்லாராயினீர்?' என்று கேட்கின்றான். அதற்குப் புலவர் பெருமகனார், அவன் பெண் கொலை புரிந்த நன்னன் வழியினனாதல் கருதியும், பாடுவார்க்குக் கதவை அடைத்துவிட்ட காரணத்தாலும், அவனைத் தழுவிப் போற்றவில்லை என்று மறுமொழி பகர்கின்றார். நான் மட்டுமன்று. எங்கள் புலவர் பரம்பரையே உன் குடும்பத்தைப் பாடுதலை ஒழித்து விட்டது என்கிறார்.[26] இதனால் மதியாதார் தலைவாசல் மிதியாமல் ஒதுக்கினர் என்பது அறியப்படும். கழாத்தலையார் என்னும் புலவரை இகழ்ந்ததன் பயனாக இருங்கோவேளின் மூதூரிலே பொன்னை அவர்களுக்கு உதவிய அரையமானது கேடுற்றது என்பதைக் கபிலர் அம்மன்னனுக்குச் சுட்டிக் காட்டுகின்றார்.[27]

மன்னர்களும், வள்ளல்களும், குடிபடைகளும், புலவர்களையும் பாணர், கூத்தர், விறலியர் முதலிய இசைப் புலவர்களையும் பல்வகையாகப் புரந்து போற்றியமையைப் புறநானூறு, பத்துப்பாட்டு முதலியவற்றில் பரக்கக் காணலாம். புலவர்க்குப் பொன்னும், மணியும், யானையும் நிலமும் பிற பொருள்களுமாக ஈந்து அவர்களைப் புரந்தனர். மன்னர், புலவரை வழி அனுப்புங்கால் அவர்களுக்கு வேண்டும் பொருள் அளித்து, அவர்பின் ஏழடி சென்று அனுப்பி வைப்பர். கரிகாலன் பொருநர்க்குப் பரிசில் ஈந்து, அவர்களுக்கு விடை கொடுத்து அனுப்பிய காட்சியைப் பொருநராற்றுப்படை பாடல் அடிகளில் காணலாம்.[28]

முரசு கட்டில் என அறியாது களைப்பினால் தூங்கிவிட்ட மோசிகீரன் புலவனாதலின் அவனுக்குத் துன்பம் தராததோடு கவரி கொண்டும் வீசினான் சேரமான் தகடூர் எறிந்த பெருஞ்சேரலிரும்பொறை. விழித்தெழுந்த பின் புலவர் உண்மை உணர்ந்தாராய், அம்மன்னன் தமிழ் முழுது அறிந்த தன்மையால் தமிழுன்னைக்குச் செய்த சிறப்பு என அவன் செய்கையைப் போற்றுதல் உள்ளமுருக்கும் உரைகளாம்.[29]

தன்னை அவன் வாளால் வெட்டாதொழிந்ததொன்றே அவன் தமிழ் முழுதறிந்தமைக்குப் போதும். அதனொடும் நில்லாது விசிறி கொண்டும் தமக்கு வீசினானே என்றும் புலவர் வியக்கின்றார். இம்மை உலகில் இசை படைத்தார்க்கே உயர்நிலை உலகம் உண்மை தெரிந்து மன்னன் அவ்வாறு செய்தனனோ என்று கேட்கிறார்.

**நட்பு :**

பண்பாட்டு வளர்ச்சியில் நட்புக்கும் ஒரு சிறப்பிடம் உண்டு. உண்மையான நட்பு பயன்கருதாதது. நண்பரின் நன்மையை நாடுவது உறவுகள் எல்லாவற்றினும் உண்மையானது. மனித உயிர் உலகில் பிறக்கும் போதே நட்பு தொடங்கி விடுகின்றது. குழந்தை பிறக்கும்போது அதற்குப் பாலூட்டும் தாயோடு நட்பு தொடங்குகின்றது.

வளரும்போது குடும்ப உறவுகளுடன் தொடர்கின்றது. இளமைப் பருவத்தே ஒத்த பண்புடையாருடன் உள்ளம் கலந்து நட்பாய் இணைகின்றது. இதயங்கலந்த காதற் கேண்மையில் நட்புக் காதலாய்க் கனிகின்றது. சமுதாயத்தில் பிறருடன் கூடி வாழும் போது வளர்கின்றது. பலருடன் உறவு கொள்ள உறுதுணையாகின்றது.

அக இலக்கியங்கள் தலைவன் தலைவியர் ஒருவர் மாட்டு மற்றொருவர் கொள்ளும் அன்பினை - காதற் கேண்மையை நட்பு என்றே குறிப்பிடுகின்றன. மலைகெழு நாடனொடு தான் கொண்ட நட்பு நிலத்தினும் பெரியதாய், வானினும் உயர்வுடையதாய், கடலினும் ஆழமானதாய் ஒரு காலைக் கொருகால் பெருகி நிற்கும் என்று கூறுகிறாள் தலைவி.[30] தலைவனோ, 'பயிலியது கெழீஇய நட்பு' (குறுந் 2:3) என்றுதான் தலைவியிடம் கொண்ட அன்பினைப் பிறவிதோறும் தொடரும் இயல்புடையது என்று வெளிப்படுத்துகிறான்.

"................................. யாக்கைக்கு
உயிரியைந் தன்ன நட்பின் அவ்வுயிர்
வாழ்தல் அன்ன காதல்
சாதல் அன்ன பிரிவறி யோளே !"[31]

என்று தலைவன் - தலைவி இருவரிடையே நிலவிய நட்புக் குறித்து அகநானூறு மொழிகின்றது. தோழி - தலைவி ஆகிய இருவரிடையே உள்ள இசைந்த நட்பினை,

"யாமே பிரிவின் றியைந்த துவரா நட்பின்
இருதலைப் புள்ளின் ஓருயி ரம்மே !"[32]

என்ற தோழியின் கூற்றுப் புலப்படுத்தும். தனிமனிதன் சமுதாயத்தோடு உறவாட நட்பு துணை செய்கின்றது. மனிதர்களிடையே உலகளாவிய மனித நேய ஒருமைப்பாட்டை மலர்விக்கின்றது. 'யாதும் ஊரே யாவரும் கேளிர்' (புறம் 192:1) என்பது தமிழ் இலக்கியம் காட்டும் உலகளாவிய நட்பு ஆகும்.

நண்பரைத் தேர்ந்து கொள்ளும் முன் அவரைப் பற்றி ஆராய்ந்து அறிந்து நட்பு கொள்ளுதல் வேண்டும். நட்பு செய்த பின் அவர் பற்றி ஆய்தல் பண்பில்லை என்று நற்றிணைக் கூறுகின்றது.[33]

தீயோர் நட்பாயினும் நாடிப் பெற்ற பின் பிரிதல் கூடாது. பிரிந்தால் துன்பம் தரும். நாடி நட்பு கொண்ட பின்,

"நல்ல போலவு நயவ போலவும்
தொல்லோர் சென்ற நெறிய போலவும்
காத னெஞ்சினும் மிடைபுகற் கலமரும்
ஏதின் மாக்கள் பொது மொழி கொள்ளாது." [34]

நட்பு நிலை பெற வேண்டும் என்ற நட்பு நெறியினைச் சங்க இலக்கியம் வலியுறுத்துகின்றது. சந்தன மரத்தில் சேர்க்கப்பட்ட தீந்தேன் போல உயர்ந்தோரின் நட்பு உயர்ந்தது.[35] வேட்டையில் இடப்பக்கத்தே வீழ்ந்த பன்றியை உண்ணாது. யானையை வலப்பக்கம் வீழ்த்தித் தன் பசிக்கு உணவு ஏற்கின்ற புலியைப் போன்ற மன வலிமையும் கொள்கைப்பிடிப்பும் உடையவரே நண்பராதற்கு உரியவர். விளை வயலில் நெற்கதிர்களைப் பதுக்கி வைத்து உண்ணும் எலி போன்ற உள்ளம் உடையவர் நண்பராதற்குத் தகுதி அற்றோர். எனவே, புலியனையார் நட்பினைக் கொள்க. எலியனையார் நட்பினைக் கொள்ளற்க என்று நட்பு நெறியினைப் புறநானூறு அறிவுறுத்துகின்றது.[36]

தன்னலமே குறிக்கோளாக உடையவர், புறங்கூறுவோர், மறைபொருளை வெளியிடுவோர் ஆகியோர் நட்பினை முறையே உணர்விலார் தொடர்பு, புல்லறிவாளர் தொடர்பு, பீடிலார் தொடர்பு என்று இகழ்ந்து கூறி, அவர்களோடு நட்பு கொள்ளற்க என்று கலித்தொகை அறிவுரை கூறுகின்றது. தீ நட்பு, கூடா நட்பு என நட்பு செய்தவற்கு உரியர் அல்லாதாரை இருவகைப்படுத்துகின்றது திருக்குறள்.

பண்டைத் தமிழர் கண் போல் நண்பரை மதித்தனர். அவர்களுடன் கலந்து பழகிப் பெறும் மகிழ்ச்சியை இனிதாகக் கருதினர்.

"முந்தை யிருந்து நட்டோர் கொடுப்பின்

நஞ்சும் உண்பர் நனிநா கரிகர் !"[37]

எனும் நற்றிணைப் பாடலடிகள் நட்பினை மதிக்கும் மனப்பான்மையையும் நண்பர்கள்பால் கொண்ட நன்னம்பிக்கையையும் தெளிவாக்குகின்றன.

கோப்பெருஞ் சோழன் - பிசிராந்தையார் நட்பு ஒருவரை ஒருவர் காணாது உள்ளத்தால் ஒன்றிய நட்பு. நுங்கோன் யாரெனக் கேட்பின் கோழியோனே கோப்பெருஞ்சோழன் என்று பிசிராந்தையாரும்,[38]

"தன்பெயர் கிளக்குங் காலை யென்பெயர்

பேதைச் சோழ னென்னுஞ் சிறந்த

காதற் கிழமையு முடையன்...!"[39]

என்று கோப்பெருஞ்சோழனும் கூறிய மொழிகள் உள்ளம் கலந்த நட்பின் உயர்வைக் காட்டுகின்றன. மேலும்,

"இகழ்விலன் இனியன் யாத்த நண்பினன்

புகழ்கெட வரூஉம் பொய்வேண் டலனே !"[40]

என்று பிசிராந்தையாரின் பண்பு பாராட்டும் கோப்பெருஞ்சோழன் தான் வடக்கிருக்கும் போது தனக்கு அருகே அவர்க்கு ஓர் இடத்தை ஒதுக்குமாறு வேண்டுகிறான். அவனைச் சூழந்திருந்த சான்றோர் பிசிராந்தையார் வருவாரோ என ஐயுற்றகாலை தன் நண்பரின் பண்பினை, நட்பின் சிறப்பினை

"செல்வக் காலை நிற்பினும்

அல்லற் காலை நில்லலன் மன்னே !"[41]

என எடுத்துரைக்கிறான். கோப்பெருஞ்சோழன் எதிர்பார்த்தவாறு வந்த பிசிராந்தையாரைக் கண்டு, இருவரின் நட்பு குறித்துப் புலவர் பொத்தியார் போற்றியுரைக்கின்றார்.[42]

**புகழ்:**

பண்டைத் தமிழர்கள் தங்கள் வாழ்வில் விழுமிய நெறிகளுள் ஒன்றாகப் புகழைக் கருதினர். மறுமைப்பேறு, மறுபடிப் பிறவாமை, புகழ் ஆகிய மூன்றும் அறவோர் அவாவின உயர்ப் பண்புகளாகும். முன்னிரண்டு கிட்டா விடினும் புகழ் கிடைப்பின் அதுவே நோன்று பெறுதற்குரியதாம் எனக் கருதினர். அறத்தின் வழியாகக் கிடைக்கும் இம்மைப் புகழை ஓர் உயர்தகவாகக் கருதியமை அறியப்படும். இம்மைக்குப் புகழ் மொழியும் மறுமைக்கு அறமும் நிலைபெற விளங்கும் பெரிய சோறிடுஞ்சாலை புகார் நகர்க்கண் விளங்கியது[43] என்பதை மேற்கூறிய மொழிக்குச் சான்றாகக் காட்டலாம். அறம்புரிவதில் அக்காலச் செல்வர் ஓர் அறிமட உணர்ச்சியைக் கடைபிடித்தமைக்கும் இப்புகழ் வேட்கையே காரணமாகும். புகழுக்குத் தலை நிமிர்தலும், பழிக்குத் தலையிறைஞ்சுதலும், சான்றவர் இயற்கைப் பண்புகளாகும். பழி படர்ந்த நெறியில் செல்லாமையும், பழியொடு வரும் செல்வம் வெஃகாமையும் செல்நெறிக் குறிக்கோள் இரண்டிலும், பண்டைச் சான்றோர் தூயத்தன்மை உடையவராயிருந்தார் என்பதை புறநானூறு உணர்த்துகிறது.[44]

பண்டைத் தமிழர்கள் வழிவழியாகப் புகழ் உடையவர்களாய்த் திகழ்ந்தனர் என்பதை மாறோக்கத்து நப்பசலையார் பாடலின் வழி அறியலாம். இவர் சோழர் குடிச்சிறப்பைக் கிள்ளி வளவன் திறலோடு சேர்த்துப் பாடும்போது புறாவின் துயர் தீர்க்கத் துலை புகுந்த பெரியோனின் வழிவந்தவன். ஆகவே, ஈதல் நினக்கு இயல்பாகுமன்றிப் புகழ் தருவதன்று. நின் முன்னோன் ஒருவன் தூங்கெயிலெறிந்தவன் ; எனவே, அடுதலும் நினக்குப் புகழ் தருவதன்று. சோழரின் உறையூர் அவை அறம் நின்று நிலைபெற்றது ; ஆகவே, முறை செய்தலும் நினக்குப் புகழ் சமைப்பதன்று. இந்நிலையில் நின்னைப் பாடுங்காலத்து எதனைப் பாடுவேன் ? என மருட்சியுடையார்போற் கேட்பர்.[45] புகழ் நெறியிற் புதுமை காட்டுவதாய் இவ்வரிகள் அமைந்துள்ளதைக் காணலாம்.

கிள்ளி வளவனின் இறப்பிற்குப் பிறகு ஐயூர் முடவனார் அவ்வரசனைப் பாடும் போது வளவனின் புகழுக்குத் தக்க தாழி செய்ய வேண்டுமாயின் நிலவுலகை ஆழியாகவும், மேருமலையை மண் திரளாகவும் கொள்ள வேண்டுமெனத் தாழி செய்யும் குயவனை நோக்கிக் கூறுவதாய் அமைந்துள்ளமையைக் காணுங்கால் இவ்வரசனின் புகழின் இயல்பு புலனாகிறது.[46]

இவ்வாறே பொத்தியாரின் பாடல் ஒன்று வேந்தர்கள் புகழ் வாய்ந்தவர்களாய்த் திகழ்ந்துள்ளனர் என்பதைக் காட்டுகின்றது. கோப்பெருஞ்சோழனைப் பாடும் போது பாடுநர்க் கீந்த பல்புகழாளன் ; ஆடுநர்க்கு ஈந்த பேரன்பினன். அறவோர் புகழ்ந்த செங்கோலன் ; திறவோர் புகழ்ந்த திண்ணன்பினன். மகளிர் சாயல் ; மைந்தர்க்கு மைந்து; 'துகளறு கேள்வி உயர்ந்தோர் புக்கில்' என்று அவன் திறம்பாடுவார் பொத்தியார்.[47] வேந்தர்களைப் புலவர்கள் பாடிய செய்யுள்களில் இருந்து அவர்களின் புகழை உணரமுடிகிறது. தமிழர்கள் புகழார்ந்த நிலையை விரும்பியவர்களாக இருந்துள்ளனர் என்பதைப் புலவர்களின் புகழுரைகள் காட்டுகின்றன. மாறோக்கத்து நப்பசலையார் என்ற புலவர் காரியைப் பாடும்போது,

இனிப்புகழ்தற்கு இடனில்லாத வகையில் நின் புகழைக் கபிலன் பாடினன். இனி யாமும் நின் வண்மையில் சில கூறத் தொடங்குகின்றோம் என்கிறார்.[48] கபிலரால் வேந்தவர்கள் பாடப்பட்ட பிறகு புலவர் பிறர் அவ்வேந்தரைத் தாம் அவ்வளவு சிறப்பாகப் பாட முடியுமோ என்ற எண்ணமுடையவர் என்பதை இப்பாடலைக் காணும் போது தெரிய வருகிறது. இதனால் வேந்தர், புலவர், இவர்களுக்கிடையே இருந்த புகழ் எண்ணம் குறித்த செய்தி புலப்படுகிறது. ஆய் அண்டிரனைப் புலவர் முடமோசியார் பாடும்போது,

நின்னின்று வறுவி தாகிய வுலகத்து
நிலவன் மாரோ புலவர் துன்னிப்

பெரிய வோதினுஞ் சிறிய வுணராப்

பீடின்று பெருகிய திருவிற்

பாடின் மன்னரைப் பாடன்மா ரெமரே ![49]

என்று பாடியுள்ளார். இதிலிருந்து சங்க காலத்துப் புலவர்கள் புகழுக்கு உரிய தகுதி படைத்தவர்களை மட்டுமே பாடியுள்ளனர் என்பதை அறியலாம். இச்செய்யுளை மையமாகக் கொண்டு சங்க இலக்கியத்தில் இடம் பெற்றுள்ள புகழுரைகள் யாவும் உண்மைத்தன்மை வாய்ந்தவை என்பதையும் தமிழர்கள் எந்த அளவிற்குப் புகழ் வாய்ந்தவர்களாய்த் திகழ்ந்துள்ளனர் என்பதையும் புகழை விரும்பியுள்ளனர் என்பதையும் உய்த்துணரலாம்.

பழிப்பது போலப் புகழ்வதும், புகழ்வது போலப் பழிப்பதுமாகிய நயம் நிறைந்த பாடல்கள் சங்க இலக்கியத்தில் விரவிக்கிடக்கின்றன. இப்பாடல்களை வஞ்சப் புகழ்ச்சி அணி என்று சான்றோர் இலக்கணப்படுத்துவர். இது புகழின் பொருண்மையை மையமாகக் கொண்டே அமைந்துள்ளது. ஏனாதி திருக்கிள்ளியை மதுரைக் குமரனார் பாடும்போது பழித்தது போல புகழ்தலும், புகழ்ந்தது போலப் பழித்தலுமாகிய அணிகள் உள்ளன. வாள் வடுபட்ட நீ கேட்பதற்குப் புகழால் இனியை, ஆனால், கண்ணுக்கு இனியை அல்லை. நின் பகைவரோ கண்ணுக்கினியர் செவிக்கின்னார். அதனால் நீயும் ஒன்றில் இனியை அவரும் ஒன்றில் இனியர். அவ்வாறாக உன்னை இவ்வுலகம் வியந்து போற்றுதல் எங்ஙனம்? எனக் கேட்பார் போலப் புகழும் நெறியிற் புதுமை காட்டுவர் இப்புலவர்.[50]

புகழ் என்பது கொடை, வீரம் ஆகிய இரு வழிகளாலும் கிடைக்கும் என்பதைச் சங்க இலக்கியம் பயில்வார் நன்கு உணர்ந்திருப்பர். புகழை விரும்பியே மறவர்கள் வாழ்ந்தமையும் கொடைப் பண்பின் மூலம் வரும் புகழை விரும்பி மன்னர்களும், மற்றையோரும் வாழ்ந்தமையையும் சங்க இலக்கியம் காட்டுகிறது.

கொடைப் பண்பாளர்களையே புலவர்கள் புகழ்ந்து பாடியுள்ளனர். புகழை விரும்பியதனாலேயே கொடை மடம்பட்டவர்களாக வேந்தர்கள் திகழ்ந்துள்ளனர். பதிற்றுப்பத்து என்ற சங்க இலக்கிய நூலைப் பயிலும் போது அந்நூலில் இடம் பெற்றுள்ள பாடல்களுக்காக எவ்வளவு பொன்னையும், பொருளையும் ஈந்துள்ளனர் என்பதைக் காணலாம். இவை யாவும் புகழை மையமாகக் கொண்டதேயாம். பதிற்றுப்பத்தின் ஏழாம் பத்தைப் பாடியவர் கபிலர். இவர் இப்பத்துப்பாடல்களுக்காக நூறாயிரம் பொற்காசுகளைப் பெற்றார். மேலும், இவ்வேழாம்பத்தின் பாட்டுடைத் தலைவனாகிய செல்வக் கடுங்கோ வாழியாதன் தானே நன்றா என்னும் குன்றின் மேல் ஏறி நின்று தன் கண்ணுக்கெட்டிய பகுதிகளைப் புலவருக்குப் பரிசாக அளித்தான். தகடூர் வேந்தன் அதிகனையும், மற்றிரு வேந்தரையும் வென்ற பெருஞ்சேரலாதனை அரிசில் கிழார் எட்டாம் பத்துப் பாடியதற்காக, அவ்வேந்தன் அரசப் பதவியையும், அரண்மனைச் செல்வங்களையும் இவர்க்குக் கொடுப்ப, இவர் அவ்வேந்தனையே அரசாளச் செய்து தான் அமைச்சுப் பணி பூண்டாரெனப் பதிற்றுப்பத்தின் பதிகம் கூறுகின்றது.[52]

இந்நிகழ்வுகளின் வழி புகழுரைகளில் மயங்கிய வேந்தர்கள் கொடை மடம் பட்டதோடன்றி அதன் வழியாகவும், புகழுடையவர்களாய்த் திகழ்ந்துள்ளனர் என்பதையும் அறியலாம். உறையூர் முதுக்கண்ணன் சாத்தனார் என்ற புலவர் நிலையாமையைக் காட்டி நிலைத்த புகழ் உண்டாகப் புலவர்க்கு ஈதல் வேண்டும் என்பார்.[53]

மன்னரையே அச்சாகக் கொண்டு இயங்கிய சங்க காலப் புறத்திணை தேர் எளிய வீதிகளில் செல்லும் செலவிற்குரியதாக இல்லை என்பதை இவர் பாடல்கள் காட்டுகின்றன, எனினும் புலவர்கள் எல்லா நேரங்களிலும் வேந்தராற் புரக்கப்பட்டிலர். அந்நிலைகளில் குறுநிலத்தரையும் சீறூர்க்கிழாரையும் எண்ணிச் செல்கின்ற புலவர், அக்காலப் பகுதிகளில் சீறூர் வாழ்க்கை முறையினைப் பாடுகின்றனர். இத்தகைய முயற்சிகள்

குறைவே. முதுகண்ணன் சாத்தனாரும், வேந்தர்கள் வரினும் தாங்கும் ஈகைப் பெருக்கமுடைய ஒரு வள்ளலைப் பாடுகின்றார். பதினைந்து அடிகளையுடைய அப்பாட்டில் அத்தலைவனின் ஊர்ச் சூழலைப் பதின்மூன்று அடிகளில் விளக்கி இரண்டே அடிகளில் அவனைப் போற்றுவர்.[54] நலங்கிள்ளியின் பெயரைக் குறித்தது போல இத்தலைவனின் பெயரையும் இப்பாட்டில் புலவர் குறிக்கவில்லை. ஆகவே, படையுடைய பெருவேந்தர்க்கிருந்த ஒரு பெருமதிப்பும், போற்றுதலும் ஏனையவர்க்கு அக்காலத்தில் இல்லை என்பது தெளியப்படும். பெருவேந்தர்க்கிருந்த புகழை இயல்பாகச் சமூகம் அளித்த மதிப்பைப் பாரி, குமணன் போலும் குறுநில மன்னர் தம் ஈகைத் தன்மையால் பெற்றுயர்ந்தனர் என்பதும் எண்ணத் தக்கதாகும்.

கொடையாளர்களைப் புகழ்ந்த சமூகம் கொடாதவரை இகழ்ந்தும் பேசியுள்ளது.

பரத்தை ஒருத்தி இரவலர்க்கு ஈயாச் செல்வம் புகழாப் பரவி வெளிப்படாதது போல என் நலன் வருந்துக என்று வஞ்சினம் கூறுகின்றாள்.[55] இவ்வாறு பொருளை ஈயாதாரை வறுமைச்சுற்றம் இகழ்ந்திருப்பதன் வழி ஈகைப் பண்பினால் புகழ் உண்டாகும் என்பதை உணர முடிகிறது. பொருள் என்பது சங்க காலத்தில் பலராலும் போற்றத்தக்க ஒன்றாக மட்டுமன்றி அவ்வுடைமையால், அறம் எனும் உயர்தகவினைப் புரியவும் அதன் வழிப் புகழ் பெறும் உயர் மதிப்பினை அடையவும் ஆகும் எனக் கருதப்பட்டது. நில்லாவுலகத்திருந்து நில்லாப் பொருள் வழி நிலைத்த புகழ் பெறலாம் என்று எண்ணினார்.

இதுபோன்றே வீரப்பண்பின் வழி புகழ் என்ற உயர்மதிப்பு உருவாவதைச் சங்க இலக்கியம் பேசத் தவறவில்லை. ஒருவரின் வாழ்க்கைக் காலத்திலும் அதற்குப் பின்னும் புகழ் மீதான வேட்கை வீரநிலைச் செய்யுளின் பொதுப் பண்புகளில் ஒன்றெனக் கூறப்படும் வீரப்பண்பில் இருபெரும் அடிக்கருத்துகள் உண்மையில் வீரமும், மதிப்பும் ஆகும்.

முன்னது அவனது இயல்பு, பின்னது அவனது குறிக்கோல். மிக உயர் மதிப்பு என்ற இக்குறிக்கோளை அடைய உயிரும் ஒரு பொருட்டன்று. "உயிர் போற்றலையே செருவந்தானே" (பதிற் 79:1) என்பதால் இதனை அறியலாம். வீரர்கள் தங்களுக்கு வழங்கப்பட்ட வாழ்நாளை மதிப்புக்குரிய வகையில் செலவிட வேண்டும் என்று கருதினர்.[56] புகழ் என்ற சொல் வெவ்வேறு இடங்களில் பயில்வது புலவரின் வாய்மொழி துணைக் கூறுகளில் அது பெற்றிருந்த இன்றியமையாமையினை காட்டுகின்றது. மறப்புகழ் - மறச் செயல்களால் உண்டாகும் புகழ். பலர் புகழ் - பலரால் போற்றப்படும் புகழ். மறம் வீங்கு புல் புகழ் - வீரத்தால் பெற்ற பெரும் புகழ். ஓங்கு புகழ் - எப்பொழுதும் மேம்படும் புகழ். பெரும் புகழ் - விஞ்சுகின்ற புகழ். வீயாத விழுப்புகழ் - குறையாத சிறந்த புகழ் - வண்புகழ் - ஈகையால் பெற்ற புகழ். விறற் புகழ் - வெற்றியால் உண்டான புகழ். விளங்கிய புகழ் - ஒளி மிகுந்த புகழ். நின் புகழ் - உனது புகழ். மாயாப் புகழ் - மறையாத பெரும் புகழ். வான் புகழ் - தூயப் புகழ். விண்பொரு புகழ் - விசும்பு புகழ். உரைசால் புகழ் - போற்றுதற்குரிய புகழ். சேன் விளங்கு புகழ் - தொலைவிற் சென்று பரவிய புகழ். வியங்கு புகழ் - ஒளியுடைய புகழ். பல் புகழ் - பலவகைப்பட்ட புகழ். கேடில் விழுப்புகழ் - அழியாத உயர்ந்த புகழ் என வரும்.[57] இக்கூற்றுகள் புகழ் என்ற கருத்தைப் பாடல்கள் எந்த அளவு கொண்டு சென்றிருக்கின்றன என்பதைக் காட்டுகின்றன. எடுத்துக்காட்டாக, வீரன் ஒருவன் இரத்தினச் சுருக்கமாக, "புகழ் செய்யோன்" (புறம் 239:21) புகழை விரும்புவோர் என்று கூறப்படுகிறான். நல்லிசை அதாவது சிறந்த புகழ்.[58] மற்றும் பல புகழையும் அதன் வழி மதிப்பையும் ஒரு வீரன் ஈட்டியாக வேண்டும். இதில் அவனுக்குக் குடிப்பிறப்பு அதிகாரம் செல்வம் போன்ற வாய்ப்புகள் இருந்தன என்பதில் ஐயமில்லை.

நெடுஞ்செழியனின் முன்னோர் இவ்வுலகையே தம் முயற்சியால் வென்று தம் புகழை நிலையாக நிறுவிக் கொண்டனர் என்று கூறப்பெறுகின்றன.[59] அவன் அவற்றை முன்மாதிரியாகக் கொள்ளுமாறு தூண்டப் பெற்றான். உரிமை பிறர்க்கின்றி இவ்வுலகை ஆள்வோர் இறவாப்

புகழை விட்டுச் சென்றதாகக் கூறப்பட்டனர்.[60] சேர அரசன் ஒருவன் தன் புகழை நிலையாக நிறுவிக் கொள்வதன் மூலம் வழி வழியாக இவ்வுலகில் நிலை பேறு பெற வற்புறுத்தப்பட்டான்.[61] கடும் போர்களால் பரந்த நில வெல்லைகளை வெற்றி கொண்டதன் வழியாகத் தன் புகழை நிறுவிக் கொண்டான் மற்றொரு அரசன் என்று புலவர் ஒருவர் பாடுகிறார்.[62] வீரநிலைச் சமூகம் இகழார்ந்த நிலையில் போட்டியிடும் தன்மை கொண்டது. அவர்கள் தம் சொந்த ஆளுமையை நிறுவிக் கொள்ளும் வன்முறைப் போக்கில் ஒருவரை ஒருவர் விஞ்சுவதற்காகத் தங்கள் உயிரையும் பந்தையப் பொருள் ஆக்குகின்றனர். அவர்களது குறிக்கோள் எப்போதும் ஒன்றே அது தம் புகழை நிறுவுவது. அது உயிரை விட நிலையானது என்று கருதினர். இதைப் புறநானூறு, " தம் புகழ் நிறீஇத் தாம்மாய்ந்தனர்" (புறம் 165:2) என்கிறது. அவர்கள் தம் புகழை நிறுவி இறந்து பட்டனர் என்பதே இதன் பொருள் ஆகும்.

புகழையும், பெருமையையும் பெறாமல் இறந்து பட்டோர் தம் பெயரையும் தம்மோடு கொண்டு சென்றவர் ஆகின்றனர். அப்பெயர்கள் மறக்கப்பட்டு விட்டன.[63] அத்தகைய புகழற்றோர் தாமரை இலைகளுக்கு ஒப்பிடப்பட்டனர். அதன் பொருள் அவர்கள் வாழ்வு பயனற்றது என்பதாகும்.

உண்மையான வீரன் வீட்டில் நலமாக வாழ்வதைவிடப் போரில் புகழ்பட இறத்தலையே விரும்புகின்றான். இறந்த வீரனின் பெயரும், பீடும் கல்லில் எழுதப் பெருவதைச் சங்க இலக்கியம் கூறுகின்றன.[64] பெரும் புகழை விரும்பி நீ வீட்டில் இருப்பதை விரும்பாமல் வெற்றி தரும் போர்ப் பாசறைகளில் தங்கி இருக்கின்றாய். [65] என்று நலங்கிள்ளியைக் கோவூர் கிழார் பாராட்டியதிலிருந்து போரினால் வரும் புகழைப் பண்டைத் தமிழர் விரும்பினர் என்பது புலனாகும். உண்மையில் போரிடுவது வீரர்களின் ஆர்வ வெறியாகத் தோன்றுகிறது. செருப்புகல் - மறவர் போர் விரும்பும் வீரன் என்பது அவர்களைப் பற்றிய விளக்கமாகும்.[66]

சங்க காலத்து மன்னர்கள் புகழ் படைத்தவர்களாகத் திகழ்ந்ததோடு அதனை நிலைநாட்ட அரும்பணியாற்றியுள்ளனர். இதனைச் சங்க இலக்கியம் பலவாறு பேசுகிறது. இமயம் எல்லை வரை மட்டுமன்றி, அதற்கு அப்பாலும், கடல் கடந்தும் ஆணை செலப் புகழ் படைத்து மூவேந்தர் அரசாண்டனர். உலகம் எங்குமே மூவரசர் புகழ் பரந்து விளங்கியது.[67]

ஆயர் மகளிர் தாம் ஆடும் குரவையுள் தமது மன்னன் ஆட்சி இமயத்திற்கு அப்பாலும், உலகம் எங்கனுமே சிறந்து ஓங்க வேண்டும் என்று தெய்வத்தைப் பரவி வேண்டுகின்றனர்.[68]

தம் வேந்தன் புகழ் படைத்தவனாகி விளங்க வேண்டும் என்று மக்கள் விரும்பியமையை இதன் மூலம் அறியலாம். பொதுவாக, புகழ் என்ற மதிப்புமிக்கப் பண்பினைப் பண்டைய தமிழர்கள் பெரிதும் அவாவினர். இசையுடன் வாழ்வதே இனிய பேறு என்பதை அறிந்திருந்தனர் என மேற்காட்டிய சான்றுகளால் உணரலாம்.

**வீரம் :**

தனிமனிதப் பண்புகளுள் சிறப்புமிக்கதாகவும், போற்றுதற்குரிய -தாகவும் வீரம் கருதப்பட்டது. வீரம் என்றால் இளைத்தவர்களை வீணாக இன்னலுக்கு ஆளாக்கித் தான் மட்டும் இன்புற்று வாழ்வதன்று. மற்றவர்களைக் காட்டிலும் தான் ஆற்றலுடையவன் என்பதை அறிவித்துக் கொள்ளுவதன்று. தான் கொண்ட கொள்கையிலே உறுதியுடன் நிற்றல். தான் செய்யத் தொடங்கிய செயல்களை முட்டுக்கட்டைகளுக்கு அஞ்சாமல் முயற்சியுடன் செய்து முடித்தல். தன் மானத்திற்கு இழுக்கு வராமல் தன் செயலிலே வெற்றியடைதல். தன்னைக் காரணமின்றி தாழ்த்திப் பேசுவோர் நாணும்படி அவர்கள் செருக்கைச் சிதைத்தல். இவை வீரத்தின் இயல்பாகும். இத்தகைய சிறந்த வீரமுடையவர்களே இந்நாட்டில் தலைசிறந்தவர்களாக மதிக்கப்பட்டனர். சங்க காலத் தமிழ் மக்களும், மன்னர்களும் வீரம் செறிந்தவர்களாய் விளங்கியமையை அக்காலப் பனுவல்களின் வழி அறியலாம்.

இளஞ்சேட் சென்னி என்பவன் ஒரு சேர மன்னன். ஒப்பற்ற வீரன். ஊன்பொதி பசுங்குடையார் என்னும் புலவர் அவனைப் பாராட்டிப் பாடியிருக்கின்றார். பகைவர்களுடைய கோட்டை அவர்களிடம் இருக்கும்போதே அதைப் பிறர்க்குத் தானமாகத் தந்துவிடுவாய் என்கிறார் அவர்.[69] எதிரியின் கோட்டையைத் தன் வசமாக்குவதற்கு முன்பே அதை மற்றொருவருக்குக் கொடுப்பதென்றால், இதற்கு எத்தகைய நெஞ்சுரம் வேண்டும்? எதிரியை வெல்வதில் உறுதியென்பதில் எவ்வளவு நம்பிக்கை வேண்டும்? தோல்வி மனப்பான்மையே தமிழனிடம் இருந்ததில்லை என்பதற்கு இச்செய்தி ஒரு எடுத்துக்காட்டாகும். செங்குட்டுவன் ஒப்பற்ற வீரன். இமயம் முதல் குமரி வரையுள்ள நாட்டை ஆண்டவன். தன்னை எதிர்த்த மன்னர்களின் நாடுகளையெல்லாம் நாசமாக்கினான். இவ்வுண்மையைப் பதிற்றுப்பத்துப் பாடலின் வழி அறியலாம்.[70]

சங்க காலத் தமிழர் வாழ்வில் வீரமும், காதலும், முதன்மை இடம் பெற்றிருந்தன. வீரர்கள் போர்க்களத்தில் பொருது வீர சுவர்க்கம் அடைவதை விரும்பினர். சங்க காலம் தமிழகத்தின் வீர யுகமாகப் போற்றப்பட்டதைக் கைலாசபதி தம் நூலில் குறிப்பிடுவார்.[71] மேலுமவர் சுமேரிய, கிரேக்க வீரயுகத்திற்கு அடுத்த மூன்றாம் நிலையில் பழந்தமிழரது வீரயுகம் விளங்கியது என்று கூறுவார்.[72] போரில் வீர மரணம் அடைந்தார்க்கு நினைவுச் சின்னமாக நடுகல் நட்டு அவ்வீரனின் பெயர் பொறித்து வழிபட்டதைச் சங்க இலக்கியங்கள் கூறுகின்றன.[73] மறவுணர்வு மிகுதியால் மன்னன் பகைவரை அழிப்பது பற்றியே இரவு முழுவதும் சிந்தித்தானாம்[74] என்பதைப் பதிற்றுப்பத்தின் வழி காணும்போது வீரத்தின் விளைநிலமாகப் பண்டைத் தமிழகம் திகழ்ந்தமை உணரலாம்.

தமிழ்நாட்டு மறவரின் வீரத்தை எண்ணி வடபுலத்தரசுகள் அச்சத்தால் தூங்காத கண்ணையுடையனவாய் ஆயினவாம்.[75] வடபுலத்திலும் பிற இடங்களிலும் தமிழ் மன்னர் விளைத்த பெரும் போர் நிகழ்ச்சிகள் வழி தமிழ்ப் பெருவேந்தர் ஆரியர் முதலிய வடவரை வென்று

செருக்கியமை பெறமுடிகிறது.[76] பண்டைய தமிழர்கள் போரில் வெற்றி பெற வேண்டும் அல்லது வீரமரணம் அடைதல் வேண்டும் என்பதையே விரும்பினர். பகையரசன் எறிந்த வேல் மார்பை ஊடுருவிச் சென்றது. தன் மார்பில் தைத்த வேலைப் பிடுங்கிப் போரிட்ட போது அப்பகை வேந்தனும் வீழ, அவனுடைய களிறுகளெல்லாம் பிடிகள் கண்டு நாணுமாறு புறங்கொடுத்து ஓடின.[77] இந்நிகழ்வு தமிழர்களின் வீரப்பண்புக்குத் தக்கதொரு சான்றாகும்.

அக்காலத்தில் மகளிரும் வீரம் சான்றவர்களாகத் திகழ்ந்துள்ளனர். வீரர்களைத் தோற்றுவிக்கும் விளைநிலமாக மகளிர் விளங்கிய பாங்கினைச் சங்க இலக்கியத் தாலறிதல் கூடும். தன் மகன் போரில் புறமுதுகிட்டு ஓடாது வீரமரணம் அடைதலையே வீரத்தாய் விரும்பினாள். போரில் புறங்காட்டி ஓடாத தன் மகனின் வீரச் செயலைக் கேட்டு, களம் சென்று அவனது உடலைக் கண்டபொழுது அவளுடைய வாடிய முலைகள் பாலூறிச் சுரந்தன என்பதனை, புறப்பாடற் பகுதி அறிவிக்கிறது.[78] மேலும் அந்நூல் மற்றொரு மறக்குல மங்கை, ‘போரில் புறமுதுகிட்டு ஓடினான் நின்மகன்’ என்று கூறக் கேட்டுச் சினந்து, ‘என்மகன் புறங்காட்டி ஓடியிருப்பின் அவனுக்குப் பாலூட்டிய முலையினை அறுத்து எறிவேன்’ என்று வஞ்சினம் கூறிக் களம் புகுந்து தன்மகன் இறந்து கிடப்பது கண்டு அவனை ஈன்ற பொழுதினும் பெருமகிழ்ச்சியுற்றாள் என்று கூறுகிறது.[79]

நரை முதிர்ந்த கூந்தலையுடைய முதியோள் ஒருத்தி தன் மகன் களிறெறிந்து பட்டனன் என்னும் செய்தி கேட்டு, ஈன்ற பொழுதினும் பெரிது மகிழ்ந்தாள் என்றும் வீரத்தாயின் வீரப்பண்பைச் சங்க இலக்கியம் சிறப்பித்துள்ளது.[80] போரில் தன் தமையன், கணவன் ஆகியோரை இழந்த நிலையிலும் ஒரு மகனன்றித் தன்னைக் காக்க வேறு யாரையும் பெற்றிராத நிலையிலும் மூதின் மகளொருத்தித் தன் மகனைப் போருக்கு ஆயத்தப்படுத்தி அனுப்பி வைக்கும் அவளது மனத்துணிவையும் அந்நூல் குறிப்பிடுகின்றது.[81]

களத்தில் போரிட்டு வீழ்ந்துபட்ட தம் காதற்கொழுநனின் மகனும் போரில் சிறந்து விளங்கிய நிலையை ஒரு தாய் புகழ்ந்துரைக்கின்றாள். குழந்தைப் பருவத்தில் என்மகன் பால் கொண்டு மடுப்பவும் உண்ணாதவன் யான் சினந்தவளைப் போலச் சிறுகோல் எடுப்பினும் அஞ்சி உடனே பால் உண்பன் ; ஆனால், இன்றோ களிறுகளைக் கொன்றும் அமையானாகிப் போர்க்களத்தே மார்பில், அம்பு பட்டுக் கேடகத்தின் மேல் வீழ்ந்து கிடந்தான். அவ்வாறு கிடந்தவனை எடுத்து, மார்பில் அம்பு தைத்துள்ளதே என யான் வருந்த, அவனோ புண்ணிற்பட்ட அம்பை யான் அறியேன் என்றான். சிறந்த வீரனின் மகனல்லவோ இவன்[82] என்று தன்குடிப் பெருமையைக் காத்த மகனைச் சிறப்பித்தாள்.

தமிழர்களின் வீரவுணர்வுக்கு இன்னொரு சான்றாகத் தம் கணவரோடு புதல்வரும் உடன் வீழ்ந்து கிடப்பதைக் கண்ட மூதிற்பெண்டிர், 'இப்பெற்றிபட்ட வென்றியும் நமக்கு உளவோ' என்று சொல்லி இன்ப உவகையால் அழுதாள் என்பதனை,

"எறிந்து களம்படுத்த ஏந்துவாள் வலத்தர்
எந்தையொடு கிடந்தார் எம்புன்றலைப் புதல்வர்
இன்ன விறலும் உளகொல் நமக்கென
மூதிற் பெண்டிர் கசிந்தழ !"

புறநானூறு சிறப்பிக்கிறது.[83] போருக்கடிப்படையான வீர உணர்வைச் சங்கச் சமூகம் இளமையிலிருந்தே வளர்த்திருக்கின்றது. புலிப்பல் தாலி சிறார்க்கணிதல், சேவற்போர், ஏறுபொரல், ஏறுதழுவுதல் ஆகிய வீரச்செயல்களில் வீரச்செயல்களில் பங்கேற்கும் உள்ளப்பாங்கை நனி இளமைக் காலத்திலிருந்தே வளர்த்திருக்கின்றனர்.[84] முல்லைத் திணையிலமைந்த கலித்தொகைப் பாடல்கள் பல வீரர் ஏறுதழுவுதலையும், அவரையே மகளிர் மனங்கொள்வதையும் காட்டுகின்றன. பொழுது போக்காகவும் விழா நிகழ்ச்சிகளிலும் அன்றாட வாழ்வியலிலும் வீர விளையாட்டுகள் தமிழரிடையே இரண்டறக் கலந்திருப்பதை நோக்குகையில் அவர்களின் வீரவுணர்வு புலப்படுகிறது.

**மானம் :**

சங்கச் சமூகம் மறப்பண்பையும், மானத்தையும் அரிய சமூக மதிப்புகளாகப் போற்றியது. வேந்தர் நிலையிலிருந்து பொருளாதார நிலையில் மிகக் கீழ்த்தட்டில் வாழ்வோர் வரையில் மான உணர்ச்சியைப் பேணுதலைத் தம் இன்றியமையாக் குடிக்கடனாகக் கருதினர்.

மானம் என்பதற்குப் பரிமேலழகர் 'தந்நிலையினின்றும் சிறிதும் தாழாமையும், ஊழால் தாழின் உயிர் வாழாமையும்' என்பர். உயிரினும் விழுமியதாக இவ்வுணர்வு சங்க காலத்தில் போற்றப்பட்டமைக்கு அக்காலப் போருணர்வே காரணமாகும். தன் வாழ்நெறியிலிருந்து அணுவளவும் பிழையாத தன்மையையே மான வாழ்வு காட்டுகின்றது. திருக்குறள் மானம் என்பதற்குரிய பண்புகளாகக் கீழ்க்கண்டவற்றைக் காட்டுகின்றது.

1. இன்றியமையாச் சிறப்புடையதெனினும் அவற்றைப் பெறுவதற்காகத் தம் நிலையில் தாழாமை.
2. புகழ் பெறுதற்காகவும் இளிவரவுகளைச் செய்யாமை.
3. செல்வம் சுருங்கி நல்கூர்ந்த வழிப் பிறரிடத்துப் பணியாமை.
4. குன்றி அளவு கூடத் தாழ்தற்கு ஏதுவானவற்றைப் புரியாமை.
5. தம்மை இகழ்வார் பின் சென்று நில்லாமை.
6. தம் பெருந்தகவும், பீடும் அழிந்தவிடத்து உயிர் வாழாமை.

இப்பண்புகளே ஒருவரிடத்து மானமாண்பைப் புலப்படுத்துவனவாக அமைகின்றது. பரிமேலழகர், 'இறப்ப வருவழி இணைந்தன செய்தாயினும் உய்க' என்னும் வடநூன் முறைமையை மறுத்து, உடம்பினது நிலையின்மையையும், மானத்தினது நிலையுடைமையையும் தூக்கி அவை செய்யற்க என்பதாம் என்று உரைவரைவது எண்ணத்தக்கது.[85]

சங்க இலக்கியத்துள் மானமாண்பை அரிய மதிப்பாகப் போற்றிய நிகழ்ச்சிகள் பலவுள. சேரமான் கணைக்காலிரும்பொறை செங்கணானின் சிறைக்கிடந்து தண்ணீர் தாவென்று பெறாது பெயர்த்துப் பெற்ற காலை உண்ணாது உயிர் விடுத்தனன். அரசக் குடியினர்க்கு மானமாவது களத்தில்

இறந்து படுதலே என்பதை இப்பாடல் காட்டுகின்றது. "அரசர்க்கு மானத்தின் மிக்க அறனும் பொருளும் இன்பமும் இல்லையென்று கூறியமையின் இது முதுமொழிக் காஞ்சியாயிற்று" என்று இப்பகுதிக்கு விளக்கம் கூறுவர். மானஉணர்வுக்கு மகுடம் சூட்டும் வகையில் தொல்காப்பியம்.

"பொருது வடுப்பட்ட யாக்கை நாணிக்
கொன்று முகந்தேந்த எஃகு தாங்கிச்
சென்று களம்புக்க தானை தன்னொடு
முன்மலைந்து மடிந்து ஓடா விடலை
நடுகல் நெடுநிலை நோக்கி ஆங்குத் தன்
புண்வாய் கிழிந்தனன் புகழோன்..."

என்றவாறு விழுப்புண் தீர்ந்து வாழும் வாழ்க்கையை விரும்பாது மானவுணர்வு மீக்கூர்ந்த நிலையில் புண்கிழித்து முடியக் காணலாம்.

"இன்னது பிழைப்பின் இதுவாகியர் எனத் துன்னரும் சிறப்பின் வஞ்சினம்" கூறலுக்கும் மான உணர்வே அடிப்படையாகும். தன்னுடைய மானம் சிதைந்த வழி தான் இன்னவெல்லாம் இழந்தவனாகுக எனப்பட்டியலிடுவதன் வழி அவர்கள் தம் வாழ்வில் உயர் தகவுகளாகக் கொண்டு போற்றியவற்றை அறியலாம். ஒல்லையூர் தந்த பூதப்பாண்டியனின் வஞ்சினப்பாட்டு வழிக் காதல் மனைவியோடு கூடி இல்லறம், அறனிலை திரியா அன்பின் அவையம் கன்போற் கலந்த நட்பு ஆகிய மூன்றையும் உயிரென மதித்துப் போற்றியிருக்கின்றான் என்பதறியப்படும்.[88] ஒவ்வொருவர் வாழ்விலும் சில மதிப்புறு தகவுகள் போற்றப்படல் இயற்கை. ஓர் அரசன் என்ற நிலையில் உயர்ந்த காவற் கடமையும் முறை வழங்கும் உணர்வும், அவனிடத்திருந்து சமூகம் எதிர்நோக்குவனவாக அமையும். ஆனால், இவ்வேந்தன் அவற்றோடு இல்லறத்தின் நெறிமையையும், இனிய நட்பையும் குறிப்பது எண்ணற்பாலது இவற்றின் அடிப்படையில் அவனது மான உணர்வு

அமைந்திருக்கிறது. பாண்டியன் தலையாலங்காலத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் போரில் தோற்றால் புலவர் பாடாது தன் நிலவரை நீங்குக என வஞ்சினமொழிவன்.[89] எவற்றையெல்லாம் தம் உயிரிலும் இனியவாகக் கருதினர் வேந்தர் என்பதையும், எவற்றை இழப்பின் தன்நிலை தாழ்ந்ததாக அமையும் எனக் கருதினர் என்பதையும் இவ்வஞ்சினப் பாடல்கள் காட்டும். மறக்குடியினர் மானம் அழுங்க வாழா மனத்தினர், வேந்தராயினும் அவரோடு எதிர்த்துப் பொருது அழிவரேயன்றி அவர் வழிப்படார்.

"நுதிவேல் கொண்டு நுதல்வியர் துடையாக்
கடிய கூறும் வேந்தே தந்தையும்
நெடிய வல்லது பணிந்துமொழி யலனே
இஃதிவர் படிவ மாயின் வையெயிற்று
அரிமதர் மழைக்கண் அம்மா அரிவை
அணங்கா யினள் தான் பிறந்த ஊர்க்கே !"[90]

மகட்பாற்காஞ்சித் துறை உத்தியமையப் பாடிய இவ்வனைய பாடல்கள் எல்லாம் சீறூர்த் தலைவரின் மானமாண்பை எடுத்துரைப்பன. குடியும், ஊரும் அழியினும் தாம் கொண்ட கோட்பாட்டிற்பிறழாத வன்னெஞ்சத்திறல் சாற்றுவன இப்பாடல்கள்.

மானமழிய வந்தவிடத்து வடக்கிருந்து உயிர்துறத்தலைப் புறநானூற்றுப் பனுவல்கள் காட்டுகின்றன. சேரமான் பெருஞ்சேரலாதன் கரிகாற் பெருவளத்தானொடு பொருது புறப்புண் நாணி வடக்கிருக்கின்றான்.[91] இந்தச் சேரலாதன் மார்பின் முன்பு பட்ட வேல் ஊடுருவிக் கிழித்துக் கொண்டு பின்புறமாகச் சென்று விடுகிறது. இதனை அவன் புறப்புண்ணாகக் கருதி நாணத்தால் வடக்கிருந்து உயிர் விடுகிறான். இவன் வடக்கிருக்க ஏதுவாக அமைந்த போர் வெண்ணிப் பறந்தலையில் நிகழ்ந்ததாம். இவன் வடக்கிருத்தலாகிய இன்னா இன் உரையைச் சான்றோர் கேட்கின்றனர். சேரலாதன் மரிக்கின்றான் என்பதனால் இன்னாதாகவும், புறப்புண் நேர்ந்த பழி தீர வடக்கிருந்து உயிர்

விடுகின்றான் என்பதனால் இனிமையாகவும் அவ்வுரை கேட்ட சான்றோர்க்கு அமைகிறது. அச்சான்றோர்களும் அவனிருக்கும் இடம் வந்து ஆண்டுத் தம் உயிரை விடுகின்றனர். இந்நிகழ்ச்சியை அகநானூறு, உவமையாக எடுத்து மொழிகிறது.[92] இவ்வாறே மக்களோடு மாறுபட்ட கோப்பெருஞ்சோழனும், மானம் அழிந்ததாகக் கருதி வடக்கிருந்தமையைப் புறநானூறு காட்டுகிறது.[93] இந்நிகழ்வுகளின் மூலம் பண்டைய தமிழர்கள் தம் உடலினும், தம் உயிரினும் மானமே பெரிது எனக் கருதியமையைப் பெற முடிகிறது.

அரசர்களும், மறவர்களும் மட்டுமன்றி புலவர் பெருமக்களும், தன்மான உணர்வோடு வாழ்ந்தமைக்கான சான்றுகள் பல சங்க இலக்கியத்தில் கிடைக்கின்றன. தகுதிக்குக் குறைவாக நல்கிய போதும், முகம் மாறி அளித்த போதும் அப்பொருளைத் துச்சமென மதித்து, மறுத்ததோடு அத்தகையோர்க்குப் பாடம் கற்பித்து மீண்டனர். இத்தகு தன்மான உணர்வு மிக்க புலவர்களில் பெருஞ்சித்திரனாரும், ஔவையாரும் குறிப்பிடத் தக்கோராவர். வெளிமானென்னும் வள்ளலை நாடிப் பரிசில் பெறச் சென்றார் பெருஞ்சித்திரனார். ஆனால், ‘அட்ட குழிசி அழற் பயந்தாங்கு’ அவர்க்கு அதிர்ச்சியே காத்திருந்து, அவன் துஞ்சினான். விரிந்த உளமில்லா இளவெளிமான் தகுதியறியாது சிறிது பொருள் கொடுத்த போது புலவர்க்குத் தன்மான உணர்வு கிளர்ந்தெழுந்தது. மன்னனின் இச்செயலைக் கண்டு வருந்தி[94] மீண்ட புலவர் குமணவள்ளலைப் பாடி யானையைப் பரிசிலாகப் பெற்றார். தம் வரவை எதிர்பார்த்துக் கிடக்கும் மனையாட்டியையும், குழந்தைகளையும் கூடக் கருதாது இளவெளிமான் ஊர்க்குச் சென்று, அவன் காவல் மரத்தில் அதனைப் பிணித்தார். இளவெளிமானின் சிறுமையையும், தம் பெருமையையும் எடுத்துக்காட்டிப் பாடினார்.[95]

அதியமான் நெடுமானஞ்சி பெரு வள்ளலாயினும் பெருஞ்சித்திரனார் அவனைக் காணச் சென்ற ஞான்று யாது

காரணத்தாலோ, தன் பணியாளர் வாயிலாகப் பொருள் கொடுத்தனுப்பினான். புலவர்க்கு அது சிறுமைச் செயலாகத் தோன்றிற்று. காணாது ஈந்த அப்பொருளை ஏற்க மறுத்தார்.[96]

இதே அதியமான் தான் ஔவை மூதாட்டிக்கு அமிழ்தினிய நெல்லிக்கனி யீந்தவன். ஆனால், அவ்விருவர்க்கும் இடையே நட்பு முதலில் முரண்பாட்டில் உருவானதே. அவன் பரிசில் நீட்டித்திருந்தான். தாம் சோறொன்றே கருதியிருப்பதாக மன்னன் மதித்தான் போலும் என்று எண்ணிய புலவர் 'எத்திசை செலினும் அத்திசைச் சோறே' என்று கூறி

"கடுமான் தோன்றல் நெடுமா னஞ்சி
தன்னறி யிலன்கொல் என்னறி யலன்கொல்
அறிவும் புகழுமுடையோர் மாய்ந்தென
வறுந்தலை யுலகமு மன்றே யதனால்
காவினெம் கலனே சுருக்கினெம் கலப்பை
மரங்கொல் தச்சன் கைவல் சிறாஅர்
மழுவுடைக் காட்டகத் தற்றே
எத்திசைச் செலினும் அத்திசைச் சோறே"[97]

இதில் புலவருடைய பெருமித உணர்வும், தன்மான உணர்வும் வெளிப்படக் காணலாம்.

பெருந்தலைச் சாத்தனார் என்பவர் மற்றொரு புலவர். இவர் கடியநெடுவேட்டுவன் என்னும் குறுநில மன்னனிடம் பரிசில் வேண்டிச் சென்றார். அவன் காலங் கடத்தினான். உடனே, புலவர் அவன் வெட்கித் தலைகுனியும்படி தன் பெருந்தன்மையைக் கூறிவிட்டுத் திரும்பினார்.[98]

உலகோர் பின்பற்ற வேண்டிய மான உணர்வுக்குச் சங்கச் சான்றோர்களும், மறவர்களும், அரசர் பெருமக்களும் எடுத்துக் காட்டாய்த் திகழ்ந்தனர் என்பதில் ஐயமில்லை.

**நடுவுநிலைமை :**

பண்பாட்டுடன் வாழ்வதே பயனுடைய வாழ்வு என்று கருதிய தமிழர்கள் நடுவு நிலைமை என்ற உயர்ப்பண்பை மேற்கொண்டிருந்தனர். உலக நன்மை கருதியே இவ்வுயர்ப் பண்பைச் சங்க இலக்கியமும், ஒப்பற்ற ஓர் உயர்மதிப்பு மிக்கதாகப் போற்றி வந்துள்ளது. பகை, நொதுமல், நட்பு ஆகிய யாவரிடத்தும் ஒரு தன்மையராகப் பழகும் மனச்செம்மை நடுவு நிலைமை எனப் பெறும்.[99] அத்தகைய நெஞ்சத்துக் கோடாமையே சான்றோரின் இயல்பாகும். அதுவே, சான்றோர்க்கு அணியாகும். துலாக்கோல் போன்ற செம்மை சான்ற நடுவுநிலைமையுடைய நன்மனத்தராகிய சான்றோர் கோடாத நெஞ்சம் உடையர் என்ற கருத்தினை நடுவுநிலைமை என்று சங்க இலக்கியம் போற்றுகிறது. நடுவுநிலைமை தவறாது வாழும் பெரியோரைச் சான்றோர் என்று சங்க இலக்கியம் செப்புகிறது. நீதி வழங்குதற்கென்று அரசன் இச்சான்றோர்களையே நியமித்திருந்தான்.

அறம் கூறும் அவையங்களில் அமர்ந்து, நீதி வழங்கி மக்களை நெறிப்படுத்தியோரும், இத்தகு பெரியோர்களே. 'அவை' என்பது சான்றோர் அவையைத்தான் குறிக்கும். 'அவை இருந்த பெரும் பொதியில்' (மதுரை 161) என்பது இதனை விளக்கும். அவையில் முறையிட வருவாரின் அச்சமும், அவலமும், அவர் கொண்டுள்ள பற்றுள்ளமும் நீங்கச் செய்வர். தமது நெஞ்சம் ஒரு கூற்றில் செற்றமும், மற்றொரு கூற்றில் உவகையும் செய்யாமல் நன்கு பாதுகாத்துக் கொள்வர். துலாக்கோல் போன்று நடுநிலை வகிப்பர்.

"அச்சமும் அவலமும் ஆர்வமும் நீக்கி,
செற்றமும் உவகையும் செய்யாது காத்து,
மென் கோல் அன்ன செம்மைத்து ஆகி
சிறந்த கொள்கை அறம்கூறு அவையமும்"[100]

என்று மதுரைக் காஞ்சி அறங்கூறும் அவையத்தின் இயல்பினைப்

புலப்படுத்துகிறது. நல்நெறியிலார் உரைக்குந் தீமொழி எல்லாம் நடுவுநிலைமையுடன் கூடிய நன்மக்கள் இருக்கின்ற அவையுள் சென்றால் நீங்கும்.[101]

தவத்தினின் நீங்கித் துறக்கம் செல்லுதல் கூடாது வழுவியோன் துயர்தீர்த்து மீண்டும் அவனைத் துறக்கத்தில் சேர்த்தனராம் சான்றோர். அது போன்று எனது துயரையும் தீர்த்தல் வேண்டும் என்று ஒரு தலைவன் சான்றோர்பால் முறையிடுவதாகக் கலித்தொகையுள் காண்கிறது.[102] ஆகவே, சான்றோர் அறங்கூறும் அவையத்தும், பிற இடங்களிலும் நடுவுநிலைமையோடு பணியாற்றி உலகிற்கு நன்மை செய்தல் பெறப்படும்.

நடுவுநிலைமை என்ற உயர்ப்பண்பே தலைமை சான்றதாகவும், மக்கள் அப்பண்பே எங்கும் நிறைந்திருக்க வேண்டும் என்று விரும்பியதாகவும், சங்க இலக்கியம் கூறுகிறது. ஒரு தலைவனின் உயர்ப் பண்பைக் கூறும் கலித்தொகை ஒரு பக்கமும் சாயாது நேர்நிற்கும் துலாக்கோல் போல ஆராய்ந்து அறத்தையே விரும்பும் நெஞ்சத்தையுடையவன் தலைவன்[103] என்கிறது.

நடுவுநிலைமையுடன் கூடிய அணிசேராக் கொள்கை இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே தமிழ் மண்ணில் நிலவி இருக்கிறது. பாரதப் பெரும்போரிலே தமிழ் வேந்தர் நடுநிலை பூண்கின்றனர். உதியஞ் சேரலாதன் பாரதப் போர்வீரர்களுக்குப் பெருஞ்சோறு வழங்கிப் பெருஞ்சோற்று உதியஞ்சேரலாதன் என்னும் சிறப்புப் பெயர் புனையப் பெற்றான்.

''அலங்கு உளைப் புரவி ஐவரொடு கினைஇ,
நிலம் தலைக் கொண்ட பொலம் பூந் தும்பை
ஈர் - ஐம்பதின் மரும் பொருது, களத்து ஒழிய,
பெருஞ்சோற்று மிகுபதம் வரையாது கொடுத்தோய் !''[104]

என்று இம்மன்னன் புகழப்படுகிறான். போர் விறுப்புற்றிருந்த சங்க

காலத்தில் இத்தகைய அறநெறியுடன் கூடிய உயர்ப்பண்பு உலக நன்மை கருதி மேற்கொள்ளப்பட்டது என்பதே உண்மை.

தமிழ்நாடு அன்று அரசியலால் மூன்று பெருநாடுகளாகவும், பல சிறு குறு நிலங்களாகவும் பிளவுபட்டுக் கிடந்தது. ஆனால், மொழியாலும், பண்பாட்டாலும் ஒன்றுபட்டிருந்தது. புலவர்கள் குறுகிய மனமின்றிப் பரந்த உள்ளத்தோடு மூன்று நாடுகட்கும் சென்றனர். சேர நாட்டுப் புலவர் பாண்டியனையும், சோழனையும் வாழ்த்தத் தவறவில்லை. ஏனையோரும் அவ்வாறே செய்தனர். பண்பு யாரிடமிருப்பினும் பாராட்டினர். கபிலர் பாரியின் நண்பர். அவர் சேரமான் செல்வக்கடுங்கோவைப் பாராட்டினார். பாண்டிய நாட்டுப் பிசிராந்தையார் கோப்பெருஞ்சோழனிடம் கொண்டிருந்த உயர் நட்பு உலகறிந்ததன்றோ? புலவர்கள் அரசியற் பூசல்களில் பெரும்பாலும் தலையிடவில்லை. சேரமான் குடக்கோ நெடுஞ்சேரலாதனும் வேற்பஃறடக்கைப் பெருவிறற்கிள்ளியும் போரிட்டு இருவரும் மாண்டனர். அப்போது கழாத் தலையாரும், பரணரும் இருவருக்கும் வருந்திப் பாடியுள்ளமையைக் காணலாம்.[105]

நாட்டிலே அமைதி நிலவ வேண்டும் என்பதே அறிஞர்கள் விருப்பம். அவர்கள் அமைதிக்காகவே பாடுபடுவார்கள். கோவூர்கிழார் நெடுங்கிள்ளியும், நலங்கிள்ளியும் பகைத்தபொழுது இடைநின்று விலக்கினார். இருவரும் சோழரே என்றும், அவர்கள் முரண் கொண்டது ஏனைய வேந்தர்க்கு மகிழ்ச்சியூட்டுமென்றும் கூறிப் போரை விலக்க முயன்றார்.[106] இதுமட்டுமன்றி ஒருவரோடு ஒருவர் முரண்பாடு கொண்ட மூவேந்தர்களும் ஒன்றுபட்டிருப்பதைப் புலவர் உலகம் பெரிதும் அவாவி நின்றது. என்றோ ஒருநாள் அங்ஙனம் அவர்கள் கூடியிருந்த காட்சியைக் காணும்போது இறும்பூது கொண்டு ஏத்தினர். குராப்பள்ளித் துஞ்சிய பெருந்திருமா வளவனும், பாண்டியன் வெள்ளியம்பலத்துத் துஞ்சிய பெருவழுதியும் ஒருங்கிருப்பக் கண்ட காரிக்கண்ணனார்.

"ஒருவீர் ஒருவீர்க்கு ஆற்றுதிர் இருவீரும்
உடனிலை திரியீ ராயின் இமிழ்திரைப்
பௌவ முடுத்தவிப் பயங்கெழு மாநிலம்
கையகப் படுவது பொய்யா காதே
அதனால், நல்ல போலவும், நயவ போலவும்
தொல்லோர் சென்ற நெறிய போலவும்
காதல் நெஞ்சினும் இடைபுகற் கலமரும்
ஏதின் மாக்கள் பொதுமொழி கொள்ளாது
இன்றே போல்கநும் புணர்ச்சி வென்று வென்று
அடுகளத் துயர்கநும் வேலே"[107]

என்று வாழ்த்தினார். இங்ஙனமே மூவேந்தரும் ஒருங்கிருந்த போது ஔவைப் பிராட்டியார் மகிழ்ந்து பாராட்டினார்.[108] இச்சான்றுகள் யாவும் புலவர் பெருமக்கள் ஒரு சாறாரிடத்தில் பொருந்தியிராது அனைவரையும் போற்றி நடுவுநிலைமையுடன் திகழ்ந்தமையைக் காட்டுகின்றன. இந்நடுவுநிலைமைப் பண்பு மன்னர்களிடையே காழ்புணர்ச்சி தோன்றாது ஒற்றுமை நிலவுவதற்கே அடிப்படையாக அமைந்தது. வாழ்வில் யாதொருபொருளும் நிலையற்றது என்பதை உணர்ந்திருந்த தமிழ்ச் சான்றோர்கள் பெரியோரை வியத்தலும் இல்லாது சிறியோரை இகழவும் பெறாது அனைவரையும் நடுவுநிலைமையோடு சமமாக அணுகினர். பண்டைய தமிழரின் நடுவுநிலைமைப் பண்பு போற்றுதற்குரியதாக என்றென்றும் திகழ்ந்து கொண்டிருக்கும்.

**நன்றியுணர்வு :**

பிறர் செய்த நன்மையை மறவாது வாழும் பண்பே நன்றியறிதலாகும். ஒருவர்க்கொருவர் உதவி செய்தலும் ஒருவர் செய்த நன்மையை மறவாதிருத்தலும், பிறரோடு கூடி வாழும் சமூக வாழ்க்கையில் சிறந்தவை எனக் கருதப்படும். சங்க கால மக்கள் நன்றிக் கடனைப் போற்றி

வாழ்ந்தனர். நன்றி மறத்தலைத் தீமை என்று கருதினர். "நன்றி மறப்பது நன்றன்று" (குறள்-108) என்பர் வள்ளுவர். தன் துன்பத்தில் உதவிய ஒருவருக்கு உதவாது செய்நன்றி மறந்தானின் செல்வம் தானாகவே அழியும். அக்குற்றமானது அவனை நரகத்தின்கண் செலுத்தி விடும் என்ற நம்பிக்கை நிலவியது என்பதைக் கலித்தொகை மொழிகின்றது.[109] ஆண் முலையறுத்தல், கருச் சிதைத்தல், அந்தணர்க்குக் கொடுமை செய்தல் ஆகியன அறனழிச் செயல்கள். இவற்றினும் அறமற்ற செயல் யாதெனின் ஒருவர் செய்த நன்றியை மறத்தலாகும். அவ்வாறு செய்தோர்க்கு உய்தியில்லை என்பது அறநூலார் கொள்கை என்பதைப் புறநானூறு குறிப்பிடுகின்றது.[110] இச்செய்தியின் வாயிலாக நன்றியுணர்வின் இன்றியமையாமை புலப்படுகிறது.

ஒருவர் செய்த நன்மையை மறப்பது அறம் ஆகாது. பயன் கருதாது செய்யும் உதவி சிறப்புடையது. தமக்கு ஒருவர் உதவி செய்தால் அவருக்கு எவ்வகையிலாயினும் கைம்மாறு செய்திட வாய்ப்புக் கிடைத்தால் அதைப் பெருமையாகக் கருதியவர் நம் முன்னோர். இதனை,

"முன்னொன்று தமக்காற்றி முயன்றவர் இறுதிக்கண்
பின்னொன்று பெயர்த்தாற்றும் பீடுடையாளர்"[111]

என்று சங்க இலக்கியம் எடுத்துரைக்கின்றது. அவ்வாறு உதவி செய்வதிலும் நமக்குக் கல்வி கற்றுத் தந்த ஆசிரியர்க்கு அவர் மனம் மகிழப் பொருளுதவி செய்தல் வேண்டும் என்னும் அறச்செயலை முதன்மையாக எண்ணினர். அவ்வறம் செய்யத் தவறினால் கற்ற கல்வி நிலைக்காது என்பது அவர்கள் நம்பிக்கை. இக்கருத்தினைக் கலித்தொகை குறிப்பிடுகின்றது.[112]

"உற்றுழி உதவியும் உறுபொருள் கொடுத்தும்
பிற்றைநிலை முனியாது கற்றல் நன்றே"[113]

என்று ஆசிரியரை வழிபடுவதனின்றும் தவறாது கல்வி கற்றல் வேண்டும் என்று புறநானூறு கூறுகின்றது.

சங்கத் தமிழர் நன்றியுணர்வு மிக்கவர்களாகத் திகழ்ந்தமைக்கான வரலாற்றுச் சான்றுகள் பல சங்க இலக்கியத்தில் உண்டு. பாரி, கபிலருக்கு அருள்புரிந்து தாம் வாழும் காலம் வரையிலும் அவரை வளமுறச் செய்தான். இருவரும் உளம் ஒத்த நண்பராய்த் திகழ்ந்தனர். வளமதுவுண்டு வளனில் காலை நறும்பூத் துறக்கும் வண்டு போன்றோர் பலருளர். பாவலர் வேந்தர் கபிலரோ தன் நண்பனிடம் மாறாப் பேரன்பு பூண்டவர். பாரி மாய்ந்த பின்னர், அவன் பெண்களாகிய அங்கவை, சங்கவை என்ற இருவரையும் இருங்கோவேள், இருவிச்சிக்கோன் என்னும் இருவரிடமும் அழைத்துச் சென்று மணக்குமாறு வேண்டி அவர்கள் மறுக்கவே அப்பெண்களைப் பார்ப்பார்ப் படுத்துத் தீப்பாய்ந்து உயிர்விட்ட வரலாறு உலகறிந்ததாகும்.[114] நன்றியுணர்வு என்ற நயம்மிக்க பண்புக்குக் கபிலர் பெருமான் ஓர் எடுத்துக்காட்டாகத் திகழ்ந்தமை இதன் மூலம் புலப்படுகிறது.

அதியமான் நெடுமான் அஞ்சின என்பான் தகடூரை ஆண்ட ஒரு சிற்றரசன். பெரிய கொடை வள்ளல். தமிழ் மூதாட்டி ஔவையாரின் ஆருயிர் நண்பன். அவன் புகழைக் கண்டு பொறாமை கொண்ட தொண்டைமான், அதியமானுடன் போர் செய்ய எண்ணினான். இதற்காக, ஆயத்தஞ் செய்து கொண்டிருந்தான். இதனை அறிந்த அதியமான், ஔவையாரிடம் இச்செய்தியை உரைத்தான். ஔவையார் போர் நிகழாமல் தடுக்கும் பொருட்டுச் சமாதானத் தூதராகத் தொண்டைமானிடம் தூது போனார். தொண்டைமான் ஔவையாரை அன்புடன் வரவேற்றான். தன் படைக்கலச் சாலைக்கு அழைத்துச் சென்றான். தான் திரட்டி வைத்திருந்த ஆயுதங்களைக் காட்டினான். அவனுடைய படைக்கலங்களைப் பார்த்த ஔவையார் அவனிடம் கீழ்வருமாறு கூறினார்.

"உன்னுடைய இப்படைக்கலங்கள் மயிற்பீலி அணியப்பட்டு மாலை சூட்டி, எண்ணெய் தடவி, நல்ல பாதுகாப்பான பெரிய இடத்திலே வைக்கப்பட்டிருக்கின்றன. என்னுடைய தலைவனாகிய அதியமானின், கூர்மையான வேற்படைகள் உன்னுடைய படைகளைப் போல இல்லை.

அவை பகைவர்களைக் குத்தியதனால் பக்கமும், நுனியும் சிதைந்து விட்டன. இப்பொழுது அவை கொல்லனுடைய உலைக்களத்திலே மீண்டும் சீர் செய்வதற்காகப் போட்டுக் கிடக்கின்றன.[115]

ஔவைப் பிராட்டியின் நயம் மிக்க இவ்வுரையால் போர் தவிர்க்கப்பட்டது. தன்னை ஆதரித்த அதியனுக்கு ஔவையார் காட்டிய நன்றியுணர்வின் வெளிப்பாடாகவே இந்நிகழ்வைக் கொள்ளலாம்.

**வாய்மை :**

பண்டைய தமிழர்கள் வாழ்வியல் உயர் நெறிகளுள் ஒன்றாக வாய்மையைக் கருதினர். ஆதலால் தான் சங்க இலக்கியமும் வாய்மைப் பண்பினை வாழ்த்திப் போற்றுகிறது. தமிழர்கள் வாய்மையின்பால் கொண்டிருந்த நம்பிக்கைப் 'பொய்ச் சாட்சி சொன்னவன் ஒரு மரத்தின் கீழ் இருப்பானாயின் அந்த மரம் பற்றியெரிந்து விடும்'[116] என்ற அளவில் அமைந்திருந்தது. வாய்மை என்பது உண்மை என்ற அடிப்படையில் மட்டுமன்றி சொன்ன சொல்லை மாற்றாமல் அந்நிலையில் நிற்பதாகவும் கருதினர். நிலம் தனது வலிமை குன்றும் காலத்தில் கூட சொல்லிய சொல்லுக்கு மாறாக நடக்கும் பொய்யொழுக்கத்தை நீ மேற்கொள்ள மாட்டாய்.[117] என்று செல்வக் கடுங்கோ வாழியாதனைக் கபிலர் பாடியதன் வழி இதனை அறியலாம். சங்க அக இலக்கியத்துள் ஒன்றான கலித்தொகையும், தான் கூறிய சொல்லை மாற்றாமல் அதன்படி நடந்து கொள்வதே உறவு என்று வாய்மைக்கு இலக்கணமாக அமையும் வகையில் பேசுகிறது.

இயல்வதனை இயலுமெனச் சொல்லி யீதலும், இயலாததனை இயலாதெனச் சொல்லி விடுதலும், தாளாண்மையுடையார்க்குரிய நற்செயல்களாம். இயலாததை இயலுமென்றலும் இயல்வதனை இயலா தென்றலும் இரப்போரை ஏமாற்றும் புகழைக் கெடுத்துக் கொள்ளும் செயல்களாகும்[119] என்று பாண்டியன் இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நன்மாறனுக்கு ஆலூர் மூலங்கிழார் கூறும் அறிவுரையின் வழி உள்ளதை உள்ளவாறு உரைக்கும் வாய்மை நிலையைப் புறநானூறு பகர்கிறது.

பண்டைத் தமிழ்ப் புலவர்கள் பெரும்பாலும் மன்னர்களின் ஆதரவால் வாழ்ந்தவர்கள். பெருநிலக் கிழார்களாகிய வள்ளல்களைப் பாடி, அவர்கள் வழங்கிய பொருள்களைக் கொண்டு வறுமை தீர்ந்து வாழ்ந்தார்கள். ஆயினும், அவர்கள் தங்கள் அறிவை நேர்மையுள்ளத்தை யாருக்கும் அடகு வைத்துவிடவில்லை. உண்மை என்று கண்டதை உரைப்பதற்கு அஞ்சியதில்லை. தகுதியில்லாதவரைப் பாடுவதும், அவர் தரும் பரிசிலை ஏற்பதும், அன்னோர்க்கு இயல்பன்றாம். கண்டீரக் கோப்பெருநள்ளியைப் பாடும் வன்பரணர். பீடில்லாத மன்னருடைய பாராட்டினை விரும்பி அவர் செய்யாதனவற்றைக் கூறிப் பாராட்டுதல் தம் சிறு செந்நாவிற்கு இயல்பன்று என்றார்.[120] அவ்வாறே மோசிகிரனார் என்னும் புலவர் பெருமான்

"பெரிய வோதினுஞ் சிறிய வுணராப்
பீடின்று பெருகிய திருவிற்
பாடின் மன்னரைப் பாடன்மா ரெமரே"[121]

என்றார். இங்ஙனமே பெண் கொலை புரிந்த நன்னனின் மரபில் வந்தவரைப் பாட மறுத்தது புலவருலகம், இளங்கண்டீரக் கோவிடம் தாமப்பல் கண்ணனார் அவனைத் தான் தழுவாமைக்குக் காரணம் கூறுகையில்,

"நன்னன் மருக னன்றியு நீயும்
முயங்கற் கொத்தனை மன்னே வியங்குமொழிப்
பாடுநர்க் கடைத்த கதவி னாடுமழை
அனங்குசா லடுக்கம் பொழியுநும்
மணங்கமழ் மால்வரை வரைந்தன ரெமரே"[122]

என்று மொழிதல் கண்டு தெளியலாம் சான்றோரின் இத்தகு போற்றுதற்குரிய வாய்மைப் பண்பினை,

"அறிகரி பொய்த்தல் ஆன்றோர்க் கில்லை"[123]

என்று குறுந்தொகை கூறுகிறது. தம் கண்ணெதிரே ஒரு தீமை நடைபெற்றாலும் அப்படியே ஏற்காது. அதன் உண்மைநிலையைக் கேட்டு ஆராய்ந்து அறிந்த பின்னரே ஏற்கும் பண்புடையார் சான்றோர். இவ்வாறு வாய்மை நிறைந்த நெஞ்சோடு வாழ்ந்து காட்டிய சான்றோர்களைப் போற்றுவதன் வழிச் சங்க இலக்கியம் வரலாற்றுப் பெட்டகமாகத் திகழ்வதோடன்றி ஒரு வாழ்வியல் நெறிகாட்டியாகவும் திகழ்கிறது. எவர்க்கும் தீமையிலாத சொல்லைக் கூறி வாய்மை நிறைந்த நெஞ்சமொடு வாழ்வதே புகழுடையதாகும். இதுவே, பண்டைய தமிழரின் உயரிய பண்பாட்டு நெறிகளுள் ஒன்றாகும்.

**ஒழுக்கம் :**

ஒழுக்கமுடைய வாழ்வே உயர்ந்த வாழ்வு என்பது பண்டைத் தமிழரின் கொள்கைமாகும். அறிவும், ஒழுக்கமும் உடைய நல்லோரின் ஒழுகலாறுகளை முன் மாதிரியாகக் கொண்டு வாழ்தலே மனிதனுக்குரிய கடமையாகும். ஒழுக்கம் உடைய உயர்ந்தோரை எடுத்துக்காட்டாகக் கொண்டு அவர் கூறும் மெய்ந்நெறி வழியே வாழ்தல் வேண்டும் என்பது தொல்காப்பியர் காட்டும் வாழ்க்கை நெறி.

"வழக்கெனப் படுவ துயர்ந்தோர் மேற்றே
நிகழ்ச்சி யவர்கட் டாக லாண..."

என்னும் நூற்பா இக்கருத்தைத் தெளிவுறுத்தும். வாய்ச் சொற்களிலிருந்து மனம், செயல் உள்ளிட்ட முக்கரணத்தாலும் அமைந்து ஒழுகும் தூய்மை, ஒழுக்கம் எனப்படுகிறது. பாலுணர்ச்சி, அரசின் விதிமுறைகள், வருணநெறிகள் ஆகிய இவற்றோடு அன்றாட வாழ்வியல் நிகழ்ச்சிகளிலும் மனிதனின் மனம் எந்த அளவு ஒழுங்குடையதாக இருக்க வேண்டுமென்பதை ஒழுக்கம் குறித்த சங்க இலக்கியப் பகுதிகள் விளக்குகின்றன.

சுருக்கமாகக் கூறினால் தனிமனிதத் தூய்மையும் உளமேன்பாடுமே ஒழுக்கம் என்று கொள்ளப்படும். அறநெறிக்கு மாறான செயல்களால்

நன்மையில்லை. ஆதலால், அறநெறிக்குத் தடையாக நிற்கும் அனைத்தையும் அறிந்து அவற்றைப் பின்பற்றாமல் பாதுகாத்து வந்தனர்.

பொருளற்ற சினம், காமவெறி, அளவுக்கு மீறிய தயவு, பகைவர்களுக்குப் பயப்படுதல், பொய் கூறல், பொருளின் மேல் பேராசை, நன்மைகளை நாசம் பண்ணுதல், கடுஞ்சொற் கூறல் இவைகளும், இவைகளைப் போன்ற குணங்களும், இவ்வுலகிலே அறநெறியிலே செல்லும் வண்டிக்கு, அது செல்லுகின்ற வழியிலே போடப்படும் முட்டுக்கட்டைகளாகும்.[125] சிறப்பாக மன்னர்களும், பொதுவாக மக்களும் பண்டைக் காலத்தில் இவ்வாறு நல்லறத்தைப் பாதுகாப்பதில் கவலை கொண்டிருந்தனர். மேலும், அறனல்லவற்றை என்றும் விழையா உள்ளம் விழையினும் தாம் கேட்ட கேள்வியறிவை அங்குசமாகக் கொண்டு உள்ளமாகிய யானையை மீட்டு, அறனும், பொருளும் வழுவாமல் ஆராயந்து தம் தகவுடைமை நோக்கி உயர்ந்த நெறியில் நிற்றலைப் பெரியோர்கள் ஒழுக்க நெறியாகக் கொண்டிருந்தனர்.[126] இச்சான்றுகளால் பண்டைத் தமிழர்கள் நல்லொழுக்கத்திலே நாட்டமுடையவர்கள் என்பதும் ஒழுக்கம் என்னும் தகவு சங்க காலத்தில் ஓர் உயர்மதிப்பாக இருந்தது என்பதையும் உணரலாம்.

என் நெஞ்சத்திலே குடிகொண்டிருப்பவன் அஞ்சத் தகுந்த அக்கிரமங்களை அஞ்சாமல் செய்யத் துணியும் அறமற்றவன் அல்லன்[127] என்று கலித்தொகையில் வரும் ஒரு தலைவியின் பேச்சு மேற்காட்டிய சான்றுகளுக்குக் கூடுதலான வலு சேர்ப்பதாய் அமைந்துள்ளது.

மணி, பொன், முத்து இவற்றாலாய அணிகலன்கள் பழுதடைந்தால் சரி செய்து கொள்ளலாம். ஆனால், சால்பு, வியப்பு, பெருமை ஆகிய பண்புகள் குன்றினால் அவற்றை நேர் செய்து புகழில் நிலைநிறுத்தல் அறிவுடைய சான்றோர்க்கும் எளியதன்று எனச் சங்க இலக்கியம் மொழிகின்றது.[128] ஒழுக்கத்திலிருந்து இழுக்கிய ஒருவரை மீண்டும் பண்டைய நிலையில் நிறுத்துவதோ அவர்க்குக் கழுவாய் தேடுவதோ பற்றிச்

சங்க இலக்கியங்கள் கூறாமையை எண்ணுகையில் ஒழுக்கத்தின் உயர்வும், மேன்மையும் புலப்படுகிறது.

இத்தகு ஒழுக்க நெறியுடன் கூடிய உயர்ந்த எண்ணங்களே ஒருவரை மேன்மைப்படுத்தும் என்பதைக் கோப்பெருஞ்சோழனின் கூற்று மெய்ப்பிக்கின்றது. 'யானை வேட்டுவன் தன் குறிக்கோளில் உறுதியுடையான் எனில் யானையும் பெறுவான். குறும்பூழ் வேட்டுவன் உறுதியற்றவனெனில் வெறுங்கையோடும் வருவான். எனவே, உயர்ந்ததையே பெற முயல வேண்டும். அத்தகு உயர் நோக்கமுடையார்க்கு நல்வினை துணை புரியுமெனில் உம்பர் உலகத்து வாழ்வும் கிட்டும்'. அது தவறினால் மாறிப் பிறவா நிலையும் கிட்டலாம். அவ்வாறு மாறிப்பிறவார் என்பர் உளர் எனின் தம் புகழை நிறுத்தி வசையில்லா உடம்பொடு மாய்தல் நன்று என்றான்.[129] இங்கு நல்வினை என்பது சிறந்த ஒழுக்கத்துடன் கூடிய நற்செயல்களே என்பதை உய்த்துணர முடிகிறது.

இவ்வாறு பொதுப்படையாக ஒவ்வொரு தனிமனிதனும் பின்பற்ற வேண்டிய ஒழுக்க நெறிகளைப் பேசிய சங்க இலக்கியம் அரசர்கள் பின்பற்ற வேண்டிய ஒழுக்கத்தையும் வலியுறுத்துகிறது. தந்துமாறனைக் கண்டு சங்க வருணர் என்னும் நாகரியார், "சிறுசினமும், பல கேள்வியும், நுண்ணுணர்வும், பெருங்கொடையும் பணி மொழியுமாகிய நற்பண்பு நற்செய்கைகளால் பலர்க்குப் பயன்பட வாழ்ந்து உலக வாழ்வு இன்பமாக அரசியல் நடத்திய வேந்தர் மிகச் சிலரேயாவர். அவ்வாறு வாழ்வதையறியாதவர் பலர். அவர் தம் செல்வம் நிலைபெற்றதில்லை; இக்காலத்தும் அதன் பண்பு அத்தன்மையாகவேயுளது; அதனால், நீ ஒழுக்கம் குன்றாமல், இரவலர் இன்மை தீரக் கொடுத்தலைக் கைவிடாதொழிக; மேற்கூறிய ஒழுக்கக் குறைவின்றித் தாம் உடையது பகுத்துண்டு வாழ்வோருள்ளும் ஈமத்தின்கண் எரிவாய்ப்புக்க பின்னும் புகழ் வாய்த்திலர் பலர்"[130] எனச் சொல்லி ஒழுக்க நெறியின்கண் வாழ வலியுறுத்தியுள்ளார்.

இவ்வுலகிலே ஒழுக்கத்துடன் வாழ்ந்து குடிகளையும் குறையின்றி காப்பாற்றிய மன்னவன் இறுதியிலே சுவர்க்கத்தையடைந்து இன்பந்துய்ப்பான்.[131] கலித்தொகையின் இக்கூற்று வேந்தர்களின் நல்லொழுக்க நெறியை வலியுறுத்துவதாக அமைந்துள்ளது. நல்லோர் குழுமிய அவைகளத்தே புதியவர் தாம் கற்றவற்றை மனங்கொளக் கூற மாட்டார் ஆயினும், அதனை மறைத்து அப்பொருளைத் தப்பின்றாக எல்லார் மனமும் கொள்ளும்படி சோர்வின்றி விளக்கிக் காட்டி நன்முறையில் நடக்கும் ஒழுக்கம் வாய்ந்தவரைச் சுற்றமாகக் கொண்டவன் நன்னன்[132] என்பதனால் ஆளுநர்கள் மட்டுமின்றி அவரைச் சார்ந்த சுற்றமும் ஒழுக்க நெறியின்கண் நிற்க வேண்டும் என்பதை மலைபடுகடாம் வற்புறுத்துகிறது.

அரசு வகுக்கும் சட்டங்களுக்கும், நீதி முறைகளுக்கும் ஒவ்வொரு சமூகத்திலும் தொன்றுதொட்டு வரும் ஒழுக்க விதிகளும், சமூகப் பண்புகளும் பழக்க வழக்கங்களுமே அடிப்படையாகும். "அறத்தாறு அன்று என மொழிந்த தொன்றுபடு கிளவி" என்ற அகநானூறு குறிப்பதினின்றும் இதனை உணரலாம்.

அரசர்களுக்கு அடுத்தபடியாக அந்தணர்களின் ஒழுக்க நெறியை சங்க இலக்கியம் பேசுவதைக் காணலாம். அந்தணர், சிறந்த வேதங்களை விளங்கும்படி ஓதி, விழுமிய தலைமையோடு பொருந்திய ஒழுக்கம் வாய்ந்து உலகிற்கு ஒருதாரமாகி, உயர்நிலை உலகத்தை இங்கிருந்து எய்தும் அறநெறி பிழையா அன்புடைய நெஞ்சங் கொண்ட பெரியோராவர்.[134] மேலும், முக்கோற் பகவராய அந்தணர் கமண்டலம் பொருந்திய உறியினையும் முக்கோலையும் தோளிலே வைத்து குடை நிழலிலே வெம்மையான காட்டிடத்தே போதலை இயல்பாக உடைய ஒழுக்கத்தினை உடையவர்.[135]

இவ்வாறு சங்க காலத்திலே தமிழ்நாட்டிலே அகவொழுக்கமுடைய அந்தணர் பலர் வாழ்ந்தனர். அவர்களிலே பலர் புறவொழுக்கத்தைப் போற்றுவாராகவும் இருந்தனர். அவர்கள் தங்கள் உடம்பை அழுக்கின்றித்

தூய்மையாக வைத்துக் கொள்ளுவார்கள். அழுக்கு நீரிலே குளிக்க மாட்டார்கள். தூய்மையான தண்ணீரிலே தான் குளிப்பார்கள். பிறர் உடம்பிலே பட்ட தண்ணீர் தம்மேல் பட்டால் அதை ஆசாரக் குறைவாக நினைப்பார்கள். இச்செய்தியைப் பரிபாடல் கூறுகின்றது. வையையாறு பற்றிய 6, 24 ஆகிய பாடல்களில் அந்தணர்கள் தூய்மையற்ற நுரையுடன் கூடியதும், தேன் கலந்திருப்பதும், ஆடவர் பெண்டிர் ஆகியோர் குளித்து உடலில் பூசிய வாசனை பொடிகள் மிதந்து வருவதாலும் நீராடாமையைக் காண முடிகிறது. இவைகளால் தமிழ்நாட்டிலே வாழ்ந்த அந்தணர்கள் உள்ளும், புறமும் ஒழுக்கமுடையவர்களாய் வாழ்ந்தனர் என்பதைக் காணலாம். அமணர் சென்ற காலத்தையும், வருகின்ற காலத்தையும் இன்று இவ்வுலகினில் தோன்றிய ஒழுக்கமொடு நன்கு உணர்ந்தவராவர்[136] என்ற மதுரைக் காஞ்சியின் சான்று வாயிலாகச் சிறந்த ஒழுக்க நெறியை உடையவர்களாலேயே இத்தகு உயர்தகுதியைப் பெற முடியும் என்பதை உணரலாம்.

ஒழுக்க நெறிகளை எந்த இலக்கியமும் வரையறுத்துக் கூறாவிடினும் அதன் உயர்வை எடுத்துக் கூறத் தவறவில்லை. ஒழுக்கம் உயிரினும் மேலானதாக மதிக்கப் படுவதற்குரியது என்று திருக்குறள் கூறும் (குறள் 131). ஒழுக்க நெறிகள் ஒவ்வொரு சமூகத்திலும் காலந்தோறும் வேறுபட வருவன. எனினும், பாலுணர்ச்சி தொடர்பான விதிமுறைகளையே ஒழுக்க நெறியாக எல்லாக் காலத்திலும் போற்றப்பட்டு வருகின்றது. ஒழுக்க நெறியை வலியுறுத்திய சங்க இலக்கியம் கைக்கிளை, பெருந்திணை, வரத்தமை போன்ற கூடா ஒழுக்கத்தினால் ஏற்படும் இழுக்கினைக் கூறி ஒழுக்க நெறியின் சிறப்பினை மென்மேலும் வலியுறுத்துகிறது. பல உயர்ப் பண்புகளின் ஒன்றுகூடிய நிலையை ஒழுக்கம் என்று கருதி அதனைக் கடைபிடிப்பதில் கண்ணும் கருத்துமாகத் தமிழர்கள் விளங்கியுள்ளனர்.

**அறம் விளக்கம் :**

பண்டைத் தமிழர்கள் அறத்தின் பால் அழுந்திய நெஞ்சுடையராவர். புலவருலகம் மக்கள் பின்பற்ற வேண்டிய உயரிய ஒழுக்கங்களை வரையறுத்துக் கூறிற்று. அறத்தின் காவலர்களாகிய அச்சான்றோர்கள் அள்ளி வழங்கிய அறிவுரைகள் சங்க இலக்கியத்துள் மலிந்து கிடக்கின்றன.

அறம் என்பதற்குக் கழகத் தமிழ் அகராதி கடமை, நோன்பு, தருமம், கற்பு, இல்லறம், துறவறம், நல்வினை, அறநூல், அறக்கடவுள், தருமதேவதை என்று பொருள் தருகிறது.[137] தமிழர்களின் வரலாற்றுப் பெட்டகமாகத் திகழும் சங்க இலக்கியங்களும் இந்த அடிப்படையில் அறம் பற்றிய செய்திகளைப் பேசுகின்றன.

பண்டையத் தமிழர்கள் தங்கள் வாழ்வில் பின்பற்றி வந்த அறச்செயல்களையும் உலகோர் பின்பற்ற வேண்டிய அறச் செயல்களையும் இவ்விலக்கியங்ள் தன்னகத்தே கொண்டுள்ளன.

சங்கக் காலத்தில் அறத்தைக் கடவுளாகப் போற்றி மதித்து வாழ்ந்துள்ளனர். 'அறன் வாழ்த்த நற்கு ஆண்ட' (பதிற் 90:12) 'அறம் புனையாகலும் உண்டு' (கலித் 144:48) என வருவன இதற்குச் சான்று. இங்கெல்லாம் அறம் என்பதற்கு அறக்கடவுள் எனப் பண்டை உரையாசிரியர்கள் பொருள் கூறுதலும் கவனிக்கத்தக்கது. அறம், அறக்கடவுள், அறவோர், அறனிலாதவர் என்னும் தலைப்புகளில் சங்க இலக்கிய பொருட்களஞ்சியம் சங்க இலக்கியங்களில் அறம் குறித்த செய்திகளைத் தொகுத்துள்ளது.[138] 133 இடங்களில் அறம் பற்றிய குறிப்புகள் கிடைப்பினும் இவற்றில் பெரும்பான்மையானவை அரசத் தொடர்புடையன.

சங்க காலச் சமூக மதிப்புகளில் உயர்ந்த வாழ்க்கைக் கோட்பாடுகள் அனைத்தையும் உள்ளடக்கிய அறம், பொருள், இன்பம் ஆகிய மூன்றிலும் அறமே தலைமை சான்ற உயர்மதிப்பாக அமைந்தது.

மலையிலே வாழ்வோர் அறமல்லன செய்தால், வள்ளிக் கிழங்கு நிலத்திலே ஆழமாக ஊன்றிப் பருக்காது; தேன் ஈக்களும் அடைக்கட்டாது. தினைக்கதிர்கள் நன்றாகக் கதிர் விட்டுப் பயன் தராது. மழை பெய்யாது.[139] கலித்தொகை கூறும் இச்செய்திகள் மூலம் சங்க காலத்தவர் அறத்தின் பால் கொண்டிருந்த உயர்மதிப்பும், நம்பிக்கையும் தெளிவாகிறது. மேலும்,

"பிறர்நோயும் தம்நோய் போல் போற்றி அறன் அறிதல்
சான்றவர்க் கெல்லாம் கடன்"[140]

என்பதனால் பிறர்க்கு உண்டான துன்பத்தையும் தமக்கு நேர்ந்த துன்பமாக எண்ணிப் பாதுகாப்பது, அறநெறியை அறிந்து நடத்தல். இவை அறிஞர்களின் கடமையாகக் கொண்டிருந்தனர் என்பதும் தெரிய வருகிறது.

அறச் செயல்களை மக்கள் பின்பற்ற வேண்டும் என்று வலியுறுத்திய சங்க இலக்கியம் தன் நன்மைக்காக - இன்பத்துக்காக - பிறர்க்குத் தீங்கிழைத்தல் தவறு என்று பேசுகிறது. இதனை,

"தமக்கினி தென்று வலிதில் பிறர்க்கின்னா
செய்வது நன்றாமோ மற்று"[141]

என்ற கலித்தொகை வரிகளின் மூலம் உணரலாம். ஒவ்வொரு தனிமனிதனும் அறம் சார்ந்த சிந்தனையைக் கொண்டிருந்தனர் என்பது சங்க இலக்கியம் கூறும் செய்திகளுள் ஒன்றாகும். மன்னனை வாழ்த்தும் போது ஆதன் அவினி வாழ்க ! அறங்களெல்லாம் சிறந்து வளர்க ! அறம் அல்லாதவை ஒழிக! என்று விரும்பினாள் அன்னை.[142]

இன்னொரு பெண் ஒருத்தி நாட்டில் அறம் சிறக்க வேண்டும் என்று இல்லுறைத் தெய்வத்தை வணங்கியமையைச் சங்க இலக்கியத்தின் வழி அறிய முடிகிறது.[143] அறம் என்ற தகவை முதலாக வைத்து அதனடிப்படையில் ஏனைய எல்லாவற்றையும் இயக்கிக் கணித்த பண்டைத் தமிழ் மன்பதை போற்றுதற்கு உரியது. இச்சிந்தனைக்கு மேலும் வலு சேர்க்கும் வகையில் பின்வரும் கலித்தொகைப் பாடல் அடிகள் ஆற்றுதல்,

போற்றுதல் முதலிய அறங்களின் இயல்புகளை இனிதே எடுத்து மொழிகின்றன.

'ஆற்றுதல்' என்பது ஒன்று அலந்தவர்க்கு உதவுதல் ;
'போற்றுதல்' என்பது புணர்ந்தாரைப் பிரியாமை ;
'பண்பு' எனப்படுவது பாடு அறிந்து ஒழுகுதல் ;
'அன்பு' எனப்படுவது தன் கிளை செறாஅமை ;
'அறிவு' எனப்படுவது பேதையார் சொல் நோன்றல் ;
'செறிவு' எனப்படுவது கூறியது மறாஅமை ;
'நிறை' எனப்படுவது மறை பிறா அறியாமை ;
'முறை' எனப்படுவது கண்ணோடாது உயிர் வெளவல் ;
'பொறை' எனப்படுவது போற்றாரைப் பொறுத்தல் ;[144]

மக்கள் அறம், பொருள், இன்பம் என்னும் மூன்றன் கூறுபாடுகளையும் நன்கு போற்றினர்.[145]

அறவழியில் நின்று அதன்படி பொருள் ஈட்டி அப்பொருளைக் கொண்டு அறங்கள் பலச் செய்ய வேண்டும். இவ்விரண்டின் வழி பெறக்கூடிய இன்பம் நிலையானது என்று எண்ணிய தமிழர்களின் மனப்பாங்கு போற்றுதற்குரியது. ஒழுங்கு தவறிய நெறியிலே பொருள் சேர்ப்பவரிடம் அப்பொருள் நிலைத்திராது ; இம்மையிலும் பகையாகி நின்று துன்பந்தரும் ; மறுமையிலும் பகையாகி நின்று துயர் விளைக்கும்[146] என்று கலித்தொகை கூறுவதிலிருந்து அறவழியில் நின்று பொருளீட்ட வேண்டும் என்பது புலனாகும்.

பாவங்களைச் செய்யாமல் அறத்தைப் பின்பற்றி நடக்கும் வாழ்க்கையும், ஒருபொழுதும் பிறனுடைய வீட்டு வாசற்படியிலே போய் நின்று இரக்காத செல்வமும் ஆகிய இரண்டும் பொருளால்தான் உண்டாகும்[147] என்பதனால் அறம் செய்வதற்காகவாவது பொருள் ஈட்ட வேண்டும் என்று அகநானூறு அறிவுறுத்துகிறது.

பொருள் என்பது எல்லா காலத்திலும் மதிப்புடையதாக இருப்பினும் அதனை அறம் சார்ந்ததாகக் கூறும் கருத்து சங்க இலக்கியத்தாற் பெறப்படும். தம் நலத்திற்காக மட்டுமன்றி பிறர்க்கு ஈதல் வேண்டியும் பொருளீட்டல் சங்க காலத் தலைமக்களின் கருத்தாயிற்று[148]. பொருளை ஈட்டுதல், செலவு செய்தல், ஆகிய எல்லா செயல்களிலும் அற நோக்கம் இருந்தது.

பொருள் நிலையாதது என்பதோடு, தம் வாழ்க்கையின் நிலைபேற்றின்மை -யையும், பண்டைத் தமிழர் மிகுதியாக எண்ணியிருக்கின்றனர். ஓரில் நெய்தல் கறங்க ஓரில் ஈர்ந்தண் முழவின் பாணி ததும்பும் முரண்பாடுடைய உலகக் காட்சி அவர்களை இவ்வின்னா உலகில் இனிய காணத் தூண்டிற்று. வாழுங் காலத்தும், பிறகும் தம்மை வையம் புகழ வேண்டும் என்ற அவா மீக்கூர்ந்தமையால் முயன்று பொருள் தேடவும் அதனை அறிமடத்தோடு பிறர்க்கெலாம் ஈந்து மகிழவும் செய்தனர்.

சங்க இலக்கியங்கள் மும்முதற்பொருளையே கூறும் நாற்பொருள் நெறி பழந்தமிழில் இல்லை. பிற்பயன் கருதாமல் அறம் செய்தனர் என்பதே வீட்டின்பத்தைக் குறியாமை காட்டுகின்றது. தமக்கு வரும் பயன்பாடு கருதாது பிற உயிர்க்கு விளையும் நன்மை கருதுதலே அறத்தின் அடிப்படையாகும்.

> "இம்மைச் செய்தது மறுமைக்கு ஆம் எனும்
> அறவிலை வாணிகம் ஆய் அலன்"[149]

என்ற நிலையில் எதிர்பார்பபு கருதி நன்மை செய்தலை அறம் என்று கொள்ளாமல் அதனை வாணிகம் என்றே கொண்டனர். பிற்பயன் கருதாது அறம் செய்தலையே தமிழர்கள் தங்கள் வாழ்வில் உயரிய கோட்பாடாகக் கொண்டிருந்தனர்.

வையத்துள் வாழ்வாங்கு வாழ்தலே வீடுபேறு நல்குமென அன்னோரும் கருதினர். தத்தம் கடமையைப் புறக்கணியாது செய்வோர்க்குத் தொய்யா நல்லிசைத் துறக்கம் வந்தெய்தும் என்ற கருத்து

அக்காலத்துச் சான்றோரால் கூறப்பெற்றது. பேரெயின் முறுவலார் நம்பி நெடுஞ்செழியன் இறந்த போது, "அவன் செய்ப எல்லாம் செய்தனன், ஆதலின் அவனை வாளான் அடுக அல்லது சுடுக. யாது வேண்டுமாயினும் செய்க" என்ற பொருள் படப்புகழ்வார்.[150] இம்மை செய்தன நல்வினை யாகலின் மறுமை குறித்து அஞ்சா அறநெஞ்சினராக அக்காலத்துச் சான்றோர் அமைந்தனர். ஆகவே, வீடுபேறு பற்றிய பல்வேறு இயல்புகளை விளக்கும் கருத்துடைய நூல்களையும், பனுவல்களையும் அன்னோர் யாத்திலர்.

பண்டைத் தமிழர் அறத்தின்பால் கொண்டிருந்த அசைக்க முடியாத நம்பிக்கையே வீடுபேறு வேண்டாமைக்குக் காரணமாகும். வீடுபேறு வேண்டாமையைக் கூட ஓர் அறமாகக் கருதினர் என்றால் அதுமிகையல்ல.

**இல்லறம் :**

அறவுணர்வு மிக்கவர்களாகத் திகழ்ந்த சங்க காலத் தமிழர்கள் அதனை நிறைவேற்றுவதற்கு ஏற்றதொரு கருவியாக இல்லறத்தைப் பயன்படுத்திக் கொண்டனர். குடும்பத்தை அறவழியில் நடத்தி அதன்வழி அறச்செயல்களைச் செய்வதே நோக்கமாக இவர்கள் கொண்டிருந்தனர். சங்க நூல்கள் எல்லாம் இல்லற வாழ்க்கையைத்தான் ஏற்றமுடையதாகக் கூறுகின்றன. அகப்பொருள் பற்றிக் கூறும் நூல்கள் அனைத்தும் இல்லறத்தைப் பாராட்டிக் கூறுவனவேயாகும்.

பண்டைத் தமிழர்கள் தனித்தனிக் குடும்பமாகிச் சிறந்து வாழ்ந்து வந்தனர். அறம் செய்வதற்கு ஏற்ற வகையில் அக்காலச் சமூகத்தார் அமைத்துக் கொண்ட குடும்ப நெறியாக இதனைக் கொள்ளலாம். நாட்டிலே நல்ல அமைதியும் சிறந்த அரசியலும் நிலவுவதற்கு இல்லற வாழ்வு துணைநின்றது. இல்லறம் என்பதற்குச் சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ்ப் பேரகராதி இல்வாழ்க்கை என்றும் கிருகத்த தருமம் என்றும் பொருள் விளக்கம் தருகிறது.[151] மனையறம் என்பதும் இப்பொருளையே உணர்த்தும். அன்பு பண்பாகவும், அறம் பயனாகவும் அமைவது இல்வாழ்க்கை.

பண்டைத் தமிழர் திருமண வாழ்வை இல்லறம் என்றனர். இல்லிலிருந்து அறம் பல புரிந்தும் இல்வாழ்வின் முடிந்த பயனாக அறத்தைப் போற்றியும் வாழ்ந்தனர். அகவாழ்க்கையில் தலைவன் தலைவி இருவரும் அன்பு உடையோராகவும், அறம் புரிவோராகவும் விளங்கினர். இதனை,

> "காமஞ் சான்ற கடைக்கோட் காலை
> ஏமஞ் சான்ற மக்களொடு துவன்றி
> அறம்புரி சுற்றமொடு கிழவனும் கிழத்தியும்
> சிறந்தது பயிற்றல் இறந்ததன் பயனே"[152]

என்கிறது தொல்காப்பியம். சங்க கால மக்கள் வாழ்வு, தமக்கென மட்டும் வாழும் குறுகிய, நோக்குடையதன்று. மனைவி, மக்கள் என்று சார்ந்தோர்க்கு அன்பு செய்யும் தலைமகள் தன்னைச் சாராதவர்க்கும் அருள் புரிதல் நோக்கமாகச் செயல்பட வேண்டுமென்பது அற்றைச் சமூகஅறம் என்பதை மேற்கண்ட தொல்காப்பிய நூற்பா உணர்த்துகின்றது.

கற்பும் காமமும் நற்பால் ஒழுக்கமும் மெல்லியற் பொறையும், நிறையும், வல்லிதின் விருந்து புறந்தருதலும் சுற்றம் ஓம்பலும் கற்பியலில் கிழத்திக்குரிய பண்புகளாக ஓதப்பெற்றன.[153] இவையே பண்டைத் தமிழர்கள் இல்லிலிருந்து ஆற்ற வேண்டிய அறங்களாகவும் தங்கள் வாழ்வில் மேற்கொண்டிருந்தனர். இல்வாழ்க்கையைத் திறமையுடன் நடத்த வேண்டிய முறைப்படி நடத்தினால் அதைக் காட்டிலும் இனிய வாழ்வு வேறு உண்டோ ?

> "மனையுறை வாழ்க்கை வல்லியாங்கு மருவின்
> இனியஎவும் உளவோ"[154]

என்ற அடிகள் இவ்வுண்மையைக் காட்டும். எல்லா குடும்பங்களிலும் உணவுப் பொருள்களும் ஏனைய செல்வங்களும் ஏராளமாக இருக்க வேண்டும். இல்லற தர்மம் இனிது நடைபெற்று எல்லோரும் இன்புற வேண்டும் என்பது பண்டைத் தமிழரின் கொள்கையாகும். நெல் முதலிய பல தானியங்களும் சிறந்திருப்பதாக ; பொன் மிகவும் நிறைந்திருப்பதாக

வயல்களிலே தானியங்கள் நன்றாக விளையட்டும். இரவலர்கள் உதவி வேண்டி ஏராளமாக வரட்டும். பால்தரும் பசுக்களெல்லாம் நிறைய பாலைச் சுரப்பதாக ; உழுவதற்கேற்ற காளைகள் பலவாகப் பெருகுவதாக எல்லா மக்களும் பசியின்றி வாழ்வார்களாக, மக்களை வருத்தும் நோய் தொலைவில் ஓடுவதாக ; தவறாமல் மழை பெய்வதாக ; அதனால் செல்வம் மிகவும் சிறப்பதாக என்பவை ஐங்குறுநூற்றில் வரும் ஓர் இல்லக் கிழத்தியின் எண்ண வெளிப்பாடாகும்.[155] எல்லாரும் எல்லாமும் பெற்று இன்புற்று வாழ வேண்டும் என்பதை இக்கூற்று உணர்த்துகிறது.

இல்லறக் கடமைகளை இனிது நிறைவேற்றுவதற்கு ஏதுவாகிய பொருளைத் தேடி ஆடவர் பிரிந்து செல்வது வாழ்வின் ஒரு நிகழ்வாக இருக்கிறது. மேலும், பிறரோடு பகிர்ந்துண்டு வாழ்வதற்கென்றே பலவற்றையும் தொகுக்கும் முயற்சியில் ஈடுபடுதலே ஆண்மை[156] எனக் கருதி இல்லற நெறிகளை இனிது நிறைவேற்றிச் சங்கத் தமிழர் வாழ்ந்தனர். அறவோர்க்கு அளித்தும் அந்தணர் ஓம்பியும் துறவோரை வழிபட்டும் போற்றினர். மனைக்கு வரும் விருந்தினரை உபசரித்தனர்.

> "நன்மனை நனி வருந்து அயரும்
> கைதூ வின்மையின் எய்தாம் ஆறே"[157]

இதன் வழி விருந்து போற்றும் வளமனைகளைக் கொண்டதே தமிழகம் என்றும், விருந்து போற்றலை இல்லற நெறியாகக் கொண்டவர்கள் தமிழர்கள் என்பதையும் அறியலாம். இல்வாழ்க்கையின் இயல்புகளை மனைமாட்சியும் மகளிர் மாண்பும் என்ற இயலில் விரித்துக் கூறப்பட்டுள்ளது. ஆதலின் அறச்சிந்தனை என்ற அடிப்படையில் இல்லற நெறியினைச் சுருக்கமாக இங்குக் கண்டோம்.

**ஈகை :**

அறம் என்பதற்கு ஈகை என்று பொருள் கொள்ளுமாறு ஈகையறத்தினைச் சங்க இலக்கியம் போற்றியுரைக்கின்றது. தனிமனித வாழ்வில் இரத்தல் இழிவாகக் கருதப்பெறினும் சமூக வாழ்வில் ஈகை உயர்ந்த அறமாகக் கருதப் பெற்றது.

"செல்வத்துப் பயனே ஈதல்

துய்ப்பே மெனினே தப்புந பலவே"[158]

என்று ஈகையறம் வலியுறுத்தப் பெற்றுள்ளது. ஒருவருடைய துன்பத்திற்கு அவர் வேண்டுவன அளித்து உதவுதலே ஈகையாகும். எவ்விதப் பயனும் கருதாது ஒருவர்க்கு ஒரு பொருளை அளித்தலே ஈகை எனப்படும். இது பற்றியே,

"ஆற்றுத லென்பதொன் றலந்தவர்க் குலவுதல்"[159]

என்று கலித்தொகை கூறுகின்றது. பொருள் உடையாரின் கடன் பொருளில்லார்க்குக் கொடுத்து உதவுதல் என்பது சான்றோரின் செந்நெறி. சான்றோர் சென்ற நெறியில் வண்மை புரிந்து வாழ்ந்து வந்த ஆய் அண்டிரனை, புறநானூறு போற்றுகின்றது.[160] ஈதலைச் செய்து இல்லறம் நிகழ்த்துவோனின் செல்வம் பெருகும் என்ற கருத்து நிலவியது. தலைவியுடன் கூடிப் பெறும் இல்லற இன்பத்தினும் ஈதலறமே சிறந்தது என்று கருதிய பண்டைத் தமிழர் பொருள் வயிற் பிரிவதை நெறியாகக் கொண்டிருந்தனர்.[161] பெயரும், புகழும் சேர்த்தற்காக ஈகையைச் செய்யாது ஈகையை ஈகையின் பொருட்டே செய்தனர் என்பதை நள்ளியின் வண்மை மூலம் புறநானூறு விளக்கிக் காட்டுகின்றது.[162]

மானிணக் கொழுங்குறைத் தீயிலே வேக வைத்துப் புலவரின் இரும்பேரொக்கலை உண்பித்து நாடும் ஊரும் பெயரும் சொல்லாது வண்மை புரிந்தவன் நள்ளி கடையேழு வள்ளல்களுள் ஒருவனாகவும் கூறப்படும் சிறப்புடையவன். ஈகைப் பண்பால் இலக்கியத்தில் சிறப்பிடம் பெற்றுள்ளான்.

கணவன் போருக்காகவோ பிறவற்றின் பொருட்டோ நெடுந்தூரம் பிரிந்து சென்றிருப்பான். மனைவி வருகின்ற இரவலர்களுக்குப் பரிசில் நல்கிச் சிறப்பிப்பாள் இச்செய்தியைப் புறநானூறு, போற்றுகிறது.[163] நம்மிடம் உள்ளதைக் கொண்டு பிறர்க்கும் நன்மை செய்து வாழ்தல் வேண்டும் என்ற கருத்தை இவ்வறம் வலியுறுத்துகின்றது. வறுமையால்

வாடிய புலவர் பெருமக்களும், வள்ளல்களிடம் தாம் பெற்ற பரிசிற் பொருளை,

"பெற்றது மகிழ்ந்து சுற்ற மருத்தி
ஓம்பாது உண்டு கூம்பாது வீசி"[164]

வாழும் இயல்பினராகத் திகழ்ந்ததைக் கோவூர்க்கிழாரின் பாடல் அறிவிக்கின்றது. குமணனைப் பாடிப் பரிசில் பெற்று வந்த பெருஞ்சித்திரனார் தம் மனைவியை நோக்கிப் பொருள்களை அனைவருக்கும் கொடுக்குமாறு கூறும் கூற்றால் இருவரின் கொடை உள்ளமும் புலனாகக் காணலாம்.[165]

**அருளுடைமை :**

செம்மாந்த நெறிகளை உள்ளடக்கிய அறக்கோட்பாட்டைத் தமிழர்கள் தங்களின் வாழ்வில் மேற்கொண்டனர். அவற்றுள் அருமைப்பாடு மிக்கதாக அருட்பண்பு போற்றப்படுகிறது. உலக நன்மை கருதியதன் வெளிப்பாடாகவே இப்பண்பு திகழ்கின்றது. ஒவ்வொரு மனிதனிடத்திலும் அருட்பண்பானது நிறைந்திருக்க வேண்டும் என்பதைச் சங்க இலக்கியம் மீண்டும் மீண்டும் வலியுறுத்தி வந்துள்ளது. அருள் என்ற ஓர் உயர்மதிப்பு மிக்க மாண்பின் இன்றியமையாமையை உணர்ந்த வள்ளுவரும் அது குறித்த செய்திகளை உள்ளடக்கி ஓர் அதிகாரத்தையே படைத்தள்ளார்.

அருள் என்பது அன்பின் முதிர்ச்சியாகும். தொடர்புடையார் மாட்டுச் செலுத்தும் அன்பு முதிர்ந்து உயிர்ப் பொருட்டெல்லாம் இரங்கும் அருளென்னும் அரிய பண்பாகிறது[166] என்று அருள் குறித்து கு.வெ. பாலசுப்பிரமணியம் அவர்கள் குறிப்பிடுவார். சங்க கால மக்கள் வாழ்வு தமக்கென மட்டும் வாழும் குறுகிய நோக்குடையதன்று. பிறர்க்கென வாழும் பேராண்மை மிக்கதாகத் திகழ்ந்துள்ளது. பிறர்க்கென முயலுகின்ற பேரருள் நெஞ்சமொடு அழகிய பொருளாசை பிணித்ததால் தலைவர் பிரிந்தார்[167] என்று பொருள். ஈட்டும் பொருட்டுத் தலைவன் தன்னை விட்டுப் பிரிந்து சென்றிருப்பதாக தலைவி கூறுவதிலிருந்து மேற்குறித்த

கூற்று மெயப்பிக்கப் படுகிறது. அருள் என்ற உயர் பண்பு இரக்க உணர்வாக அவ்வப்போது வெளிப்பட்டிருப்பதைச் சங்கப் புற இலக்கியங்களின் வழி கண்டு தெளியலாம். எங்கெல்லாம் துன்பமுள்ளதோ அங்கெல்லாம் சான்றோர் தம் கடமையாற்றத் தயங்கார்.

புலவர்கட்கு மன்னர்கள் பரிசளித்தனர் என்பதற்காக அவர்கள் தவறு செய்த போது பார்த்துக் கொண்டு வாளாவிருந்தனரல்லர். அருகிற் சென்று இடித்துரைத்துத் திருந்தினர். சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன் வள்ளல் காரியின் குழந்தைகளைப் பகை காரணமாக யானைக் காலிலிட்டுக் கொல்லச் சூழ்ந்தபோது கோவூர்க்கிழார் ஓடோடிச் சென்று அவன் முன்னோர் இயல்பை எடுத்துக் கூறி அத்தீச்செயலைத் தடுத்தார்.

"நீயே, புறவின் அல்லல் அன்றியும் பிறவும்
இடுக்கண் பலவும் தீர்த்தோன் மருகனை ;
இவரே புலனுழு துண்மார் புன்கண் அஞ்சித்
தமதுபாத் துண்ணும் தண்ணிழல் வாழ்நர்"[168]

கூறி அவன் உள்ளத்தில் அருளுணர்வினைத் தோற்றுவித்து உய்யக் கொண்டார். இங்ஙனமே இளந்தத்தன் என்னும் புலவனை ஒற்றன் என்று ஐயுற்றுக் கொல்லத் துணிந்தான் நெடுங்கிள்ளி. அப்போது இதே புலவர் உண்மையை எடுத்துச் சொல்லி அவனையும் காப்பாற்றினார்.[169] வையாவிக் கோப்பெரும்போகன் தன் மனைவியாகிய கண்ணகியின்பால் யாது காரணம் குறித்தோ வருத்தமுற்று அவளை விட்டுப் பிரிந்து வாழ்ந்தான். இதனால் கண்ணகி பெருந்துன்பமுற்று வருந்தினாள், இந்நிகழ்வினைக் கண்டு இறக்கம் கொண்டு பரணர் என்ற புலவர் கோப்பெரும் பேகன் தன் மனைவிக்கு அருள் செய்யாதிருத்தல் கொடியது என்று கூறினார்.[170] வையாவிக் கோப்பெரும்பேகனை 'அருள்' வெய்யோய் என விளித்து அறஞ்செய்க என்றும் பரணர் வேண்டுவார்.[171] மேலும், அவ்வரசன் கண்ணகியை விட்டுப் பிரிந்திருந்ததன் ஏதுவால் புலவர் பெருமக்கள்

அவனிடம் பரிசில் பெற மறுத்தமையை எண்ணுகிற போது புலவர் பெருமக்கள் கொண்டிருந்த அருள் உள்ளம் வெளிப்படுகிறது.

கருவூரை வென்று மேம்பட்டவன் சேரமான் ஒள்வாள் கோப்பெருஞ் சேரல் இரும்பொறை. நரிவெரூஉத்தலையார் என்னும் சான்றோர் அவனுக்கு நாட்டைக் காக்க வேண்டிய நெறியை எடுத்துக் கூறுகிறார். அருளும், அன்பும் கொண்டு குடிமக்களைக் காக்கத் தூண்டுகிறார். நாட்டைக் குழவி கொள்பவர் போல எச்சரிக்கையோடு காக்க வேண்டுமென்கிறார்.[172] மேலும், நூலோரின் அருள்நெறி பிறழாதவாறு இசையை எக்காலமும் நுகரும் செல்வத்தை உடையவர் அரசர் என்றும் சங்க இலக்கியம் கூறுகிறது. அருள் உள்ளம் வாய்க்கப் பெற்றால் உண்டாகும் நலனைச் சங்க இலக்கியம் பல இடங்களில் வலியுறுத்துகிறது. அருள் வல்லவனுக்கு ஆக்கம் பெருகும். தீவினையைப் போக்குகின்றவனுடைய அருள் கொண்ட முகம் ஒளி மிக்குத் திகழும். அது கடலில் தோன்றி இருளை அகற்றும் திங்களுக்கு உவமை[174] என்ற கூற்றுகளை இதற்குச் சான்றாக எடுத்துக்காட்டலாம். இவ்வாறே அருள் நீங்கி மறுட்சியுற்றால் உண்டாகும் நிலையைக் குறித்தும் சங்க இலக்கியம் பேசத் தவறியதில்லை. அருளில்லை என்று அயலார் பழிக்கும் நிலையடைந்தவர்க்குத் தைந்நீராடிய தவப்பயன் நீங்கும்.[175] அருளில்லை என்று அயலார் பழிக்கும் நிலை அடைந்தார்க்குப் பிறர் மனைபாற் பாடிப் பெற்றவற்றைப் பலர்க்கும் அளித்த கொடையும் பயன் தராது.[176] அருள் நீங்கின அறிவால் அறஞ்செய்தலைக் கருதாதவனாய் நன்மை செய்யாமல் யாரும் அஞ்சுமாறு நடந்தவன் உள்ளம் மருட்சியுற்று இருளும்[177] என்பதனால் அருளின்மையின் விளைவுகளைக் கூறும் சங்க இலக்கியம் நீடு நினைத்தற்குரியதாகிறது.

'அருளின் மாறுபட்டது மறப்பண்பு எனப்படல்'[178] என்ற பொருணராற்றுப் படை வரியின் வாயிலாக மறப்பண்புக்கு மாறாக நெஞ்சத்தில் திகழும் அறப்பண்பே அருள் என்பதனை உணர முடிகிறது. சோழன் நலங்கிள்ளியின் வெற்றி விழைந்து அவனுக்குப் பகையால்

மாறுபட்டோர் அருள் இலராய்க் கொடாமை வல்லராகுக என உறையூர் முதுகண்ணன் சாத்தனார் வேண்டுவர்.[179] இச்செய்தியின் வழி புறப்பாடல்களில் கொடையில் பண்பே அருளின்மையாகிறது. இது இவ்வாறிருக்க அகப்பாடல்களில் பலவற்றிலும் பொருள் காரணமாகத் தலைவியைப் பிரிந்து தலைவன் செலவு மேற்கொள்ளுதல் அருளில் செயல் எனப்படுகிறது.

சங்க இலக்கியங்களில் தலைவி தலைவனின் அருளையும் தலைவன் தலைவி அருளையும் வேண்டி நிற்கும் இடங்கள் பலவாக உள்ளன. அவ்வாறே இருவரின் அருளில் செயலையும் பயிலுங்கால் அருட்பண்பை எவ்வளவு இன்றியமையாதது என்பதை உணர முடியும்.

**உயிர் இரக்கம் :**

எல்லா உயிர்களிடமும் இரக்கங் காட்டுவது பண்டைத் தமிழர்களின் பரம்பரைக் குணம். காரணமில்லாமல் எவ்வுயிர்க்கும் இன்னலிழைக்க மாட்டார்கள். இந்த உண்மையை ஒரு நிகழ்ச்சி விளக்கிக் காட்டுகிறது.

ஒரு தலைவன் தேரின் மேல் ஏறிக் கொண்டு வருகின்றான். அத்தேர் கடற்கரையின் வழியே வந்து கொண்டிருக்கின்றது. கடற்கரையிலே நண்டுகள் மேய்ந்து கொண்டிருக்கின்றன. தேரோட்டி வரும் பாகன், தேர்ச் சக்கரத்திலே அந்த நண்டுகள் அகப்பட்டு நசுங்காதபடி கவனத்துடன் தேரை ஓட்டிக் கொண்டு வருகின்றான். இச்சமயத்திலே அவனுடைய செய்கைக்கு உதவியாக நிலவும் தோன்றியது.[180] இந்நிகழ்ச்சியின் வாயிலாகத் தமிழர்களின் உயிர்க்கருணை வெளிப்படுகிறது.

ஓரறிவு முதல் ஆறறிவு ஈராக உள்ள உயிரினங்களின் இயல்பினை ஈராயிரம் ஆண்டுகளுக்கு முன்பே தமிழர்கள் அறிந்திருந்தனர் என்பதற்குத் தொல்காப்பிய நூற்பா சான்று பகர்கிறது.[181] மேலும், எல்லா உயிர்களுக்கும் உணர்வும், உணர்ச்சியும் உண்டு என்பதையும் அறிந்திருந்தனர். ஆதலால்தான் அத்தமிழ்ப் பரம்பரையில் வந்த சங்க அகப்பொருள் பாடலில் உள்ள ஒரு தலைவன் அஃறிணை உயிரின் பால் இரக்கம் உடையவனாகத்

திகழ்ந்துள்ளான். வேற்றுப் புலம் சென்று பொருளீட்டும் வினை முடித்துத் தலைவியின் பால் கொண்ட விருப்பத்தினால் உவகையோடு தேரேறி விரைந்து வருகிறான். வழியிலே வண்டுகள் மலரில் தாதுண்ணும் நிகழ்வைக் காண்கிறான். தேர்க் காலில் அமைந்துள்ள மணியின் ஓசை அவ்வண்டுகளுக்கு இடையூராக அமையும் என அஞ்சி மணியின் நாவைக் கட்டித் தேரை மெதுவாக ஓட்டி வருகிறான்.[182] தலைவனின் இத்தகு செயல்பாடு உயிர்களின் மேல் கொண்ட இரக்கப் பண்பைக் காட்டுகிறதன்றோ?

மனிதரை மட்டுமன்றி மற்றய உயிரினங்களையும் உடன்பிறப்பாகக் கருதிய ஒப்பற்ற உயர்ப் பண்பு தமிழர்களுடையது என்பதை ஒரு நற்றிணைப் பாடல் நயம்பட நவில்கிறது.

காதலில் ஈடுபட்டுள்ள ஒரு தலைவனும், தலைவியும் ஒரு புன்னை மரத்தின்அடியில் நின்று பேசிக் கொண்டிருக்கின்றனர். அப்பொழுது நாணமடைந்த தலைவி நான் என் சிறுபிள்ளையில் என் தோழியரோடு மணலில் புன்னைக்காய்களை வைத்து விளையாடிக் கொண்டிருக்கும்போது அவற்றில் ஒன்று மணலில் அழுந்தி முளைத்தது. அதற்கு பாலும், நெய்யும் ஊற்றி வளர்த்து வந்தோம். ஆதலால், இப்புன்னை மரம் உன் சகோதரி என்று என்னிடம் என் அன்னை கூறினாள் என்பதனால் இம்மரத்தடியில் நின்று நாம் காதல் ஒழுக்கம் கொள்வது எனக்கு நாணமாக உள்ளது[183] என்று தலைவி கூறுகிறாள். இச்செய்திகள் வாயிலாகத் தமிழர்களின் உயிர் இரக்க உணர்வு வெளிப்படுகிறதல்லவா? பறவைகளையும், விலங்குகளையும் வீட்டில் வளர்த்து அவற்றின் மேல் அன்பு காட்டிய பண்பாட்டில் தமிழர்களுக்குத் தனிச்சிறப்பிடம் உண்டு. சங்க காலத் தமிழர்களும் பறவை, விலங்குகளான மயில், குயில், மான்குட்டி, குரங்குக் குட்டி இவைகளை வளர்த்து உயிர் இரக்கப் பண்பினை வெளிப்படுத்தியுள்ளனர்.[184]

பண்டைக் காலத் தமிழர்கள் பல்லுயிர் ஓம்பும் பறந்த மனப்பாண்மை உடையவர்கள் என்பதைப் பல சங்க இலக்கியப் பாடல்கள்

பறைசாற்றுகின்றன. படைமடம் படாத அரசர்கள் கூட கொடை மடம் பட்ட காட்சிகளின் வழி இதனை வெளிப்படையாக உணரலாம். கடை ஏழு வள்ளல்களுள் ஒருவன் பரம்பு நாட்டையாண்ட பாரி என்பவனாவான். இவன், காற்றில் முல்லைக் கொடி அசைந்து கொண்டிருப்பதைக் கண்டு, பற்றுக் கொம்பில்லாமல் பரிதவிப்பதாகக் கருதி, அக்கொடியின் பால் இரக்கம் கொண்டு தான் ஏறி வந்த தேரையே அம்முல்லைக் கொடிக்குப் பற்றுக் கொம்பாகக் கொடுத்த பறந்த மனப்பான்மை உடையவன்.[185] அரண்மனைக்குச் சென்று ஏவலர்களை அனுப்பி, கொடிக்குப் பற்றுக் கொம்பு நட காலதாமதம் ஆகும் என்பதைக் கருதிக் கொடை மடத்தோடு இச்செயலில் ஈடுபட்ட பாரியின் உயிர் இரக்கம் போற்றுதற்குரியது.

இவ்வாறே வையாவிக் கோப்பெரும்பேகனும் படைமடம் படாநிலையில் கொடைமடம் கொண்டவனாய்த் திகழ்ந்துள்ளான். கார்மேகம் கண்டு களிப்பில் கூத்தாடியது மயில். இந்நிகழ்வைக் கண்ட பேகன் குளிரால் நடுங்குகிறதோ என ஐயுற்று உயிர் இரக்கம் அவனை உந்தியதால் போர்வையைப் புறந்தருளிப் புகழ் பெற்றான்.[186] அரசர்கள் மட்டுமன்றி எளிய குடியில் வாழ்ந்த மக்களும் கூட அன்றாட வாழ்வில் உயிர் இரக்கப் பண்பை வெளிப்படுத்தி உள்ளனர்.

உயிர் இரக்க உணர்வை எதிர்வரும் தலைமுறையினருக்கும் ஏற்படுத்த வேண்டும் என்ற எண்ணத்தோடு சில நம்பிக்கைகளைச் சங்க காலத்தோர் சமூகத்தில் விதைத்திருந்தனர். அவற்றுள் ஒன்று விருந்து வர காக்கைக் கரையும் அதற்கு உணவளிக்க வேண்டும் என்பதேயாகும். விருந்தினர் வருகையைத் தெரிவித்துக் கரையும் காக்கைக்குப் பலியிட்டனர்.[187] தலைவன் வருகையால் மகிழ்ந்து, அவன் வருகையைத் தெரிவித்த காக்கைக்கு எவ்வளவு பலியிடினும் தகும் என்னும் கருத்தில் காக்கை பாடினியார் நச்செள்ளையார் பாடிய பாட்டு இங்கு நோக்கத்தகும்.

"திண் தேர் நள்ளி கானத்து அண்டர்
பல் ஆ பயந்த நெய்யின், தொண்டி

முழுதுடன் விளைந்த வெண்ணெல் வெஞ்சோறு

எழுகலத்து ஏந்தினும் சிறிது - என் தோழி

பெருந் தோள் நெகிழ்த்த செல்லற்கு

விருந்து வரக் கரைந்த காக்கையது பலியே''[188]

தெய்வத்திற்காகப் படைக்கும் பலிகளையும் காக்கைகள் உண்டு திரியும். உயிர் இரக்க உணர்வோடு உருவாக்கப்பட்ட இப்பண்பாடு இன்றளவும் வழிபாட்டு முறையில் ஒரு சடங்காக மக்களால் கடைபிடிக்கப்பட்டு வருகிறது. எது எப்படியாயினும் சங்க காலத்தவரின் உயிர் இரக்க எண்ணம் இன்றளவும் நிறைவேற்றப்படுகிறது என்பதே உண்மையாகும்.

**அரச அறம் :**

அரசர்க்கு 'உரும்பில் சுற்றம்'[189] என உரைக்கப்படும் அரச அலுவலர் பலர் நெறிகோடாத அரசியல் நடத்தத் துணை நின்றனர். தமிழகத்தைப் பொறுத்தவரை இவ்வரச அலுவலரினும் வேந்தரைச் செங்கோல் நெறி பிறழா நிலையிலிருத்த புலவர்கள் பெருந்தொண்டாற்றியுள்ளனர். அரசர் மேற்கொள்ளத்தக்க அறநெறிகளை அவ்வப்போது எடுத்துரைத்த புலவர்கள் பலர். தகுதியற்ற அதிகாரிகளைக் கொண்டு மக்களை வருத்திப் பழஞ்செய்க் கடனைப் பெற முயன்ற கிள்ளிவளவனுக்கு வெள்ளைக்குடி நாகனார் செவியறிவுறூஉவாகக் கூறிய புறநானூற்றுப் பாடல் செங்கோண்மை நிலைபெறப் புலவராற்றிய பணியைத் தெளிவுறக் காட்டுவதாகும்.

''கண்பொர விளங்கு நின் விண்பொரு வியன்குடை

வெயின்மறைக் கொண்டன்றோ அன்றே வருந்திய

குடிமறைப் பதுவே கூர்வேல் வளவ''

எனக் கடுமையாக அறிவுறுத்துவர் அப்புலவர். இதே போல மக்கள் வருந்த வரி வாங்க முயன்ற பாண்டியன் அறிவுடைநம்பிக்குப் பிசிராந்தையாரும் தக்க அறிவுரை கூறி அறநெறிப்படுத்தியுள்ளார்.

வரிசையறியாச் சுற்றத்தைத் துணையாகக் கொண்டு கிழவன் மெல்லினாகிப் பிரிவின்றிச் செயல்படின் யானை புகுந்த புலம் போல நாடு கெடும்[191] என்பது அப்புலவர் இடித்துரை.

இவ்விரு நிகழ்ச்சிகளால் நாட்டின் மிகப்பெரிய வருவாயாகிய செய்கடனை மக்களிடமிருந்து பெறுவதில் அரசு அலுவலர் கடுநெறியைக் கடைப்பிடித்தனரென்பதும், ஒரோவழி நிகழ்ந்த இச்செயல்களைப் புலவர்கள் மன்னர்க்குணர்த்த, அவர்கள் அக்கடுநெறியைக் கைவிடச் செய்தனரென்பதும் அறியலாம். செங்கோல் நெறி பிறழ்ந்தால் நிரயம் செல்ல நேரிடும் என்றும் புலவர்கள் அச்சுறுத்தினர்.[192]

"நமரெனக் கோல் கோடாது பிறரெனக் குணங்கொல்லாது" அறநெறி செலுத்துக என்பது பாண்டியன் இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நன்மாறனுக்கு மதுரை மருதனிள நாகனாரின் நல்லுரை.[193] இதுவும் இங்கு நோக்கத்தக்கது. வேந்தர்கள் பிழைக்கக்கூடிய இடங்களென உணர்ந்து புலவர்கள் அறந்தெருட்டிய பகுதிகள் இவை. சிலபோது வேந்தர் பிழைத்தபோது அவரை இடித்துரைத்து நிமிரச் செய்த பகுதிகளும் ஆகும். ஐம்பெருங்குழு, எண்பேராயம், அனுக்க அலுவலர் ஆகிய யாரினும் உரிமைமிக்க புலவர்களின் அஞ்சாத வாய்மையுரை வேந்தர்களின் செங்கோன்மைக்குத் துணையாகியிருக்கிறது. அரசன் செங்கோலனாக இருந்தாலே நாட்டில் மழை, விளைவு ஆகிய இயற்கை நிகழ்ச்சிகள் ஒழுங்குற நிகழும்[194] என்ற நம்பிக்கையைப் புலவர்கள் வளர்த்தனர். ஆகவே, மன்பதைக்கு உயிரெனத் தகும் வேந்தர் தாம் அறநெறியில் ஒழுகுதல் வேண்டும் என்ற உறுதியுடையோராய் இருந்தனர்.

**போர் அறம் :**

மறங்காரணமாக நிகழும் போர்களிலும் பழந்தமிழர் அறமே வெற்றிக்கு அடிப்படை என்று கருதினர் என்பதைப் புறநானூற்றுப் பாடல் புலப்படுத்துகின்றது. எனவே தான் அவர்கள் ஆற்றிய போர்கள், 'நல்லமர்' (பதிற்.42:9), 'மறங்கந்தாக நல்லமர்' (புறம் 93:9) எனப்புலவர் பாடும் புகழ்

பெற்றன. பகைமை பற்றி எழும் போரிலும் அறநெறி தவறாத பண்பாடுடையராகப் பண்டைத் தமிழர் விளங்கினர். தொல்காப்பியப் பொருளதிகாரம் போரறத்தைப் புறப்பொருள் நெறியில் தெளிவுபடுத்துகிறது.

பகைவர் நாட்டிலுள்ள மக்கள் அனைவரையும் அழிக்க வேண்டுமென்பது போர் மேற்செல்லும் மன்னனின் நோக்கம் அன்று. எனவே பிறர்க்குத் தீங்கு செய்யாத ஆக்களும், அந்தணர்களும் துன்புறுதல் தகாது என்று எண்ணினர். பேணுதற்குரியோராகப் பெண்டிர், பிணியுடையோர், தமக்குப் பின் குடிகாத்து ஓம்பும் மக்களைப் பெறாதோர் ஆகியோர் கருதப்படுவர் அத்தகையோரைப் போரினால் ஏற்படும் துன்பத்தினின்று காத்தல் அறம். ஆதலின், அவர்களைப் பாதுகாப்பினைத் தேடிக்கொள்ளுமாறு அறிவுறுத்தி அறப்போர் ஆற்றிய வேந்தன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி எனப் புறநானூறு உணர்த்துகின்றது.[196]

ஆற்றலாலும் கருவியாலும் ஒத்த இருபடைகள் கலந்து பொரும் களம் போர்க்களம் எனப் பெயர் பெற்றது. போர்க்களத்தில் வீரர் விழுப்புண் பட்டாரொடு பொருவதன்றிப் பிறர் எதிர்த்த வழி அவரொடு போர் புரிதல் சிறப்பற்றது எனப் புறக்கணித்தும் ஒத்தாரோடு பொருதல் போரறம் எனவும் கொண்டனர். கடல்பிறக்கோட்டிய குட்டுவன் ஆற்றிய போரினை,

"நெடுவசி பரந்த வடுவாழ் மார்பின்
அம்புசே ருடம்பினர் நேர்ந்தோ ரல்லது
தும்பை சூடாது மலைந்த மாட்சி
அன்னோர் பெரும நன்னுதல் கணவ
அண்ணல் யானை யடுபோர்க் குட்டுவ
மைந்துடை நல்லமர்க் கடந்து வலந்தரீஇ"[197]

எனப் பரணர் பாராட்டுவார். போர்க்களத்தில் புறமுதுகிடாமையும், புறமுதுகிடுவாருடன் போர் செய்யாமையும் போரறமாக மதித்தவர்

பண்டைத் தமிழர் என்பதை 278, 295 ஆம் புறப்பாடல்களின் வாயிலாக அறியலாம். புறமுதுகிடுதல், புறப்புண்படுதல் ஆகியவற்றை இழிவாகக் கருதியவர் பண்டைத்தமிழர். சங்க கால மன்னர் படைமடம்படாதவர் என்ற செய்தியை,

"கடாஅ யானைக் கழற்காற் பேகன்

கொடைமடம் படுத லல்லது

படைமடம் படான்பிறர் படைமயக் குறினே"[198]

என்று பேகன் பாராட்டப்படுவதன் மூலம் அறியலாம். 'படைமடமென்றது, வீரர் அல்லாதார் மேலும், முதுகிட்டார் மேலும், புண்பட்டார் மேலும், மூத்தார் இளையர் மேலும், செல்லுதல்' என்று உ.வே.சாமிநாதையர் விளக்கம் அளித்துள்ளார்[199].

ஓராண்டினைக் கார், கூதிர், முன்பனி, பின்பனி, வேனில், இளவேனில் என ஆறுவகையான பருவங்களாகப் பகுத்துக் கொண்ட பண்டைத் தமிழர் போர் செய்வதற்குரிய பருவம் தேர்ந்தே போர் செய்தனர். போர்க்குரிய பருவங்களாக வேனிற் பருவமும் கூதிர் பருவமும் கொள்ளப்பட்டன. மன்னர் பாசறை அமைத்துத் தங்கியிருந்து போர் உடற்றினர்[200] என்பார் தொல்காப்பியர். நெடுநல்வாடை கூதிர்ப் பாசறையமைத்துத் தங்கியிருந்த பாண்டியன் நெடுஞ்செழியனின் போர்ச் செயல்களைக் குறிப்பிடுகின்றது (நெடு. 180-189). முல்லைப் பாட்டு வேனிற் பாசறை இயல்பினை விரித்துரைக்கின்றது (முல்லை 24-80). போரினால் ஆட்சிக் குழப்பமோ, நாட்டில் பஞ்சமோ மக்கள் செய்யும் தொழிலுக்கு இடையூறோ உண்டாகக் கூடாது என்பதில் கண்ணுங் கருத்துமாக இருந்து வந்தனர். அதற்காகவே உழவுத் தொழில் செய்வோர் அறுவடையை முடித்து, ஓய்வாக இருந்த கூதிர் (குளிர்காலம்) பருவமுதல் வேனிற்காலம் வரையுள்ள இடைக்காலத்தைப் போர் புரிவதற்கு ஏற்ற காலமாகத் தேர்ந்தெடுத்தனர். இவற்றால் நாட்டின் நடைமுறை நிகழ்ச்சிகள் மாறுபடாவண்ணம் பருவம் குறித்துப் போர் செய்த பண்டைத் தமிழரின் பண்பாடு வெளிப்படுகின்றது.

பண்டைத் தமிழர் பகைவரை எதிர்பாராது தாக்குதலின்றிக் களங்குறித்துப் போர் செய்தனர். ' பறந்தலை', ' வியன்களம்' ஆகிய தொடர்கள் பெருநிலப்பரப்பில் போர்கள் நடைபெற்றன என்பதை விளக்குகின்றன. சோழன் கரிகால்பெருவளத்தானுக்கும் பெருஞ்சேரலாதனுக்கும் இடையே வெண்ணிப்பறந்தலை என்ற இடத்தில் நிகழ்ந்த போர்ச் செய்திகளைப் புறநானூறு விவரிக்கின்றது.[201] தலையாலங்கானம் என்னும் இடத்தில் இருபெரு வேந்தரையும் ஐம்பெரு வேளிரையும் பாண்டியன் நெடுஞ்செழியன் வென்ற திறமும், அதனால் அவன் தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன் என்று அழைக்கப்பெற்ற சிறப்பும் புறநானூற்றில் எடுத்துரைக்கப்படுகின்றன.[202] பண்டைத்தமிழர் களங்குறித்துப் போர் செய்ததை இச்செய்திகள் தெளிவுறுத்துகின்றன.

இக்காலத்தில் நடைபெறுவது போன்று திடீரென்று தாக்குதல், மறைந்து இருந்து தாக்குதல் போன்ற போர்முறைகள் அக்காலத்தில் இல்லை. பலர் அறிய வஞ்சினம் கூறி, பொது இடத்தில் தம்மொடு ஒப்பாரிடம் மட்டும் போரிடும் அறப்பண்பு வாய்ந்தவர்களாகப் பழந்தமிழ் வீரர் விளங்கினர்.

பகலில் போரிட்டு இரவில் போரிடாமையைப் பண்டைத் தமிழர் போரறமாகக் கொண்டு ஒழுகினர். பகலில் மட்டும் களம் குறித்துப் போரிடல் பண்டைய மரபு என்பதைப் புறநானூற்றுப் பாடலடிகள் தெளிவுபடுத்தும். நெடுநல்வாடை, நெடுஞ்செழியன் வாடைக் காற்றுடன் மழைத்துளிகளும் விழ்கின்ற இரவு நேரத்திலும் படைத்தலைவன் உதவியுடன் சென்று காயமுற்ற வீரர்களைக் கண்டு ஆறுதல் மொழிகளைக் கூறினான் என்பதை எடுத்துக்கூறி, இதன் மூலம் பகலில் போரிடுவதும், இரவில் போரை நிறுத்துவதும் வழக்கமாயிருந்தன என்பதையும் புலப்படுத்துகிறது.

**துறவறம்**

இல்லறத்தை நல்லறமாக்கியவர்கள் தம் வாழ்வின் பிற்பகுதியில், கான் உறைந்து, நோன்பு கொண்டு சடை தாங்கி, அருவியாடி, தீவேட்டுத் துறவியராக வாழ்க்கை புரிதலையும் புறநானூற்றுத் தொகை நூலில் காண்கிறோம்.[205]

உலகமும் உலகப் பொருள்களும், யாக்கை, இளமை, செல்வம் முதலியனவும் நிலையாது மாய்தல் கண்டு மாயாப் பெருவாழ்வு பெற வானப்பிரத்த, சந்நியாச ஒழுக்கங்களையும் மக்கள் மேற்கொள்வாராயினர். வானப்பிரத்தம் என்பது மனைவியோடு உடனுறைந்து புரியும் தவம். இத்தவசியரை அடுத்து நல்லுரை கேட்டு, இவர் வழியைப் பின்பற்றி வாழ்வாரும் ஒரு சிலர் உளராயினர். இந்த வானப்பிரத்த நிலையை அடைய விழைந்ததாக ஒரு தலைவன்,

> "உடன்உறை வாழ்க்கைக்கு உதவி உறையும்
> கடவுளர்கண் தங்கினேன்"[206]

என்கிறான்.

> "பொய்அற்ற கேள்வியால் புரையோரைப் படர்ந்து நீ
> மைஅற்ற வடிவத்தான் மறுத்தரல் ஒல்வதோ?"[207]

என்பது இந்த வானப்பிரத்த நிலையை உணர்த்துவதாகும்.

உலகின் நிலையாமை கண்டு நிலையான வீட்டின்பத்தை நாடும் ஒழுக்கத்தில் செல்லும் துறவு நிலையாளரும் உளர்.[208] துன்பமயமான உலகத்தில் இன்பம் அடையும் வழியை நாடுதல் உலக இயல்புணர்ந்தார்க்குத் தக்கது என்று அறிவுறுத்தப்படுகிறது. ▯முடி சார்ந்த மன்னரும் மற்றுமுள்ளோரும் முடிவில் ஒரு பிடி சாம்பல் ஆவர்▯ என்ற பட்டினத்தடிகள் திருவாக்கிற்கொப்ப, எவ்வளவு பெருநிலையை இந்த உலகத்தில் பெற்றிருந்தும் என்ன? எல்லோரும் இறந்துபடுபவர்களே. கூற்றுவன் காலம் பார்த்துத் தவறாது வந்து விடுவான். ஆகவே, உலகியலில்

மட்டுமே உழன்று திரியாது பற்று நீங்கித் துறவு அடைதல் வேண்டும் என்று 363 ஆம் புறப்பாட்டு அறிவுறுத்துகிறது.

இல்லற வாழ்வு துறவுக்குத் தடையாக ஒரு கால் விலங்காக உள்ளது என்று கருதினாரும் ஒரு சிலர் ஆவர்.[209] துறவு வாழ்வு வாழும் முனிவர் அருந்தவர், அந்தணர், ஐயர், தவசியர், முனிவர் முதலிய பெயர்களால் குறிக்கப்பெறுகின்றனர். இவர்கள் நீண்ட சடைமுடியை உடையவர்கள், அசையாது யோக நிலையில் இருக்கும் உடம்பை உடையவர்கள், குன்றங்களில் வாழ்பவர், காவி நிற ஆடை அணிபவர்கள்,[210] துறவோர் பிச்சையேற்று உண்ணும் வாழ்க்கையர் என்பதை 'ஓர் இல் பிச்சை ஆர மாந்தி' (குறுந் 277:3) என்னும் குறுந்தொகைப் பாடலினால் ஊகிக்கலாம். இவர்கள் ஓரிடத்தில் நிலையாய் இராது எங்கும் சஞ்சரித்துக் கொண்டிருப்பவர்கள்,[211] இவர்கள் உள்ளத்தில் இறைவன் எழுந்தருளுவான்.[212] சென்ற காலமும் வருங்காலமும் நிகழ்காலத்தோடு ஒக்க அறியும் ஆற்றல் படைத்தவர்கள்.[213]

தவம் தவறுதலினால் துறக்க வாழ்விலிருந்து நீக்கப்பட்டுத் தவம் செய்யும் சான்றோருடன் சேர்ந்த ஓர் அரசனை, அவனது வழிநீக்கி மீண்டும் சொர்க்கத்திற்குப் போக்கும் ஆற்றல் வாய்ந்தவர்கள் இந்த முதுசான்றோர்.[214] முனிவனை அணுகுவோர் தம் தூய்மையின்மைக்காகத் தொடாது விலகிச் செல்வது உண்டு.[215] இவர்கள் ஞாலத்து உறையுந் தேவர் (பரி 31:28) என்று போற்றப்படுவர். மனைவியருடன் உறைந்து தவம் செய்யும் தவ வாழ்வுக்கு வழிகாட்டுவோர் இப் பெரியோர்களே.[216] இறைவனை ஏத்தி வழிபடும் பண்புடையர்.[217] இவர்கள் வேள்வி செய்து வழிபடும் பண்புடையவர்களும் ஆவர்.

''அவிர்சடை முனிவர் அங்கி வேட்கும் ஆவுதி நறும்புகை'' (பட்டினம் 54, 55) என்ற பாடலடி இவர்கள் வேள்வி செய்தலை விளக்குகிறது. முனிவர்களின் வேள்விக்குண்டத்திலிருந்து நல்ல விளைவுகள் உலகிற்குத் தோன்றுதல் கூடும் என்பதை வடபால் முனிவன் தடவினுள்

தோன்றிய ஆதிவேளின் செய்தி உணர்த்தவல்லது.[218] இதுவரையில் முனிவர்களைப் பற்றி கண்ட பல்வேறு செய்திகளையும் சேர்த்து திருமுருகாற்றுப்படை பேசுகிறது.[219]

வேதம் ஓதி ஒழுக்கமுடையராய் தேவருலகத்தையும் இவ்வுலகிற் காணும் பேறு பெற்றாராய், அறநெறி பிழையா அன்புடை நெஞ்சங் கொண்டு வாழும் பெரியோர்களின் பள்ளி பற்றிய இயல்பினை மதுரைக் காஞ்சியுள் காணலாம். (மதுரை 468-474) இம் முனிவர்களின் இருப்பிடங்களை மன்னர் புனிதத் தலமாகக் கருதினர். முனிவர் இருப்பிடங்களை எதிர்ப்படின் குடை தாழ்த்தி மரியாதை செய்தலும், அம்முனிவர் தம் கையை உயர்த்தி ஆசி கூறும் போது தலை தாழ்த்திப் பணிதலும் மரபு. இவ்வகையில் பெரியோர்களைப் பேணியோர்களில் முதன்மையாகக் குறிப்பிடத்தக்கவன் முனிவரைக் கொண்டு வேள்வி பல செய்த பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி.[220]

முனிவர்களில் மூன்று கோலை ஏந்தி, காவி உடை முதலிய தவ வேடத்தோடு காட்டில் திரியும் முனிவர்களும் ஒரு வகையினர். முக்கோலின் மேலாகக் காவி உடையையும் கட்டியிருப்பர்.[221] தொங்கும் உரியிலே கமண்டலத்தைக் கொண்டு செல்வர். சூரியனின் வெம்மை தம்மைத் தாக்காதிருக்க குடை பிடித்துச் செல்லுதலும் இவர்தம் இயல்பு (கலி 9: 1-4). செக்கர் வானின் ஒளி தன் மேல் பட, நாரை ஆரவாரத்தைக் கைவிட்டு மணல் மேலே இருக்கின்ற நிலையை முக்கோல் அந்தணரின் தியான நிலைக்கு ஒப்பிட்டுப் பேசுகின்றார் நல்லந்துவனார்.[222]

உடன்போக்கில் சென்ற தன் மகளைத் தேடிச் செல்லும் செவிலித் தாயர் காட்டிடையில் எதிர்ப்படும் முக்கோல் அந்தணரை நோக்கி, அவர் வரும் வழியில் தம் மகள் சென்றதைக் கண்டதுண்டோ என்று வினவுவதாகவும், அவ்வறிஞர் அவருக்கு அறிவுரை கூறுவதாகவும் அகப்பொருட் பாடல்கள் அமைந்துள்ளன.[223]

சூரியன் சென்ற வழியெல்லாம் அவனுடனே சென்று தவம் செய்யும் அந்தரசாரிகளாகிய முனிவரைப் பற்றிய குறிப்புகளும் இரண்டு இடங்களில் உள. இம்முனிவர்கள் சூரியனுடைய வெம்மையைத் தாம் பொறுத்து உலகில் வாழும் உயிரிகளுக்குப் பாதுகாவலாகக் காற்றையே உணவாகக் கொண்டு அச்சூரியனுடனேயே திரிந்து வரும் இயல்பினராவர்.[224] எவ்வகையானும் தங்களுடைய வாழ்க்கை, அறம் சார்ந்ததாகத் திகழ வேண்டும் என்று எண்ணிய தமிழர்கள் துறவறத்தை மேற்கொண்டு அதன் வழி உலக நன்மைக்கு உழைத்துள்ளனர்.

**முடிவுரை :**

சிறந்த பண்பாளர்களாலேயே உலகம் நிலைபெறுகிறது. மனம் செம்மைப்படுதலே பண்பாடு என்பதால் இது அகம் சார்ந்ததாகவும், நாகரிகம் புறம் சார்ந்ததாகவும் உள்ளது. பண்பாடு என்னும் சொல் சங்க இலக்கியத்துள் நேரடியாகக் கிடைக்கப் பெறவில்லை என்றாலும் அச்சொல் குறித்த பொருண்மை பலவாறாகப் பல்கிக் கிடக்கின்றன.

உலகம் அல்லவை தவிர்த்து, நல்லவை போற்றி, ஒழுக வழிகாட்டிச் செல்லும் பெரியோரே சான்றோர் ஆவர். ஆன்றவிந்தடங்கிய கொள்கைச் சான்றோரால் அமைதி நிலவுகிறது. இச்சான்றோர்களை மையமாக வைத்தே ஒவ்வொரு நாடும் மதிப்பீடு செய்யப்படுகிறது.

மனித உயிர் உலகில் பிறக்கும் போதே பாலூட்டும் தாயோடு நட்பு தொடங்குகின்றது. வளரும்போது குடும்ப உறவுகளுடன் தொடரும் நட்பு இளமைப் பருவத்தில் ஒத்த பண்புடையாருடன் உள்ளம் கலந்த நிலையில் வலுப் பெறுகிறது. புற இலக்கியங்கள் நட்பின் வலிமையையும், அக இலக்கியங்கள் நட்பு பல நேரங்களில் காதலாப் பரிணமிப்பதையும் தெளிவாகக் கூறுகின்றன.

இம்மை வாழ்வில் புகழுடன் வாழ விரும்பிய தமிழர்கள் அதனை உயிரினும் மேலாகக் கருதினர். கொடை, வீரம் ஆகியவற்றால் புகழ்

கிடைப்பதை அறிந்து இவ்விரண்டிலும் ஒப்பற்றவராய்த் திகழ்ந்து புகழுடன் வாழ்ந்தனர். அக்காலச் சமூகம் புகழுடையவர்களைப் போற்றத் தயங்கியதில்லை.

சிறியவர், பெரியவர், ஆடவர், பெண்டிர் என அனைவரும் தங்களின் வீர உணர்வை வெளிப்படுத்தித் தமிழகம் வீரப்பண்பின் விளை நிலமாகத் திகழ்ந்தமையைப் புறநானூறு உள்ளிட்ட பல புற இலக்கியங்கள் காட்டுகின்றன. மறக்குடியினரை மன்னர்களும், மற்றையோரும் போற்றிப் புகழ்ந்துள்ளனர். ஒத்த பண்பு உடையவர்களோடு பொருதலே சங்க காலத்தில் வீரமாகக் கருதப்பட்டது.

எதற்காகவும் எச்சூழலிலும் தன்நிலையிலிருந்து தாழாமையும் அவ்வாறு தாழும் நிலைவரின் உயிர் வாழாமையும் மானமென்று கருதினர். பண்டைத் தமிழரின் மான உணர்வு மறப்பண்பின் வழி மிகுதியும் வெளிப்படுவதை அறிய முடிகிறது. மதியாதார் தலைவாசல் மிதியாது வரிசையறியா பரிசிலையும் ஏலாது வாழ்ந்தமை புலவர்களின் தன்மானவுணர்வாகும்.

அறங்கூரவயத்து அமர்ந்த பெரியோர் ஒருபால் கோடாமல் துலாக்கோல் போல் நடுவுநிலையில் நின்று நீதியை நிலைநாட்டினர். வேந்தர்களின் ஒற்றுமையை வலியுறுத்திப் புலவர்கள் இப்பண்புக்கு இலக்கணமாகத் திகழ்ந்துள்ளனர். இருதிறப்படைகளுக்கும் பெருஞ்சோறளித்து அணிசேராக் கொள்கையின் மூலம் நடுவுநிலைப் பண்பினை நிலைநாட்டினர்.

அறிவு புகட்டும் ஆசானிடத்தில் நன்றி பாராட்ட வேண்டும் என்று சங்க இலக்கியம் வலியுறுத்துகிறது. நன்றி கொன்றவர்க்குக் கழுவாய் இல்லை என்பதால் இப்பண்பின் இன்றியமையாமை புலனாகும். தன்னை ஆதரித்த அரசரிடத்தில் புலவர்கள் காட்டிய நன்றியுணர்வு மற்றவர்களையும் அறநெறியில் நிற்கத் தூண்டியது. சொல்லிய வண்ணம் செயல்படுத்திய செந்நெறி இது.

பொய்சாட்சி சொல்பவர் ஒரு மரத்தடியில் நின்றால் அம்மரம் தளிர்க்காது எனபதால் வாய்மையின்பால் பண்டைத் தமிழர் கொண்டிருந்த நம்பிக்கை புலனாகிறது. வாழ்தல் வேண்டி பொய் கூறாத சான்றோர் உலகே புரண்டாலும் அந்நிலையிலிருந்து நீங்காதவராய் இருந்தனர். இச்சான்றோர்களுக்கு என்றுமே பொய் கூறும் வழக்கம் இருந்ததில்லை.

அரசர், அந்தணர், சமய நெறியாளர்கள் உள்ளிட்ட ஏனையோரும் கடைபிடிக்க வேண்டிய, கடைபிடித்த ஒழுக்கத்தைச் சங்க இலக்கியம் பேசுகிறது. உரையாசிரியர்கள் இதை வருணச் சார்புபட மொழிந்திருப்பினும், சங்க இலக்கியம் அந்தக் கண்ணோட்டத்தோடு பார்க்கவில்லை. ஒழுக்க நெறியிலிருந்து தவறியவர்களுக்கு உயர்வடைய வழி கூறாமையாகிய சங்க இலக்கியப் போக்கினை நீடு நினைத்தற்குரியது. பரத்தைமை, கைக்கிளை, பெருந்திணை முதலிய கூடாஒழுக்கத்தை அக்காலச் சமூகம் வெறுத்ததற்கான சான்றுகள் சங்க இலக்கியத்தில் கிடைக்கின்றன. மேற்கண்டவை அனைத்தும் ஒவ்வொரு தனிமனிதனும் தங்கள் வாழ்வில் பின்பற்ற வேண்டிய உயர்ப் பண்புகள் ஆகும் என்பதைச் சங்க இலக்கியம் வலியுறுத்துகிறது.

சங்கத் தமிழர்கள் அறத்தின்பால் அசைக்க முடியாத நம்பிக்கை உடையவர்களாகத் திகழ்ந்தனர். தான் மேற்கொண்ட எச்செயலையும் அற அடிப்படையிலேயே நிறைவேற்றினர். அறத்தின்வழி பொருளீட்டி அதைக் கொண்டு அறம் செய்வதால் கிட்டுவதே இன்பமென்று பழந்தமிழர் கருதியமையைச் சங்க இலக்கியம் காட்டுகிறது. அறம் செய்தற்கு ஏற்றதொரு சிறந்த அமைப்பாக இல்லறத்தைக் கருதினர். சுற்றம் போற்றல், விருந்தோம்பல் போன்றவை இல்லறக் கடமையாகக் கொண்டனர்.

அறம் என்பதற்கு ஈகை என்னும் பொருளும் உண்டு. ஆதலால்தான் ஔவையாரும் ஈதல் அறம் என்றார். தனிமனித வாழ்வில் இரத்தல் இழிவாகக் கருதப்பட்டாலும் சமூக வாழ்வில் ஈகை உயர்ந்ததாகப் போற்றப்பட்டது. செல்வம் வாய்க்கப் பெற்றவர் ஈகைப் பண்பினை

மேற்கொள்ள வேண்டும் என்பதை இலக்கியம் வலியுறுத்தி ஈகை அறத்தைப் போற்றி வளர்க்கிறது.

அன்பின் முதிர்ந்த நிலையே அருளாக மலர்கிறது. அறிந்தவர், அறியாதவர் என்ற வேறுபாடின்றி அனைவரிடமும் அருட்பண்புடன் நடக்க வேண்டுமென்பதைச் சங்க இலக்கியம் வலியுறுத்துகிறது. புலவர்கள் அருள் நெஞ்சம் வாய்க்கப் பெற்றவர்களாகத் திகழ்ந்ததோடு அரசர் பெருமக்களையும் அருளாளர்களாக வாழ அறிவுறுத்தினர்.

ஓரறிவு முதல் ஆறறிவு ஈறாக உள்ள உயிரினங்களின் இயல்பினை அறிந்திருந்த பண்டைத் தமிழர் அவற்றின்பால் இரக்கம் உடையவர்களாய்த் திகழ்ந்தனர். பாரியும் பேகனும் இப்பண்புக்கு வரலாற்றுச் சான்றாளர்களாவர். விலங்கு, பறவை, செடி, கொடிகளை வளர்த்து அவற்றின்பால் இரக்கம் காட்டுவதில் ஈடு இணையற்றவர்களாய் விளங்கினர்.

மன்னனையே உயிராக இவ்வுலகம் கொண்டிருத்தலால் அவன் அறநெறியில் ஆட்சி நடத்த வேண்டிய இன்றியமையாமையாகிறது. புலவர்களால் வேந்தர்கள் நெறிப்படுத்தப்பட்டதன் வழி அரச அறம் நிலைநாட்டப் பெற்றது. நெறியறிந்து வரிகொளல், முறைப்படி குடிபேணல் போன்றவற்றின் வழி அரசனின் செங்கோன்மை செயற்படுத்தப்பட்டது.

மறப்போரிலும் அறத் தன்மையை அமைத்துக் காட்டியது தமிழரின் பண்பாடாகும். களம் கண்டும், காலம் அறிந்தும் இவர்கள் போர் செய்தனர். ஒத்த வலிமையுடையாரோடு மட்டுமே போரிட்டனர். இளைத்தவர், புறங்கண்டோர், பிணியர், பெண்கள், குழந்தைகள், அறவோர், ஆக்கள், பேணுனரில்லோர் ஆகியோருடன் பொருதலில்லை. முன்னறிவுப்புடன் பொருதலையே முறை எனக் கருதினர்.

இல்லறத்தை நல்லறமாக்கிப் பேரின்பப் பெருவாழ்வை விரும்பினோரும், உலக நிலையாமையை உணர்ந்து, நிலைத்த வீடுபேற்றை

நாடினோரும் துறவறத்தை மேற்கொண்டனர். காவியணிந்து, சடைதாங்கி, கானுறை முனிவர்கள் உலக நன்மை கருதி வேள்வி செய்தலையும் தவம் புரிதலையும் துறவு நெறியாகக் கொண்டனர். உயரிய பண்பாட்டைப் பின்பற்றும் ஒவ்வொரு தனிமனிதனாலும் நல்லறங்கள் நடைமுறைப் படுத்தப்பட்டு, குடும்பமும், சமூகத்தின் பல்துறைகளும் சிறப்படையும் என்பதில் எள்ளளவும் ஐயமில்லை.

**சான்றெண் விளக்கம்:**

1. கலித்தொகை - 133 :8
2. வையாபுரிப்பிள்ளை எஸ். தமிழர் பண்பாடு, ப.5
3. திருக்குறள் 983
4. William.A. Hairland, Cultural Anthropology, p.10
5. மேலது ப.10
6. John.M., Shepard, Sociology, p.54.
7. David Dressler William.M. - Willys, op.cit. p.33.
8. தேவநேயன், ஞா. பண்டைத் தமிழர் நாகரிகமும் பண்பாடும் - ப.1
9. தேவநேயன்,ஞா. பண்டைத் தமிழர் நாகரிகமும் பணபாடும், ப.8-9.
10. மதுரைக் காஞ்சி 191-192

    'அரசியல் பிழையாது, அறநெறி காட்டி

    பெரியோர் சென்ற அடிவழிப் பிழையாது !'
11. குறிஞ்சி 15-18
12. புறம் - 191: 4 - 7 அல்லவை செய்யான், காக்கும் ; அதன் தலை

    ஆன்று அவிந்து அடங்கிய கொள்கைச்

    சான்றோர் பலர், யான் வாழும் ஊரே !
13. நற்றிணை - 345
14. குறுந். 184:1
15. மேலது 254: 6-8
16. நற்றி 72: 1-2
17. மேலது 327: 4-6
18. அகம் 112: 11-12
19. நற்றி 186: 6; அகம் 54:13; புறம் 182: 8-9
20. கலித் 139: 2-3; '........................................... என்றும்,

    பிறர்நோயம் தம நேய பேல் பேறறி அறனறிதல்

சான்றவர்க்கு எல்லாம் கடன்'

அகம் 382: 1-2; 'பிறருறு விழுமம் பிறரும் நோப
தம்முறு விழும்ம் தமக்கோ தஞ்சம்.'

21. நற் 210: 5-9

22. புறம் 187 'எவ்வழி நல்லவர் ஆடவர்
அவ்வழி நல்லை ; வாழிய நிலனே !'

23. தொல் - களவியல் 26

24. அகம் 142: 1-2

25. புறம் 375: 19-21

26. மேலது 151: 5-12

27. மேலது 201

28. பொருநர்.-151-173

29. புறம் 50: 5 - 17

30. குறுந் - 3: 1-4

31. அகம் 339: 12-14

32. மேலது 12: 3 - 4

33. நற்றி 12: 7 - 9 '................................................ பெரியோர்
நாடி நட்பி னல்லது
நட்டு நாடார்தம் ஒட்டியோர் திறத்தே !'

34. புறம் 58: 24-27

35. நற்றி 1 : 4-5 "சாந்தின் தொடுத்த தீந்தேன் போலப்
புரைய மன்ற புரையோர் கேண்மை"

36. புறம் 190: 3-5, புறம் 190: 10-12

37. நற்றி 335: 6-7

38. புறம் 112:1

39. மேலது 216: 8-10

40. மேலது 216: 6-7

41. மேலது 215: 8-9

42. மேலது 217: 5-9

43. பட்டினம் 42, 43

44. புறம் 182: 5-6 "புகழெனி னுயிருங் கொடுக்குவர் பழியெனின்
உலகுடன் பெறினுங் கொள்ளலர்"

45. மேலது 39: 13-18

46. மேலது 314

47. மேலது 221: 1-6

48. மேலது 126: 11-13 'புலனழுக் கற்ற வந்த ணாளன்
இரந்துசெல் மாக்கட் கினியிட னின்றிப்
பரந்திசை நிற்கப் பாடினன் !'

49. மேலது 357: 17-21

50. மேலது 167

51. எ.மொ.த.ப.-190

52. பதிற்றுப்பத்து எட்டாம் பத்தின் பதிகம் உரைப்பகுதி.

53. புறம் 27: 7-17; 28:13-17
"புலவர் பாடும் புகழுடையோர் விசும்பின்
வலவன் ஏவா வான வூர்தி
எய்துப வென்பதஞ் செய்வினை முடித்தெனக்
கேட்ப லெந்தை சேட்சென்னி நலங்கிள்ளி !"

54. மேலது 27:7-17; 28:13-17

55. அகம் 276: 13-15
"இரந்தோர்க்கு ஈயாது ஈட்டியோன் பொருள்போல
பரந்து வெளிப்படா தாகி
வருந்துக தில்லயாம் ஓம்பிய நலனே !"

56. மலைபடு 557

57. புறம் 290: 6; பதிற் 11: 20; அகம் 265:4; புறம் 72:15
பதிற் 12:8; அகம் 303:10; அகம் 23:16; அகம் 335:11
புறம் 160:30; பதிற் 372; புறம் 63:3; பதிற் 65:12

புறம் 155:6; பதிற் 372; பதிற் 90:10; புறம் 168:22;11:6;
அகம் 205:8; புறம் 10:11; 31:4-5; 228:9;282:10; பதிற் 79:4;
அகம் 159:19; புறம் 27:9; 144:12; 160:15, அகம் 86:7.

58. புறம் 135:9; 371:14; 380:12; 393:9; பதிற் 382:50;61;14;79:4; 36:5

59. மேலது 18: 1-3

60. மேலது 4-5

61. பதிற் 14: 20 - 22

62. பதிற் 20: 12-15; புறம் 228:6-7
"நிலவரை சூட்டிய நீணெடுந் தானைப்
புலவர் புகழ்ந்த பொய்யா நல்லிசை"

63. மலைபடு 553

64. அகம் 53:11; 57:9

65. புறம் 31: 5-6 "நல்லிசை வேட்டம் வேண்டி வெல் போர்ப்
பாசறை யல்லது நீயொல் லாயே"

66. பதிற் 30:41; புறம் 345:13

செல்வம் வேண்டார் செருப்புகல் வேண்டி

67. புறம் 6: 1-10

68. கலி 103: 75-79

69. புறம் 203 "ஒன்னார்
ஆர் எயில் அவர்கட்டு ஆகவும் நுமது எனப்
பாண்கடன் இறுக்கும் வள்ளி யோய்"

70. பதிற். 43; புறம் 308:7-11

71. K.Kailasapathi, Tamil Heroic Poetry, p.7.

72. க.கைலாசபதி - ஒப்பியல் இலக்கியம் பக்.67-69.

73. பட்டினம் 78-79; மலைபடு 394-396; ஐங் 352: 1-2; அகம் 35:6-8;
புறம் 232:3; 264:3-4

74. பதிற்-50

75. புறம் 39:14-18;அகம் 127:3-5;396:16-19;சிறுபான் 47-50; புறம் 31:9-17

76. பட்டினம் 274-281; புறம் 52:1-6; அகம் 396:16-18;336:20-23

77. புறம் 308: 7-11

78. மேலது 295:5-8

79. மேலது 278: 3-9

80. மேலது 277: 3-4 "களிறெறிந்து பட்டன னென்று முவகை
ஈன்ற ஞான்றினும் பெரிதே கண்ணீர்"

81. மேலது 279

82. மேலது 310

83. மேலது 19: 12-13

84. குறுந் 161; அகம் 7; புறம் 373; மலை 334-335.

85. திருக்குறள் 461

86. புறம் 74

87. தொல்காப்பிய் பொருளதிகாரம் நச்சினார்ககினியம் - 70.

88. புறம் - 71.

89. மேலது - 72

90. மேலது - 349

91. மேலது 65, 66

92. அகம் 55: 10-15

93. புறம் 214

94. மேலது 207

95. மேலது 162

96. மேலது 208

97. மேலது 206

98. மேலது 205

99. பண்பாட்டு சிந்தனை ப.23

100. மதுரை 489-492

101. கலி-144:70-72; "அறன் அறிந்து ஒழுகும் அங்கணாளனைத்
திறன் இலார் எடுத்த தீமொழி எல்லாம்
நல் அவையுள் படக் கெட்டாங்கு........"
புறம் 266:8-10 "சான்றோர் இருந்த அவையத்து உற்றோன்
ஆசுஆகு என்னும் பூசல் போல
வல்லே களைமதி அத்தை"

102. கலித் 139:33-37

103. மேலது 38: 19-20

104. புறம் 2: 13-16

105. மேலது 62-63

106. மேலது 45

107. மேலது 58: 20-29

108. புறம் 367

109. கலித். 149:6-7 "ஒற்கத்துள் உதவாதார்க் குதவாதவன் மற்றவர்
எச்சத்துள் ஆயினும் ஃதெறியாது விடாதே காண்"

110. புறம் 34:1-7

111. கலித். 34: 4-5

112. மேலது 149:4-5
"கற்பித்தான் நெஞ்சழுங்கப் பகர்ந்துண்ணான் விச்சைக்கண்
தப்பித்தான் பொருளே போல் தமியவே தேயுமால்"

113. புறம் 183:1-2

114. மேலது 200, 201, 239

115. மேலது 95

116. கலித்.34

117. பதிற்.63 "நிலம் நிறம் பெயரும் காலை யாயினும்
கிளந்த சொல் நீ பொய்ப்பு அறியலையே"

118. கலித்.133:6 "செறிவெனப்படுவது கூறியது மறா அமை"

119. புறம் 196:1-7

120. மேலது 148:5-7 "பீடின் மன்னர்ப் புகழ்ச்சி வேண்டிச்
செய்யா கூறிக் கிளத்தல்
எய்யா தாகின்றெஞ் சிறுசெந்நாவே"

121. மேலது 375

122. மேலது 151

123. குறுந் 184:1

124. தொல் மரபு-94

125. பதிற்.22 "சினனே, காமம், கழி கண்ணோட்டம்,
அச்சம், பொய்ச்சொல், அன்புமிக உடைமை,
தெறல், கடுமையொடு பிறவும் இவ் வுலகத்து
அறந்தெரி திகிரிக்கு வழியடையாகும்"

126. அகம் 286: 8-3

127. கலித்.42 "அஞ்சுவது அஞ்சா அறனிலி யல்லன், என்
நெஞ்சம் குடி கொண்டவன்"

128. குறிஞ்சி 15-18 "சால்பும் வியப்பும் இயல்புங் குன்றின்
மாசறக் கழீஇ வயங்குபுகழ் நிறுத்தல்
ஆசறு காட்சி ஐயர்க்கும் அந்நிலை
எளிய வென்னா தொல்மருங் கறிஞர் !"

129. புறம் 214

130. மேலது 360: 13-14

131. கலித்.118

132. மலை, 77-80

133. அகம், 280: 5-11

134. மதுரை 468-474

135. கலித்.-9:1-5

136. மதுரை 477-478

137. கழகத் தமிழ் அகராதி - பக்.60

138. சங்க இலக்கிய பொருட்களஞ்சியம் 1. ப.116-124.

139. கலி.39

140. மேலது.139

141. மேலது 62

142. ஐங்.7 "வாழி ஆதன் ! வாழி அவினி !
அறம் நனிசிறக்க ! அல்லது கெடுக !
என வேட்டோளே யாயே"

143. நெடுநல்.45-46

144. கலித்.133:6-14

145. மேலது 11:1-4

146. மேலது 14
செம்மையின் இகந்துஒரீஇப் பொருள் செய்வார்க்கு அப்பொருள்
இம்மையும் மறுமையும் பகையாவது அறியாயோ

147. அகம்-155

148. மேலது 53: 13-14 இல்லோர்க்கு இல் என்று இயைவது கரத்தல்
வல்லா நெஞ்சம்

149. புறம் 134:1-2

150. மேலது 239

151. Tamil Lexicon Vol.I, p.337

152. தொல். கற்பியல் - 51

153. பரி.19: 1-11

154. குறுந்.322

155. ஐங்.1; 2; 3; 5; 10

156. நற்.24: 89 'செயல்படு மனத்தர் செய் பொருட்டு
அகல்வர், ஆடவர், அது அதன் பண்பே'

157. மேலது 280

158. புறம் 189: 7-8

159. கலித்.133:6

160. புறம்-134:3-4 "சான்றோர் சென்ற நெறியென
ஆங்குப் பட்டன் றவன் கைவண் மையே"

161. அகம் 131:3-5 "வண்படு பிருளிய தாழிருங் கூந்தல்
சுரும்புண விரிந்த பெருந்தண் கோதை
இவளினுஞ் சிறந்தன் றீத நமக்கென"

162. புறம் 150: 19-24

163. மேலது 151:3-5 "கிழவன் சேட்புலம் படரின் இழையணிந்து
புன்தலை மடப்பிடி பரிசிலாகப்
பெண்டிரும் தம்பதம் கொடுக்கும்"

164. மேலது 47: 4-7

165. மேலது 163:1-7

166. சங்க இலக்கியத்தில் சமூக அமைப்பு - ப.134

167. நற். 186: 8-10

168. புறம். 46:1-4

169. மேலது 47

170. மேலது 144:1 "அருளா யாகலோ கொடிதே யிருள்வரச்"

171. மேலது 145:7 "அறஞ்செய் தீமோ அருள்வெய் யோயென"

172. மேலது 5: 5-8 "அருளும் அன்பும் நீக்கி நீங்கா
நிரயம் கொள்பவரோ டொன்றாது காவல்
குழவி கொள்பவரின் ஓம்புமதி
அளிதோ தானேயது பெறலருங் குரைத்தே"

173. மலை - 38, 39

174. கலி.148; 4-5

175. மேலது 59; 11-13

176. மேலது 59; 15-17

177. மேலது 120: 1-3

178. பொருநர் - 21,22

179. புறம் 27: 17-18 "அருள வல்லை யாகுமதி யருளிலர்
கொடாமை வல்ல ராகுக"

180. நற்.11

181. தொல் பொருள் மரபு-27.

182. அகம் - 4

183. நற்.172 "விளையாடு ஆயமொடு வெண்மணல் அழுத்தி
மறந்தனம் துறந்த காழ்முளை அகைய
நெய்பெய் தீம்பால் பெய்தினிது வளர்ப்ப
நும்மினும் சிறந்தது நுவ்வை ஆகுமென்று
அன்னை கூறினாள் புன்னையது சிறப்பே"

184. பெரும்.52; குறுந்.305:3-5

185. புறம் 201:2-4 "ஊருட னிரவலர்க் கருளித் தேருடன்
முல்லைக் கீத்த செல்லா நல்லிசைப்
படுமணி யானைப் பறம்பிற் கோமான்"

186. மேலது 145: 1-4 "மடத்தகை மாமயில் பனிக்குமென் றருளிப்
படாஅ மீத்த கெடாஅ நல்லிசைக்
கடாஅ யானைக் கலிமான் பேக
பசித்தும் வாரேம் பாரமு மிலமே"

187. நற்.258:5-6; 281:1-4; 343:4-5; 367:1-5; ஐங் 391:1-6

188. குறுந் 210

189. பெரும்பாண் - 447; மலைபடு 550

190. புறம் 35: 19-21

191. மேலது 184

192. மேலது 10: 1-6

193. மேலது 55: 10-17

194. மணிமேகலை 7: 8-12

195. புறம் 55:7-10

196. மேலது 9:1-6 "ஆவும் ஆனியற் பார்ப்பன மாக்களும்
பெண்டிரும் பிணியுடை யீரும் பேணித்
தென்புலம் வாழ்நர்க் கருங்கட னிறுக்கும்
பொன்போற் புதல்வர்ப் பெறாஅ தீரும்
எம்மம்பு கடிவிடுது நும்மரண் சேர்மினென
அறத்தாறு நுவலும் பூட்கை...."

197. மேலது 42:4-9

198. மேலது 142:4-6

199. புறம் 142: உ.வே.சா. உரை பக..299

200. தொல்.புறத்-75.

201. புறம் 7:224

202. மேலது 18; 19; 24; 25

203. மேலது 79: 4-6 "வெம்போர்ச் செழியனும் வந்தன னெதிர்ந்த
வம்ப மள்ளரோ பலரே
எஞ்சுவர் கொல்லோ பகறவச் சிறிதே"

204. நெடுநல்வாடை 188 - 189

205. புறம் - 251. 252.

206. கலித்.96:6-7

207. மேலது 15:14-15

208. புறம் 197

209. மேலது 193

210. நற்.141; முல்லை 37

211. குறிஞ்சி 17

212. முருகு 81-90

213. மதுரை 477-478

214. *கலித்.139: 33-37*

215. *குறுந்.203:4-5*

216. *கலித்.93: 6-7*

217. *முருகு 274*

218. *புறம் 201; 7-12*

219. *முருகு 126 - 137*

220. *புறம் 6: 17-20*

221. *முல்லை 37-40*

222. *கலித்.126: 1-5*

223. *மேலது 9*

224. *புறம் 43:1-4*

# இயல் - இரண்டு

## மனை மாட்சியும் மகளிர் மாண்பும்

**முன்னுரை:**

தனி மனிதக் கூட்டமைப்பின் முதற்படி வளர்ச்சிநிலை குடும்பமாகும். எனவே தனி மனிதப் பண்பாட்டைக் கூறும் முதல் இயலுக்கு அடுத்தபடியாக இவ்வியல் வைக்கப்பட்டுள்ளது. பண்டைத் தமிழர்கள் மனையற (குடும்ப) வாழ்வில் மகளிருக்கு முன்னுரிமையும் சமூகவாழ்வில் ஆடவருக்கு இன்றியமையாத இடத்தையும் அளித்துள்ளனர். சிறந்த பண்பு நலன்களைக் கொண்ட மகளிராலேயே மனையறம் மாட்சிமை பெறுகிறது என்பதாலும் மாட்சிமை பொருந்திய மனையறத்தாலேயே மாண்புகள் நிறைந்த மக்கள் குறிப்பாக மகளிர் உருவாக்கப்படுகின்றனர் என்பதாலும் இவ்வியல் இத்தலைப்பில் அமைக்கப்பட்டுள்ளது.

ஏறத்தாழ இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே ஆதி மனித வாழ்க்கை முறையிலிருந்து தமிழர்களின் வாழ்வு செம்மைப்படுத்தப்பட்டுவிட்டது. இதன் விளைவாகத் தோன்றியதே நெறிப்படுத்தப்பட்ட மனையற வாழ்வாகும். சங்க காலத்திலேயே கூட்டு வாழ்க்கை நிலையிலிருந்து மாறித் தனிக்குடும்ப வாழ்வு வளரத் தொடங்கிவிட்டது. சங்க இலக்கியங்களை ஆராயும் போது இந்நிலை தெளிவாகப் புலனாகிறது. பண்டைத்தமிழரின் மனையற வாழ்வு பற்றிய கொள்கைகளையும் மகளிரின் மதிப்பு மிக்க மாண்புகளையும் பல நிலைகளில் இவ்வியல் வெளிப்படுத்துவதைக் காணலாம்.

**மனையறம் சொல்லும் பொருளும்:**

திருமணத்திற்குரிய தகுதிகளான் ஒத்த கிழவனும், கிழத்தியும் பலரறிய மணந்து கொண்டு வாழ்வதையே 'மனையற ஒழுக்கம்' என்று ஆன்றோர் குறிப்பிட்டனர். தொல்காப்பியர் மனையற நெறியாகிய கற்புநெறியை

"மறை வெளிப்படுதலும் தமரில் பெறுதலும்
இவை முதலாகிய இயல்நெறி பிழையாது
மலிவும் புலவியும் ஊடலும் உணர்வும்
பிரிவொடு புணர்ந்தது கற்பெனப் படுமே [1]"

என்று குறிப்பர். இதுவே தலைவனும், தலைவியும் ஒன்றிய நிலையுடன் வாழும் மனையற நெறியாகும். தொல்காப்பியத்தில் கற்பு என்று வரும் இடங்களையெல்லாம் ஆராயின் அஃது மனையறம் என்னும் பொருளையே குறிக்கிறது என்பதனை அறியலாம் என்று ந.சுப்புரெட்டியார் [2]குறிப்பிடுகிறார். எனவே மனையறம் என்பது பொதுவாகக் கணவனும், மனைவியும் மனைக்கண் இருந்து ஆற்றவேண்டிய அறங்களைக் குறித்தது எனலாம். அறம் செய்தல், மனையறக் கடமைகள் ஆகியவற்றில் மகளிர் இன்றியமையாப் பங்குப் பெற்றனர். எனினும், கணவன் பிரிந்த அல்லது இறந்த நிலையில் மகளிர் மனையறக் கடமைகளை ஆற்ற இயலாத நிலையில் இருந்துள்ளனர். கணவனும், மனைவியும் கூடியிருந்து அறம் செய்தலையே பண்டைத் தமிழர் சிறப்புடையதாகக் கருதினர். இதனை, தன் கணவன் பிரிந்த நிலையில் சில இல்லறக் கடமைகளை ஆற்ற இயலாது வருந்திய கண்ணகி பின்னர்த்தன் கணவனிடம் இரங்கிக் கூறும் பகுதியால் உணரலாம்.[3]

மனையற வாழ்வு என்பது, 1. மணம்கொண்ட ஆணும், பெண்ணும் ஊடியும், கூடியும் இன்புற்று மக்கட்செல்வம் பெற்றுச் சிறந்திடும் இன்பநிலை, 2. பொருளீட்டி அறம் செய்து புகழ்பெற்று உயர்ந்திடும் பொருள்நிலை 3. பற்றுக்களிலிருந்து விடுபட்டுத் தாமரை இலைத் தண்ணீர் போல் விளங்கி இருவரும் எவ்வுயிர்க்கும் தொண்டாற்றும் அறநிலை ஆகிய மூன்று நிலைகளாலும் சிறக்கும் மாண்புடையது. இதனை 'இன்பமும் பொருளும் அறனும் என்றாங்கு, அன்பொடு புணர்ந்த ஐந்திணை'[4] என்னும் தொல்காப்பியத் தொடர் உணர்த்தும். இத்தகு மனையற வாழ்வின் வெற்றிக்கு அன்பால் ஒன்றுபட்ட காதலர்களின் உள்ளமே அடிப்படையாகும்.

சங்க காலத்தில் இல்லத்தின் தலைமைப் பொறுப்பு மனைவியிடம் அளிக்கப்பட்டிருந்தது. இல்லாள், மனைவி என்றும், மனைக்கு விளக்கம் மடவார் என்றும், மனைக்கு விளக்காகிய வாணுதல் என்றும் பெண்ணைப் பெருமைபடுத்திப் பேசுதல் இவ்வடிப்படையிலாகும். 'உரிமை கொடுத்த கிழவோன்'[5] என்னும் சொற்றொடர் வாயிலாகத் தொல்காப்பியர் பண்டு மகளிர் பெற்றிருந்த இல்லத் தலைமையைக் குறிப்பிட்டுள்ளார். சங்க கால மனையற வாழ்க்கையில் பெண்ணின் உரிமை ஓங்கியிருந்தது எனக்கூறலாம். இத்தகு மாண்புமிக்க மகளிராலேயே மனையறம் மாட்சிமை பெறுகிறது.

மனையறம் என்னும் பொருளை உணர்த்தும் சொற்கள் சங்க இலக்கியத்தில் பின்வருமாறு அமைந்துள்ளது. அவை மனை, மனைக்கிழமை என்பதாகும்[6]. திருவள்ளுவர் 'மனையறத்தை' இல்வாழ்க்கை என்று குறிப்பிட்டுள்ளார். திருக்குறளுக்குப் பின்னர்த் தோன்றிய நூல்களான சிலப்பதிகாரம், மணிமேகலை ஆகிய இரண்டு காப்பிய நூல்களிலும் 'மனையறம்' என்னும் சொல்லாட்சி பயன்படுத்தப்பட்டுள்ளது [7]. கழகத் தமிழ் அகராதி என்னும் நூல் மனைமாட்சி என்னும் சொல்லுக்கு இல்லறத்திற்குரிய நற்குண நற்செய்கைகள் என்று கூறுகிறது. மேலும் இந்நூல் மனையறம் என்பதற்கு இல்லறம் என்று பொருள் கூறுகிறது. இத்தகைய மனையறம் திருமணத்திலிருந்து தொடங்கப்படுகிறது.

**திருமணம்:**

மனையற வாழ்வில் பருவம் எய்திய ஓர் ஆணும், பெண்ணும் ஈடுபடுவதற்கான இணைப்பு 'திருமணம்' என்று கூறப்படுகிறது. மன உணர்வோடு கூடிய மானிட வாழ்வில் அறிவு வளர்ச்சிக்கும், நாகரிக வளர்ச்சிக்கும் ஏற்ப, இப்பிணைப்பு இன்றியமையாததாகிறது. மக்களை விலங்கினின்றும் பிரித்து காட்டும் காரணிகளுள் ஒன்றாகவும் விளங்குகிறது. மக்களின் பாலியல் உணர்வு நிறைவேற்றத்திற்கும், வழிமுறை தொடர்ச்சிக்கும் அடிப்படையான இந்தத் திருமண இணைப்பினைச் சங்ககாலத்திற்கு முற்பட்ட காலத்திலேயே பழந்தமிழர் தம் வாழ்வில் ஏற்று நெறிப்படுத்திக் கொண்டுள்ளனர்.

"கொளற்குரி மரபின் கிழவன் கிழத்தியைக்

கொடைக்குரி மரபினோர் கொடுப்பக் கொள்வதுவே "[9]

திருமணம் ஆகும் என்று தொல்காப்பியர் பொருள் கூறுகிறார்.

**திருமணத்தைக் குறிக்கும் சங்க இலக்கியச்சொற்கள்:**

திருமணத்தைக் குறிக்க வரைவு, வதுவை, மன்றல், கரணம், மணம் முதலிய சொற்கள் சங்க இலக்கியங்களில் பயின்றுவந்துள்ளன [10]. இப்பொருளில் அமைந்த கல்யாணம், கலியாணம் என்னும் வடமொழிச் சொற்கள் முதன்முதலில் நாலடியார், ஆசாரக்கோவையில் இடம் பெற்றுள்ளன [11].

**திருமணப் பொருத்தங்கள்:**

திருமணத்திற்குப் பின்னர்த் தலைவன், தலைவி ஆகியோரது மனவாழ்வு - இல்லறவாழ்வு - இன்பமாகவும், நலமிக்கதாகவும் இருத்தல் வேண்டும் என்பதனை உளங்கொண்டு அவர்கள்பால் அமைய வேண்டிய ஒப்புமைகளாகப்- பொருத்தங்களாகப் -பத்துப்பொருத்தங்களைத் தொல்காப்பியர் வரையறுத்துள்ளார்.

"பிறப்பே குடிமை ஆண்மை யாண்டோ

டுருவு நிறுத்த காம வாயில்

நிறையே யருளே உணர்வொடு திருவென

முறையுறக் கிளந்த ஒப்பினது வகையே" [12]

ஆராய்ந்துக் காணுமிடத்து, அவற்றுள் பெரும்பாலானவை உள்ள நலம் சார்ந்தனவாகவும், சிலவே உடல்நலம் சார்ந்தவையாகவும் அமையக் காணலாம். தலைவன்-தலைவிபால் அமையக் கூடாதனவாகச் சில பண்புகளையும் தொல்காப்பியர் சுட்டியுள்ளார்.[13] அவையனைத்தும் உள்ளம் சார்ந்தப் பண்புகளாக இருப்பது குறிப்பிடத்தக்கது. இவ்வாறு உடன்பாடு, எதிர்மறை ஆகிய இரு வகையாலும் தலைவன்-தலைவிபால் அமைய வேண்டியப் பண்புகள் பற்றிய வரையறை, பண்டைத் தமிழர்கள்தம் மனையறம் பற்றிக் கொண்டிருந்த சிந்தனையை உணர்த்துவதாக உள்ளது.

**திருமண வகைகள்:**

சமுதாய வாழ்வில் திருமணத்தின் இயல்பையும், பயனையும் ஆராய்ந்த சமுதாய இயல் அறிஞர்களும், இலக்கிய அறிஞர்களும் அதனைப் பல்வேறு வகையில் விளக்கியுள்ளனர். சங்க இலக்கியப் பாடற் குறிப்புகளால் அறியப்படும் மணத்தினை ஆய்வாளர்கள் பலவகையாகப் பகுத்துக் காட்டியுள்ளனர். அவை 1. களவு மணம் (களவு வெளிப்படுவதற்கு முன் வரைதல், களவு வெளிப்பட்டபின் வரைதல், உடன்போக்கு மணம்) 2. தொன்றியல் மரபின் மன்றல் (மரபு மணம்), 3. பரிசமளித்து மணத்தல், 4. சேவைமணம் (பணி செய்தல்) 5. திணைக்கலப்பு மணம், 6.ஏறு தழுவி மணமுடித்தல், முல்லைத்திணை மக்களுக்குரியது, 7. மடலேறி மணமுடித்தல், 8. போர் நிகழ்த்தி மணமுடித்தல், 9. துணங்கையாடி மணத்தல், 10.பலதார மணம் போன்றவையாகும்.[14] எனினும் அவற்றைப் பொதுவாகக் காதல்வழி அமையும் மணம், பெற்றோர் கொடை நேர்ந்து அமையும் மணம் என்னும் இருவகையில் அடக்கிக் காட்டலாம்.

முன்பின் அறியாத ஒரு ஆணும், பெண்ணும் திடீரென்று சந்திக்கின்றனர். இருவரும் மணமாகாதவர்கள். ஒத்த பருவமும், உருவமும் உடையவர்கள். இருவரின் கண்களும் ஒன்றுபடுகின்றன. உள்ளத்தாலும் ஒன்றுபடுகின்றன. பின்னர் இருவரும் இரவிலும் பகலிலும் அடிக்கடிச் சந்தித்து அக மகிழ்கின்றனர். இவர்களுடைய சந்திப்புக்குத் தோழி துணை செல்வாள். இந்த நிகழ்ச்சிக்குக் களவு மணம் என்று பெயர். இக்களவு மனத்தின் அடிப்படையான முதற்சந்திப்பைப்பற்றி அகநானூறு அழகாக உரைக்கின்றது.[15]

அன்புடை நெஞ்சம் தாம் கலந்த காதலரின் களவு வாழ்வில் தடையின்றிக் கணவனை எய்தப் பெறாமையால், இப்புது ஒழுக்கத்தாலும் தலைவியின் மேனி வேறுபடுகிறது. அதுகண்ட தாய் இவ்வேறுபாடு இவளுக்கு எதனால் ஆயது என்று அறியக் கட்டுவிச்சியையும் கழங்குக்குறி கூறும் வேலனையும் அழைத்து வினாவ முற்படுகின்றாள். தலைவியின் வேறுபாட்டின் உண்மையைத் தோழி, செவிலி, நற்றாய் முதலியோற்குக்

குறிப்பாக அறிவுறுத்துதலை 'அறத்தொடு நிற்றல்' என்பது கவிமரபு. உண்மை உணர்ந்தப் பெற்றோர் களவில் தலைவி நயந்தத் தலைவனுக்கே அவளை மணம்முடித்து வைப்பர். இதுவே களவு வெளிப்பட்டபின் நிகழும் திருமணம் ஆகும்.

இதற்கு இடையூறுவரின் தலைவியைத் தலைவன் பிறர் அறியாவண்ணம் தன்னுடன் அழைத்துக் கொண்டு சென்று விடுவான். இதனை உடன்போக்கு என்பர். தோழியின் துணையொடு நிகழும் உடன்போக்கு தலைவி-தலைவன் ஆகியோரிடை நிகழ்ந்த களவினை ஊரவர் அறியுமாறு அம்பலப்படுத்திவிடுவதால் இது ஒருவகையில் பெற்றோரின் முன்னிசைவின்றி நிகழும் திருமணத்தின் முதல் வினையாகவும், ஒருவகைத் திருமணமாகவும் கருதப்படும்.[16]

தொல்காப்பியர் கொடுப்போர் இன்றியும் கரணம் உண்டு என்கிறார்[17]. அஃது எப்போதெனின் தலைமக்கள் ஊரறியாமல் உடன் போக்கில் ஈடுபட்டபோதாகும். இவ்வகையினால் எல்லாம் தான் விரும்பிய காதலியை அடையமுடியாத நிலையில், காதலன் 'மடலேறி' தன் காதல் உண்மையை உலகத்திற்கு வெளிப்படுத்தி, உலகம் துணைவரக் காதலியை அடைதலும் உண்டு என்பர்.

மடல் என்பது பனை மடலால் குதிரை வடிவினதாகச் செய்யப்பட்ட உருவமாகும். காமம்மிக்க தலைவன் பனைமடலால் குதிரையைப் போல் ஓர் உருவம் செய்து, அதன் கழுத்தில் மணி, ஆவிரை மாலை முதலியவற்றைப் பூட்டி அதன் மேலாக ஏறி, ஊர் மன்றத்தே வருவான். இவன் தன்கையில் தான் காதலித்தப் பெண்ணின் உருவையும் தன் வடிவையும் படத்தில் எழுதிக் கையில் பிடித்திருப்பான். மடலேறும் தலைமகன் எருக்கமாலை, ஆவிரம்மாலை, வெள்ளெலும்பு மாலை முதலியன அணிந்து கொண்டிருப்பான். இவனது வருகை கண்ட ஊரினர் இவனுக்கு இன்னாளொடு நட்பு உண்டு என்று அறியவே செய்தி எங்கும் பரவிப் பழிப்புக்கு இடமாகும். அது கேட்ட தலைவியின் சுற்றத்தார் அத்தலைமகனுக்கு அவளை மணம்முடித்து வைப்பர். சங்க பாடற்பகுதிகள்

பல மடலேற்றின் மூலம் ஒரு தலைவன் தான் விரும்பிய காதலியைப் பெற்று மகிழ்ந்தமை உரைக்கும்[18].

காதல் மணம் பலர் அறி கற்பு மணமாக மலர்கிறது. பெண்ணின் தமர் உரிய தலைமகனை அறிந்து அவனுக்குத் தன் மகளை உவப்புடன் அளிக்க முன் வருகின்றனர்.

"கூன் முள் முண்டகக் கூர்ம் பனி மா மலர்
நூல் அறு முத்தின் காலொடு பாறித்
துறை தொறும் பரக்கும் தூ மணற் சேர்ப்பனை
யானும் காதலென்; யாயும் நனி வெய்யள்;
எந்தையும் கொடீஇ இயர் வேண்டும்;
அம்பல் ஊரும் அவனொடு மொழிமே".[19]

இதனால் தலைவி ஒருத்தி விரும்பிய தலைவனுக்குத் தந்தையும் தாயும் தம் மகளைத் திருமணம் செய்து கொடுக்க முன் வருகின்றனர் என்பதை அறியலாம்.

பெண்ணுக்கு மணமகன் பரிசமளிக்கும் வழக்கம் தொன்றுதொட்ட தமிழர் மரபாகும். அன்று இது முலைவிலை, சிருவளை விலை, பரியம் என்று அறியப்பட்டது. பாசிழை விலையென்றும் பெயர் உண்டு.[20]

பொன் முதலிய சிறந்த பொருள்களைப் பரிசமாகக் கொடுக்கின்றமை தெறியவரும். நாட்டையே மணப்பெண்ணுக்குப் பரிசமாக ஒருவன் கொடுத்து விடுகிறான்.

ஒரு நிலத்தில் உள்ள ஒரு தலைவனோ அல்லது தலைவியோ மற்றொரு நிலத்தில் உள்ள தலைவன், அல்லது தலைவியை மணம் செய்து கொள்வது திணைக் கலப்பு மணமாகும்.

"நெல்லும் உப்பும் நேரே ஊரீர்
கொள்ளீ ரோவெனச் சேரிதொறு நுவலும்
அவ்வாங் குந்தி யமைத்தோ ளாய்நின்
மெய்வாழ் உப்பின் விலை எய்யாம்."[21]

என்ற அகப்பாடலின் உமணப்பெண் மலைநாட்டிற் சென்று உப்பு

விற்கையில் ஓர் இளைஞனின் காதலுள்ளம் அவள்பாற்படர்வது கூறப்பெறும். அறிஞர்.வ.சுப.மாணிக்கம் இதனைத் திணைக்கலப்பு மணம் என்பார்.[23]

முல்லை நிலத்துமக்கள் சிறந்த வீரர்களாயிருந்தனர். அந்நிலத்துப்பெண்கள் வீரர்களைத்தான் மணம் புரிந்து கொள்ளுவார்கள். 'கொல்லேறு தழுவுதல்' என்பது ஒருவிளையாட்டு பந்தயத்திற்கென்று வளர்க்கப்பட்ட காளைகளை அவிழ்த்து விரட்டுவார்கள். அக்காளைகளை அடக்கிப் பிடிக்கின்றவர்களே பெண்களால் பாரட்டப்படுவார்கள். அவ்வீரர்களையே அந்நிலத்து மாதர்கள் மணந்து கொள்ளுவார்கள், இது பழந்தமிழ் நாட்டு வழக்கம். இதனை முல்லைக் கலியிலே காணலாம்.[24]

"கொல்லேற்றுக் கோடஞ்சு வானை, மறுமையும்
புல்லாளே ஆய மகள்"

பெண் கேட்டு வந்தார் தம் தகுதிக்கு ஏற்றவர் அல்லராயின் மணம் செய்து கொடுக்க ஒப்புவதில்லை.[25] தந்தை, தன்னைமாரும் மகள் மறுத்துவிடுகின்றனர் மேலும் தன்னை வணங்காதார் எத்தகையோராயினும் அவர்கட்கும் மகட்கொடுத்தல் இல்லை.[26] முப்பெரு வேந்தர்க்கும் கூட அவர் வணங்காராயின் அவர்க்கு மகட் கொடுப்பதில்லை மகள் மறுத்த ஏதுவாய் இருபெரு வீரர்களிடையே போர் நிகழ்தலும் உண்டு. [27] இதனை, 'மகட்பாற் காஞ்சி', 'மகண் மறுத்து மொழிதல்' என வழங்குவர் [28]

ஒரு ஆண் பல பெண்களை மணந்து கொள்வது பலதார மணம் எனப்படும். பதிற்றுப்பத்தின் பதிகக் குறிப்புக்களிலிருந்து இமையவரம்பன் நெடுஞ்சேரலாதன், வேளாவிக்கோமான் தேவி, சோழன் மணக்கிள்ளி என்னும் இரு மனைவியரைக் கொண்டிருந்ததும் அவர்கட்குப் பிறந்தவர்கள் முறைப்படி அரசுரிமை எய்தியதுமான செய்திகள் காணப்படுகின்றன.[29] எனினும் சங்ககாலத் திருமணம் ஒருவனுக்கு ஒருத்தி என்பதனை அடிப்படையாகக் கொண்ட ஒருதாரமணமாகவே பெரும்பாலும் அமைகின்றன.

**மண நிகழ்வு:**

பெண்ணின் பெற்றோர் கொடுக்க மணமகன் ஏற்றுக் கொள்ளுவதே கற்பு வாழ்வின் தொடக்கமாக இருந்தது. எனினும் கொடுப்போர் இன்றியும் கரணம் உண்டு என விதிப்பதால் எவ்வாறேனும் திருமண வினையொன்று நடத்தல் இன்றியமையாதது என்பது தொல்காப்பியர் கால நிலையாகும். காலந்தோறும் மாறுபடும் இயல்பினதாகிய சடங்கு முறையையேத் தெளிவாகத் தொல்காப்பியர் சுட்டினாரல்லர். எனினும் சங்க இலக்கியத்தில் இரண்டு செய்யுட்கள் திருமணச் சடங்கு பற்றிப் பேசுகின்றன.[30] அகம் 86 ஆம் செய்யுளில் கூறப்பட்ட செய்திகளாவன திங்களும் உரோகினியும் கூடிய நன்னாளில் திருமணம் நடந்தது; வைகறைப் பொழுதில் மணவினை நிகழ்ந்தது. பந்தலிட்டு அதில் புது மணல் பரப்பினர்; நல்ல விளக்கு ஏற்றினர்; மாலைகளைத் தொங்கவிட்டு வீட்டை அழகுறுத்தினர்; உழுந்து பெய்த கொழுந்துவை அடிசில் கொடுக்கப்பட்டது; உச்சிக்குடத்தர், புத்தகல் மண்டையர் பெரிய ஆரவாரத்தோடு பந்தலுக்கு வந்தனர்; அவர்கள் பொது செய் கம்பலை முதுசெம் பெண்டிராவர். "கற்பின் வழாஅ நற்பல உதவிப் பெற்றோர் பெட்கும் பிணையை ஆக" எனப் புதல்வர் பயந்த இழையணிந்த மகளிர் வாழ்த்தியதோடு நீரில் நெல்லும் மலரும் கலந்து வதுவை நீராட்டினர். அப்போது பெண்கள் கூட்டம் புகுந்து "பேரிற் கிழத்தி ஆக" என வாழ்த்திற்று. பின்னர், பெற்றோர் மண மகளைத் தலைவனிடம் தந்தனர். அன்றே இருவரையும் புணர்ச்சிக்கெனக் கூட்டி வைத்தனர்.

அகம் 136 ஆம் பாடலில் கூறப்பட்ட செய்திகள் வருமாறு; "மைப்பறப்புழுக்கின் நெய்க் கனி வெண் சோறு" படைக்கப்பட்டது; பெரியோரை வாழ்த்தினர்; புட்சகுணம் பார்த்துத் திங்கள் உரோகிணியோடு கூடிய நன்னாளில் வீட்டை அழகுறுத்தினர்; கடவுள் வழிபாடு நடந்தது; மண முழவு ஒலித்தது; பெண்ணுக்கு வதுவை நீராட்டு நடந்தது; வெண்ணூலில் வாகை இலையையும், அறுகம் புல்லையும் சேர்த்துக் கட்டிக் காப்பாக அணிவித்தனர். தூய உடை அணிவித்தனர்; மணல் நிறைந்த பந்தலில் நகையணிந்ததால் ஏற்பட்ட வியர்வையை ஆற்றினர்; தமர் தலைமகளை மணமகனிடத்து அளித்தனர்.

**உளமொத்த அன்பு:**

கணவனும் மனைவியும் ஒருவரோடு ஒருவர் கொண்ட அன்பு பிறவிதோறும் தொடர விரும்பியமை, பிறவிதோறும் கணவனும், மனைவியுமாக வாழ வேண்டுமென விரும்பியமை போன்ற எண்ண விழைவுகளைச் சங்க நூல்களில் காணலாம்.[31] இத்தகைய அன்பு வாழ்வில் பிரிவு சிறிது ஏற்படினும் உயிர்போகும் தன்மைத்தாகும் என்பதைத் தலைவி, தலைவன் கூறும் கூற்றுக்களால் அறியலாம்.[32]

தலைவனும் தலைவியும் மனமொத்து வாழும் அகவாழ்வின் அன்புநிலை, தலைவன், தலைவி, புதல்வன் ஆகிய மூவரும் மகிழ்ந்து வாழும் அன்பு வாழ்வுநிலை ஆகியவற்றை அகநானூறும், ஐங்குறுநூறும் சிறப்பிக்கின்றன.[33] காதலென்பது வெறும் உடற்காமம் அன்று; அதனையும் கடந்து நிற்பது; மனத்தளவில் உயர்ந்து நிற்பது; மனைவியின் உடலழகு வற்றி நரைமூதாட்டியாக ஆனபோதும் தலைநாள் கொண்ட உள்ளன்போடு அவளைப் போற்றுவது கணவனின் கடமையாகும் என்பதனை, நற்றிணைப் பாடல் அறிவிக்கின்றது.[34] என் காதலியை என் உள்ளத்தை விட்டுப் பிரிக்கவே முடியாது. அவள் எப்பொழுதும் என் நெஞ்சத்திலேயே குடி கொண்டிருப்பாள்" என்று ஒருவன் சொல்வதாக அமைந்துள்ளது மற்றொரு பாடல்[35] கணவன் நலத்திலே கருத்துடையவளாயிருப்பவளே கற்புடைய மனைவி. கணவன் பிரிந்து போயிருக்கும் பொழுதும் அவனிடம் வெறுப்படைய மாட்டாள். அவன் கருதிச் சென்ற செயலிலே வெற்றி பெற்று விரைவில் திரும்ப வேண்டும் என்று விரும்புவாள். தன் கணவன் மேல் எவரும் எப்பழியும் சுமத்த இடந்தரமாட்டாள்.[36]

இதனால் மனைவியின் உள்ளன்பைக் காணலாம். தனக்கு எது நேர்ந்தாலும், தன் கணவன் இனிது வாழ வேண்டும் என்று விரும்புகின்றாள். இதுவே அன்புள்ள மனைவியின் அருங்குணமாகும். பிரிந்து சென்ற கணவன் தன் வினையிலே வெற்றி பெற்றான். காதலியிடம் தான் திரும்பி வருவதாக வாக்களித்த கார்காலமும் வந்துவிட்டது. தனித்திருக்கும் காதலியைக் கண்டு அவள் கவலையை விரட்ட வேண்டும் என்னும் ஆவல் அவனைத்

தள்ளுகிறது அவன் தேரின்மேல் ஏறி விரைந்து வந்து கொண்டிருக்கின்றான்; அப்பொழுது அவன் தன் தேர்ப்பாகனிடம் விரைவாகத் தேரை ஓட்டும்படி கூறுகின்றான்.[37] பொருள் தேட செல்லும் போது பாலை நிலத்து வழி நெடியதாக இருந்தது என்றும் தலைவியை நினைத்துக் கொண்டு திரும்பி வரும் போது அந்தப் பாதை மிகவும் அண்மையாக இருந்ததாகவும் தன் மனைவியிடம் ஒரு கணவன் கூறுகிறான்.[38] இது காதலன் தன் காதலியிடம் கொண்டிருந்த அன்பை விளக்கிக் காட்டுகிறது. கணவனும் மனைவியும் என்றும் இணைபிரியாத அன்புடையவர்களாக வாழ்ந்தால்தான் இல்லறம் சிறக்கும். அவர்களும் இன்பமடைவார்கள், என்பதை இதன் மூலம் உணரமுடிகிறது.

தான் கொண்ட செயலையும் அதற்கு மூலக்காரணமாக விளங்கும் மனைவியையும் அவளது கணவன் உயிராகக் கொண்டிருப்பான். மனைவி ஆனவள் தன் கணவனையே உயிராகக் கொண்டு வாழ்ந்து வருவாள்.[39] இது கணவன் மனைவி இடையே உள்ள உலமொத்த அன்பை வெளிப்படுத்துகிறது. கணவனின் இன்பத்தில் மட்டும் பங்கு கொள்பவள் நல்ல மனைவியல்லள். அவன் துன்பத்திலும் இன்பம் காண்பவளே நற்பெண் என்பதனை ஒரு பெண்ணின் கூற்றில் வைத்துப் பெருங்கடுங்கோ காட்டியுள்ளார். தலைவன் பிரியும் போது தன்னையும் உடன்கொண்டு செல்ல வேண்டிய மனைவியிடம் காட்டின் கடுமை கூறி மறுத்தான். அப்போது

"அன்பறச் சூழாதே ஆற்றிடை நும்மொடு
துன்பம் துணையாக நாடின் அதுவல்ல
தின்பமும் உண்டோ எமக்கு"[40]

என்கின்றாள்.

மனைவி தன் கணவனையே உயிராகக் கொண்டு வாழ வேண்டும்; அவன் நலனே தன் நலன் என்று கருதிடல் வேண்டும். கணவன் வீடு வறுமையுற்றதாயினும் தன் பிறந்த வீட்டை எண்ணாது பெருமையோடு வாழ வேண்டும். இதனை ஐங்குறுநூற்றுப் பாடலொன்று அழகுறக் கூறுதல்

காணலாம். கணவன் வீட்டுத் தோட்டத்தில் தழைகள் வீழ்ந்து அழுகி நாற்றமெடுக்கும் சிறு நீர் நிலையுண்டு. அதிலுள்ள நீரை மான்கள் குடித்துவிட்ட நிலையில் எஞ்சியுள்ள நீரையே அவள் உண்கின்றாள். அது தன் தாய் வீட்டில் தான் உண்ட தேன் கலந்த பாலினும் தெவிட்டாமல் இனிக்கிறது. இது உலமொத்த அன்பின் வெளிப்பாடாகும்.[41]

உயிர் கலந்து ஒன்றிய பழமையான நட்புடனும் குற்றமற்ற அன்பினால் ஒன்றுபட்ட உள்ளமுடனும் தலைவனும் தலைவியும் வாழ்ந்தனர். தலைவனும் தலைவியும் உடலும் உயிரும்போல இயைந்த அன்புடன் விளங்கிய திறத்தினை, அகநானூறு காட்டுகின்றது. மனையறவாழ்வு மாட்சிமை பெற கணவன் மனைவி இருவரிடையேயும் உளம் ஒத்த அன்பு அமைய வேண்டியது இன்றியமையாததாகிறது இதுவே சங்கத் தமிழரின் பண்பாடாகவும் கருதப்படுகிறது.

**ஊடலும் கூடலும்:**

ஓர் உயிர் படைத்த இருதலைப் புள் போல உடலால் இருவரும் உணர்வால் ஒரு வருமாய் இல்லறம் நிகழ்த்துகின்றனர். எனினும் சிலகால் புலவியும், துனியும், ஊடலும், ஊடாடுதலும், அவை நீங்கிக் கூடலும் நிகழ்தல் உண்டு.

"என் இவை, ஓர் உயிர்ப்புள்ளின் இருதலையுள் ஒன்று
போர் எதிர்ந்தற்றாப் புலவல்? நீ கூறின், என்
ஆர் உயிர் நிற்கும் ஆறு யாது?."[43]

என ஊடல் தீர்ப்பானாகிய ஒரு தலைவன் பேசுகிறான். கணவனும் மனைவியும் ஊடல் கொண்டிருக்கையில் விருந்தினர்வரின் அவர்கள் ஊடல் தீர்ந்து அவர்களைப் பேணும் கடமையில் ஈடுபடுவர். எனவே விருந்தினர் ஊடல் தீர்க்கும் வாயில்களாயினர். தன் மனைவியின் ஊடலைத் தீர்க்க யாரேனும் விருந்தினர் வரமாட்டார்களா எனத் தலைவன் ஏங்குகிறான்.[44] ஒரு தலைவி தன் கணவனோடு ஊடுவதற்கு வாய்ப்பை எதிர்ப்பார்க்கின்றாள். விருந்தினர் இடைவிடாது வந்த வண்ணம் உள்ளமையால் வாய்ப்புக் கிடைக்காமல் வருந்துகின்றாள்.[45]

மனைவி இருக்க, கணவன் பிற மகளிரைத் தழுவி மகிழ்ந்துள்ளான் எனப் பதிற்றுப்பத்தின்பாடற்குறிப்புக்கள் சிலவற்றால் அறியமுடிகிறது. அவ்வாறு அவன் பரத்தையரை நாடும்போது மனைவி ஊடுதல் இயல்பே. கடல் பிறக்கோட்டிய சேரன் செங்குட்டுவன், ஆடு கோட்பாட்டுச் சேரலாதன், செல்வக் கடுங்கோ வாழியாதன், தகடூர் எறிந்த பெருஞ்சேரல் இரும்பொறை ஆகிய சேர மன்னர்கள் பிற மகளிருடன் மகிழ்ந்திருந்தனரென்பதற்குப் பதிற்றுப்பத்துப் பாடல்கள் சிலவற்றில் குறிப்புகள் உள்ளன.[46] சான்றாக ஆடுகோட்பாட்டுச் சேரலாதனின் மனைவி தன் கணவன்பாற் கொண்ட ஊடலால் (பதி.52) அவள் கொண்ட சினக்குறிப்பு உணரப்படுவதனைக் கூறலாம். சங்க இலக்கியத்தில் மருதத்திணை செய்யுள்கள் பலவற்றுள் ஊடலும், அது நீங்கி கூடலும் காணமுடிகிறது. இவ்வாறு கணவன், மனைவி இடையே சிலபோது ஊடலும், கூடலும் நிகழுமாயின் அதுவே மனையறத்தில் மகிழ்ச்சியை ஏற்படுத்தி மாட்சிமைப் பெற வழிவகுக்கும்.

**ஒருவனுக்கு ஒருத்தி:**

ஒருவனுக்கு ஒருத்தி என்ற உயரிய நெறியே மனையறத்தின் மாட்சிமை மிக்கப் பண்பாகச் சங்க காலத்தில் கருதப்பட்டது. பெண்டிரின் கூந்தலைத் தீண்டும் உரிமை, கூந்தல் அணை கணவனுக்கு மட்டுமே உரியது.[47] இந்த உரிமை வரையறை, அக்காலச் சமுதாயத்தில் ஒருவனுக்கு ஒருத்தி, ஒருத்திக்கு ஒருவன் என்னும் இருபாலாரின் கற்புடைமைக்குக் கோலப்பட்ட வேலியாக அமைகிறது. ஒருத்தி, ஒருவனை மட்டுமே மணக்கலாம். ஒருத்தி ஒருமுறை மட்டும் மணம் புரியலாம். இதைக் கலித்தொகை.

"அருநெறி ஆயர் மகளிர்க்கு
இருமணம் கூடுதல் இல்லியல்பின்றே"[48]

எனச் சுட்டுகின்றது. ஆயர் மகளிர் என முல்லைநில மகளிர் குறிப்பிடப்பட்டாலும், ஏனை நிலமகளிர்க்கும் இந்நிலை ஏற்புடையதேயாகும். பிற மாதரை விரும்பாமல் ஒருவன் ஒருத்தியோடு

வாழ்ந்தநிலை நிலவியதனையும் காணமுடிகின்றது. "தீதில் நெஞ்சத்துக் காதல் கொள்ளாப் பல்லிருங்கூந்தல் மகளிர் ஒல்லா முயக்கிடைக் குழைக என் தாரே (புறம் 73:12-14). எனக் கூறும் சோழன் நலங்கிள்ளியும், பகைவரை வென்று அவரைப் புறம் காணேனாயின், "சிறந்த பேரமர் உண்கண் இவளினும் பிரிக (புறம் 71:5-6) எனக் கூறும் ஒல்லையூர் தந்த பூதப்பாண்டியனும் மனைவியை மட்டுமே மதித்துப் போற்றி ஒழுகிய பாங்கினைப் புறநானூறு சிறப்பித்துள்ளது.

பிறன்மனை நயத்தல் போலப் பரத்தமை கடியப் பெற்றிருப்பின் வாயில் மறுத்தல், வாயில் நேர்தல் என்ற துறைகளே இடம் பெற்றிரா. வாயில் மறுத்தல் மூலம் பரத்தமை தவறு என்பதும், வாயில் நேர்தல் மூலம் அத்தவறு மீண்டும் நேராமல் திருத்திக் கொள்ள வேண்டும் என்பதும் உணர்த்தப்பட்டன. பரத்தமை சங்கத் தமிழ்ச் சமுதாயத்தில் இயல்பு வழக்காக இருந்துள்ளது. இந்த இயல்பினை ஏற்க விரும்பாத த.உ.வே.சாமிநாத ஐயர், தமது குறுந்தொகை உரை நூலில், "பலவகையாலும் உயர்நெறியதாகிய அன்புடை வாழ்க்கை பூவிற்குப் புல்லிதழ் வாய்த்தாற் போலவும், மதிக்கு மறுவாய்த்தாற் போலவும் பரத்தையர் பிரிவு என்னும் இழிந்த ஒழுக்கத்தினால் சிறிது கலக்கமடைகிறது." என்று குறிப்பிட்டுள்ளார்[49]. இந்த உண்மையை விளக்கும் வகையில் பரத்தையர் ஒழுக்கத்தைக் கடிந்தும், வேண்டாததென விலக்கியும் திருவள்ளுவர் தமது காமத்துப்பாலை அமைத்துள்ளார்.

**சுற்றம் போற்றல்:**

உறவினர்களுக்கு உணவு முதலியன தந்து பாதுகாத்தல் 'சுற்றம் போற்றல்' என்று கூறப்படும். சுற்றத்தாரிடம் பிழை காணப்படினும் அதனைப் பொறுத்து, அறம் செய்ய வேண்டும். தொல்காப்பியர் தலைவியின் பண்புகளில் ஒன்றாகச் 'சுற்றம் போற்றுதலைக்' கூறியுள்ளார். இத்தொடருக்கு நச்சினார்க்கினியர் "கொண்டோன் புரக்கும் நண்புடைமாந்தரும், சுற்றத்தாரும், குஞ்சரம் முதலிய காலேசங்களும்" (கால்நடைகள்) பல படை மாக்களும் உள்ளிட்ட சுற்றங்களைப் பாதுகாத்து

அவை உண்டபின் உண்டல்[50] என்று உரை விளக்கம் செய்துள்ளதால் கணவனின் சுற்றத்தார், நட்பினர், படை மக்கள், கால்நடைகள் போன்ற அனைத்தையும் ஓம்பிப் பாதுகாக்கும் கடமை மகளிர்க்கு இருந்தது என அறியலாம் திருவள்ளுவர் 'சுற்றந்தழால்' என்னும் ஓர் அதிகாரம் (53) வகுத்துச் சிறப்பித்துள்ளார். ஆய்மகள் மோர் விற்றதனால் கிடைத்த நெல்லைக் கொண்டு சுற்றத்தார் எல்லாரையும் உண்ணச் செய்தாள் என்பதைப் பெரும்பாணாற்றுப்படை கூறுகிறது.[51]

மேலும் இவள் நெய்விற்ற விலைக்குப் பசும்பொன் வாங்காது, குடும்ப வருமானம் பெருகுவதற்காகப் பாலெருமையையும், பசுவையும், எருமை நாகினையும் வாங்குவாள் என அவளின் 'மதிநுட்பம்' கூறப்பட்டுள்ளது. பொருளால் நல்வாழ்வு வாழ்தலே அவர் தம் குறிக்கோள் அதனைக் கொண்டு சுற்றத்தாரையும், இல்லோரையும் புரக்கின்றனர். 'கொள் எனக் கொடுக்கும்' ஈகை அறம் வாய்ந்து இளைஞரையும் முதியோரையும் புலவர், பாணர், கூத்தர் முதலிய இயல் இசை வல்லாரையும் புரந்தனர்.

> "அறன் கடைப் படாஅ வாழ்க்கையும், என்றும்
> பிறன் கடைச் செலா அச்செல்வமும், இரண்டும்
> பொருளின் ஆகும்"[52]
> "அறம் தலைப் பிரியாது ஒழுகலும், சிறந்த
> கேளிர் கேடு பல ஊன்றலும், நாளும்
> வருந்தா உள்ளமொடு இருந்தோர்க்கு இல் எனச்
> செய்வினை, புரிந்த நெஞ்சினர்."[53]

இத்தகைய எண்ணமும் செயலுமுடையராய் மாந்தர் வாழ்ந்தனர். அறவோர்க்கு அளித்தும் அந்தணர் ஓம்பியும், துறவோரை வழிபட்டும் போற்றினர்.

குமணனைப் பாடிப் பரிசில் பெற்றுவந்த பெருஞ்சித்திரனார், தம் மனைவியை நோக்கிப் பொருட்களை அனைவர்க்கும் கொடுக்குமாறு கூறும் கூற்றில் இருவரின் கொடை உள்ளமும் புலனாகக் காணலாம். நின்னை

விரும்பும் மகளிர்க்கும், நீ விரும்பும் மகளிர்க்கும், உறவினரில் கற்புடைய மூத்த மகளிர்க்கும், நம் குடும்பத்தின் பசி நீங்கக் குறி எதிர்ப்பைத் (கடன்) தந்து உதவியவர்க்கும், இன்னார் இனியார் என்று கருதாதுயாவர்க்கும் கொடுக்குமாறு மகிழ்ந்துரைக்கும் நிலையைப் புறநானூறு காட்டுகிறது.

**விருந்தோம்பல்:**

பண்பாட்டைப் போற்றி வாழ்ந்தவர் பண்டைத் தமிழர் அவர்கள் போற்றிய பண்புகளில் தலையாய பண்பு விருந்தோம்பல் பண்பாகும். விருந்து என்றால் புதுமை, புதியவர் என்று பொருள். 'விருந்தே புதுமை' என்பார் தொல்காப்பியர். பண்டைக் காலத்தில் முன் அறியாதவர்களாய் வீடு தேடி வருவோரே விருந்தினர் எனப்பெற்றனர். அக்கால மக்கள் அவர்களை அகமும் முகமும் மலர வரவேற்று விருந்தோம்பினர். இப்பண்பாடு தொல்காப்பியர் காலத்திலேயே போற்றப் பெற்றது என்பதை, களவியலிலும், கற்பியலிலும் இடம் பெற்றுள்ள நூற்பாக்களால் அறியலாம்.[55]

இல்லற மகளிரின் இன்றியமையாப் பண்புகளுள் ஒன்று விருந்தோம்பல். பெண்ணின் இலக்கணம் கூறும் தொல்காப்பியர், இல்லறத் தலைவியின் கடமைகளைக் கூறும்போது வீருந்தோம்பற் பண்பாட்டையும் இணைத்து கூறியுள்ளார்.[56] தலைவன் புறத்தொழுக்கம் மேற்கொண்டவிடத்தும் விருந்தாற்றுதற் பொருட்டு 'நெற்பல பொலிக' என்றும், 'விளைக வயலே' என்றும் இல்லறக் கடமையை நினைந்து ஒழுகும் தலைவியின் பண்பாட்டை ஐங்குறுநூறு சித்திரிக்கின்றது.[57] விருந்தினர் உண்டு எஞ்சிய மிச்சிலை தலைவி இட, தான் உண்ணுதலே தக்கது என்பதை, அறம் புணையாகத் தேற்றும் தலைவன் கூற்று புலப்படுத்துகின்றது.[58] வந்தார் அனைவர்க்கும் வரவேற்பு நல்கும் வளமனை என்றும், உலகமே புகுந்தாலும் பலரோடு சேர்ந்து விருந்துண்ணத் தக்க வாயில் என்றும் விருந்தோம்பும் செல்வமனைகள் பற்றிச் சங்கப் பாடல்கள் இயம்புகின்றன.[59]

சங்ககால மகளிர் நள்ளிரவில் விருந்தினர்வரினும் முகம் சுளியாது அவர்களை எதிர் கொண்டு வரவேற்று விருந்து செய்வர் என்பதனை

நற்றிணை குறிப்பிடுகிறது.[60] இராக்காலத்தில் கதவை அடைப்போர், விருந்தினர்களைப் புகவிட்டுப் பின்னும் யாரேனும் வருவீர் உளீரோ என்று வினவி, ஒருவரும் இலராதலை அறிந்த பின்னரே வாயிற்கதவை அடைப்பர். இவ்வாறு வினவிக் கதவை அடைப்பது சங்க கால வழக்கம் என்று குறுந்தொகைப் பாடலால் அறிய முடிகிறது.[61] மணங்கமழும் தாளிப்பையுடைய அடிசிலை விருந்தினர்க்கு மிகுதி குறைபடாமல் வழங்கும் மகளிரை, "வருநர்க்கு வரையா வசையில் வாழ்க்கை மகளிர்"[62] எனப் புறநானூறு சிறப்பிக்கிறது. மகளிர்க்குரிய விருந்தோம்பலை இவ்வாழ்க்கைத் தொழில் என்னும் பொருளில் 'மனை முதல் வினையொடும் உவப்பு' என அகநானூறு (அக.51) போற்றுகிறது.

பிரிந்து சென்ற தலைவர் மனைக்குத் திரும்பி வருங்கால் தலைவி விருந்தயரும் மரபுண்மையைச் சங்கப்பாடல்கள் உரைக்கின்றன.[63] பிரிந்து சென்ற தலைவன் வருகையை முன்னரே தூதாக வந்துரைக்கும் பாணனும், தலைவனுடன் தேரை ஒட்டி வருகின்ற பாகனும் விருந்து பெறுவர்.[64] களவு வாழ்வில் தலைவன், தலைவி இல்லத்திற்கு விருந்தினனாகப் புகுதலும், அப்போது தாய் அவனைக் குறித்து அறிந்து கொள்ளுதலும் உண்டென்பதனை குறுந்தொகைப் பாடற் பகுதியால் அறியலாம்.[65] பார்ப்பனி, ஆய்மகள் குறமகள் ஆகியோர் விருந்து செய்த தன்மையைப் பற்றிப் பத்துப்பாட்டு கூறுகிறது.[66] ஆற்றுப்படை நூல்களில் திணைமக்கள், பாணர், பொருநர், கூத்தர், விறலி முதலியவர்களுக்கு உணவு படைத்து ஓம்பும் பண்பு கூறப்பட்டுள்ளது. தம் பொருளாதார நிலைக் கேற்றவாறு விருந்தின் பொருட்களை அமைத்துக் கொண்டனர். வேட்டுவச் சிறார் மடுக்கரையில் பிடித்துவந்த உடும்பின் தசையை இட்டுச் சமைக்கப்பெற்ற தயிரோடு கூடிய கூழையும், பிற பொருட்களையும் பாணர்க்கும், அவருடன் வந்த விருந்தினர்க்கும் மனைக் கிழத்தி கொடுத்து உண்பிக்கும் பண்புடையவளாக இருந்தாள்; அவள் பாணர்களை உண்பிக்கவும், பரிசிலரை ஓம்பவும் முற்படுங்கால் அவர்கள் உண்பதால் உண்டாகும் ஆரவாரத்திடையே அச்செயலில் கையொழியாளாய் விளங்கினாள்.[67]

வீட்டில் இருந்த வரகும் தினையும் தீர்ந்துவிட, அந்நேரத்தில் வந்த இரவலர்க்கு, விதைக்கு எடுத்துவைத்த தினையைக் குற்றி உணவாக்கி விருந்துபடைத்து மகிழ்ந்தாள் என்று வறுமை நிலையிலும் மகளிர் விருந்தோம்பிய திறத்தைப் புறநானூறு சிறப்பிக்கிறது.[68] பண்டங்குறைவாக இருந்தபோதும் வரும் விருந்தினரை வரிசையாக அமர வைத்து முறையாக உணவிடும் மகளிரை, இதே போல் போற்றுகின்றது.[69]

விருந்தோம்பலைக் கடமையாகக் கொண்டவர்கள் கடன் கொண்டும் தம் கடமையைச் செய்தனர். வறுமையுற்ற நிலையிலும் பிறரால் செய்ய முடியாத கடமையைச் செய்யும் பண்பைப் பாராட்டுதற்கு வல்லாண் முல்லை என்னும் துறையை அமைத்துள்ளனர். ஒரு குடிமகன் வீட்டுக்கு விருந்தினர் வந்தனர். தன்னிடம் வேறு பொருள் இன்மையின் பழைமையானதெனப் போற்றப்பட்ட தன் வாளை அடமானம் வைத்து உணவு படைத்தான். மறுநாளும் விருந்தினர் வந்தனர். அப்போது தன் யாழைப் பணைய மாக்கினான்[70]. உண்டிக் கொடுத்தோர் உயிர் கொடுத்தோர் என எண்ணி ஊணினைத் தந்து உண்பிக்கச் செய்யும் திறத்தில் வல்லவராகத் திகழ்ந்தனர்.

**மக்கட் பேறு:**

பெறுதற்கரிய பேறுகளுள் தலைசிறந்த பேறு மக்கட் பேறாகும். மனையற வாழ்விற்கு அணியாக விளங்குவது நன் மக்கட் பேறு என்பதைக் குறள் உணர்த்துகிறது.[71] ஒவ்வொரு குடும்பத்தையும் விளங்கச் செய்வது மக்கட் செல்வமாகும். குடிக்கு விளக்கமாக அமைவது மக்கட்பேறு என அகநானூறு மொழிகின்றது.

"கடவுட் கற்பொடு குடிக்கு விளக்காகிய
புதல்வற் பயந்த புகழ்மிகு சிறப்பின்
நன்ன ராட்டி"[72]

என்ற பாடலடிகள் மக்களைப் பெற்ற மகளிர் சமுதாயத்தில் மதிக்கப் பெற்றனர் என்பதை உணர்த்துகிறது. வாழையடி வாழையாக வரும் குடும்பத்தின் மரபுநெறி போற்றுவது மக்கட் செல்வமாகும்.

"தந்தையர் ஒப்பர் மக்கள்"[73]

எனத் தொல்காப்பியர் விளக்குகிறார்.

இம்மை வாழ்வில் இசையொடு விளங்குதற்கும் மறுமை வாழ்வு மறுவின்றி எய்துதற்கும் காரணமாவது மக்கட்பேறு என்ற நம்பிக்கை நிலவியது என்று அகநானூறு மொழிகின்றது.[74] தென்புலத்தார் (பிதிரர்) கடன் கழிக்கப் புதல்வர்பேறு இன்றியமையாதது. தென்புலத்தார் கடன் புதல்வரைப் பெறுதலால் நிறை வெய்தும் என்பதனைப் பதிற்றுப்பத்து கூறுகிறது[75]. மறுமைக்கடன் செய்தற்குரிய மக்கட் பேறில்லாதோர் பாதுகாப்பற்றோராகக் கருதப்பட்டனர். போருக்கு முன் பாதுகாப்புத் தேடிக் கொள்வோர் வரிசையில் அவர்களும் இடம் பெற்றனர்[76]

படைப்புப் பல படைத்துப் பலரோடு உண்ணும் செல்வ வளமிக்கவராயினும் மக்கட் பேறில்லாதோர் வாழ்வு பயனற்றது என்று பண்டைத் தமிழர் கருதினர். இதனை, பாண்டியன் அறிவுடை நம்பியின் பாடல் உணர்த்துகிறது.[77] இத்தகைய குழந்தைப் பேற்றினால்தான் இல்லறம் முழுமையடைகின்றது.

**குழந்தை வளர்ப்பு:**

குழந்தைகளை வளர்த்தல் தாயின் தலையாயக் கடமையாகும். சிறுவயதில் பெற்றோரின் அரவணைப்பால், அன்பால் வளர்க்கப்படும் குழந்தைகள் பிற்காலத்தில் மிகச் சிறந்தவர்களாக விளங்குகின்றனர். தாயில்லாத குழந்தை உண்ணாது வருந்தும் என்பதையும், குழந்தையைக் கண்ணுங்கருத்துமாக வளர்க்க வேண்டும் என்பதையும் சங்கப் பாடல்கள் நாட்டு நிலையுடன் ஒப்புமைப்படுத்திக் காட்டிக் கூறியுள்ளன.[86]

தலைவனுடன் தொடர்பு கொண்டுள்ள பரத்தையொருத்தி, தன் மகனிடத்து விருப்பம் கொண்டுள்ளதை அறிந்த தலைவி அதனை வெறுக்கிறாள். மகன், தந்தையுடன் வெளியே செல்வதைத் தடுக்கிறாள். தன் மகனிடத்து, உன் தந்தையின் குணத்தைக் (பரத்தைமை குணத்தை) கொள்ளாதே என்று கடிந்துரைக்கிறாள்.[79] தன் அணைப்பில் வைத்து

மகனுக்கு ஏற்ற தாயாக விளங்குகிறாள். தலைவியின் இத்தகைய செயல் குழந்தை வளர்ப்பதில் அவளுக்குள்ள பொறுப்பையும், மனையறத்தில் அவளுக்குள்ள உரிமையையும் வெளிப்படுத்துகின்றது. சங்க இலக்கியங்களுள் ஒன்றான புறநானூறு என்ற நூல் ஒரு தந்தையின் கடமையாக 'சான்றோன் ஆக்குதல் தந்தைக்குக் கடனே'[80] என்று கூறுகிறது உயர்ந்த நெறியில் ஒழுகும் வண்ணம் குழந்தைகளை சான்றோர்கள் ஆக்கி - வளர்க்கவேண்டியது ஒரு தந்தையின் கடமையாகும். மனையறம் சிறந்து விளங்க தாயும் தந்தையும் குழந்தைகளின் வளர்ப்பில் தனிக்கவனம் செலுத்த வேண்டும்.

ஐங்குறுநூற்று முல்லைத்திணைப் பகுதியின் முதற்பத்திலும், குறுந்தொகையிலும் குழந்தைச் செல்வத்தோடு மகிழ்ந்திருக்கும் கணவன் மனைவியரைக் காண்கின்றோம்.[81] சங்ககாலத்தாயர், தம் குழந்தைகளிடம் இளமைக் காலந்தொட்டே கண்டிப்புடன் இருந்துள்ளனர். குழந்தை நலங்கருதி, உணவூட்ட முற்படுங்கால்,அது உண்ண மறுக்கையில் அச்சுறுத்தும் வகையில் கையில் கோல் கொண்டு ஒச்சுவதும் உண்டு[82]. இங்கு அலைத்தல் துன்புறுத்தற்கோ, கண்டிப்பதற்கோ அன்று உணவுண்டலை நிறைவு செய்வதற்காகவே ஆகும். உண்பிக்கின்ற செயலில் இருந்ததைப் போலவே இக்கண்டிப்புப் பிற நிலைகளிலும் தொடர்ந்து விளங்கியிருக்கும் என உணரலாம் புலி வருகிறது என்று சொல்லிக் குழந்தையை அச்சுருத்தலையும், குழந்தையின் அழுகையைப் போக்க அம்புலி (நிலா) காட்டலையும், குழந்தையுடன் விளையாட அம்புலியை விளித்து அழைத்தலையும் தயார் செய்தனர்.[83]

**கணவனைப் பேணுதல்:**

சங்ககால மகளிர், தம் கணவனிடத்து உளமொத்த அன்பு உடையவராய் இருந்தனர். கணவனுக்குத் துன்பம் ஏற்படுங்கால் உறுதுணையாக அருகில் இருந்து பணிவிடை செய்தனர். போரில் புண்பட்ட கணவனைப் பேய் நெருங்காதபடி, வேம்பினை மனையில் செருகி, ஐயவி சிதறி ஆம்பல் பண்ணைப் பாடி அகிற்புகைத்துக் காத்தனர்.[84] மகளிர் தம்

கணவரைத் தெய்வத்திற்கு ஒப்பாகக் கருதி வாழ்ந்தனர். கணவரைத் தொழுது வணங்கிய நிகழ்ச்சியைக் கலியும், பரிபாடலும் கூறுகின்றன.[85]

மகளிர் அதிகாலையில் எழுந்து கணவனுக்கு வேண்டிய பணிகளையும் இல்லக் கடமைகளையும் விருப்பத்தோடு செய்தனர் என்று மதுரைக்காஞ்சி கூறுகிறது.[86] ஒரு பசுவினால் கிடைக்கும் ஊதியத்தைக் கொண்டு வாழ்ந்த செல்வச் சிறப்பில்லாத ஒருவனுடைய இவ்வாழ்க்கை, பெண் ஒருத்தி இவனுக்கு வாழ்க்கைத் துணையாகிப் புகுந்ததன் பிறகு விழா வென்னும்படி செல்வச் சிறப்பினையுடையதாயிற்று என்று மனைவியால் கணவனுக்கு ஏற்பட்ட வாழ்வு முன்னேற்றம் கூறப்பட்டுள்ளது.[87]

மனைவி கணவனது மனத்தில் கவலை ஏற்படாது தன் நற்குண நற்செய்கைகளால் பேணி வருவதால், அவனுக்கு நரை தோன்றவில்லை என்பதைப் புறப்பாடல் சுட்டுகிறது.[88] இவற்றால் சங்க காலத்தில் மகளிர் கணவனைப் பேணுதலிலும், அவன்பால் அன்பு காட்டுதலிலும் குறைவுபடாது வாழ்ந்துள்ளனர் என்பதை அறியலாம்.

**வறுமையில் செம்மை:**

சங்ககால மகளிர், தம் கணவர் இல்லம் வறுமையுற்ற போதிலும், செல்வம் மிக்க தம் தந்தையின் வீட்டை நினையாமலும் தந்தை வீட்டை நாடிச் செல்லாமலும் தம்மிடம் உள்ளது கொண்டு வாழ்க்கை நடத்தி மனச் செம்மையுடன் வாழ்ந்தனர். இதனை விளக்கும் தன்மையில் தலைவியின் இல்வாழ்க்கை நிலையை அறிந்து வந்த செவிலி, நற்றாயிடம் வியந்துரைப்பதாக இடம் பெற்றுள்ள பாடலில், அவள் தந்தை வீட்டின் செல்வநிலையும், அவள் கணவன் வீட்டின் வறுமை நிலையும் நோக்கு நிலையாகக் காட்டப்பட்டுள்ளது.[89] இத்தகைய மனத்திறத்தால் தலைவனுடன் தலைவி உடன் போக்கில் செல்லுங்கால் கொடிய பாலை வழியில் பல துன்பங்களை அனுபவிக்க நேரிடினும் தலைவன் உடன் இருக்கிறான் என்ற மகிழ்ச்சியால் தலைவி அத்துன்பத்தையும் இன்பமாகவே கருதுகிறாள்.

மிக்க வறுமையுற்ற நிலையில் வாழும் போதும் வந்த விருந்தினர்களுக்கு மனைவி உணவுபடைத்த நிகழ்ச்சியைப் புறநானூற்றுப் பாடல்கள் கூறுகின்றன.[90] இந்நிகழ்ச்சிகள் மகளிர் வறுமையுற்ற நிலையிலும் குடும்ப வாழ்க்கையில் செம்மையாக வாழ்ந்து வந்தமையைத் தெரிவிக்கின்றன. விளையாடுதற்குரிய சிறுவண்டியினைச் சிறுபிள்ளைகள் ஏறிச் செலுத்த இயலாவிடினும், கையால் இழுத்து இன்பமடைவதைப் போல என் கணவரை முயங்கி இன்புறேனாயினும், கடமைகளைச் செய்து இன்புற்று வாழ்வோம்.[91] என்று குறுந்தொகைத் தலைவி ஒருத்தி கூறுகிறாள்.

**சிக்கனம்:**

சங்ககால மக்கள் பகட்டான வாழ்வை விரும்பாது எளிமையாக வாழ்தலை - சிக்கனமாக இருத்தலை - விரும்பினர் வாழ்க்கையின் அடிப்படைத் தேவையை உணர்ந்து அதற்கேற்பக் குடும்பம் நடத்திய பாங்கு போற்றத்தக்கது. ஆய்மகள் நெய் விற்ற விலைக்குப் பசும்பொன் வாங்காது பாலெருமையையும், நல்ல பசுவையும் கரிய எருமை நாகினையும் வாங்கினாள் என்பதை,

"நெய்விலைக் கட்டிப் பசும்பொன் கொள்ளாள்
எருமை நல்லான் கருநாகு பெறூஉம்"[92]

என்று பெரும்பாணாற்றுப்படை குறிப்பிடும் ஆடம்பரப் பொருளாகிய பொன் வாங்குவதால் குடும்ப வாழ்க்கைக்குப் பயன் இல்லை என்பதை உணர்ந்து, வாழ்வின் தேவைக்கும், முன்னேற்றத்திற்கும் உறுதுணையாகிய எருமை, பசுவை வாங்கினாள் என்பதனால் அவளது சிக்கனப் பாங்கு புலனாகிறது. ஆய்மகள் ஒருத்தி தயிரை விற்று அதற்கு ஈடாக நெல் பெற்று வரும் பண்ட மாற்றுச் செயலை புறநானூறு கூறுகிறது.[93] நெல் பெற்று வந்து அதன் மூலம் குடும்பம் நடத்திய பாங்கினை இதனால் உணரலாம் இவ்வாறாகச் சங்ககால மகளிர் குடும்பத்திற்கு ஏற்ற முறையில் சிக்கன வாழ்வு மேற்கொண்டு வாழ்ந்தனர்.

**அடிசில் வன்மை:**

கணவன் உவந்து உண்ணும்படி மனைவி அட்டில் தொழிலில் மேம்பட்டிருக்க வேண்டும். நச்சினார்க்கினியர் தலைவியின் மாண்புகளைக் குறிப்பிடும்பொழுது பிறவும் அன்ன என்பதற்கு அடிசில் தொழிலையும் கூறுவார்.[94] செய்வினை முடித்த செம்மல் உள்ளத்தோடு இல்லம் திரும்பும் தலைவனுக்கு இல்லிருந்து அறுசுவை உண்டி தந்து மகிழ்விப்பது மனைவாழ் மனைவியின் முதற்கடமை என்பதனைச் சங்ககால மகளிர் நன்கு உணர்ந்திருந்தனர் என்பர்.[95]

தலைவனும், தலைவியும் இல்லறம் நடத்தும் மனைக்குச் சென்று வந்த செவிலி நற்றாயிடத்தில் மகளின் சமையல் திறத்தை வியந்துரைக்கின்ற காட்சியைக் குறுந்தொகையில் காணலாம்.[96] அடுப்பில் பாலை உலையாக வார்த்து, உலையில் பெய்தற்பொருட்டு நெல்லை அவலாக இடித்துச் சமைப்பாள் என்று புதுமணப்பெண் ஒருத்தியின் சமையல் திறத்தை அகநானூறு போற்றுகிறது.[97] இதனால் தலைவி அட்டில் வன்மையால் தற்கொண்டானைப் பேணும் தகைமையினள் என்பதை அறியலாம்.

உணவு தயாரிப்பதற்குமுன், கலங்களை (பாத்திரங்களை)த் தூய்மையாகக் கழுவுதல் (பூசுதல்) சுகாதார முறைப்படி நன்மை பயக்கும் செயலாகும். நெய்யிலே கடலை துள்ள அதனோடு சோற்றை அட்டு ஊட்டுதற்குப் பெருந்தோளுடைய மனையாள் கலம் பூசுதலைச் செய்தாள் என்று புறநானூறு கூறுவதால் அறியலாம்.[98] மகளிர் பதமாகக் காய்ந்த அரிசியைப் பெய்து சுழலும் திரிகையால் (திரிவை-திரிமரம்) சுற்றுதல் செய்வர் என்றும், அவ்வரிசி கொண்டு உணவமைப்பர் என்றும் அகநானூறு குறிப்பிடுகிறது.[99]

இதுவரையிலும் சொல்லப்பட்ட செய்திகள் மாட்சிமை மிக்க மனையறத்தின் உயர் பண்புகளாகும். இவற்றோடு மாண்பு மிக்க மகளிரின் சிறந்த பண்புகளும் சேரும் போது மனையறம் மேலும் பொலிவு பெறுகிறது.

**அச்சமும் நாணமும்:**

மகளிர் தம் மனத்தில் தோன்றும் நடுக்கம் அச்சம் எனப்படும். பெண் தன்மையோடு பொருந்தாத புறச்செயல்களில் ஒழுகாது ஒதுங்கி நாணுதல் நாணம் எனப்படும். அச்சம், அன்பு காரணமாகத் தோன்றிய 'உட்கு என்றும், நாணம், காமக்குறிப்பு நிகழ்ந்தவழிப் படுவதோர் உள்ள ஒடுக்கம் என்றும் நச்சினார்கினியர் பொருளுரைப்பார்.'[100] பெண்டிர் கொண்டிருந்த குணங்களுள் நாணமும், பயிர்ப்பும் பண்பாட்டுக் குணங்களாகும் என்று கூறுவர் ஞா.தேவநேயன் கூறுவார்.[101]

களவில் தலைவன், தலைவியின் நுதலைத் துடைத்து அணுகியவிடத்து அவளிடம் அச்சமும், நாணும் தோன்றின இதனைக் குறிஞ்சிப்பாட்டின் பகுதி தெரிவிக்கிறது.[102] நாண் அலது இல்லாக் கற்பின் வாணுதல்" என்று புறநானூறும் (புறம் 196:13), "உயிரினும் சிறந்த நாணும்" என்று நற்றிணையும் (நற் 17:8) மகளிரின் பண்பைப் போற்றுகின்றன. தலைவன் தலைவியைப் புணர்ந்து உடன்போயினவிடத்துத் தலைவியைப் பாராட்ட, அது கேட்ட தலைவி நாண் சிறந்து தலை இறைஞ்சி நின்றாள் என்பதனை அகநானூறு காட்டுகிறது.[103]

திருமணநாளில் தலைவி அடையும் நாணத்தைக் கண்டு தாயும், தோழியும் மகிழும் நிலை, சுற்றத்தார் தலைவியைத் தலைவனுக்கு மணம் செய்வித்து ஓர் அறையில் இருவரையும் கூட்டிய முதல் நாளிரவில் தலைவி, தலைவனிடத்துக் கொண்ட நாண நிலை ஆகியவற்றை அகநானூறு சிறப்பிக்கின்றது.[104] தலைவியை விட்டுத் தலைவன் பிரிந்து சென்ற காலத்தில் தனியளாய் இருந்து வருந்தினும், தன் உயிரே போவ தாயினும் கற்புடை நங்கை தன் துன்பத்தை மறைத்துக் கொள்ள வேண்டும். அவ்வாறு மறைக்காவிடின் ஊரார் பழிதூற்றுவர் என்பதை நற்றிணை உணர்த்தும்.[105]

சோழன் போர்வைக் கோப்பெருநற்கிள்ளி மீது காதல் கொண்ட நக்கண்ணையார், தாய்க்கு அஞ்சும்நிலை, அவையோர்க்கு நாணும் நிலை ஆகிய இரு பண்புகளைப் பெற்றிருந்தமையினைப் புறநானூறு குறிப்பிடுகிறது.[106] நாணத்தால் மகளிர் ஏதாவது ஒன்றினைச் சார்ந்து நின்று

ஒருவரைப் பார்த்தலும், ஒருவர் பேசுவதைக் கேட்டலும் இயல்பாகும். நக்கண்ணையார் சோழன் பெற்ற வெற்றியைக் கேட்டு ஓடிச் சென்று பனைமரத்தைச் சார்ந்து நின்று பார்த்ததனைக் காணலாம்.[107] தன் காதலனான ஆடவன் ஒருவனை ஈன்ற தாயை நோக்கி, ஒரு பெண் "சிற்றில் நற்றூண் பற்றி நின்மகன் யாண்டுளனோ" (புறம் 84: 1-2) என வினவும் போது, வினவுகின்ற அவள் இல்லின் தூணைச் சார்ந்து நின்று கேட்பதைக் காணலாம்.

**மென்மைத் தன்மை:**

அழகினாலும், அன்பு, அருள், ஈகை முதலிய பண்புகளாலும் விரும்பத்தக்க தன்மை பெண்மையாகும். ஐம்பொறிகளால் நுகர்தற்கினிய மென்னீர்மை மகளிரின் சிறப்பியல்பாகும். மகளிர்பால் காணப்படும் மென்னீர்மை 'சாயல்' எனவும் வழங்கப்படும். சாயலாகிய மென்மையினைத் தம் இயல்பாகப் பெற்றமையால் 'மெல்லியலார்' என்னும் பெயர் மகளிர்க்கு உரியதாயிற்று.[108] இளம்பூரணர் "சாயல் என்பது மென்மை, அது நாயும் பன்றியும் போலாது மயிலும், குயிலும் போல்வதோர் தன்மை"[109] என்று பொருள் கூறுவார்.

அன்பும், மடனும் சாயலும், இயல்பும் (ஒழுக்கம்), என்பு நெகிழ்க்கும் சொல்லும், செறிவும், நிறையும், அறிவும், ஒன்றுபட்ட கொள்கையும் உடையவள் தலைவி என்று தலைவன் பாராட்டுவதை அகநானூறு சுட்டுவது கொண்டு[110] மகளிரின் பண்புநலன்களை உணரலாம். தலைவன் பொருள்வயிற் பிரியுங்கால் தலைவியின் மென்மை கருதியும், சுரத்தின் கொடுமையை அவள் தாங்கவல்லுநள் அல்லள் என்றெண்ணியும் உடனழைத்துச் செல்வதில்லை என்பதை அகப்பாடல்களின் வாயிலாக அறியலாம்.[111]

மென்மை வாய்ந்த மகளிர், தம் அன்பினாலும், பண்பினாலும் வன்மை மிக்க ஆடவர்களைப் பிணித்தனர்.

"மகளிர் மலைத்தல் அல்லது மள்ளர்
மலைத்தல் போகிய சிலைத்தார் மார்ப"

"வணங்குசிலை பொருதநின் மணங்கமழ் அகலம்

மகளிர்க்கு அல்லது மலர்ப்பு அறியலையே"

போன்ற செய்திகளின் மூலம்[112] பெருவீரம் பொருந்திய ஆடவர், மகளிரின் மென்மைக்குப் பணிந்தனர் என்பதை உணரலாம்.

**பொறை:**

பொறுமை, பெண்டிர்க்குரிய குணங்களுள் ஒன்றாகும். பொறை எனப்படுவது மென்மையான மனத்துடன் பொறுத்துப் போகும் பண்பாகும்.[113] சங்ககால மகளிர், கணவர் எத்தகைய துன்பம் தரினும், வறுமை ஏற்படினும் பொறையே காத்தனர். தம்மை இகழ்வாரையும் பொறுப்பதே தலையாய பண்பாகப் போற்றினர்.

பொறுமைக் குணங்களால் நிறைந்த கற்பினை உடையவர் மகளிர் என்று புறநானூறு குறிப்பிடும்.[114] தாய், குழந்தையை அடிக்கும் நேரத்திலும் அம்மா என்றே அழும் அக்குழந்தையைப் போலத் தலைவன் இன்னாதவற்றைச் செய்யினும், இனியவற்றைச் செய்யினும் தலைவி, பொறுத்துத் தலைவனது அருளையே நினைந்து வாழும் இயல்புடையவளாக விளங்கினாள்.

"தாயுடன்று அலைக்கும் காலையும் வாய்விட்டு

அன்னா என்னும் குழவிபோல

இன்னா செயினும் இனிதுதலை அளிப்பினும்

நின் வரைப்பினள்"[115]

**கற்பு:**

தன் கணவனையன்றிப் பிற ஆடவரைக் கனவிலும் கருதாது ஒழுகும் உள்ளத் திண்மையே கற்பு எனப்படும். அதற்குக் கணவன் கற்பித்த வழியில் மனைவி நிற்றல், கற்போலும் திண்மை சேர் நெஞ்சுடையவளாய் இருத்தல் என்று பொருள் கூறப்படும். தம் பெண்மைத் தன்மையின் இயல்பினை அழியாது காத்துக் கொள்ளுதலும், தம் கணவரைப் பேணி அவர் சொல்வழி ஒழுகுதலும், கணவன் மாட்டும், தம்மாட்டும் அமைதற்குரிய நன்மை நிறைந்த புகழினை நீங்காமல் பாதுகாத்தலும் கற்புடைய பெண்டிரின்

இயல்புகளாகக் கொள்ளப் பெற்றன. உயிரினும் நாணும், நாணினும் கற்பும் சிறந்தனவாகப் போற்றப்பட்டன. 'கணவன் முதலியோர் கற்பித்த நிலையில் திரியாத நல்லொழுக்கம்' என்று நச்சினார்க்கினியரும், 'மகளிர்க்கு மாந்தர் மாட்டு நிகழும் மனநிகழ்ச்சி, அதுவும் மனத்தான் உணரக் கிடந்தது' என்று இளம்பூரணரும் கற்பு என்பதற்கு விளக்கம் அளிப்பர்.[116] கற்பு என்பதனை உள்ளப் புணர்ச்சி என்றும், சடங்கு முறைத் திருமணம் என்றும் தொல்காப்பியத்தின் வாயிலாக அறியலாம். இத்தகைய உள்ளப் புணர்ச்சியை 'எழுதாக்கற்பு' என்று குறுந்தொகை (156) கூறுகிறது. இங்குக் கற்பு என்பது கல்வி எனப்பொருள்படும். கற்பியாத கற்பு-கல்வி எனப்பட்டது. அதனை ஒழுகலாறாகிய கல்வி; நடக்கையினால் அறிவுறுத்தப்பட்ட கல்வி என விளக்கலாம்.

சங்ககாலச் சமுதாயம் மகளிரது கற்பினைத் தெய்வக் கற்பாகப் போற்றிய சமுதாயமாகும். அதனாலேயே ஓர் இளம் பெண்ணின் கற்பைக் கெடுத்த ஆடவனுக்கு ஊர்ச்சான்றோர் தண்டனை அளித்தார்கள்.[117] என்பதால் கற்புக்கு உயர்ந்த மதிப்புக் கொடுத்த காலமென்று உணரலாம். உடன்போன மகளைத் தேடிச் சென்ற செவிலி, இடைச்சுரத்து முக்கோற்பகவரைக் கண்டு என் மகளையும் பிறளொருத்தி மகனையும் கண்டீரோ என வினவினாள். அதற்கு முக்கோற்பகவர், 'அவர்களைக் கண்டேம்' அஃது அறமெனக் கருதி வந்தேம் என்று கூறுமிடத்து, "சந்தனம், முத்து, இசை ஆகியன பிறக்கும் இடத்திற்குப் பயன்தரா" அவற்றின் பயன்பாடு நுகர்வோர்கே உரியது. நின் மகளும் அத்தன்மையளே எனக் கூறி,

"இறந்த கற்பினாட்கு எவ்வம் படரன்மின்
சிறந்தானை வழிபடீஇச் சென்றனள்
அறந்தலைப் பிரியா ஆறுமற் றதுவே"[118]

என்று மகளிரின் கற்பறத்தைச் சிறப்பித்து ஆறுதலுரைப்பதால் மகளிரின் கற்புமாண்பு புலனாகின்றது.

முல்லைமலரை மகளிர் கற்பிற்கு அடையாளமாகச் சூடுவதையும், மகளிர் கற்பிற்கு ஒப்பாக அருந்ததியைக் (வடமீனை) காட்டுவதையும் சங்கப்

பாடல்கள் சுட்டுகின்றன.[119] கற்புச் சிறப்புடைய தலைவி ஒருத்தியைத் தோழி, 'கற்பி மேம்படுவி' என்று விளிப்பதை அகநானூறு (அக.323) கூறுகிறது. கணவனைச் சிறப்பிக்கும் இடத்தில் மனைவியின் கற்புச் சிறப்பினைக் கூறி விளித்தல் மரபாக இருந்துள்ளது. இதனைப் புறநானூறு 'செயிர்தீர் கற்பிற் சேயிழை, கணவ' (புறம 3:6), 'கடவுள் சான்ற கற்பிற் சேயிழை' (புறம் 198:3) என்று கூறுவதால் அறியலாம். கணவன், மனைவியால் அறிமுகப் படுத்தப்படுவதில் சற்று நாணம் கொண்டாலும் அதனையே பெரும் பேறாகவும் கருதுகிறான் என்பதைக் குறுந்தொகை விளம்புகிறது.[120]

மகளிர்தம் கற்பின் ஆற்றலால் மழை பெய்யும் என்பதையும், கணவரைத் தொழுதெழும் மகளிரது கற்புச் சிறப்பால், குறமகளிரின் கணவர், தாம் தொடுத்த அன்பினைக் குறிதப்பாது செலுத்தும் ஆற்றலுடையவராய் விளங்கினர் என்பதையும் கலித்தொகை பகரும். நன்னன் மனைவியைக் கற்பு மிகுதி குறித்துக் கொடியோள் கணவன் (கொடியினையுடையயோள் கணவன்), மங்கையர் கணவன் என்று மலைபடுகடாம் சிறப்பிக்கிறது.[122] கற்புடைய மகளிர் கணவன் தன்னைப் பிரிந்திருக்கும் காலத்து ஒப்பனை செய்து கொள்ளாமலும், மலர் சூடாமலும், அணி அணியாமலும் இருப்பர்.[123] அக்கால மகளிர் தம் கணவரைத் தெய்வமெனக் கருதி ஒழுகி வந்தமையினையும், கற்புடைய மகளிரைச் சமுதாயம் தெய்வமாக மதித்தமையினையும் சங்க காலத்தில் காணமுடிகிறது.

**தீப்பாய்தல்:**

அன்போடு இணைந்த இல்லறத்தில் கணவன் இறந்த நிலையில் மனைவி உயிர்வாழ விரும்பாது. அவனுடலம் எரியும் ஈமத் தீயிடை வீழ்ந்து இறந்துபடுதலைத் 'தீப்பாய்தல்' என்னும் பெயரால் குறிப்பிட்டனர். ஒல்லையூர் தந்த பூதப்பாண்டியன் மனைவி, தன் கணவன் இறந்தபோது சான்றோர் பலர் தடுத்து வேண்டிக் கொண்டதற்கு உடன்படாமல் தீப்பாய்ந்த செய்தியினைப் புறநானூறு (246) காட்டுகின்றது.

தொல்காப்பியர் காஞ்சித் திணைக்கண், தன்னை நீத்த கணவன் உயிரைப் பறித்த வேலினால் மனைவி தன் உயிரை மாய்த்துக் கொண்ட நிலை, கணவனோடு மனைவி இறந்த செலவை நோக்கிச் செல்வோர் கூறிய மூதானந்தநிலை, சுரத்திடைக் கணவனை இழந்து தனியளாய் மனைவி புலம்பும் முதுபாலைநிலை, காதலனை இழந்த காதலியின் தாபதநிலை போன்றவற்றைக் கணவனை இழந்த மனைவியின் வாழ்க்கைநிலை பற்றிய துறைகளாகக் குறிப்பிட்டுள்ளார்.[124]

போர்க்களத்தே கணவன் இறந்துகிடக்கும் கிடக்கை கண்டு மனைவி, அவன் உடலைத் தழுவி அழுது அரற்றி இறப்பதையும், அவன் உடலம் எரியும் சிதையில் பாய்ந்து இறப்பதையும் சங்க நூல்களும், காப்பியங்களும் காட்டுகின்றன இந்நிலைகளைத் தொல்காப்பியம்

"முலையும் முகனும் சேர்த்திக் கொண்டான்
தலையொடு முடிந்த நிலை" எனவும்
"நல்லோள் கணவனொடு நளியழல் புகீ கிச்
சொல்லிடை இட்ட பாலைநிலை" எனவும்

இலக்கணப்படுத்திக் கூறுகின்றது.[125] கணவனை இழந்த மகளிர் தீப்பாய்ந்தமை பற்றிய இதனை, வைதிகச் சமுதாயம் குறிப்பிடும் சதி என்பதனோடு ஒத்துக் காணல் ஒவ்வாது. சங்ககாலத் தீப்பாய்தல் மனைவியின் முழு விருப்பத்தோடு, பிறர் தடுத்தும் தடைப்படாமல் எழுந்த தன்னுணர்வுச் செயலாகும்.

தீப்பாய்ந்தாரைவிட, கைம்மை நோன்பு நோற்றவரே அதிகமாக இருந்துள்ளனர். குழந்தைகளைக் காக்கும் கடமையால் அவர்கள் வாழ்ந்தனர். குழந்தைகளைப் பாதுகாக்க வேண்டிய நிலையில் உள்ள மகளிர் தீப்பாய்தல் கூடாது என விதிக்கப்பட்டது என்பார் எஸ்.கிருஷ்ணசாமி அய்யங்கார்.[126]

1. பொறுக்க முடியாத வருத்த மேலீடு
2. கைம்மையின் கொடுமை
3. சமுதாய மதிப்பின்மை

4. கணவனுடன் மேலுலகம் செல்ல நினைக்கும் சமய நம்பிக்கை

5. ஆதரவற்ற தன்மை

6. சொத்துரிமை இல்லா நிலை

போன்ற பல காரணங்களால் மகளிர் தீப்பாய்ந்திருக்கலாம். இதனையே சிலம்பு 'கணவனை இழந்தோர்க்குக் காட்டுவது இல்' சிலேபு என்று கூறுகிறது. தீப்பாய்ந்தார்க்கு நினைவுக்கல் நிறுவுவதும் உண்டு. பிற்காலத்தில் அக்கல் 'மாஸ்திக்கல்' எனப்பட்டது. 'மகாஸதிக்கல்' என்பதே 'மாஸ்திக்கல்' என மறுவிற்று என்பர்.[127] போர்களத்தில் இறந்துபட்ட தலைவர்க்காகவும் வீரர்க்காகவும் நடுகல் நாட்டுதல் கூறப்பட்டுள்ளது. அம்மரபை ஒட்டியே தம் கணவர் காரணமாக இறக்கும் கற்புடை மகளிர்க்கும் கல் நடுதல் ஏற்பட்டிருக்கலாம். இளங்கோவடிகள் சிலப்பதிகாரத்தில், சேரன் செங்குட்டுவன் கண்ணகிக்குச் சிலையமைத்து நட்டதைக் குறிப்பிட்டுள்ளார்.[128]

சங்ககால மகளிர் தாமே விரும்பி ஏற்க நேர்ந்த கைம்மை தீப்பாய்தல் ஆகியவற்றில் தீப்பாய்தல் காலப்போக்கில் குறைந்து பிற்காலத்தில் அறவே இல்லாது நீங்கியது. ஆனால் கணவன் இறந்த பின்னர்த் தீப்பாய்ந்து உயிர்துறக்கும் மகளிரைத் தெய்வமாகக் கருதிச் 'சதிமாதர்' என்னும் பெயரில் வழிபட்டு வந்த வழக்கத்தின் எச்சத்தினை, வட இந்தியாவில் இன்றும் காணக்கூடும்.

**கைம்மை:**

கணவன் இறந்த பின்னர்க் கடுந்துயரெய்தி மனைவி மேற்கொள்ளும் வாழ்க்கை 'கைம்மை வாழ்வு' எனப்பட்டது. அந்நிலையில் ஏற்படும் உடல், உளத் துன்பங்களைக் கருதியும் சமுதாயம் அன்று அதனைப் போற்றி மதித்தமைக் கருதியும் அந்நிலை நோன்பு என்று சிறப்பிக்கப்பட்டது. பிறரைக் காமுறாமையும், பிறரால் காமுறப்படாமையும் இல்லறம் ஏற்ற கணவன் மனைவி இருவருக்கும் பொதுப்பண்பாயினும் மகளிர்க்கு அது சிறப்புப் பண்பாகப் பெரிதும் போற்றப்பட்டது. கணவன் இறந்த நிலையில் காமுறுதல், காமுறப்படல் ஆகியவற்றிற்கான உணர்வுகள் தம்பால்

தோன்றாமைக்கு உதவும் வகையில் மனைவியர் மேற்கொண்ட செயல்களே கைம்மை நோன்பின் நிகழ்ச்சியாயின. சங்கப் பாடல்களில் காணப்படும் கைம்மை பற்றிய செயல்கள் அக்கால மகளிர் கணவன் இறந்த நிலையில் உணவு, உறைவு, ஒப்பனை போன்றவற்றில் தாமே விரும்பி அமைத்துக் கொண்ட கட்டுப்பாடுகளாகவே உள்ளன. பின், கைம்மை ஒரு கடுமையாகி, அது கணவனை இழந்த பெண் மீது திணிக்கப்பெற்றது. அவர்கள் துன்புறும் அவல நிலையை அறிந்த இக்கால மக்கள், சங்ககாலக் கைம்மையும் அத்தகைய கொடுமையுடையது போலும் என்றெண்ணலாயினர்.

கைம்மை மகளிர் மேற்கொண்ட செயல்களுள், கூந்தல் களைதல், இழை களைதல் ஒப்பனை அகற்றல் போல்வன.[129] பிறரால் விரும்பப்படுதற்குரிய வாய்ப்பினைத் தவிர்த்தலை நோக்கமாகக் கொண்டன. இவை, ஒரு பெண் கணவனை இழந்தவள் என்பதனை உணர்த்தும் குறிகளுமாயின. உப்பின்றி வெந்த வேளைக்கீரை, அல்லி அரிசி, நெய் முதலியன கலவாத எளிய உணவு உட்கொள்ளுதல்[130] போன்றன பாலுணர்வு மிகுதற்கான உடல் வளத்தைக் குறைப்பது கருதி மேற்கொள்ளப்பட்டன. பனிநீராடல் (குளிர்ந்த நீர்), பாசடகு மிசைதல்[131] (இலை உணவு) போன்றன இன்பம் துய்க்க விரும்பும் உணர்வுகள் மீதூராமைக்கு உதவுவனவாகும். இறந்தவரை நினைந்து செய்யப்படும் பிண்டமளிக்கும் செயலால் அவர்கள் மேனிலை உலகில் சிறப்பர் என்னும் சமுதாய நம்பிக்கையால் மகளிர் பிண்டம் அளிக்க இல்லினைச் சார்ந்த ஓரிடத்தைப் பசுவின் சாணத்தால் மெழுகித் தூய்மைப்படுத்தல், தருப்பையிற் பிண்டப் பொருளை இடுதல் போன்றவற்றை மேற்கொள்வராயினர்.[132] கைம்மை நோன்பினர் நூல் நூற்றல்[133] போன்றவற்றை மேற்கொண்டது தனிமையால் தோன்றும் மனத்துயரை மாற்றும் நோக்கத்தில் ஆகலாம் அல்லது எளிய உணவினைத் தாமே முயன்று பெறுதற்கான ஊதியவாயிலாகவும் சிலருக்கு அமையக்கூடும்.

தன் கணவன் இறந்தபோது தீப்புக முயன்ற கோப்பெருந்தேவியைச் சான்றோர் தடுத்து வேண்டிக் கொண்ட போது அவர் கூறிய மறுமொழியை

மேலோட்டமாகப் படித்தால் கைம்மை ஏற்று வாழும் மகளிர் நிலையைக் குறைத்து மதிப்பிட்டதாகத் தோன்றும் கணவன் இறந்த அப்போதே உயிர்விடல், பின்னர்த் தீப்பாய்ந்து உயிர்விடல், கைம்மை நோற்றிருந்து காலம் வந்த போது இறத்தல் ஆகிய அனைத்து நிலைகளிலும் கற்பொழுக்கத்தில் ஏற்றத் தாழ்வில்லை. அவ்வொழுக்கத்தில் ஏற்படும் மனஉணர்வு வெளிப்பாட்டில்தான் வேறுபாடு உள்ளது. அதனால், பூதப்பாண்டியன் மனைவியின் மறுமொழியினைத் தன்னுணர்வுநிலை விளக்கமாகக் கொள்ள வேண்டுமேயன்றி, கைம்மை நோற்று வாழுமவரைக் குறைத்துக் கூறியதாகக் கொள்ளல் ஏற்புடையதன்று.

இவற்றை ஒருங்குவைத்து நோக்கும்போது, சங்க காலத்தில் கைம்மை மகளிர் மேற்கொண்ட கைம்மை வாழ்வு பற்றிய செயல்கள், தம் கணவன்பாற் கொண்டிருந்த அன்பையும், கற்பு நெறியையும் உளங்கொண்டு அம்மகளிரால் தாமே உகந்து ஏற்றுக் கொள்ளப் பட்டவை என்பதனையும், அதனால் அவர்கள் அன்றைய சமுதாயத்தால் தாழ்த்தப்படவில்லை என்பதனையும் உணரலாம். சங்ககால பெண்டிரின் கைம்மை வாழ்வைப் புறநானூற்றுப் பாடல்கள் விவரிக்கின்றன.[134] கணவனை இழந்த மகளிர் மகிழ்ச்சியைத் தோற்றுவிக்கும் இன்பச் சூழலை விரும்பாமல் உணவு, உடை, உறையுள் போன்றவற்றில் வரையறைபடுத்திக் கொண்டு மேற்கொள்ளப்பட்ட கைம்மைநிலை, காலப்போக்கில் கட்டாயமாகத் திணிக்கப்படும் நிலையாக மாறியது.

**தொண்டுள்ளம்:**

மகளிர் அரசவையில் அமைச்சராகவோ, உள்படு கருமத் தலைவராகவோ (அந்தரங்க மந்திரி) இருந்ததற்கான சான்று சங்க இலக்கியங்களில் காணப்படவில்லை. ஆனால், பட்டத்தரசியர் அரசனுக்கு அருகிலேயிருந்து, ஆலோசனைகள் கூறி, ஆட்சி நல்ல முறையில் நடைபெறத் துணைபுரிந்தமையினைக் காணமுடிகிறது. பெண்பாற் புலவராக விளங்கிய ஔவையார், அதியமான், தொண்டைமான் ஆகிய இரு அரசர்களையும் சந்து செய்விக்கும் நோக்கத்தோடு தூதுவராகச் சென்றார்.[135]

தந்தையின் தொழிலுக்குத் துணையாய் நின்ற பரதவப் பெண்டிர்,[136] கணவனுக்குத் துணையாய் நின்று வாழ்க்கைத்தரம் உயரப்பாடுபட்ட ஆய்மகளிர், [137] நானிலங்களில் வாழ்ந்த நானிலப் பெண்டிர்,[138] உமணப் பெண்டிர்[139] ஆகிய அனைவரும் குடும்ப முன்னேற்றத்திற்கும், சமுதாய முன்னேற்றத்திற்கும் வழி வகுத்தனர்.

இல்லற மகளிர், விடியலில் எழுந்து அதிகாலையில் இல்லத்தே செய்யவேண்டிய வீட்டுப்பணிகளை விரும்பிச் செய்வர்[140] மணல் பரவிய முற்றத்தைக் கூட்டுவர். மங்கல நாட்களிலும், விழாக் காலங்களிலும் வீட்டைத் தூய்மை செய்து, சுவரில் செம்மண்பூசி, முற்றத்தில் மணலைப் பரப்பி மாலைகளைத் தொங்கவிட்டு இல்லத்தைக் கோலமுறச் செய்வர்.[141] அந்திக் காலத்தில் நெய்வார்த்து விளக்கினை, இல்லத்தில் ஏற்றி நெல்லும் மலரும் தூவி இறைவனை வழிபடுவர்.[142] அஃறிணை உயிர்களாகிய பறவை, விலங்கு, மரம், செடி, கொடி ஆகியவற்றிடம் இரக்கம் காட்டி அன்போடு வளர்த்தனர்.[143] பண்பாட்டு மரபு சிதையாமல் காத்து வந்தனர். எதிர்காலச் சந்ததியினராகிய குழந்தைகளைப் பாலூட்டிச் சீராட்டிப் பாங்குடன் வளர்த்தனர்.[144] அவர்களைக் கல்வி, கலைகளில் வல்லவராக்கினர்.

பாசறையில் கையில் வாளேந்திப் போர்த் தலைவர்களைக் காவல் காக்கும் பணிப்பெண்களாகவும், விளக்கேற்றுபவராகவும் பணி செய்துள்ளனர்.[145]

**கட்டுப்பாடு:**

பெண், பருவம் எய்தியதும் அவள் தாய், அவளை வெளியில் விடாமல் பாதுகாத்து வந்தாள் என்ற செய்தியை மகட்போக்கிய செவிலித்தாய், நற்றாய் ஆகியோர் கூற்றுக்களின் வாயிலாக அறியலாம்.[146]

மகள் வெளியில் தனித்துச் சென்றாலும், ஆயத்தாருடன் சென்றாலும் செவிலித்தாய் நிழல்போல அவளைத் தொடர்ந்து சென்றாள் என்னும் கருத்தை,

"அல்குபத மிகுத்த கடியுடை வியனகர்ச்
செல்வுழிச் செல்வுழி மெய்ந்நிழல் போலக்
கோதை ஆயமொடு ஓரை தழீஇ"[147]

எனவரும் பகுதி அறிவிக்கின்றது. அவள்பால் மாற்றம் கண்டவிடத்து இற்செறித்து வைப்பாள்.

பெண்ணின் காதலை, மாற்றத்தை உணர்ந்ததும் புறம் போகவிடாது இற்செறித்து (இல்லகத்துள்) வைக்கும் பழக்கத்தைச் சங்கப் பாடல்கள் குறிப்பிடுகின்றன.[148] இவற்றின் வாயிலாக மணமுடிக்கப் பெறாத கன்னியர்க்கு அக்காலத்திருந்த கட்டுப்பாட்டை உணரலாம். மகளிர் தம் காதலை நேரே தம் பெற்றோரிடம் எடுத்துச் சொல்வதில்லை ; காதல் கொண்ட பெண், அதனைத் தன் தோழியிடம் அறத்தொடு நிலைவாயிலாக உணர்த்துவாள். தோழி, செவிலித் தாய்க்கும், செவிலி நற்றாய்க்கும், நற்றாய் தந்தை தன்னையர்க்கும் அறத்தொடு நின்றுணர்த்துவதுதான் முறையாக அக்காலத்தில் கருதப்பட்டது.

மகளிர் மடலேறுதல் சங்ககாலத்தில் அனுமதிக்கப்படவில்லை. தொல்காப்பியரும்,

> "எத்திணை மருங்கினும் மகடூஉ மடன்மேல்
> பொற்புடை நெறிமை இன்மை யான"[149]

எனச் சுட்டியுள்ளார்.

ஓதல், காவல், பொருள், பகை போன்ற காரணங்கட்காகத் தலைவன், தலைவியை விட்டுப் பிரிந்து செல்ல நேரும். அந்நிலையில் கடற்செலவினை மேற்கொள்ள நேருங்கால், தலைவியை உடன் அழைத்துச் செல்லுதல் கூடாது என்னும் கட்டுப்பாட்டினை, "முந்நீர் வழக்கம் மகடூஉவொடு இல்லை"[150] என்று தொல்காப்பியம் விதித்துள்ளது. பாசறைக்குமனைவியை அழைத்துச் செல்லும் வழக்கம் இல்லை. எனினும், புறத்தோராகிய தாதியரையும் பரத்தையரையும் அழைத்துச் செல்லலாம். இதனைத் தொல்காப்பியர், "எண்ணரும் பாசறை பெண்ணொடும் புணரார்" என்றும், "புறத்தோர் ஆங்கண் புணர்வது ஆகும்" என்றும் விதிப்படுத்தியுள்ளார்.[151]

பெண்டிர், பூப்பெய்திய நிலையிலும், மாதவிலக்கின் போதும் தூய்மையற்றவர்களாகக் கருதப்படுவர். அந்த நாட்களில் வீட்டில் ஒதுக்குப்புறமான பகுதியில் அவர்களைத் தனியே இருக்கச் செய்வர். விலக்கு

நாட்களில் அவர்கள் குடும்பத்தினர் யாரையும் தீண்டாமல் தனித் திருப்பர். ஈன்றணிமை நாட்களிலும் தாயையும், சேயையும் அவ்வாறு தனித்திருத்திப் பாதுகாப்பதுண்டு விலக்குக் காலம் கழிந்த பின்னர் நீராடி, மாற்றுடையணிந்து தூய்மையுடன் இல்லத்துள்ளே வருவர். விலக்கு நாட்களில் அவர்கள் வீட்டுப் பண்டங்களைத் தொடாமல் ஒதுங்கி வாழ்ந்தமையால், அந்நிலையில் அவர்கள் "கலந்தொடா மகளிர்" எனக் குறிப்பிடப்பட்டனர்.

"அணங்குடை முருகன் கோட்டத்துக்
கலந்தொடா மகளிரின் இகழ்ந்து நின்றவ்வே"

என்னும் புறநானூற்றுப் பகுதி (புற.299) கலந்தொடா மகளிரைப் பற்றிக் குறிப்பிட்டுள்ளது. அப்புறப்பாடலில் சிற்றரசனின் குதிரைத் தாக்குதலுக்குப் பகைமன்னன் குதிரை பின்னிட்டமையை, முருகன் கோயிலில் விலக்கெய்திய மகளிர் பாண்டங்களைத் தொடப் பின்வாங்குதலை உவமையாகப் பொன்முடியார் கூறியுள்ளார்.

சமூகத்தில் மதிப்புக் குறைவேயெனினும், சமுதாயத்தில் செல்வாக்குப் பெற்றவர்களாகப் பரத்தைப் பெண்டிர் இருந்துள்ளனர். தலைவி மற்றும் தோழியர் பரத்தையை இழந்துரைக்கும் செய்திகளைச் சங்கப் பாடல்களில் அதிகமாகக் காணலாம். பரத்தை, மகவீன்று புரந்ததாகக் கூறும் சங்க இலக்கியச் சான்று இல்லை. ஓர் ஆடவன், பரத்தையைத் தன் மனைவி வாழும் மனைக்குட் கொண்டு வந்து வாழச்செய்ய, அவள் மகப்பேறு எய்தினாலும் அவள் கற்பு நலஞ் சான்ற மனைவியோடு ஒருங்கு மதிக்கப்பட்டாள் என்பதையும், அவட்குப் பிறந்த மக்கள் தலைவன் குடியுரிமை பெறமாட்டார் என்பதையும், வாயில் மறுக்கும் தோழி கூற்றில் அமைத்து ஆலங்குடி வங்கனார் நற்றிணையில் (நற். 330) கூறியிருப்பது குறிப்பிடத்தக்கதாகும். பண்பட்ட சமுதாயத்திலும், பரத்தையர் என ஒரு பிரிவு தோன்றுவதற்கான காரணங்களுள், பெண்களுக்குச் சொத்துரிமை இல்லாதிருந்தமை சுட்டிக் கூறத்தக்க ஒரு காரணமாக அமைந்தது.

சங்ககாலச் சமுதாயம் மகளிர்க்குப் பல சமூகக் கட்டுப்பாடுகளை விதித்திருந்தது. அக்கட்டுப்பாடுகளால் அவர்கள் சுதந்திரமாக இயங்க முடியாத நிலையும் இருந்தது. மணமாகாக் குமரியர், இல்லற மகளிர், கைம்மை மகளிர் பரத்தையர் போன்றோர்க்கு அக்காலச் சமூகம் விதித்திருந்த கட்டுப்பாடுகள் குறித்து ஆராய்வது அக்கால மகளிர் நிலை அறிதற்கு உதவியாக அமையும். இனி சங்க இலக்கியத்தில் இடம் பெறும் மகளிரைப் பற்றி விளக்குவதன் வழி அக்கால மகளிரின் மாண்பினை வெளிக்கொணற முற்படுவோம்.

**நற்றாய்:**

நற்றாய் தலைவியின் வாழ்க்கைநிலை செம்மையுற அமைய வேண்டும் என்பதில் மிகுந்த ஆர்வமும், கவலையும் கொண்டவளாக விளங்குகிறாள். சங்க அகப்பாடல்களில் வரும் நற்றாய், தலைவியை ஈன்றெடுத்த தாயாவள். நற்றாய் தன் கண்ணைக் காட்டிலும் மிகுந்த அன்பும், பற்றும் மகளிடத்துக் கொண்டவள்.

உடன் போக்கில் புலம்புவது கொண்டு மகள்மீது கொண்ட அன்பை அறியலாம் நிமித்தம் பார்த்தல், தெய்வம் உரைத்தல் போன்றவற்றால் பழைய சமூக நம்பிக்கை மரபுகளுக்குக் கட்டுப்பட்டவள் என்பதனை உணரலாம். தோழியிடமும், கண்டோரிடமும் மகள் பற்றிக் கூறிப் புலம்புவதால் அறிவைவிட உணர்வுகட்கு மிகுதியும் ஆட்படுபவள் நற்றாய் என்பது புலனாகின்றது. இவள் தலைவியோடும், தலைவனோடும் கூற்று நிகழ்த்தல் இல்லை என்பதைத் தொல்காப்பியர்,

> "கிழவன் தன்னோடும் கிழத்தி தன்னோடும்
> நற்றாய் கூறல் முற்றத் தோன்றாது"[152]

எனக் குறிப்பர்.

தந்தை, தன்னையரிடத்து நேரடித் தொடர்பு கொள்பவள் நற்றாயே என்பதால் சமூகத்தில் அவள் பெற்றிருந்த மதிப்பும், குடும்பத்தில் பெற்றிருந்த பொறுப்பான தகுநிலையும் புலப்படும். இதனால் நற்றாயின் பண்புநலனில் பாசம், கடமை, போராட்டம் ஆகிய உணர்வுகள் எப்போதும்

உண்டு என அறிய முடிகிறது. இவள் தன் மகளைப் பற்றி அலர் எழும்போது கடுஞ்சினம் கொள்வாள்; எவ்வகையாலும் அம்பலையோ, அலரையோ விரும்பமாட்டாள்.[153]

அந்நிலையில் நற்றாய் தன் மகளை இற்செறிப்புச் செய்கிறாள். தகுந்த துணையோடு வெளியே அனுப்பி வைக்கிறாள். உடம்பு வேறுபாடு கண்டவழி அதனை நோயாகக் கருதிக் கட்டினும், கழங்கினும் அறிந்து கொள்ள முறப்படுகிறாள். வேலனைக் கொண்டு வெறியாட்டு எடுக்கிறாள்.[154] நற்றாய் தன் மகளின் களவொழுக்கத்தைக் கேள்வியுற்றதும் அவ்வொழுக்கத்தின் போக்கையும், தன் மகள் விரும்பிய தலைவனின் பொருத்ததையும் தன் தோழியாகிய செவிலியோடு ஆராய்வாள்.[155] தொல்காப்பியர்,

களவில் செவிலிக்கு உரியனவாகக் கூறப்பெறும் பதின்மூன்று கூற்றுக்களும், நற்றாய் செவிலி உணர்வோடு உடம்பட்ட உள்ளத்தளாயிருத்தலின் நற்றாய்க்கும் உரியவை என்பதைத் தொல்காப்பியர் "தாய்க்கும் வரையார் உணர்வு உடம்படினே" எனக் கூறுவதால் அறியலாம்.[156] தலைவியின் களவொழுக்கத்தை நற்றாய் நேரே வினவி அறியும் தன்மையள் அல்லள்; ஐயுற்று அறிவாள்; அல்லது செவிலியால் உணர்ந்தப் பட்டு அறிவாள். இதனைத் "தாய் அறிவுறுதல் செவிலியோடு ஒக்கும்" என்பார் தொல்காப்பியர்[157] தலைவியின் நடத்தையில் காணும் ஒரு சிறு வேறுபாடும். அவளை ஐயுறத் தூண்டும் செவிலியை அது குறித்து வினவவும் செய்வாள். செவிலி முன்னிலை மொழியால் அறந்தொடு நின்று, உற்றதுணை அவளுக்கு உரைப்பாள். அதுகேட்ட நற்றாய், தன் மகளை அவனுக்கே மணம் முடிக்க அல்லது வேற்று வரைவிற்கு ஏற்பாடு செய்ய அல்லது இற்செறிப்புச் செய்ய முயல்வாள். உடன்போக்கில் செல்வதற்குக் காரணமாக அமைந்த சூழல்களாகத் தாயைப் பற்றிய அச்சம், தாயின் ஐயம் பற்றிய உணர்வு, மகளைக் காக்கும் தாயின் காவல், தாய் கடிந்துரைத்தலும் அலைத்தலும் ஆகியன அமையும் என்று குளோறியா சுந்தரமதி குறிப்பிட்டுள்ளார்.[158]

தலைவி உடன்போக்கில் சென்றபொழுது தோழியுடனும், கண்டோர் மாட்டும் நற்றாய் புலம்பிக் கூறுவதனை,

"தோழி தேஎத்தும் கண்டோர் பாங்கினும்
போகிய திறத்து நற்றாய் புலம்பலும்
ஆகிய கிளவியும் அவ்வழி உரிய"[159]

எனத் தொல்காப்பியர் குறிப்பிடுவது கொண்டு அவளது உளப்பாங்கினை நன்குணர்தல் கூடும். மகட்போக்கியவழித் தாயிரங்கிக் கூறும் பத்துப்பாடல்கள் ஐங்குறுநூற்றில் இடம் பெற்றுள்ளன. தலைவி, தலைவனுடன் உடன்போக்கில் சென்றபின் தோழியின் அறத்தொடு நிற்றலால் உண்மையை அறிந்த நற்றாய் நம் மனையிலேயே மனம் முடித்திருக்கலாம். இவ்வாறு சென்றதால் அவளுக்கும், அந்நம்பிக்கும், ஆயமகளிர்க்கும், நமக்கும் துன்பமாக முடிந்தது என்று கூறுகிறாள்.[160]

உடன் போக்கில் சென்ற மகள், தலைவனுடன் வருவாள் எனக் கருதி நற்றாய் அவளை வரவேற்கும் விருப்புடன் இல்லத்துச் சுவரில் செம்மண்பூசி, மனைமுற்றத்தே மணல் பெய்து, மாலைகளைத் தொங்கவிட்டு வீட்டை அழகுபடுத்துவாள் உடன்போக்குச் சென்ற நெறியிலுள்ள சிற்றூர்க்கு அவர்களுக்கு முன்னே சென்று வரும் விருந்தாக அவளை ஏற்று உண்பித்து வேண்டிய உதவிகள் செய்தனுப்ப எண்ணுவாள்.[161]

தன்மகள் அறநெறி இதுவென உணர்ந்து உடன்போக்கினை மேற்கொண்டமைக்கு மகிழ்ந்து அவள் சென்ற பாலைநிலம் மழை பொழிந்து குளிர்வதாக என்று தெய்வத்தைப் பரவுவாள்.[162] சிலம்பு கழிநோன்பு இல்லத்தில் நிகழாமல் வேற்று மனையில் நிகழ்ந்ததற்காக வருந்துவாள்.[163] தன் மகள் பழகிய பாவை, பூவை, பைங்கிளி, பந்து, கழங்கு, வயலை முதலிய விளையாட்டுப் பொருட்களைப் பார்க்கும் பொழுதெல்லாம் நற்றாய் கலங்கி வருந்துவாள்.[164]

தலைவியின் கற்பு வாழ்க்கையில், நற்றாய் தலைவியின் மனைக்குச் சென்று வந்ததாகக் குறிப்பு காணப்படவில்லை. நற்றாயின் செயல் களவில் மிகுதியும் காணப்படுகிறது. களவிலும், கற்பிலும் செவிலி ஆற்றும் பணியே மிகுதியானதாகும்.

**செவிலி:**

செவிலி என்பவள் தலைவியின் வளர்ப்புத் தாயாவாள். தலைவி பிறந்தநாள் தொட்டு அவளைச் சிறப்பாகப் போற்றி வளர்த்து வருபவளும் தலைவியின் தோழியை ஈன்ற தாயுமாவாள்.

செவிலி, ஈன்றாத்தாய் (அக.105:6) என்று சிறப்பிக்கப்படுகிறாள். தலைவியின் தோழி, அத்தலைவியின் கற்பு வாழ்வில் பிறக்கும் மகளுக்குச் செவிலி ஆவள். தோழி, தலைவியைத் தோழி என்று விளிப்பாள். தலைவியொடு தோழி எத்தகைய நட்பும், நெருக்கமும் உடையவளாக விளங்குகிறாளோ அத்தகைய நட்பும் நெருக்கமும் உடையவளாக நற்றாயொடு செவிலி விளங்குவாள் என்றுக் கூறியுள்ளார்.[165] செவிலி, தலைவியின் குடும்பத்துடன் மிக நெருக்கமான தொடர்பு கொண்டவள். இவள் பொருளிற்காகப் பணிசெய்யும் பணிமகள் போலின்றிக் குடும்பத்தில் மேம்பாடான நிலையில் இருந்து தலைவியை வளர்ப்பதில் அன்புணர்வும், கடமையுணர்வும் கொண்டு செயற்பட்டாள். நற்றாய் தலைவியைத் தழுவியதாகவோ, அவளுடன் உறங்கியதாகவோ சான்றுகளில்லை. ஆனால் செவிலி தலைவியின் பக்கத்தில் உறங்கியதாகவும், அவளைத் தழுவியதாகவும் சான்றுகள் உள்ளன.[166] செவிலியின் மகளாகவே தலைவி கூறப்படுகிறாள்.[167]

தலைவிக்கு உணவூட்டும் செயலைச் செவிலி தன் கடமைகளில் ஒன்றாகப் பெற்றிருந்தாள்.[168] தலைவியைப் பிரம்பால் அடிக்கும் உரிமையும் தலைவியை வளர்ப்பதில் நற்றாய்க்குச் சமமான தகுதியையும் செவிலி பெற்றிருந்தாள்.[169] செவிலிக்குரிய கடமைகளைத் தொல்காப்பியர் வரையறைப்படுத்தியுள்ளார்.[170] செவிலியின் கணவனைப் பற்றியோ அவள் வாழ்க்கை பற்றியோ வேறு எந்தக் குறிப்பும் கிடைக்கவில்லை. தலைவி, தோழி ஆகிய இருவருக்கும் நற்றாயைவிடச் செவிலியிடம் நெருக்கமான உறவு அமைந்திருந்தது. தலைவி, தோழியின் மூலமாகவே தன் எண்ணங்களைச் செவிலிக்குத் தெரிவிப்பாள். தோழி, செவியியிடம் பேசியதாகப் பல பாடல்கள் காணப்படுகின்றன.[171]

களவு நெறியில் 13 கூற்றுக்களைச் செவிலிக்குரியனவாகத் தொல்காப்பியர் கூறியுள்ளார்.[172] அக்கூற்றுக்களின் வாயிலாகச் செவிலியின் பணிகளை அறியலாம்.

தலைவியின் காதல், சமூகக்கட்டு, நற்றாய்-தந்தையரின் எதிர்பார்ப்பு ஆகிய நிலைகளை இணைக்கும் பாலமாகச் செவிலி விளங்குகிறாள். தலைவி உடன்போக்கிற் சென்றவிடத்துச் செவிலி வருந்திக் கூறுமிடங்களிலெல்லாம் தலைவியின் மென்மைத் தன்மையையும், சுரத்தின் கடுமைமையயும் நினைந்து வருந்துவதாகப் பாடல்கள் அமைந்துள்ளன.[173] அவற்றால் தலைவியைப் பழியொடுபடாத நிலையில் காத்தல், நன்னெறியில் மேவும் காதற்கூட்டத்தை ஏற்றல், அவள் களவை நற்றாய்க்கு உரைத்துப் போற்றல், உடன்போக்கில் தேடி அலைதல், தலைவியின் வரைவிற்கு ஆவன செய்தல் போன்ற பணிகள் தலைவியின் களவு நெறியில் செவிலி மேற்கொள்ளும் பொறுப்புக்களாகும் என்பதனை உணரலாம்.

தலைவி, தலைவனை மணம்புரிந்து வாழும் கற்புவாழ்க்கையில் செவிலி தலைவியின் மனைக்குச் செல்கின்றாள். அவ்விருவரும் இன்புற்று வாழ்கின்ற நல்வாழ்க்கையைக் காண்கிறார், அவ்விடத்தே தன் நெஞ்சும், கண்ணும் குளிரக் கண்ட காட்சிகளை நற்றாய்க்குக் கூறி அவளை மகிழ்விக்கின்றாள்.

**தலைவி:**

தலைவி, அகத்திணை மாந்தர்களுள் இன்றியமையாத பாத்திரமாக விளங்குகிறாள். தோழி வாயிலாகவே தலைவி தன் எண்ணங்களைத் தெரிவிக்கிறாள். குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை ஆகிய ஐந்திணைகளின் உரிப்பொருட்களாகிய புணர்தல், இருத்தல், ஊடல், இரங்கல், பிரிதல் ஆகிய ஐந்து ஒழுக்கங்களும் தலைவியை மையமாகக் கொண்டவையாகும். தலைவி திருமணத்திற்கு முன்பும் (களவு), திருமணத்திற்குப் பின்பும் (கற்பு), தன் வாழ்க்கை நிலையில் தனித்த பல பண்புகளைக் கொண்டு திகழ்கிறாள்.

தலைவியின் பிறப்பைப் பற்றித் தெளிவாகக் குறிப்பிடும் சங்கப்பாடல் எதுவும் இல்லை. தனக்குப் பெண் குழந்தை பிறக்க வேண்டும் என விரும்பிய ஒரு குன்றக்குறவன் முருக்கக் கடவுளை வழிபட்டு, வரமிருந்து அவனருளால் ஒரு மகளைப் பெற்றதாக ஐங்குறுநூறு (ஐங்.257) சுட்டுகின்றது. தலைவியின் இளமைப் பருவத்தில் அவள் உடல்நலம் பேணுபவள் செவிலியாகவும் உள நலத்தைப் போற்றிக் காப்பவள் தோழியாகவும் அமைகின்றனர். தலைவி சிறுமியாக இருந்த பொழுது மிகவும் செல்லமாக வளர்க்கப்பெற்றாள்.[174] தலைவி அதிக நேரம் விளையாடியதைப் பொறுக்க முடியாத தாய் விளையாட்டினிடையிலேயே ஒரு கிண்ணத்தில் பால் கொணர்ந்து அவளை அருந்த வேண்டுகிறாள். 'எனக்காகச் சிறிது குடித்தாய் ; உன் தந்தையின் பகுதிக்காகச் சிறிது குடிப்பாயாக'[175] என்று கூறி அருந்தச் செய்கிறாள். இங்ஙனம் பிறந்த நாள் தொட்டும் பல சிறப்புக்களைச் செய்து நலம் பாராட்டித் தாய் தலைவியை வளர்க்கிறாள்.

தலைவி பருவம் எய்துமுன் இல்லின் புறத்தே சென்று மலர் கொய்தல், நீராடல் போன்றவற்றில் ஈடுபடுவாள். தாயின் கருத்திற்கேற்பத் தினைப்புனம் சென்று தினைப்புனக்காவல் புரிவதும் உண்டு.

களவு வாழ்வில் தலைவன், தலைவி இருவருமே தொடர்புடையரெனினும் தூற்றப்படுபவள் தலைவி மட்டுமே ஆவள் ; தலைவனைத் தூற்றுவோர் இல்லை. அலர் மொழிந்து தூற்றுபவரும் மகளிரே ; தூற்றப்படுபவரும் மகளிரே. களவில் அலரைப் பொறுத்தவரை அது மகளிர்க்குரிய ஒன்றாகவே காணப்படுகிறது. களவில் தலைவன் வரத் தடைபல தோன்றும் வாய்ப்புண்மையாலும் (நாய் துஞ்சாமை, ஊர் துஞ்சாமை, நிலவு வெளிப்பாடு, அன்னை உறங்காமை, காவலர் கடுகுதல் போன்றன), தாய் அறியும் வாய்ப்பு ஏற்படுவதாலும், இற்செறிப்பு நிகழ்வதாலும் தலைவி, தோழி இருவராலும், அலர் வெறுக்கப்படுகிறது. மேலும் இன்னாருடைய மகள் என்று சமுதாயம் பழிக்கும் நிலைக்கு அஞ்சியும் வெறுக்கப்படுகிறது.

களவில் தலைவனின் பிரிவு, அவன் விரைவில் வரையாமை, அவன் வரும் வழியச்சம், ஊரவர் தூற்றும் அலர், தினை முதிர்ச்சி போன்றவற்றால் நேரும் இற்செறிப்பு, தாய் நிகழ்த்தும் வெறியாட்டு, வேற்றுவரைவு முதலியன தலைவியின் துன்பத்திற்குக் காரணங்களாகின்றன. மணந்துவாழும் கற்பு வாழக்கையில் தலைவி, கணவனின் கருத்துப்படி நடந்து தன் அன்பையும், பண்புகளையும் வெளிப்படுத்துகிறாள். தலைவனது கொள்கைக்கேற்பக் குறிக்கோளுடன் வாழ்க்கை நடத்துகிறாள். இதனால் தலைவன் தலைவியர் ஒருவர், மற்றொருவர் மாட்டுக் கொள்ளும் அன்பு செம்புலப் பெயல்நீர் போலவும், காரோடன் பயினொடு சேர்த்த கல் போலவும் இணைந்து வருகின்றது. தலைவன் ஓதல், காவல், தூது, பொருள் தேடல் போன்றவற்றின் பொருட்டுப் பிரிந்து செல்லுங்கால் தலைவி அவன் திரும்பிவரும்வரை பொறுமையுடன் ஆற்றியிருப்பாள். தலைவி திருமண வாழ்க்கைக்கு முன்பே கற்பு வாழ்க்கையை மேற்கொண்டு வாழ்கிறாள். உள்ளத்தில் தலைவனைத் தவிர வேறுயாரையும் நினைப்பதில்லை. அவனையே விரும்பி மணம் முடித்தலைக் காண்கிறோம். மாறாக வேறொருவனை மணந்தாள் என்றோ, வேற்று ஆடவனை விரும்பினாள் என்றோ, மடலேறினாள் என்றோ, இறந்தாள் என்றோ குறிப்புக்கள் காணப்படவில்லை. இதனால் தலைவியின் உயர்குணம் புலனாகின்றது. நோக்க அடிப்படையில், தலைவியின் கூற்றுக்களை, 1. தலைவி, தோழிக்கு அறத்தொடு நிற்றலும், உடன்போக்கு கொள்ளுதலும் ; 2. தலைவன் சிறைப்புறமாக இருக்க, தலைவி வெளியிடும் மன உணர்வுகள் ; 3. தலைவி கொள்ளும் பிரிவுத்துயர் 4. தலைவனின் பரத்தையிற் பிரிவில் தலைவி கொள்ளும் மனநிலை ஆகிய நான்கு வகைகளாக ஆ.இராமகிருட்டிணன் பகுத்துக் காண்பர்.[176]

**தோழி:**

அகத்திணை மாந்தர்களுள் தோழிக்குத் தனிச்சிறப்பிடம் உண்டு களவு, கற்பு ஆகிய இரு நிலைகளிலும் பெரும் பங்கு வகிக்கும் இவள் தலைவியொடு ஒன்றுபட்ட உள்ளத்தினள்.

"யாமே பிரிவின் றியைந்த துவரா நட்பின்

இருதலைப் புள்ளின் ஒருயிர் அம்மே"[177]

என்னும் தோழியின் கூற்றால் இதனை அறியலாம். தலைவியும் தோழியும் உயிர்பகுத்தன்ன மாண்பினர் ; உயிர் ஒரன்ன செயிர்தீர் நட்பினர்; இன்னுயிரன்னர்; சிறு வயதிலிருந்தே உடன்விளையாடும் நட்புச் சிறப்பினர். தலைவி செல்லுமிடமெல்லாம் தோழி நிழலெனத் தொடர்பவள். தலைவியை மகள் என்று உரிமை பாராட்டும் அளவிற்குத் தாய்மைப்பாசம் கொண்டவள்.[178] இவள் செவிலியின் மகள் என்பதைத் "தோழிதானே செவிலி மகளே"[179] என்று தொல்காப்பியம் கூறுகிறது. தோழியின் பிறப்பு, திருமணம், வாழ்க்கை குறித்து வேறு செய்திகள் காணமுடியவில்லை. இலக்கியங்களில் இவள் தலைவிக்காகப் படைக்கப்பட்ட பாத்திரமாகவே காணப்படுகிறாள். தலைவியின் விளையாட்டுப் பருவத்திலிருந்து அவள் மகப்பேறு பெற்ற நிலையில் செவிலியாக மாறும்வரை தன் தலைவிக்காகவே வாழ்கிறாள். தலைவிக்குத் துணையாக அமையும் துணைப்பாத்திரத்தைக் குறிப்பிடத் தோழி, இகுளை, பாங்கி, சிலதி, இணங்கி துணைவி, சேடி, சகி என்னும் சொற்கள் பல்வேறு காலநிலைகளில் தோன்றி உலகியல் வழக்கிலும், செய்யுள் வழக்கிலும் வழக்காற்றில் உள்ளன. தோழியின் அறிவுச் சிறப்புக் கூறப்படும் அளவிற்கு அழகுச் சிறப்புக் கூறப்படுவதில்லை.

தலைவன் தலைவியரிடையே உறவை வளர்த்தல், களவைக் கற்பாக்கச் செவிலியிடம் உரையாடுதல் போன்றவை தோழி கூற்றுக்களின் மையக் கருத்தாக அமைகின்றன. தலைவியின் களவு நெறியில் தோழி கூற்றுக் களங்களாக 32 கிளவிகளையும், அவளது கற்பு நெறியில் கூற்றுக் களங்களாக 19 கிளவிகளையும் தொல்காப்பியர் கூறியுள்ளார்.[180]

அகத்திணை இலக்கியத்தே தோழி வரம்பற்ற உரிமை உடையவள்; தலைவியின் உரிமையையும், செயலையும் தன் உரிமையும் செயலுமாகக் கொள்ளும் உறவுடையவள்.[181] தலைவி, தோழி இருவரும் தலைவனை 'நம் காதலர்' எனவும் 'நம் களவு' எனவும் உளப்பாட்டுத் தன்மைப் பன்மையில்

பேசிக்கொள்வர்.[182] குறியிடம் கூறுதல், உடன்போக்கு, செலவழுங்குவித்தல், வாயில் மறுத்தல் முதலிய இடங்களில் தோழி தானாகவே செயலாற்றும் உரிமை உடையவள். தலைவியிடம் கேளாமல் தோழி, தலைவனுக்குக் குறைநேர்வாள்.[183] தலைவனைச் சேரிக்குள்ளும், தெருவிற்குள்ளும் வரவிடாமல் தடுப்பாள். தலைவனின் நண்பரான பாணனையும், விறலியையும் வாயில் மறுப்பதோடு கடிந்தும் உரைப்பாள்.[184] உலகியல் அறிவுடைய தோழி, தலைவன், தலைவி இருவரையும் கடிந்துரைப்பாள். தலைவி காதலைச் செவிலிக்கும், அவள் மூலமாக நற்றாய்க்கும் உண்மையுரைக்கும் கடமையுணர்ச்சி உடையவள். தலைவியின் களவு குறித்து ஊரார் பேசும் அலரைச் செவிமடுத்துத் தலைவனை விரைவில் வரையவேண்டி உணர்த்தும் திறம் கொண்டவள். களவில் துணை நிற்பது போலக் கற்பிலும் உடனிருந்து உதவிசெய்யும் பான்மையள். தலைவனைப் பிரிந்து வருந்தும் தலைவியைத் தோழி பல்லாற்றானும் தேற்றும் திறமுடையவள். எத்தகைய சூழ்நிலையிலும் தோழி உற்சாகமாகவே செயற்படுகிறாள்.

தோழி அனைவருடனும் உரையாடுகிறாள். தலைவன், தலைவி, செவிலி ஆகியோரிடம் திறமையாக நடந்துகொள்கிறாள். பொறுமையோடு தன்னம்பிக்கை உடையவளாகக் காணப்படுகிறாள். தலைவியின் பொருட்டாக விருப்பத்துடனும், ஆர்வத்துடனும் செயல்படுகிறாள். குறி, இடையீடு, வரைவு நீட்டித்தல், பிரிவுக்காலம் முதலான சூழ்நிலைகளில் ஏமாற்றங்களையும் இடர்களையும் தக்க முறையில் எதிரேற்றுத் திகழ்கிறாள். எனவே, தோழியின் ஆளுமைப் பண்பு சிறந்ததாய் அமைகிறது .

இயற்கைப் புணர்ச்சி, இடந்தலைப்பாடு, பாங்கற்கூட்டம் என்னும் மூன்று நிலைகளில் தலைவியைக் கூடிய தலைவன், நான்காவது நிலையாகத் தோழியின் உதவியை நாடுகிறான். இதனைப் 'பாங்கியிற் கூட்டம்' என வழங்குவர். தலைவன், தலைவி நட்புறவைக் குறையுற உணர்தல், முன்னுற உணர்தல், இருவரும் உள்வழி அவன் வர உணர்தல் ஆகிய முறையினால் தோழி அறிகிறாள்.[185] தலைவன், தோழியிடம் களவை நீட்டிக்கக்

குறையிரந்து நிற்பான். தலைவியின் இசைவு குறை நேர்தல் எனப்படும். தோழி துணையாக இருந்து குறைநயப்பிப்பாள். தலைவியின்பால் அமையும் புதிய பூமணம், உள் ஒன்றுகொள்ள நோக்கும் கண், மார்பு, தோள் ஆகியவற்றில் காணப்படும் பூரிப்பு, பிள்ளைமை நீங்கிப் பெண்மை கொண்டொழுகும் இயல்பு, ஆயம் விடுத்துத் தனித்து நிற்கும் மனப்போக்கு ஆகிய புதிய மாற்றங்களால் தலைவியின் களவைத் தோழி அறிகிறாள். இக்களவை அறியத் தோழி இரண்டு உத்திகளைக் கையாளுகிறாள். ஒன்று தலைவனோடு தான் களவுத் தொடர்பு கொண்டவள் போலத் தலைவியிடம் நடித்தல் ; மற்றொன்று தலைவனிடம் தலைவியை அரியளாகக் காட்டுதல்; இவ்வகையில் தலைவியை மிக்கிளம் பருவத்தளாகக் காட்டுதல்; தலைவன் உயர்குடியைச் சார்ந்தவனாகக் கூறி விலக்குதல், கையுறை மறுத்தல், தமரால் தோன்றும் ஏதம் சுட்டுதல் ஆகியவற்றால் தலைவியை அரியளாகக் காட்டித் தலைவனின் அன்பைத் தோழி ஆராய்வாள்.

தலைவிக்கு நேரும் இற்செறிப்பு, நொதுமலர்வரைவு, வரும் வழியருமை அச்சம் போலும் இடர்ப்பாட்டுச் சூழலை விளக்கி விரைவில் மணம் முடிக்குமாறு தோழி, தலைவனை வேண்டுதல் 'வரைவுகடாதல்' எனப்படும். இது வெளிப்பட வரைவு கடாதல், குறிப்பினால் வரைவுகடாதல் என இருவகைப்படும். களவைக் கற்பாக்கத் தோழி மேற்கொள்ளும் இம்முயற்சியைத் தொல்காப்பியர் விளக்கியுள்ளார்.[186]

தொல்காப்பியர் கற்பில் தோழிக்குரிய கூற்றாகப் பத்தொன்பது கிளிவிகளைக் கூறியுள்ளார். தலைவன் கற்பு வாழ்க்கையில் ஓதல், பகை, தூது, பொருள் போலும் காரணங்களால் தலைவியைப் பிரிந்து செல்வான். அத்தகுத் துன்பமான சூழ்நிலையில் ஆற்றாது வருந்தும் தலைவியைத் தோழி ஆறுதல் கூறித் தேற்றுவாள். பரத்தையிற் பிரிவு பற்றிய பாடல்கள் அனைத்தும் தலைவி கொள்ளும் ஊடல் நிலைகளைப் புலப்படுத்துகின்றனவேயன்றி அவளது துயரைப் புலப்படுத்துவனவாக அமையவில்லை. தோழியின் நோக்கம் களவில் தலைவியைத் தேற்றுவது

மட்டுமன்று; தலைவனை வரைந்து கொள்ளத் தூண்டுவதும் அவளது நோக்கமாகும். ஆதலின் தலைவனைத் தோழி இயற்பழித்துப் பேசுவாள். கற்பில் பிரிவு நீட்டிப்பை ஆற்றாத தலைவியைத் தேற்றுவதே நோக்கம். இச்சூழலில் தலைவனைப் பழிப்பது தலைவியின் ஆற்றாமையை மிகுவிக்கும். நம்பிக்கை அளித்து ஆறுதலை ஊட்டுவது தோழியின் கடமையாகிறது. ஆகையால் ஒவ்வொரு நிலையிலும் தோழி, தலைவனைப் புகழ்ந்தும், தலைவியிடம் நம்பிக்கை தோன்றுமாறும் உரைப்பாள். தோழி தலைவியின் மன உணர்வினையும், தலைவனின் புறத்தொழுக்க ஈடுபாட்டையும் மனத்திற்கொண்டு வாயில் மறுத்தல் அல்லது வாயில் நேர்தல் என்ற செயலை மேற்கொள்வாள்.

தலைவியின் களவு வாழ்விலும், கற்பு வாழ்விலும் தோழி இன்றியமையாத இடத்தைப் பெறுகிறாள். தலைவியின் மன ஓட்டங்களை, எண்ணங்களைப் பிரதிபலிக்கும் கண்ணாடியாகவும் தோழி விளங்குகிறாள்.

**பரத்தை:**

தலைவன், தலைவி, தோழி ஆகியோர் எல்லாத் திணைகட்கும் உரியவராக விளங்கப் பரத்தை மட்டும் மருதத்திணைக்கேயுரியவளாக உள்ளாள். பரத்தையர் காரணமாகப் பிரியும் தலைவன்பால், தலைவி ஊடல் கொள்வது, மருதத்திணையின் ஒழுக்கமாகத் தொல்காப்பியம் கூறுகிறது.[187] சங்க அகப்பாடல்களில் மருதத்திணைப் பாடல்கள் அனைத்தும் தலைவனின் பரத்தையிற் பிரிவு பற்றியும், அதன் காரணமாக ஏற்படும் தலைவியின் ஊடல் பற்றியுமே விளக்குகின்றன. 'வரைவு' என்பது திருமணத்தைக் குறிக்கும் சொல்லாகும். வரைவு என்ற ஒன்று இல்லாது ஆடவரோடு இணைந்து வாழும் மகளிரை 'வரைவில் மகளிர்' (வரைவு+இல்+மகளிர்) எனலாம். தலைவனின் புறத்தொழுக்கம் பரத்தமை, பரத்தைமை என்று கூறப்பட்டுள்ளது.[188]

"பாணன் கூத்தன் விறலி பரத்தை
யாணம் சான்ற அறிவர் கண்டோர்" [189]

எனும் நூற்பாப்பகுதி, பரத்தையைக் கற்பு வாழ்க்கையில் கூற்றுக்கு உரியவளாகக் கூறுகிறது.

பரத்தையர் ஆடல், பாடல் கலைகளில் வல்லோராய் வாழ்ந்துள்ளனர். இவர்கள் தலைவன் துணங்கையாடுங்கால் கைகொடுப்போராயும், நீராட்டின் போது துணையாகின்றவர்களாயும், பூம்பொழில் விளையாட்டின் போது கலந்து உறவாடுகின்றவர்களாயும், தலைவனோடு வதுவை அயர்ந்து துணையாகின்றவர்களாயும் காணப்படுகின்றனர். திருமணத்திற்குப் பின்னரே தலைவன் பரத்தையரை நாடி வருகிறான். தலைவி வயிறு வாய்த்த நிலையும் (கருவுற்ற நிலை) மகப்பேற்றால் தலைவி இளமைநலம் இழந்தாளாகத் தலைவன் கருதிய நிலையும் பரத்தையர் பிரிவுக்குரிய காரணங்களாகும். நடைமுறை வாழ்வில் பரத்தையர் வயிறு வாய்க்கப்பெற்று, மகப்பேறு எய்துவது உண்டாயினும், அகப்பாடல் மரபில் அவ்வாறு நிகழ்ந்ததாக யாண்டும் காட்டப்பெறவில்லை. இஃதுமொரு சங்க அகப்பாடற் புலனெறிவழக்கமாக உள்ளது. பரத்தையர் எப்பொழுதும் இளமைநலம் குன்றாமல் அழகுச் சிறப்பால் செருக்குற்றிருந்தவர்களாகவே காட்டப்பெற்றனர். இவர்கள் தம்மிடம் இன்பம் துய்க்க வரும் ஆடவரிடமிருந்து பொருளைப் பெற்று வாழ்ந்தனர். பரத்தையரின் வாழ்க்கையை மதுரைக் காஞ்சியும் சிலம்பதிகாரமும் விரிவுபடக் கூறியுள்ளன.[190] தம்மை நாடி வந்த ஆடவர் தம்மைப்பிரிந்து நீங்காதவாறு அவர்களைக் கவரும் வண்ணம் ஆடல், பாடல், அழகு ஆகிய கலைகளில் வல்லவர்களாய் கவர்ச்சி மிக்கவர்களாய் இருந்தமையினைச் சங்க நூல்கள் காட்டுகின்றன. உளங்கலந்த அன்பால் ஒருவனை மணந்து வாழும் இல்லறத் தகுதியில்லாது போயினும், அவர்கள்பால் விளங்கும் கலைச்சிறப்பால் மன்னர்கள் மதிக்கும் சிறப்புப் பெற்றவர்களாகவும் பரத்தையர் விளங்கியுள்ளனர்.

பரத்தையை ஊரன்பெண்டிர், மங்கை, மகளிர், அரிவை என்ற பொது நிலையிலும், ஒருத்தி, ஏதிலாள், பிறள், பரத்தை, கொண்டிமகளிர், விலை நலப்பெண்டிர், விலைக்கணிகை, கணிகை என்ற சிறப்பு நிலையிலும் சங்கப்பாடல்கள் கூறுகின்றன.[191]

சங்க அகப்பாடல்களின் துறைக்குறிப்புக்கள், காமக்கிழத்தி காதற்பரத்தை, இற்பரத்தை, சேரிப்பரத்தை போன்ற பல பிரிவுகளைச் சுட்டுகின்றன. தொல்காப்பியமும், சங்க இலக்கிய மருதத்திணைப் பாடல்களும் நுவலும் பரத்தை கீழ்மகள் அல்லள்; இல்லறத்தின் பகையாகாள்; குடும்பப் பண்பு உடையவள், தலைவனது இளம் புதல்வனைத் தேரோடும் தெருவில் கண்டவிடத்து அவனை மார்போடு அனைத்து மகிழ்ந்து அணிகள் அணிவித்து விடுக்கும் அன்புடையவள்.[192]

**விறலி:**

விறலியர் என்பார் ஆடலும், பாடலும் நிகழ்த்தும் பெண்டிராவர். பாணர் இனத்தில் ஒரு பிரிவினர், ஆடல் தொழில் புரியும் ஆடவர் கூத்தர் எனவும், பெண்டிர் விறலியர் எனவும் குறிப்பிடப்பட்டனர். பாடல் பாடுவோரைப் 'பாடினி' என்றும், அரங்கில் நடிப்போரை 'விறலியர்' என்றும் பிரித்துப் பேசுவதுண்டு. இதை நச்சினார்க்கினியர் பாடினி என்பவள் தலைவிமாட்டுப்பாங்காயொழுகுபவள் என்றும், விறலியர் என்பவர் தாமே ஆடலும், பாடலும் நிகழ்த்துபவர் என்றும் தம் உரையில் குறிப்பிட்டுள்ளார்.[193] பாணனும் பாடினியும் ஒரு வகுப்பார் என்றும், கூத்தரும் கூத்தியரும் பாணர்களில் ஒரு பிரிவினர் என்றும், விறலியர் இவ்விரண்டும் அல்லாத ஒரு தனி இனத்தவர் என்றும் கூறுவாருமுளர். பாடினியரே விறலியர் என்று மொழிநரும் உண்டு என்பர்.[194] விறலி என்பாள் உள்ளக்குறிப்புப் புறத்தே புலப்படுமாறும், எண்வகைச் சுவையும் இனிதே பொலியுமாறும் பாடி ஆடும் மகள் ஆவள். விறலி, தலைவியின் ஊடலைத் தீர்க்கும் வாயில்களுள் ஒருத்தியாக விளங்கினாள்.[195] அகப்பாடல்களில் விறலி பற்றிய செய்திகள் மிகக் குறைவாகவே உள்ளன. மூன்றே பாடல்களில் விறலி பற்றிய குறிப்புக்கள் காணப்படுகின்றன.[196]

வேந்தர்கள், வள்ளல்கள், குறுநில மன்னர்கள் முதலிய ஆதரவாளர் இருக்குமிடங்களுக்கு விறலியர் பாணர்களுடன் கூட்டமாகச் சென்று பாடியும் ஆடியும் பரிசில் பெற்று வாழ்க்கை நடத்தினர். இவ்வாறு செல்லுகையில் பல சுரங்களைக் கடந்துபோக நேரிடும். அங்கங்கே வாழும்

குடிமக்கள், வழிநடையால் வருந்தும் கலைஞர்களுக்கு உணவளித்து விருந்தோம்பினர் அவர்களிடம் உணவுபெற்று உண்ட கலைஞர்கள் தங்கள் கலைகளால் அவர்களை மகிழ்வித்தனர். பத்துப் பாட்டில் வரும் ஆற்றுப்படைகளில் கலைஞர்கள் பாலை, குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் ஆகிய நிலங்களில் வாழும் மக்களிடம் உணவுபெற்றுக் கடந்து சென்றது கூறப்படுகிறது. இக்கலைஞர்கள் பசியினால் வருந்துமளவு வறியராக இருந்துள்ளமையால் தங்கள் சுற்றத்தைப் பைதற்சுற்றம் (புற:212) என்றும், அவர்களின் துன்பத்தைக் கடும்பினது இடும்பை (புற.173) என்றும் குறிப்பிட்டுள்ளனர். இவர்கள் அரசன் போலும் புரவலர்களை அடைந்த பொழுது அவர்கள்.

> "பாணன் வருக பாட்டியர் வருக
> யாணர்ப் புலவரொடு வயிரியர் வருக"[197]

என்று அன்புடன் வரவேற்று உபசரிப்பர். மன்னனை அடைந்ததும் அவனது அன்பான உபசரிப்பால் பசியாறிய பின்னர் அவனுடைய வீரத்தைப் புகழ்ந்து பாணரும், பாடினியும் பாடுவர்.[198] பாடும் மகளிர் பாடினி (புற.11) எனவும், பாட்டியர் (மது. 749) எனவும் குறிப்பிடப்பெறுவர். இங்ஙனமே இவரோடு சென்று ஆடும் மகளிர் விறலியர் (புற.135) எனப்படுவர். பாணர் களிறுகளைப் பரிசிலாகப் பெருதலும், பட்டுடை பெறுதலும், பொற்பூவைப் பெறுதலும், பாண்மகளிர் பொற்றொடி முதலிய அணிகலன்களைப் பெறுதலும் உண்டு.[199] இவ்வாறு பாணர் கூட்டம் போற்றபட்டுதற்குக் காரணம், இவர்கள் வள்ளல் முதலானோரைப் புகழ்ந்து பாடினமை மட்டுமன்று; இவர்களிடத்து அரிய இசைக்கலை இருந்தமையுமாகும் என்பார் வையாபுரிப்பிள்ளை.[200] கண்டம், கருவி என்னும் இருவகையாலும் இசைப் பயிற்சி செய்தல் இவர்கள்பால் அமைந்திருந்தது. பாடினிகள் கண்டத்தாலும், பாணர்கள் கருவியாலும், விறலியர் ஆடல் பாடலாலும் இசையை வளர்த்தனர். பழமையான நாட்டுப்பாடல்களையும், நடனங்களையும் போற்றிக் காத்த இவர்களைப் பழங்குடிமக்களின் பிரதிநிதிகளாகக் கருதலாம் என்று நீலகண்ட சாஸ்திரி குறிப்பிடுவார்.[201]

நாடோடிக் கூட்டமாக வாழ்க்கை நடத்தினாலும் இவர்கள் மகிழ்ச்சியுடன் வாழ்ந்தனர்.

**அரசியர்:**

புறநானூறு, பதிற்றுப்பத்து, பத்துப்பாட்டு ஆகிய சங்க நூல்களில் அரசியர் பற்றிய செய்திகள் மிகுதியாகவும் ஏனை அகத்தொகை நூல்களில் ஆங்காங்கே குறிப்பாகவும் இடம் பெற்றுள்ளன. பதிற்றுப்பத்தின் செய்யுட்களிலும், பதிகங்களிலும் அரச மனைவியர் பற்றிச் சிறப்பித்துக் கூறப்பட்டுள்ளன.

இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் மனைவி, வேளாவிக் கோமான் பதுமன் தேவி, தேவமகளிர் அவளை அழகில் ஒப்பவர் தாம் தாம் என்று தங்களுள் மாறுபாடு கொள்ளற்குக் காரணமான சிறந்த அடிருடையவள் என்று குமட்டூர்க் கண்ணனார் குறிப்பிட்டுள்ளார்.[202] செல்வக்கடுங்கோ வாழியாதன் மனைவி, சித்திரத்தைப் போன்ற தொழில் புனைந்த , மன்னன் அரண்மனைக்கேற்ற நல்லோளாக விளங்கினாள்.[203] பெருஞ்சேரல் இரும்பொறையின் மனைவி அந்துவஞ்செள்ளை, கொடுமணம் என்ற ஊரில் உருவான அணிகலன்களையும், பந்தர் என்ற ஊரில் விளைந்த முத்துக்களையும் மான் தோலின் விளிம்பில் கட்டி அணிந்திருந்தாள் என்பதை அரிசில்கிழார் பாடியுள்ளார்.[204] பெண்மைக்கே உரிய புற உறுப்பழகினைப் புனைவதன் வாயிலாகப் பெண்டிரின் அக அழகும் புலப்படுமாறு கூறுவது சங்கப் புலவர்களின் இயல்பாகும்.

இமயவரம்பன் நெடுங்சேரலாதனின் மனைவி நாணமும், பெருஞ்சான்றாண்மைப் பண்புகளும் உடையவள் என்பதை பதிற்றுப்பத்துச் சிறப்பித்துள்ளது.[205] செல்வக் கடுங்கோவழியாதன் மனைவி, கணவனிடம் நகையாக உரையாடும் போதும் பொய் கூறாளாய், பிறர் கூறும் புறஞ்சொல்லைப் பொருட்படுத்தாதவளாய், குற்றமற்ற அறிவைக் கொண்டவளாய் பெண்மைக்குரிய குணமாகிய மடமும், கற்பும் சான்றவளாய் விளங்கினாள் என்பதனைக் கபிலர் சிறப்பித்துள்ளார்.[206]

பதிற்றுப்பத்தில் பிறங்கடையாகப் (வாரிசு) புதல்வரைப் பயந்த அரசியின் நிலை பாராட்டிப் பேசப்பட்டுள்ளது. மகப்பேறு எய்திய நிலையிலும் அரசன் பல மணங்கள் புரிந்தமையினை ஆட்சியும், சமுதாயமம் அனுமதித்தே வந்துள்ளன. இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் இருமனைவியரை மணந்து வாழ்ந்தான். ஒருத்தி, வேளாவிக்கோமான் பதுமன் தேவியாவாள் மற்றொருத்தி சோழன் மணக்கிள்ளியின் மகள் நற்சோனையாவாள். இச்செய்தியினைப் பதிற்றுப்பத்தின் 4,5,6 ஆம் பதிகங்கள் கூறுகின்றன.[207] முதல் மனைவிக்கு இரு ஆண் குழந்தைகளும், இரண்டாம் மனைவிக்கு இரு ஆண் குழந்தைகளும் பிறந்தன. பதுமன்தேவி மக்களான களங்காய்க்கண்ணி நார்முடிச் சேரலும், ஆடுகோட்பாட்டுச் சேரலாதனும் முறையே நான்கு, ஆறு ஆகிய பத்துக்களாலும், நற்சோணையின் மகனான கடல்பிறக்கோட்டிய செங்குட்டுவன் ஐந்தாம் பத்தாலும் பாராட்டப்பெற்றுள்ளனர்.

ஆடுகோட்பாட்டுச் சேரலாதனின் மனைவி, இளமையும் துணையாகும் தன்மையுடைய மக்களாகிய நற்செல்வத்தைப் பெற்றவள்.[208] அன்பு, நாண், ஒப்புரவு, கண்ணோட்டம், வாய்மை ஆகியன அடங்கும் சால்பும் செம்மையும் உளப்படப் பிறகுணங்களோடு, குடிகளைக் காத்தற்குப் பொருந்திய அரசின் துறைகளை முற்றக் கற்ற கல்வியும், பிறரெவர்க்குமில்லாத சிறப்பும் அமையப்பெற்ற புதல்வனைப் பெருஞ்சேரல் இரும்பொறையின் மனைவி ஈன்றெடுத்தாள்.[209]

கடையெழு வள்ளல்களுள் ஒருவன் எனக் கருதப்பெறும் வையாவிக் கோப்பெரும்பேகன் மனைவி கண்ணகி ஆவாள். புறநானூற்றுப் பாடலுள் இடம்பெறாத இவள் பெயர், அந்நூல் பாடலொன்றின் (புற.143) அடிக்குறிப்பு வாயிலாக அறியப்படுகின்றது. இவள் திண்ணிய கற்புடையவளாக விளங்கினாள். இவள் சிலப்பதிகாரக் கண்ணகியினும் வேறானவள். இவள் கணவன் இவளைப் பிரிந்து வாழ்ந்ததால் இவள் எய்திய துயரம் (புற 143-147) சுட்டப்பட்டுள்ளது.

பெருங்கோப்பெண்டு, ஒல்லையூர் தந்த பூதப்பாண்டியன் என்னும் அரசனின் மனைவியாவாள். இவள் திண்ணிய மனஉறுதியும், கணவன்பால் மாளாத காதலன்பும் கொண்டு விளங்கினாள். தன் கணவற்கு உற்ற துணையாய் - பட்டத்தரசியாய் - விளங்கினாள். கணவனும், மனைவியும் கவிதை படைக்கும் திறம்பெற்றும் திகழ்ந்தனர். எவ்வகையானும் குறைவின்றி வாழ்ந்த அவ்விருவருள் அரசன் இறக்க, அரசி அவனது பெரும்பிரிவை ஆற்றாளாயினாள். தன் கணவனைப் பிரிந்து இவ்வுலகில் வாழ்வதை அவள் வெறுத்தாள். தன் கணவனின் உடலைப் பற்றி எரியும் தீயில், விழுந்து உயிர்விடத் துணிந்தாள். அப்போது தடுத்து வேண்டிய சான்றோர்களை நோக்கி, உரைத்ததாக அமைந்த புறநானூற்றுப் பாடல் (246) இவளது கற்புத்திண்மையையும், புலமைநலத்தையும், உள்ளத் தெளிவையும் உணர்த்துவதாக உள்ளது. அப்பாடல் கைம்மைநோன்பு நோற்று உயிர் வாழும் பெண்டிரின் அவலநிலையைப் புலப்படுத்துகிறது. அவள் உயிர் துறந்தபின் மதுரைப் பேராலவாயர் செயலற்று இரங்கிப் பாடிய பாடல் புறநானூற்றில் (புற. 247) இடம் பெற்றுள்ளது.

தலைவன் பிரிவால் தலைவி வருந்துவதைப் பல அகப்பாடல்கள் சுட்டுகின்றன. பாண்டியன் நெடுஞ்செழியன் போர் கருதிப் பிரிந்து செல்ல, அரசி கோப்பெருந்தேவி பிரிவால் வருந்தினாள் என்பதைப் பத்துப்பாட்டுள் ஒன்றாகி நெடுநல்வாடை இயம்புகிறது. பொதுவாகக் கணவன்மார் பிரிந்து சென்ற நிலையில் மகளிர் ஒப்பனை செய்து கொள்வதில்லை. மங்கல அணி தவிரப் பிற அணிகள் அணிவதைத் தவிர்ப்பர்.[210] அம்மகளிர் மனம் முழுதும் கணவனைப் பற்றிய நினைவும், அவன் வருகையை ஆவலுடன் நோக்கும் எதிர்பார்ப்பும் நிறைந்திருக்கும் என்பதைப் பல பாடல்கள் தெரிவிக்கின்றன. அவ்வாறு பிரிவால் வருந்தும் கோப்பெருந்தேவிக்கு ஒருபொழுது ஓர் ஊழி போலாக, இயல்பான வாடைக்காலம் நெடியதாய்த் துன்பம் செய்தது. அவள் பல்வேறு தொழில்திறன் அமைந்த கட்டிலில் ஒப்பனையின்றிப் புனையா ஓவியம் போலக் கிடந்தாள். துயிலும் பொருட்டு அவளது அடியைச் சேடியர்

வருடவும், அரசன் போரில் வெற்றி எய்தி விரைவில் திரும்பக் கொற்றவையை வேண்டவும், செவிலித்தாயர் நின் துணைவர் இப்பொழுதே வருவர் என்று இனிய சொற்களைக் கூறவும் மனம் பொருந்தாது கலங்கினாள். திங்களுடன் திரியாமல் நின்ற உரோகிணியைப் போல யாமும் பிரிவின்றி இருத்தலைப் பெற்றிலமேயென்று நினைத்துக் கண்ணீர் சொரிந்தாள் என்று நெடுநல்வாடை (நெடு 151-166) கோப்பெருந்தேவியின் பிரிவுத் துன்பத்தைக் குறிப்பிடுகிறது.

அரசி, சினந்தவிடத்து ஆயத்தாராகிய தோழிமார் அனைவரும் அவளைக் கைகூப்பித் தொழுவர்[211]. தலைவி அரசியாயினும், தன் கணவன் போரில் வாகை சூடி எய்திய செய்தியைப் பிறர் கூறக்கேட்டபோது, அவனை முயங்கப் பெற்றது போல இன்பமுற்றாள் என்பதனை அகநானூறு உணர்த்துகின்றது.[212] தலைவியின் இம்மன நிலையைத் தலைவனே உணர்ந்து கூறுவதாகப் பாடல் அமைந்துள்ளது.

**சங்க காலச் சமுதாயத்தில் மகளிர் நிலை:**

சங்க காலச் சமுதாயத்தில் மகளிர் தமக்கே உரிய சிறந்த இடத்தைப் பெற்றிருந்தனர். அக்காலத் தமிழர் வாழ்வில் பெண்ணுரிமை பேணப்பட்டது. பெண்ணடிமைத்தனம் தோன்றவில்லை. சங்க நூல்களில் இல்லறப் பெண்டிரை இழித்துப் பேசுவதையோ தாழ்வாகக் கருதியதையோ காணமுடியவில்லை. பண்டைத் தமிழ்ச் சமுதாயத்தில் "பெண் (கல்வி) கற்கும் உரிமை, கவிபாடும் திறம், காதலுரிமை, காதலனை இடித்துரைக்கும் உரிமை, இல்லறத் தொழிலுரிமை, பெருமை, புகழ் எல்லாம் ஆடவருக்கு நிகராகப் பெற்றிருந்தாள்.[213] என்று வ.சுப.மாணிக்கம் மகளிர் நிலையைப் பற்றி எடுத்துரைக்கின்றார்.

அரசவையில் அரசனோடு இணையாக அரசி சில சமயங்களில் வீற்றிருந்துள்ளாள். பெண்ணைப் புகழ்ந்து உரைக்கும் பொழுது கணவன் சிறப்போடு புகழ்ந்துரைத்தல் மரபாகும். புரையோள் கணவ, பாவையன்ன நல்லோள் கணவன், சேயிழை கணவ, ஆயிழை கணவ, மங்கையர் கணவ! எனச் சங்கப்பாடல்கள் குறிப்பிடுகின்றன.[214] கணவனின் பெயரைக்

குறிப்பிட்டு அரசமகளிர் பெயர் கூறப்பட்ட தன்மையைச் சங்க இலக்கியங்களில் காணலாம். அரச மகளிரின் இயற்பெயர் சங்கப்பாடலுள் இடம்பெற்றதாக அறியக்கூடவில்லை. பாடலின் அடிக்குறிப்பில் இயற்பெயர் சுட்டும் மரபுண்டு (பேகன் மனைவி கண்ணகி), அரச மகளிர் மீது தனியே துறையமைத்துப் பாடும் மரபு காணப்படவில்லை. பூதப்பாண்டியன் தேவி பெருங்கோப்பெண்டு (புறம் 246, 247) என்றும், பொறையன் பெருந்தேவி (பதிற் 7,3)என்றும் சுட்டப்பட்டுள்ளது.

கைம்மை நிலையினை ஏற்று வாழ்வதனை விரும்பாமல் தாமே விரும்பித் தீப்பாய்ந்து உயிர்விட முற்பட்டோரைக் காணுங்கால், கணவனை இழந்த காரிகையை வலிந்து கைம்மைக்கு உட்படுத்தித் துன்பம் எய்துவிப்பதோடு, சமுதாய மதிப்பு இழந்தவராயும் ஆக்கும் நிலை சங்க காலத்திற்குப் பின்னர்த் தோன்றிய ஒன்றாகும் என்பதனை உய்த்துணர்தல் கூடும்.

சங்க காலத்தில் ஆடவரைப் போலவே பெண்டிரும் கல்வியல் சிறந்து விங்கினர். அக்காலத்தில் அறிவும், புலமையும் சமுதாயத்தின் அனைத்துப் பிரிவினருக்கும் பொதுவாக இருந்தன. இதனைக் குறமகள் இளவெயினி (புற.157), வெண்ணிக்குயத்தியர் (புற.66), குறமகள் குறியெயினி (நற்.357) போன்ற பெண்பாற்புலவர்களின் பெயர்களைக் கொண்டு அறியலாம். இவர்களுக்குச் சமுதாயத்தில் பெரிதும் மதிப்பு இருந்தது என்பதை ஒளவையார் போன்ற பெண்பாற்புலவர்களின் வரலாற்றால் உணரலாம். ஒளவையார், அரசன் அதியமான் நெடுமானஞ்சியிடம் கொண்டிருந்த நட்புறவால் பாடல்கள் பாடியுள்ளதையும், அவனுக்காக வேற்று அரசனிடம் (தொண்டைமான்) அரசியல் தூது சென்றுவந்ததையும் (புற. 95) புறநானூறு தெரிவிக்கின்றது. அதன்மூலம் அரசன் அவருக்கு அளித்திருந்த மதிப்பை அறிய முடிகிறது. ந.சஞ்சீவி சங்ககாலப் பெண்பாற்புலவர்களாக முப்பதின்மரைக் கூறியுள்ளார்.[215] ஒளவை நடராசன் பண்டு கல்விக் கலையில் சிறந்து விளங்கிய பெண்பாற் புலவர்களைப் பற்றி ஆராய்ந்துள்ளார்.

பண்டைத் தமிழகத்தில் கணவனுடன் வாழ்கின்ற பெண்களின் இல்லற வாழ்க்கையே எல்லா உரிமைகளையும், உயர்வுகளையும் வழங்கியுள்ளது. இறைவழிபாடு, மங்கல நிகழ்ச்சியில் கலந்துகொள்ளல், விருந்தினரை ஓம்புதல் போன்றவற்றை கணவர் துணையுடன் மகளிர் செய்து வந்தனர். இத்தகைய வாழ்வுரிமை கணவன் இறந்துபட்டவுடன் மனைவியை விட்டு நீங்கி விடுகிறது.

ஒரு சமுதாயம், தன் பெண்ணினத்துக்கு அளிக்கும் உரிமை, பெருமைகளை உரைகல்லாகக் கொண்டு, அச்சமுதாயத்தின் பண்பாட்டை அறிஞர்கள் மதிப்பிடுவர்.[216] இவ்வகையில் ஆராய்கின்ற பொழுது தமிழர் பண்பாட்டுக்கு நிறையும் உண்டு ; குறையும் உண்டு.

**முடிவுரை:**

திருமண நிகழ்விலிருந்தே மனையறம் தொடங்குகிறது. சங்க காலத்தில் தமிழ்நெறிப்படிப் பத்து வழிகளில் திருமணம் நடைபெற்றுள்ளது. கணவன் மனைவி இருவரின் உளம் ஒத்த அன்பினால் இல்லறம் இனிமை பெறுகிறது. அவ்வப்போது ஊடலும், கூடலும் இருவரிடையேயும் அன்பை மிகுதிப்படுத்துகிறது. உறவினருக்கு உணவு முதலியன தந்து பாதுகாக்கும் சுற்றம் போற்றல் பண்பு மனையற மாண்புகளுள் ஒன்றாக சங்க இலக்கியம் பேசுகிறது. தலைவியின் பண்புகளை வரிசைப்படுத்திய தொல்காப்பியம் சுற்றம் போற்றலையும் கூறுகிறது. விருத்தினர் உண்டு எஞ்சிய மிச்சிலைதலைவி தலைவனுக்கு இட உண்ணுதலே சிறந்தது என்று குறிஞ்சிப் பாட்டு கூறுகிறது, தொல்காப்பியர் காலத்திலிருந்தே இப்பண்பாடு தமிழர்களிடம் காணப்படுகிறது. இத்தகைய மாட்சிமைமிக்க மனையறம் மக்கட் போற்றினால் முழுமையாகிறது. இம்மைப் பிறவியில் இன்பம் காணவும் மறுமைக் கடன்களை மருவின்றி நிறைவேற்றவும் மக்கட்பேறு இன்றியமையாததாகிறது. மயக்குறு மக்களை ஈன்ற மகளிரை உற்றாரும் போற்றுவதிலிருந்து மக்கட்பேற்றின் முக்கியத்துவம் உணரமுடிகிறது. பெற்ற குழந்தையைப் பேணி வளர்ப்பதிலும் கணவன் நலம் காத்தலிலும் மகளிருக்குரிய பங்கினைச் சங்க இலக்கியம் கூறுகிறது. நாச்சினார்க்கினியர்

தலைவியின் பாண்புகளைக் கூறும் போது அடிசில் வன்மையைக் கூறுவார். செய்வினை முடித்த செம்மல் உவகையோடு இல்லம் திரும்பும் தலைவனுக்கு இல்லிருந்து அறுசுவை உண்டி தந்து மகிழ்விப்பது மனைவாழ் மனைவியின் முதற்கடமை என்று சங்க கால மகளிர் உணர்திருந்தனர். சிக்கன நடவடிக்கை மனையறம் பொருளாதார மேம்பாடு அடைய உதவிபுரிகிறது.

அச்சமும் நாணமும் மகளிருக்கு அணிசெய்யும் மதிப்புமிக்க மாண்புகளாகும் அருந்ததியின் கற்புக்கு சங்ககால மகளிர் சான்றாகத் திகழ்ந்தனர். பெருங்கோப்பெண்டு கண்ணகி போன்றோரின் கற்புத்திறம் சங்க கால மகளிரின் மாண்பினை வெளிப்படுத்துகிறது. புகுந்த வீடு, வறுமையுற்ற நிலையிலும் பிறந்த வீட்டின் செல்வத்தை பொருட்படுத்தாத பெருமை மிக்கவர்கள் சங்ககால மகளிர். இவர்கள் பொருள்வயிற் பிரிந்த கணவன் வரும்வரை பொறுமை காக்கும் பொறுப்பு மிக்கவர்கள். கணவன் தவறுகண்டு சினம் கொள்ளாது சீர்திருத்தும் சிறப்பு மிகக் பண்பு மகளிரின் பொறையுடைமைப் பண்பைப் பறைசாற்றுகின்றன. கணவன் இறந்த பின் காதல் மிகுதியால் தீப்பாய்ந்து உயிர்நீத்தனர். மகளிர் பலர் கணவன் இறந்தபின் கடுமையான நோன்பு நோற்று கைம்மை வாழ்வினை மேற்கொண்டனர். இத்தகைய கைம்மை நோன்பும் தீப்பாய்தல் நடவடிக்கையும் கணவனை இழந்த மகளிர் தாங்களே விரும்பி ஏற்றனரேயன்றி சங்ககாலச் சமுதாயத்தினரால் வற்புறுத்தவோ கட்டாயப்படுத்வோ படவில்லை. மகளிரின் மாண்பினால் மனையறம் மாட்சிமை பெற்றதும் மனையறத்தால் மகளிர் பெருமை எய்தியதும் இவ்வியலில் காட்டப்பட்டுள்ளது.

**சான்றெண் விளக்கம்:**

1. தொல் - பொருள், இளம் - செய்: நூ - 179
2. ந.சுப்புரெட்டியார் அகத்திணைக் கொள்கைகள் - ப - 228
3. சிலம்பு, 16 : 71-73
4. தொல் பொருள் களவியல் - 89
5. தொல் பொருள் - இளம்- கற் - நூ-6:3
6. அகம் 230 : 8,9; ஐங் - 382:5
7. சிலப்பதிபார (பதிகம்) 64, சிலம்பு : 22:132; மணி 22:53,
   மங்கள வாழ்த்துப் பாடலும் குரவர் மனையறம் படுத்த காதையும்
8. கழகத் தமிழ் அகராதி ப-751
9. தொல் பொருள் கற்பியல் - 1
10. வி.சசி வல்லி, தமிழர் திருமணம் -ப-10
11. நாலடி,86 : 2; ஆ. கோவை - 85:1
12. தொல் - பொருள் -இளம்- மெயப் - நூ - 25
13. மேலது - நூ - 26
14. முனைவர். க. திலகவதி, சங்கக்கால மகளிர் வாழ்வியல்- ப - 126
15. அகம் - 48
16. இளவழகனார் பண்டைத் தமிழர் இன்பவியல் வாழ்க்கை -
    பக்- 101-102
17. தொல் பொருள் கற்பு - 2
18. குறுந் -17; 14:4-6; கலித்.58:20-23; 138:8-11; 141:22-25
19. குறுந் - 51
20. அகம் 90; நற்.300; புறம்.343 "நறுநுத லரிவை பாசிழை விலையே"
21. ஐங் - 147
    "எக்கர் ஞாழல் மலர் இல் மகளிர்
    ஒண்தழை அயரும் துறைவன்
    தண்தழை விலை. என, நல்கினன் நாடே"
22. அகம் 390: 8-11
23. வ.சுப. மாணிக்கம் தமிழ்க் காதல் - ப-368

24. கலித் - 103 - "கொல்லேற்றுக் கோடஞ்சு வானை, மறுமையும்
புல்லாளே ஆய மகள்"

25. புறம் 345:14: "நிரலல் லோர்க்குத் தரலோ வில்லெனக்"

26. மேலது 338:6-9

27. மேலது 336:1-7-

28. மேலது 337-354

29. பதி.ப. 4:1-3; 6:1-6; பதி.ப 5:1-3

30. அகம் 86,136

31. குறுந் 2:3; 49:3-5 "பயலியது கெழீஇய நட்பு
இம்மை மாறி மறுமை யாயினும்
நீயாகியர் என் கணவனை
யானா கியர்நின் நெஞ்சுநேர் பவளே"

32. மேலது 57:1-4; 32:3-6

33. அகம் 389:2-9; ஐங்-408,409

34. நற் : 10

35. மேலது பா - 201 மாயா இயற்கைப் பாவையின்
போதல் ஒல்லாள் என் நெஞ்சத் தானே.

36. அகம் -115 "ஆய்நலம் தொலையினும் தொலைக ; என்றும்
நோயிலராக நம் காதலர்"

37. மேலது-114

38. ஐங் - 359

39. குறுந் - 135 "வினையே ஆடவர்க்கு உயிரே ; வாணுதல்
மனைஉறை மகளிர்க்கு ஆடவர் உயிர்"

40. கலித் - 6

41. ஐங் - 203 "அன்னாய் வாழிவேண் டன்னைநம் படப்பை
தேன்மயங்கு பாலினும் இனிய அவர் நாட்டு
உவலைக் கூவற கீழ
மானுண் டெஞ்சிய கலிழி நீரே"

42. அகம் - 339: 12-14 "யாக்கைக்கு உயிரியைந் தன்ன நட்பின்
வாழ்தல் அன்ன காதல்
சாதல் அன்ன பிரிவறி யோளே"

43. கலி. மருதக்கலி 89:4-6
44. நற் - 120
45. மேலது-280 "நன்மனை நனிவிருந் தயரும் கைதூ வின்மையின் எய்தா மாறே"
46. பதிற்-50:16-22; 52:14-24; 68:18-19; 79:4-2
47. புறம் 113:9; குறுந். 225:6-7; 254:5; பதி.50:19
48. கலித் 114:20-21
49. உ.வே.சாமிநாத ஐயர், குறுந்தொகை உணரப்பதிப்பு (முகவுரை). 75
50. தொல் - பொருள் - நச்சர் - உரை- ப.242
51. பெரும் 163
52. அகம் - 155:1-3
53. மேலது 173:1-4
54. புறம் - 163:1-7
55. தொல் - களவு - 17,5
56. தொல் - கற்பு : 11 "விருந்து புறந்தருதலும் சுற்ற மோம்பலும்"
57. ஐங் - 1;2
58. குறிஞ்சி - 206-207 "விருந்துண் டெஞ்சிய மிச்சில் பெருந்தகை நின்னொ டுண்டலும் புரைவது"
59. புறம் -234: 5-6 "உலகு புகழ் திறந்த வாயில் பலரோடு உண்டல் மரீ இயோனே"
60. நற் - 142: 9-11 "அல்லில் ஆயினும் விருந்துவரின் உவக்கும் முல்லை சான்ற கற்பின் மெல்லியல் குறுமகள்"
61. குறுந் - 118:3-4 "மாலைப் பலர்புகு வாயில் அடைப்பக் கடவுநர் வருவீர் உளீரோ"
62. புறம் - 10: 7-9
63. பரி-17:42; நற்-81, 374; ஐங் - 442; குறுந் - 398:6
64. குறுந் - 33; அகம் 384:12-14
65. குறுந் -292: 6-8 "வரையா நிரையத்துச் செலீ இயரோ அன்னை ஒருநாள் நகைமுக விருந்தினன் வந்தெனப் பகைமுக ஊரின் துஞ்சலோ இலளே"
66. பெரு - 304-310; 167-168; மலை-178-183
67. புறம் - 326: 8-12; புறம் - 334:5-7

68. மேலது 333: 8-13 "தவச்சிறி தாயினும் மிகப்பல ரென்னாள்
நீணெடும் பந்த ரூண்முறை யூட்டம்
இற்பொலி மகடூஉ"

69. மேலது 331: 7-9

70. மேலது 316 "நெருநை வந்த விருந்திற்கு மற்றுத்தன்
இரும்புடைப் பழவாள் வைத்தனன் இன்றிக்
கருங்கோட்டிச் சீறியாழ் பணையமிது கொண்டு
ஈவதிலாளன்"

71. குறள் 60 "மங்கலம் என்ப மனைமாட்சி மற்றதன்
நன்கலம் நன்மக்கட் பேறு"

72. அகம் - 184: 1-3

73. தொல் - பொருள் -145

74. அகம் - 66:4 "இம்மை யுலகத் திசையொடு விளங்கி
மறுமை யுலகமும் மறுவின் றெய்துப
செறுநரும் விழையுஞ் செயிர்தீர் காட்சிச்
சிறுவர் பயந்த செம்ம லோர்"

75. பதிற் - 70: 21-22 "இளந்துணைப் புதல்வரின் முதியர்ப் பேணித்
தொல்கடன் இறுத்த"

76. புறம் - 9: 2-4

77. மேலது 188: 6-7 "மயக்குறு மக்களை யில்லோர்க்குப்
பயக்குறை யில்லைத் தாம்வாழு நாளே"

78. மேலது 4:18, 379:15, 5:7, 230:7

79. கலி - 11-24

80. புறம். 312:2 - சான்றோன் ஆக்குதல் தந்தைக்கு கடனே

81. ஐங். 402; 403; 404; 406; 410; குறுந்.359

82. நற்-110:3; 150: 10-11; அகம் 19-20; 145: 18-20.

83. புறம் - 160:22; அகம் 54: 17-18; கலி-80: 18-19

84. புறம்- 281:1-7; முல்லை 302-304

85. கலி - 39: 16-17; பரி - 20: 88-89;

86. மது 664; புறம் 234: 2-6; 249: 10-14

87. குறுந் - 295 "ஓரான் வல்சிச் சீரில் வாழ்க்கை
பெருநலக் குறுமகள் வந்தென
இனி விழாயிற்று"

88. புறம் - 191:1-3 "யாண்டு பலவாக நரையில வாகுதல்

யாங்கா கியரென வினவுதி ராயின்
மாண்ட என் மனைவியொடு மக்களும் நிரம்பினர்"

89. நற்றிணை - 110
90. புறம் - 331;339
91. குறுந் - 61
92. பெரும் - 164-165
93. புறம் - 33:1-6
94. தொல் - பொருள் - நச்சர் உரை - பக் - 242-243
95. சி.பாலசுப்ரமணியன் கட்டுரை வளம் - பக் - 40
96. குறுந் - 167
97. அகம் - 141; 14-18
98. புறம் - 120:14-15 "நறுநெய் கடலை விசைப்பச் சோறட்டுப்
பெருந்தோள் தாலம் பூசன் மேவர்"
99. அகம் - 224:11-13; அகம் -393: 10-16
100. தொல் - பொருள் இளம் நச்சர் உரை - பக் - 12-13
101. ஞா. தேவநேயன் பண்டைத் தமிழ் நாகரிகமும் பண்பாடும் ப - 225
102. குறிஞ்சி - 184 - 186 "நாணும் உட்கும் நண்ணுவழி அடைதர
ஒய்யெனப் பிரியவும் விடாஅன் கவைஇ
ஆகமடைய முயங்கலின்"
103. அகம் 161: 7-10
104. மேலது - 397:1; 112:16-19; 86:20-29; 136:18-29
105. நற்றிணை - 382:5-9
106. புறம் - 83:1-4
107. மேலது 85: 6-8 "அஞ்சிலம்பு ஒலிப்ப ஓடி எம்மில்
முழாவரைப் போந்தை பொருந்தி நின்று
யான் கண்டனன் அவன் ஆடாகுதலே"
108. க.வெள்ளைவாரணன் சங்கக்கால தமிழ் மக்கள் - ப - 84
109. தொல் - பொருள் இளம் உரை - பக் - 357
110. அகம் 225:1-3
111. கலி - 6,13
112. புறம் - 10:8-10; பதி. 63:4-5
113. சி.பாலசுப்ரமணியன் சங்கக் கால மகளிர்- ப.37

114. புறம் - 361:14; பொறையொடு மலிந்த கற்பின் மாணோர்க்கின்

115. குறு. 397: 4-7

116. தொல்- பொருள் நச்சர் உரை. ப. 242

117. அகம் - 256: 15-21

118. கலி - 9: 21-23.

119. சிறு 30: அகம். 274:13-14; நற் 142:10-11; பரி 15:39; ஐங் 408:2; புறம் 122:8;

பதி 89:18-20; பெரு 302-303; ஐங் 442; கலி - 2:21

120. குறுந் - 14:4-6 "..... மறுகில்
நல்லோள் கணவன் இவனெனப்
பல்லோர் கூற யாம் நாணுகம் சிறிதே"

121. கலி - 16:2; 39:6;"வறனோடின் வையகத்து வான்தருங் கற்பினாள்"
கலி - 39:15-18"அருமழை தரல் வேண்டின் தருகிற்கும் பெருமையள்"

122. மலை 424, 58

123. புறம் 293; 146; 147; அகம் 73:1-2

124. தொல் பொருள் இளம் புறத் நூ- 19:12-13; 22-25, 29.

125 மேலது 19: 16-17; 30-31

126. S.Krishnaswamy Iyengar, Begining of South India History P-145.

127. ந.சுப்பிரமணியன், சங்கக்கால வாழ்வியல் - ப. 364.

128. சிலப்-3:28; 222-223; பதிகம் 84

129. புறம் 250, 261, 237

130. மேலது 246

131. மேலது 62

132. மேலது 249, 234

133. புறம் 125:1; 326:5; நற் 353: 1-2

134. புறம் 25, 62, 264, 248, 250, 280.

135. மேலது 95

136. அகம் 20:1-2; 80:4-6

137. புறம் 33:2-6; பெரும்பாண் - 155-166

138. ஐங் - 283:1-3; 285: 1-3; நற் - 206; அகம் 32, 188, 118; பதி. 73,71; புறம் 61; 344; பெரும்பான் 89-103.

139. பெரும்பான் - 58.

140. மதுரை - 664.

141. அகம் - 195:1-5; 86:1-4

142. நெடு 41-43; அகம் 47: 9-10; மது 555-556; குறி: 224-225

143. முல்லை - 12-18; புறம் - 320:3-9; அகம் 21:1; 23:11; 117:1; புறம் 271, 272: பொரு 185; நற் 172:5; அகம் 127:7; அகம் 165:11; அகம் 383:6; ஐங் 25:2; குறுந் 19:4; அக 21:1; 23:11-12; 17:1. நெடு 45-48; பெரும் 300; அகம் 34:14-18; ஐங் 375:2; கலி 72:1-4; நற் 132:5; அகம் 34:12; நெடு 90-92; பெரு 162-165; கலி 101:43-45; பெரு 162-165; அகம் 206:2-6; நற் 80:1-4; பெரு 299; பட் 22-23; அகம் 206:2-6; நற் 80:1-4; பெரு 299; பட் 22-23; அகம் 122:16; குறுந் 234; பெரு 129-133; 326; அகம் 140:5-9; 122:9; நற் 3-7; பெரு 326; பட்டினம் 77.

144. புறம் 9:3-4; அகம் 66:1-6

145. முல்லை 45-49

146. அகம் 7:1-7; 315:1-6

147. மேலது 49:14-16

148. அகம் 15: 10-11; புறம் 337:6-7; அகம் 60:13-15

149. தொல் பொருள் இளம் அகத். நூ 38

150. மேலது 32

151. தொல் பொருள் இளம் கற். நூ 35

152. தொல் பொருள் இளம் செய் நூ 184

153. அகம் 95:11-13; 203; நற் 149 "கௌவை மேவலராகி இவ்வூர்
நிரையப் பெண்டிர் இன்னா கூறுவ
புரைய அல்ல என் மகட்கு"

154. அகம் 7; குறுந் 23 - இற்செறிப்பு, குறுந் 23; வெறியாட்டு-அகம்:22,98 குறிபார்த்தல்.

155. தொல் பொருள் இளம் கள. நூ 27
'கிழவோன் அறியா அறிவினள் இவளென
மையறு சிறப்பின் உயர்ந்தோர் பாங்கின்
ஐயக் கிளவியின் அறிதலும் உரித்தே"

156. மேலது 25,26

157. மேலது 48

158. குளோரிய சுந்தரமதி பகுப்பாய்வு நெறியில் சங்க இலக்கியம் ப. 66

159. தொல் பொருள் இளம் அகத் நூ 39

160. ஐங் 379

161. அகம் 195:1-5; 203

162. அகம் 35; ஐங் 371

163. நற் 279; ஐங் 399; அகம் 369.

164. ஐங் 375, 377; அகம் 165,169

165. நம்பி அகம் 111 "செவிலி நற்றாய் தோழி யாகி
அவல நீக்கி அறிவும் ஆசாரமும்
கொளுத்தித் தலைவியை வளர்த்த தாயே"

166. குறுந் 84:1; அகம் 49

167. அகம் 7:123; 17:8-9; 49:7; 63:5; 117:9; 145:21; 369:21; 397:1; நற் 198:3; ஐங் 29:4; 101:3; 373:4; 389:3; கலி.8

168. நற் 110

169. அகம் 145

170. தொல் பொருள் இளம் கள. நூ 34, கற் நூ 12

171. அகம் 48, 110, 158, 190; குறந் 26, 214, 366; நற் 207, 351; ஐங் 28, 29, 30, 93, 101-100, 182, 190, 205, 208, 210, 220, 243.

172. தொல் பொருள் இளம் கள. நூ 25

173. குறுந் 396; அகம் 17

174. நற் 110,324

175. அகம் 219

176. ஆ. இராமகிருட்டிணன் அகத்திணை மாந்தர் ஓர் ஆய்வு பக் 115

177. அகம் 12: 14-15

178. நற் 128:4; 72:3; அகம் 110:25; 268:10

179. தொல் பொருள் இளம் கள நூ 35

180. மேலது 9

181. வ.சுப. மாணிக்கம் - தமிழ் காதல் - ப. 80

182. நற் 208:5; குறுந் 130:5; ஐங் 223:5; கலி 27:26; குறுநு; 225:8

183. அகம் 68:10

184. நற் 50, 127, 167, 219; குறுந் 85, 359; நற் 170; 310

185. தொல் பொருள் இளம் கள நூ 37

186. மேலது 24

187. தொல் பொருள் இளம் அகத். நூ 16

188. நற் 280:4; கலி 75:32

189. தொல் பொருள் இளம் செய். நூ 182

190. மது 559-589; சிலப் 14: 125-167

191. ஐ. இராமராசா. தமிழ் இலக்கணத்தில் ஊடல், முனைவர் பட்ட ஆய்வேடு பக் 185-186.

192. அகம் 16; கலி 82,84

193. தொல் பொருள் நச்சர் உரை ப 277

194. சி.பாலசுப்ரமணியன் சங்க இலக்கியம், சில பார்வைகள் பக் 203.

195. தொல் பொருள் இளம் கற். நூ 52

196. அகம் 82, 352; நற் 328

197. மது 749-750

198. பொருந - 47

199. மது 102; பொரு 159-162; மலை 569-570; புறம் 11,12,29,69,126, 317,364; கலி 54:2; 85:2

200. எஸ்.வையாபுரிப்பிள்ளை, தமிழ் இலக்கிய சரிதத்தில் காவிய காலம் பக் 62

201. கே.ஏ.நீலகண்ட சாஸ்திரி, சோழர்கள் பகுதி ஒன்று பக் 101

202. பதி 14: 13-15

203. மேலது 61:3-4

204. மேலது 74: 3-12

205. மேலது 19: 13-14 "...... பெருஞ்சால்பு ஒருங்கிய நாணுமலி யாக்கை வாணுதல் அரிவை"

206. மேலது 70: 12-16

207. மேலது 4:2-3; 5:1-3; 6:1-2

208. மேலது 57:10

209. மேலது 74: 17-21

210. நெடு 136-137

211. நற் 300:2 "சுடர்த்தொடிக் கோமகள் சினந்தென அதனெதிர் மடத்தகை ஆயம் கைதொழுதா அங்கு"

212. அகம் 144:10-19

213. வ.சுப. மாணிக்கம், தமிழ் காதல் பக் 152

214. பதி 70-16; பதி 61:4; புறம் 3:6; புறம் 34:7; முருகு 254

215. ந.சஞ்சிவி, சங்க இலக்கிய ஆராய்ச்சி அட்டவணைகள் பக் 57-58

216. எஸ். இராமகிருட்டிணன் இந்தியப் பண்பாடும், தமிழரும் பக் 335.

# இயல் மூன்று

# சமூக அமைப்பும் சமயக் கோட்பாடும்

## முன்னுரை

குடும்பத்தின் கூட்டமைப்பே சமூகம் என்பது அறிஞர்களின் கருத்து ஆகும். இதனாலேயே குடும்பத்தின் பண்புகளைக் கூறும் மனைமாட்சியும், மகளிர் மாண்பும் என்ற இயலுக்கு அடுத்தபடியாக, இவ்வியல் வைக்கப்பட்டுள்ளது. மனித சமூகம் இயல்பாகவே பல்வேறு அமைப்புகளாகக் காணப்படுகிறது. சமயம் அவ்வமைப்புகளை மேலும் வலுப்படுத்துவதாலும், சமூக அமைப்புகளுக்குத் தக்கவாறு சமயக் கருத்துகள் அமைந்திருப்பதாலும் இவ்வியல் இவ்வாறு அமைக்கப்பட்டுள்ளது.

சங்க இலக்கியம் தான் தோன்றிய காலத்தில் இருந்த சமூக அமைப்புகளையும், சமயக் கருத்துகளையும் தன்னகத்தே தெளிவாகப் பதிவு செய்துள்ளது. முழுமையான நாகரிக வளர்ச்சி பெற்ற சங்க காலத்தில் மக்கள் பல பிரிவுகளாக வாழ்ந்து வந்தனர். இதற்கு இயற்கைச் சூழல், தொழில்கள், பொருளாதாரம், சமயம் போன்றவை அடிப்படைக் காரணிகளாக அமைந்தன.

இயற்கையின் இயல்புகளை அறிந்திடாத தொடக்கக் காலத்தில் அச்சத்தின் காரணமாக மனிதன் இயற்கைச் சக்திகளைத் தெய்வமாக வணங்கினான். பின்னர், அதன் இயல்பறிந்து நன்மை தருதியும் வளம் வேண்டியும் நன்றி செலுத்தும் விதமாகவும் கடவுளாக வழிபட்டான். இவ்வழிபாட்டு முறைகளில் சமூகத்து அமைப்புகளான தொழில் வருண, சாதிப் பிரிவுகள் கலந்து சமயமாக உருப்பெற்றது. இந்த அடிப்படையில் நிலவிய சமூக அமைப்புகளையும் சமயக் கருத்துகளையும் வெளிப்படுத்துவதே இவ்வியலின் நோக்கமாகும்.

**சமூகம் :**

சமூகம் என்பது ஒரு குறிப்பிட்ட நிலப்பகுதியில் நீண்ட காலமாக ஒன்று சேர்ந்து வாழ்வதற்காக மக்கள் கூட்டம் ஏற்படுத்திக் கொள்ளும் அமைப்பாகும். தம்மைப் பேணிக் காத்துக் கொள்வதற்கும் அழியாமல் நிலைநிறுத்திக் கொள்வதற்கும் ஒன்றாக இணைந்துள்ள ஒரு மானிடக்குழு சமூகம் எனப்படுகிறது.[2] சமூகம் மனிதனின் சமூக உறவுகளில் தோன்றுகிறது. உறவுகளை ஏற்படுத்திக் கொள்ளும் மனிதர்கள் அவ்வுறவுகளை நிலைப்படுத்தி, முறைப்படுத்தித் தங்களுக்குள் ஓர் அமைப்பை ஏற்படுத்திக் கொள்ளும்போது சமூகம் பிறக்கிறது. பிளாட்டோ என்ற அறிஞர் மனிதர்கள் தேவையின் காரணமாகத் தங்களுக்குள் ஒரு சமூக அமைப்பை ஏற்படுத்திக் கூடி வாழ்கிறார்கள் என்ற கருத்தை வலியுறுத்தியுள்ளார். அரிஸ்டாட்டில் மனிதனுக்கு இயற்கையிலேயே சமூக இயல்பு உள்ளது என்றும், அதன் காரணமாக அவன் பிறரோடு கூடிப்பழக முற்படும் போது சமூகம் தோன்றுகிறது என்றும் கூறியுள்ளார். ஆனால், சமூக ஒப்பந்தக் கோட்பாட்டை உருவாக்கிய தாமசு ஆப்சு, சான்இலக்கு, உருசோ ஆகிய அறிஞர்கள் இயற்கை நிலையில் மனிதர்கள் வாழ்ந்த பொழுது தங்களுக்குள் ஏற்பட்ட சிக்கலைப் போக்க ஓர் ஒப்பந்தத்தைக் கொண்டு சமூகத்தை நிறுவினார்கள் என்று கூறுகின்றனர்.[3]

சமூகவியல் என்பது சமூகத்தை அதாவது மக்களுறவையும், அதன் விளைவுகளையும் பற்றிய அறிவியலாகும். இது சமூகத்தின் தோற்றம், வளர்ச்சி, அமைப்பு, செயல்கள் ஆகியவற்றிற்குத் தக்க விளக்கம் காண முற்படுகிறது. சமூகவியலைத் தனி அறிவியலாகத் தோற்றுவித்தவர் ஆகஸ்ட் காம்ட் என்பவராவார். உயிரியல் சமூகவியல் மரபினரில் முன்னணியில் நின்றவர் ஹெர்பர்ட் ஸ்பென்சர் என்பவராவார். இவர் சமூகவியல் ஆராய்ச்சி, சமூகநிலையியல், மனிதனும் அரசும், சமூகவியலின் கொள்கைகள் என்னும் நூல்களை வெளியிட்டுச் சமூகப் பரிணாம உயிரியல் தத்துவத்தை விளக்கியுள்ளார்.[4]

"தங்களைப் பார்த்துக் கொள்வதற்காகவும் இடையறவின்றி நிலைநிறுத்திக் கொள்வதற்காகவும், தம் வாழ்க்கை முறைகளையும் பண்பாட்டையும் பகிர்ந்து கொள்வதற்கும் இணைந்து ஒன்றுகூடிய மக்களின் தொகுதியே சமுதாயம் ஆகும்" என்று சமூக அறிவியல் குறிப்பதாகப் புதிய 'பிரித்தானியக் கலைக் களஞ்சியம்' சமுதாயம் என்பதற்குப் பொருள் விளக்கம் தருகிறது.[5] "ஒரே நம்பிக்கை அல்லது கருத்தைக் கொண்டு பொதுவான குறிக்கோளுக்காக ஒருங்கிணைந்த பொதுவான அக்கறை அல்லது பயனுக்காகப் பலர் ஒன்றாக இணைந்திருக்கும் அமைப்பு சமுதாயம் ஆகும்" என்று ஆக்சுபோர்டு ஆங்கில அகராதி பொருள் விளக்கம் செய்துள்ளது.[6]

**இயற்கையும் சமூக அமைப்பும் :**

சங்கவிலக்கியங்கள், அவை தோன்றிய காலத்தின் சமூக அமைப்பும் வாழ்க்கையும் பெரிதும் நிலவியற்கையையொட்டி உருவாக்கப்பட்டன என உணர்த்துகின்றன. நிலவியற்கைக்கும் மக்களின் பண்பாட்டிற்கும் உள்ள நெருங்கிய உறவு பற்றிப் பல அறிஞர்கள் கூறியுள்ள கருத்துகள் தமிழக நிலைக்கு மிகவும் ஏற்புடையனவாகும்.

ஒரு நாட்டின் மலைகள், ஆறுகள், அதன் தட்பவெப்ப நிலைகள், கனிவளம் ஆகியவை அந்நாட்டு மக்களின் சமூகப் பொருளாதார வாழ்க்கையினை உருவாக்குவதில் பெரும்பங்கு வகிக்கின்றன என்றும் மக்களின் வாழ்க்கைத் தரம், உடல்வளம், அறிவுத்திறன், சமூக மரபுகள், சமூக நிறுவனங்கள் ஆகியவற்றில் நாட்டின் புவியியல் சுவடுகளைக் காண முடியும் என்றும் கே.கே.பிள்ளை குறிப்பிட்டுள்ளார்.[7]

நிலவியற்கை ஒரு நாட்டின் வரலாற்றுக்குரிய நிலையான அடிப்படையாக அமைகிறது என்றும்,[8] ஓரினத்தின் படிப்படியான பண்பாட்டு வளர்ச்சிக்குரிய காரணங்களுள் நிலவியற்கையும் ஒன்றென்றும் கூறுவர்.[9]

மனிதனும் இயற்கையும் இணைந்து உருவாக்குவதே சமூக முன்னேற்றமாகும். இயற்கைச் சூழலுக்கும், சமூகத்திற்கும் உள்ள உறவு பற்றிய மேற்கண்ட பொதுவான கருத்துகள் பல நாடுகளின் வரலாறுகளால் மெய்ப்பிக்கப்படுகின்றன. அத்தீனியரின் மனவன்மைக்கு அந்நாட்டின் தூயக்காற்றே காரணமாகக் கூறப்படுகிறது.[10] அத்திகாவின் நிலம் வளமற்றது. ஏறத்தாழ எல்லா இடங்களிலும் மேல்மட்டத்தில் பாறை அமைந்துள்ளது. இதனால் அங்கு உழவுத்தொழில் வளர முடியவில்லை. வணிகமே இங்கு நாகரிகத்திற்கு உதவிற்று.[11]

அரசியல், பொருளாதாரம் ஆகிய துறைகள் மட்டுமன்றி சமயத்துறையும் கூட இயற்கைச் சூழல்களுக்குக் கட்டுப்பட்டதே என்பதனைத் தனிநாயக அடிகள் எடுத்துக்காட்டியுள்ளார். மாறுபாடற்ற இயற்கை அமைப்பைக் கொண்ட மணற்பாலை பகுதியில் ஒரு கடவுள் கோட்பாடு கொண்ட சமயமும், இயற்கை பல்வேறு வகைமைகள் கொண்டு விளங்கும் பகுதியிற் பல கடவுள் கோட்பாடு கொண்ட சமயமும் உருவானமையை அவர் எடுத்துக் காட்டுகிறார்.[12]

தமிழகத்தின் மலைகளும், ஆறுகளும், காடுகளும் தமிழ்நிலத்தைப் பல துண்டுப் பகுதிகளாகப் பிரித்தன. இதனால் தமிழகத்தின் பல பகுதிகளிலும் பல அரசுகள் தோன்ற இடமேற்பட்டது. சேர, சோழ, பாண்டிய நாடுகளும் தொண்டை நாடும், கொங்கு நாடும் இங்ஙனம் உருவாயினவே. தமிழகம் ஒரு மன்னனுடைய ஆளுமைக்கு உட்படாமைக்கு இதன் நில அமைப்பே காரணமாயிற்று.[13]

**தமிழக இயற்கை அமைப்பு :**

( தமிழில் காணப்படும் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை எனும் ஐந்திணைகட்கும் தமிழக நிலவியற்கைக்கும் உள்ள உறவு மிகவும் உண்மையானதும், நெருக்கமானதுமாகும். தமிழகத்தின் நில அமைப்பில் மலையும், கடலும், காடும், வளநிலப் பகுதியும், வறண்ட பகுதியும் ஆங்காங்கே காணப்பட்டமையே ஐந்திணை அமைப்பிற்கு

அடிப்படையாகும்.[14] தொல்காப்பியர் காடுறை உலகம், மை வரை உலகம், தீம்புனல் உலகம், பெருமணல் உலகம். என நான்கு நிலங்களையும் நான்கு வெவ்வேறு உலகங்களாக விளக்குகின்றார்.[15] ஒவ்வொரு நிலப்பகுதியும், தனக்கே சிறப்பாகவுரிய பயன்பாட்டுக் கூறுகளைத் தன்பாற் கொண்டு விளங்கியமை இதனாலறியப்படுகின்றது. தெய்வம், உணவு, பறை, யாழ், தொழில் முதலான பண்பாட்டுக் கூறுகள் நிலந்தோறும் வேறுபட்டமையைத் தொல்காப்பியரின் கருப்பொருட் கோட்பாடு விளக்குகின்றது.[16] திணைதொறும் மரீஇய திணைநிலைப் பெயர்[17] என்னும் தொல்காப்பியப் பகுதியால் நிலந்தோறும் மக்கட்குரிய பெயர்கள் வேறுபட்டமை உணரப்படுகிறது. சங்க இலக்கியங்கள் தொல்காப்பியர் கருத்தை மெய்ப்பிக்கின்றன. நாடன், வெற்பன், சிலம்பன் என்பன குறிஞ்சிநிலத் தலைவனுக்குரிய பெயர்களாம்.[18] குறும்பொறை, நாடன் (ஐங்.183:2) என்று முல்லைத் தலைவனும், புலம்பன், துறைவன், சேர்ப்பன் என்று நெய்தற் தலைவனும், ஊரன், மகிழ்நன் என மருதத் தலைவனும்[20] பெயர் பெற்றனர். சங்கப் புலவர் பெருமக்கள் அவ்வந்நிலத்தும் வாழ்ந்த மக்களின் பண்பாட்டுக் கூறுகளை வரலாற்று ஆசிரியர் போல் உண்மைத் தன்மையுடன் விளக்கியுள்ளனர்.

**குறிஞ்சி :**

மலைநிலமான குறிஞ்சியில் வாழ்ந்தோர் குறவர், கானவர் என்று அறியப்பட்டனர்.[21] இவ்வினப் பெண்பாலர் குறத்தி, கொடிச்சி எனப்பட்டனர்.[22] மலைப் பகுதிகளில் பெரிய ஊர்கள் உருவாக முடியாத நிலையில் சிறிய குடியிருப்புகளே தோன்றின. எனவே, அவை சிறுகுடி என்று சுட்டப்படுகின்றன.[23] இவர்களின் அடிப்படைத் தொழில் வேட்டையாடலேயாகும். பன்றி, மான், முள்ளம்பன்றி, யானை, புலி முதலானவற்றை இவர்கள் வேட்டையாடினர்.[24] வேட்டையில் நாயையும் பயன்படுத்தினர்.[25]

விலங்குகளை வேட்டையாடுதலோடு கிழங்ககழ்தல், தேனெடுத்தல், பலாப்பழம் தொகுத்தல், மாவடு தொகுத்தல் ஆகிய பணிகளிலும் ஈடுபட்டனர்.[26] மேலும், மலைவாணர் மிகவும் எளிய முறையில் மலைநிலத்தைப் பயன்படுத்தி, தினை விதைத்துப் பயன் கொண்டனர்.[27] கல்லுழு குறவர் (நற்றிணை 353:5) என்னும் குறிப்பால் குறவர் கூரிய கற்களை நிலம் உழப் பயன்படுத்தினரோ என ஐயுற வேண்டியுள்ளது. மாடுகளை இவர்கள் பயன்படுத்தியமைக்குச் சான்று கிடைக்கவில்லை.

**முல்லை :**

முல்லை நிலத்தில் வாழ்ந்தோர் ஆயர், பொதுவர், கோவலர், அண்டர், இடையர் எனப் பல பெயர்களால் அறியப்பட்டனர்.[28] இவர்தம் பெண் பாலரை 'ஆயமகள்' 'ஆய்மகள்' எனக் குறித்தனர்.[29] எருமைக்கிடையைக் கொண்டோர் கோட்டினத்தாயராவர்.[30] ஆடு மேய்த்தோரை புல்லினத்தாயர் என்றும், பசுக்களை மேய்த்தோரைக் கேவனத்தாயர் என்றும் சுட்டுவர்.[31]

கால்நடைகளை மேய்த்தல் இவர்களின் தலைமையான தொழிலாகும். எனினும் தினை விதைத்தலிலும் ஈடுபட்டனர்.[32] பால், தயிர், வெண்ணெய் முதலிய ஆன்படு பொருள்களைப் பிற நிலத்தவர்பால் விற்பது இவர்களின் பொருளாதாரத்தின் குறிப்பிடத்தக்க நிலையாகும்.[33]

**மருதம் :**

வளமார்ந்த மருத நிலத்தில் உழவுத்தொழில் புரிந்து வாழ்ந்தோர் உழவர் என அறியப்பட்டனர்.[34] ஏரின், வாழ்நர் (புறம் 33:4), பகடு புறந்தருநர் (பட்டினம் 35:32) என்றும் அறியப்பட்டனர். மருத நிலம் நாகரிகத்தின் இருப்பிடமாக விருந்தது என்று தெரிகின்றது. மருத நிலத்தில் ஊர்கள் நெருக்கமாக அமைந்திருந்தன. குறும்பல்லூர், 'நெடுஞ்சேணாட்டு' (பட்டினம் 28) என்பது பட்டினப்பாலை பகுதியாகும். உழவர் குடியிருப்புக்கள் 'தொல்பசியறியாத் துளங்கா இருக்கை' (பெரும்பான் 253) எனச் சிறப்பிக்கப்பட்டன.

மருதநிலம் ஆற்று வளத்தால் பிற நிலங்களிலும் பல படிகள் முன்னேற்றம் கண்டிருந்தது. நெல்லும், கரும்பும் இந்நிலத்தின் தலைமையான விளைபொருள்களாகும். நெல் விளைவது ஊருக்குப் பெருமையாகக் கருதப்பட்டது. உறந்தை குடவாயில், ஊணூர், முத்தூர், அம்பர், பருவூர் ஆகியவை இங்ஙனம் பாராட்டப்பட்டவையாகும்.[35] வளமின்மையை நெல் விளையாமை கொண்டு விளங்கும் வகையில் நெல் பண்டைத் தமிழர் வாழ்க்கையில் தனியிடம் பெற்றது.[36]

விரிந்த நிலப்பகுதிகட்கு உரிமையானவர்கள் தோன்றியிருந்தனர். உயர்ந்த கூடுகளில் நெல்லைச் சேர்த்து வைத்தமை பற்றிய சான்றுகள் உள்ளன.

"மோட்டெருமை முழுக் குழவி
கூட்டுநிழல் துயில்வதியும்."[37]

என்று சேரநாட்டு வளம் பாராட்டப்பட்டுள்ளது. நிலக்கிழாரின் களஞ்சியங்கள் மலை போல் உயர்ந்து காணப்பட்டன.[38] செல்வர் மனைகள் 'பெருஞ்சோற்று இல்லம்' (அகம் 275:9) என்றும் கூழுடைத் தந்தை இடனுடை வரைப்பு (அகம் 145:7) என்றும் 'நெல்லுடை நெடுநகர்' (அகம் 176:21) என்றும் பாராட்டப்பட்டன. யாண்டு கழி வெண்ணெல்லைக் கொடுத்துத் தமக்கு வேண்டும் பிற பொருள்களை உழவர் பெற்றனர்.[39] பழம், பல்லுணவு (பெரும் 246), பழம்பல் நெல்லின் ஊணூர் (அகம் 220:13) என்னும் குறிப்புகள் உழவரிடம் சேர்த்து வைக்கும் வழக்கம் இருந்தமையை விளக்குகின்றன. மருத நிலத்தின் கரும்பு காடுபோல் வளர்ந்தது.[40] எந்திரத்தைப் பயன்படுத்திக் கரும்பினைப் பிழிந்து சாறெடுத்தனர். சருக்கரை செய்யும் தொழிலும் இந்நிலத்தில் தோன்றிற்று.[41]

**நெய்தல் :**

நெய்தல் நிலமான கடற்கரை சார்ந்த பகுதிகளில் பரதவர் அல்லது நுளையர் வாழ்ந்தனர். இவர்கள் படகு, வலை, தூண்டில், எறியுளி ஆகியவற்றைக் கொண்டு மீன் பிடித்தனர்.[42] இரவில் மீன்பிடிக்கச்

செல்லுகையில் படகில் விளக்கேற்றிச் சென்றனர்.[43] முத்தும், சங்கு; குளித்தலும் இவர்கள் செய்த பணிகளாக இருந்தது.[44] இவர்களின் பொருளாதாரத்தில் உப்புக்கு இன்றியமையாச் சிறப்பிடமுண்டு. உப்பு விளைவித்தமையின் இவர்களையும் உழவர் என்றே குறித்தனர். 'உழாநாஞ்சில்' (புறம் 139:8) 'புகழாவாகை' (பெரும்பாண் 109) என்றவாறு இவர்கள் 'உழா உழவர்' (நற்றிணை 331:1) எனப்பட்டனர். கிளிஞ்சல்களில் மீன் நெய்யை இட்டு விளக்கேற்றுவது இவர் மரபாகும்.[45] உமணரிடம் உப்பை விற்று அதற்கீடாக வெண்ணெல்லைப் பெற்றனர்.[46]

**பாலை :**

வறண்ட நிலமான பாலையில் வாழ்ந்தோரை மறவர், மழவர், எயினர் எனப் பலவாறு குறிப்பர்.[47] இவர்கள் வாழ்ந்த இடம் 'குறும்பு' எனப்பட்டது.[48] வில்லையும், வேலையும் கொண்டு வழிப்போவாரை அலைத்து வாழும் இயல்பினரான இவர்கள் பண்பாட்டின் மிகத்தாழ்ந்த நிலையினர் என்பதில் ஐயமில்லை. கோவலரின் ஆக்களைக் கவர்ந்து சென்று பங்கிட்டுக் கொள்வது இவர் வழக்கமாகும்.[49] வழிப்போவார், இக்கள்வரால்பட்ட இன்னல்கள் பற்றிய சான்றுகள் மிகப்பலவாகும்.[50] கைப்பொருள் யாதும். இலரெனினும் அவர்களைக் கொன்று பறவைகளுக்கு ஊட்டும் வன்கணாளராக இவர்கள் வாழ்ந்தனர்.[51]

முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல் என்பன பண்டைத் தமிழகத்தின் இயற்கை நிலப் பிரிவுகள். இந்நிலத்துத் தோன்றிய கருப்பொருளாகிய மலர்களால் இவற்றிற்குப் பெயரமைந்தன. முல்லையும், குறிஞ்சியும் வேனிற் காலத்தில் பாலை எனும் படியாய்த் திரிதல் உண்டு. நிலவியற்கைக்குத் தகுந்தவாறு அங்கு வாழும் மக்களின் தொழில் அமைந்தது. நிலத்தை ஒட்டியும், செய்தொழிலை ஒட்டியும் இம்மக்கள் பெயர் குறித்து வழங்கப்பட்டனர்.

**தொழில் பிரிவுகள் :**

சங்க இலக்கியங்களால் வெளிப்படுத்தப்படும் தொழில்திறம் பல தலைமுறைகளின் வளர்ச்சியைக் குறிப்பது என்பதில் ஐயமில்லை. ஒவ்வொரு தொழிற் பிரிவாரும் தனித்தனிக் குடியினராக மதிக்கப்பட்டனர் என்பது அவரவர் தொழிலையும் அடையாகச் சேர்த்துப் புலவர்கள் சிலர் பேசப்படுவது கொண்டே உணரலாம். தொழில்களை அடிப்படையாகக் கொண்ட மக்கட் பாகுபாடு தொல்காப்பியர் காலத்திற்கு முன்பே தோன்றிவிட்டது என்று தமிழகத்துத் தொழிற் பிரிவுகளோடு ஆரியரின் சாதி பற்றிய கருத்துகள் இணைந்தன என்றும், இவ்விணைவினைப் புறநானூற்றிலேயே காண முடியும் என்றும் ந.சஞ்சீவி குறிப்பிட்டுள்ளார்.[52]

ஒரே தொழிலைத் தொடர்ந்து செய்யும் போக்கினால் பல தொழிற்பிரிவுகள் உருவாக இடமேற்பட்டது. காலஞ்செல்லச் செல்ல இப்பிரிவுகள் எண்ணிக்கையிற் பெருகின. சங்க காலத்திலேயே இத்தொழிற்பிரிவு ஒவ்வொன்றும் மரபு வழிப்பட்ட தனித்தனிப் பிரிவாக அமைந்துவிட்டது என்று தெரிகின்றது. கே.கே.பிள்ளை, இக்கருத்தை உடன்படுகின்றார்.[53]

**மன்னனும், வேந்தனும் :**

சங்க இலக்கியங்களின் பெருவேந்தர்கள் ஆளுமை நிறைந்த நிலையிலேயே குறிக்கப்பட்டிருக்கின்றனர். இவ்விலக்கியங்களுக்கு முற்பட்ட தொல்காப்பியமும், 'போந்தை வேம்பே ஆரென வருஉம் மாபெருந் தானையர்' என்று இவர்களைக் குறிக்கின்றது.[54] தானை, யானை, குதிரைப் படைகளும், கோட்டைக் கொத்தளங்களும், மதில் அகழிகளுமாக இன்னோரின் செல்வத் தகுதிப் பெருக உரைக்கப்படுவதைக் காணலாம்.[55] ஏனைக் குறுநில மன்னரும், வேளிரும் இருப்பினும் தமிழகத்தைப் பொதுமை சுட்டிய மூவருலகம் (புறம் 357:2) என்று புறநானூறு குறிப்பிடுகிறது. அடையாளப் பூமாலை வேய்ந்தோர் என்பது பற்றி இவர் வேந்தர் எனப்பட்டார். மூவேந்தர் குடி பற்றிக் கூறுகையில் 'படைப்புக்

காலந் தொட்டு மேம்பட்டு வருகின்ற குடி' என்பார் பரிமேலழகர்.[56] எனினும் வேந்தர்களை மிகப் பழைமையான சிற்றூர்த் தலைவர்களைப் பாடிய புலவர்கள் 'வம்ப வேந்தர்' என்று குறிப்பிடுகின்றனர். வம்பு என்பதற்குப் புதுமை எனத் தொல்காப்பியம் பொருள் கூறும் வேந்தர்கள் வழிவழியாக மண்ணாளும் மரபில் தோன்றியவரல்லர் என்பதை இச்சொல் குறிக்கின்றது. வழிமுறை வழிமுறையாக இம்மண்ணோடும், மக்களோடும் பழகி அவர்களோடு உணவருந்திக் கள் குடித்து இன்ப துன்பங்களில் பங்கேற்ற சீறூர்த் தலைவர்களை வேந்தர் என்று புலவர் பெருமக்கள் குறித்திலர். அவரை மன்னர் என்றும், இறைவன் என்றும், பெருந்தகை என்றும், நெடுந்தகை என்றும், குரிசில் என்றும் அழைத்துப் போற்றினர். இப்பெயர்களுள் மன்னர் என்போர் பெருவரவினதாக உள்ளது.[57] மன் என்பதற்கு நிலை பெறுதல் என்பது பொருளாகும். எனவே இவர்கள் தம்மை நிலைப்பேறு உடையவர் மண்ணோடு நீண்ட காலப்பிறப்புரிமை உடையவர் என்ற கருத்தில் இவ்வாறு குறித்தனர் என அறியலாம். இவர்களுள் குறுநில மன்னர் எனப்படுவோர் தம்மை 'வேள்' என்ற குடிப்பெயரால் குறித்துக் கொண்டனர். வேள் என்பதற்குத் தலைவன் என்பது பொருள். இப்பொருண்மை மண்ணுக்கு உரிமையுடையவன் என்பதிலிருந்தே தோன்றியிருக்க வேண்டும். மட்பாண்டம் செய்வோரைச் சங்க இலக்கியம் வேட்கோவர் (புறம் 32:9) எனக் குறிக்கக் காணலாம்.

மண்ணிற்கு உரிமை பூண்டவர் நிலத்தின் ஆதி குடிகள் என்ற முறையில் இவர் தம்மை மன்னர் என்றும் வேள் என்றும் குறித்திருக்கின்றனர். இம்மன்னர்கள் ஒரு காலத்தில் இனக்குழுத் தலைவர்களாக இருந்தவர்களேயாவர். இவர்கள் தலைவர்களாக இருந்தாலும் அவர்களிடத்தும் சோற்றுக்கில்லா வறுமையுண்டு. கடன் பட்டும், அடகு வைத்தும் விருந்தினரைக் காப்பாற்றும் மனப்பாங்குண்டு. வல்லான் முல்லை என்ற ஒரு துறையில் புலவர்கள் இம்மன்னரைப் புறநானூற்றின் பதினேழு பாடல்களில் போற்றிப் புகழ்கின்றனர்.[58]

ஆறு பாயும் வளமுடைய விளைநிலப் பகுதிகள் வேந்தர்க்குரியனவாக வானம் நோக்கிய வன்புல வைப்புகள் இச்சிறூர் மன்னர்க்காயின. இதனாலேயே இவர்கள் ஒரொருகால் வறுமையுற நேர்ந்தது. அதியமான் இத்தகைய மன்னர்களில் ஒருவன். அவனுடைய வறுமையும், வளமையும் ஔவையாரால் பாடப்பெறுகின்றன.[59] மூவேந்தர்களுக்கும், சிறூர் மன்னர்களுக்குமிடையே பல சமயங்களில் போர் மூண்டிருக்கிறது. கபிலர் பாரியின் பேராற்றலையும், வள்ளன்மையையும் புகழ்ந்து போற்றுங்கால் மூவேந்தரை நோக்கிப் பறம்பு நாட்டை நீங்கள் இரந்து பெறலாம் என இகழ்ச்சியாகப் பாடுவார்.[60]

பண்டைச் சமூகத்தில் பொருளியல் வலிமையாலும், அதிகாரப் பதத்தாலும் வேந்தன் தொழத் தகும் இறைவனாகவே இருந்தான். அவன் அரண்மனை கோயில் எனப்பட்டது. நிலவைக் கண்ட நிலையில் அவனது வெண்குடை போலுமெனப் புலவர் போற்றினர்.[61] வேந்தரைத் துயிலெழுப்பச் சூதரும், மாகதரும் வேதாளிகரும் நாட்காலை பண்ணிசைத்தனர்.[62] வேந்தரின் பிறப்பும், இறப்பும் விழுமியனவாகப் பேசப்பெற்றன.[63] காவற்கமைந்த வீறுசால் மகப்பெற்றமைக்காக வேந்தன் புகழப் பெறுகின்றான்.[64]

வேந்தர்கள் வழிவழியாகச் செல்வம் படைத்திருக்க மன்னர்கள் தம் அடுத்த தலைமுறைக்குரியவற்றைப் பாதுகாவாத நிலையைச் சங்கப் பாடல்கள் காட்டுகின்றன. வேந்தர்களின் நாற்படைப் பெருமை போல இம்மன்னர்களுக்குப் படைப் பெருமை இல்லை. மூவேந்தர்களின் முரசு கட்டில் கூட 'எண்ணெய் நுரை முகந்தது' போன்ற மென்மையுடையதாக இருக்கச் சீறூர்த் தலைவன் பாயில் உறங்குகிறான்.[65] வாழ்க்கை முறையில் அமைந்த இவ்வேறுபாடும் எண்ணத்தக்கதாகும்.

பெருவேந்தர்கள் நிலப்பிரபுக்களின் வழிவந்தவர்கள் என்று எண்ணுதற்குச் சங்க இலக்கியங்கள் சான்றளிக்கின்றன. சங்கக் காலத்தில் அரசு நிர்வாகத்தை இயக்கிய அதிகாரிகள் அனைவரும் அரசனின் ஆணை வழி ஒழுகுவோராகவே அமைந்தனர்.

பண்டைக் காலத்து அரசு அதிகாரிகள் அனைவருள்ளும் அமைச்சரே தலைமையானவராகவும், இன்றியமையாதவராகவும் விளங்கியிருக்கிறார். உயர்பிறப்பும், செல்வத்தகுதியும் போர் வினையாண்மையும் இப்பதவிகளுக்குரிய தகுதிகளாக மதிக்கப் பெற்றிருக்கின்றன. வேத காலத்தில் புரோகிதர் அரசுத்துறையில் பெருமதிப்பிற்குரியவராக இருந்திருக்கிறார். இராமாயண காலத்தில் இந்நிலை மாறியிருக்கிறது என்பர்.[66] ஆபஸ்தம்ப நூல் சூத்திரர் அமைச்சர் ஆக உரியரல்லர் என்கிறது.[67] இத்தகைய பாகுபாடுகள் சங்க இலக்கியத்தில் இல்லை. பண்புத் தகுதிகளே பெரிதும் போற்றப்பட்டன என்பதை அரசர்க்கு அமைந்த உறுதிச் சுற்றத்தினர் காவிதிப் பட்டம் பெற்றோராகவும் அமைந்தனர் என்ற குறிப்பால் அறிய முடிகின்றது.

"நன்றும் தீதும் கண்டாய்த் தடக்கி
அன்பும் அறனும் ஒழியாது காத்துப்
பழியொரீஇ யுயர்ந்து பாய்புகழ் நிறைந்த
செம்மை சான்ற காவிதி மாக்கள்.[68]

என்று கூறுவதிலிருந்து அன்னோரின் பண்புத் தகுதிகள் அறியப்படும். அரசர்க்கு உறுதி கூறும் இப்பெருமக்கள் பலராக இருந்தனர் என்பது, "பன்மீன் நாப்பன் திங்கள் போலப் பூத்த சுற்றம்" என்ற பதிற்றுப் பத்துப் பகுதியால் அறியப் பெறும். பால் புளிப்பினும் பகல் இருளினும் நால்வேத நெறி திரியினும் திரியாச் சுற்றம் (புறம்2:17) என்று இன்னோரின் தகுதியைப் புறநானூறு போற்றும். வேந்து தொழில் அயரும் அருந்தலைச் சுற்றம் (புறம் 285:7) என்று அரசர்க்கு நெருக்கமாக அமைந்த அலுவலரைப் புலவர் குறிக்கின்றனர். சங்கக் கால அமைச்சர்களைக் குறித்துக் கூறும் வரலாற்றுப் பேராசிரியர் இராமச்சந்திரன் கூறும் கருத்துகள் இங்கு கொள்ளத்தக்கனவாகும்.

"சங்ககாலத்து மன்னர்களுக்கு நல்லாட்சி புரிய உதவும் வகையில் அமைச்சர்கள் இருந்தார்கள். அவர்களைப் 'பெரியோர்' எனவும், சான்றோர் எனவும் சுட்டுவது பழைய வழக்கம், சங்க காலத்து மன்னர்களான பெருஞ்சேரலிரும்பொறைக்கு அரிசில்கிழார் அமைச்சராக அமைந்தார் என்றும், இளஞ்சேரலிரும்பொறைக்கு மையூர்கிழான் அமைச்சராக விளங்கினார் என்றும் பதிற்றுப்பத்துப் பதிகங்கள் குறிப்பிடுகின்றன. கச்சி மாநகரில் அமைச்சர்களுக்கென்று தனித்தெரு இருந்ததாகக் கூறப்படுகிறது.[69]

இக்குறிப்புகளிலிருந்து ஆன்றவிந்தடங்கிய கொள்கைச் சான்றவரையே அமைச்சராகத் தெரிந்து கொள்ளும் வழக்கம் புலனாகின்றது. நிரம்பிய கல்வியும் ஒழுக்கமும் அரசரிடத்து உயிரொன்றிய பற்றும் உடையராக அவர் அமைதல் வேண்டும். பொத்தியாரையும் அமைச்சராகக்கருத இடமுண்டு. அரசன் வாழுங்காலம் வரை அவனோடு பணியாற்றி அவன் உயிர் விடுங்காலத்து உடனுயிர் நீக்கத் துணிந்த நட்பின் ஒட்பம் பொத்தியார் பாடலாற் புலனாகும். பொத்தியார் கண்ணகனார் புல்லாற்றூர் எயிற்றியனார். என்றினைய சான்றவர் கேண்மை கோப்பெருஞ் சோழனுக்கு அழிவில் பெரும்புகழை ஈட்டித் தந்திருக்கின்றது. அரசரும், அமைச்சரும் உயிரும் உடம்புமாக இணைந்துச்செயல்பட வேண்டுவதன் இன்றியமையாமையினை இச்சான்றோர் பாடல்கள் எடுத்துக் காட்டுகின்றன.

அரிசில் கிழார் மையூர் கிழான் எனும் பேயர்களான நிலவுடைமைச் சமூகத்தினர் அமைச்சப் பொறுப்பேற்க உரியர் என அரசக்குடியினர் கருதியிருக்கலாம் என எண்ண இடமுண்டு. பிற்காலச் சோழர் காலத்தில் சேக்கிழார் அமைச்சராக இருந்தமையும் எண்ணுதற்குரியது. பண்டைச் சமூக அமைப்பில் நிலவருவாயே மிகப்பெரியதாகும். அதனடிப்படையில் இயங்கும் அரசு அத்துறையில் ஆதிக்கம் செலுத்திய நிலவுடைமையாளரைத் தம் உறுதிச்சுற்றமாகக் கொண்டதில் வியப்பில்லை.

அமைச்சரன்றிப் பல்வேறு அலுவலரும் அரசு இயந்திரத்தை இயக்கும் பணியில் ஈடுபட்டிருந்தனர். அதிகாரிகளும், அலுவலரும் எப்பெரிய நிலைக்குரியவராயினும் வேந்தன் செய்யும் முடிவே இறுதியானதாக இருந்திருக்கிறது. இது முடியரசின் இயல்பான பண்பாகும். வேத காலத்திலிருந்தே அரச நிர்வாகத்தில் புரோகிதர் சிறப்பிடம் பெற்றிருந்திருக்கின்றனர். பகைவரின் மந்திர ஆற்றலைத் தக்க சடங்குகள் வழி முறியடிப்பது அவருடைய பெருங்கடமையாக இருந்திருக்கின்றது. புரோகிதர், அரசர் வேறு செயல்களில் ஈடுபட்டிருந்த போது நிர்வாகப் பொறுப்பேற்பவராகவும் இருந்திருக்கின்றனர். இராமயணத்தில் அரியணைக்குரியவரைத் தீர்மானிக்கும் முன்னர் வசிட்டர் அப்பொறுப்பில் இருந்திருக்கின்றார்.[70] உபநிடதங்களும் புத்த சமண சமயச் சிந்தனைகளும் புரோகிதருக்கிருந்த சிறப்பிடத்தை மாற்றக் காரணமாயின. சங்க நூல்களில் புரோகிதருக்கு இத்தகைய இடம் அளிக்கப் பெறவில்லை என்பது கருதத்தக்கது. ஐம்பெருங்குழு, என்பேராயம் பற்றித் தெளிவான விளக்கங்கள் சங்க நூல்களில் இல்லை.

"ஆசான், பெருங்கணி, அமைச்சர், தானைத் தலைவர் ஆகிய நால்வகை அலுவலர் அரசனுடன் இருந்தனர் என்று சிலப்பதிகாரம் குறிப்பிடுகின்றது மற்றும் ஐம்பெருங்குழு எண்பேராயம் ஆகிய இரண்டையும் ஒருசேரக் குறிப்பிடுகையில் மேலே கண்டபடி இக்குழுவில் அடங்காத வேறு சிலரையும் குறிப்பிடுகிறது படைவீரர்கள், கருமவினைஞர், கணக்கியல் வினைஞர், தரும வினைஞர், தந்திர வினைஞர் என்போர் அவ்வாறு குறிப்பிடப்படுவர் ஆவர். இவர்களைப்போன்று இன்னும் பல அலுவலர்களும் இருந்தனர். நாழிகைக் கணக்கர் சூதர், மாகதர், வேதாளிகர், காவலர் முதலானோர் அவர்களில் குறிப்பிடத்தக்கவர்."[71]

என அக்காலத்திருந்த பல்வேறு அலுவலர்கள் பணிகுறித்த செய்திகளை வரலாற்றாசிரியர் எடுத்துக் காட்டுகின்றார்.

**அந்தணர் :**

வடபுலத்திலிருந்து ஏறத்தாழ கி.மு. ஐந்தாம் நூற்றாண்டு முதல் வைதிக அந்தணர் இங்கு வந்து குடியேறத் தொடங்கினர் எனத் தெரிகின்றது.[72] சங்க காலத்தில் இவர்கள் தமிழர் சமூகத்திலிருந்து பிரித்துக் காண இயலாத சிறப்பிடம் பெற்றுவிட்டமை அக்கால இலக்கியங்களால் அறியப்படுகின்றது இவர்கள் மருத நிலப் பகுதிகளிலேயே விரும்பிக் குடியேறினர்.[73] அந்தணர் பிற மாந்தர் வாழும் பகுதிக்கு அப்பால் தனியே குடியிருப்பமைத்து வாழ்ந்தனர் எனத் தெரிகின்றது. கோழியும், நாயும் நெருங்காததாகவும் பைஞ்சேறு மெழுகிய படிவ நன்னகராகவும், செழுங்கன்று யாத்த பந்தலைக் கொண்டதாகவும் அந்தணர் இல்லம் அமைந்திருந்தது.[74] மறைக் காப்பாளர் உறை பதி (பெரும்பான் 301) என்னும் தொடர் அந்தணர் தனித்த ஊரில் வாழ்ந்தமையை உணர்த்துகின்றது. இவர்கள் உயர்வகை நெல்லாற் சமைத்த சுவைமிக்க உணவினை உண்டனர்.[75] இவர்கள் சமூகத்தின் மிகவுயர்ந்த நிலையில் வைத்துப் போற்றப்பட்டனர். நாட்டின் காவலரான மன்னர்கள் இவர்களுக்குப் பணிதலைக் கடமையாகக் கொண்டனர்.[76] இவர்களின் குடியேற்றத்தால் வடபுலத்தின் பண்பாட்டுக் கூறுகள் பல இங்கு இடம்பெற வாய்ப்பேற்பட்டது.

**வணிகர் :**

மருத நிலத்திலேற்பட்ட பொருளாதார வளர்ச்சி வணிகர்களைத் தோற்றுவித்தது. இந்நிலத்தைச் சார்ந்த உமணர் என்பார் நெய்தல் நில விளைபொருளான உப்பை நாடு முழுவதும் கொண்டு சென்று விற்றனர். மக்கள் யாவராலும் பயன்படுத்தப்பட்ட உப்பினை விற்ற இம்மக்கள் பெருஞ்செல்வம் குவித்திருக்க இடமுண்டு. மலைபடு பொருள்களையும் கடல்படு பொருள்களையும் கழுதைகள் மேலேற்றிக் கொண்டு சென்ற வம்பலர் என்னும் வணிகர் பற்றிப் பெரும்பாணாற்றுப் படை தெரிவிக்கிறது.[78] ஆறலைக் கள்வர்க்கும் வணிகச் சாத்தினர்க்கும் நடந்த போர்கள் பற்றி அகப்பாடல்களிற் சான்றுகள் காணப்படுகின்றன.[79]

கோடைக் காலத்தில், தமிழக எல்லைகளைக் கடந்தும் பொருள் தேடச் சென்றவர்கள் பற்றிப் பல குறிப்புகள் உள்ளன.[80] மு.வரதராசன் இவர்களை வணிகர் என்றே கருதுகின்றார்.[81] இங்ஙனம் சென்றோர் இன்றைய மைசூர்ப் பகுதிக்குச் சென்று பொன்னைக் கொணர்ந்திருக்க இடமுண்டென்று கா. சிவத்தம்பி கூறியுள்ளார்.[82] இங்ஙனம் தமிழகத்திற்கப்பாலும் சென்று பொருளீட்டியோர் வளமான வாழ்க்கையினராக விளங்கியமையில் வியப்பில்லை.[83] இவர் இல்லங்களில் நிதிகள் நிறைந்து காணப்பட்டன.[84] வெளிநாட்டு வாணிகத்தினாற் பெரும் பொருளீட்டிய வணிகர்கள் புகார், காஞ்சி முதலான நகரங்களில் வாழ்ந்தனர். கூல வாணிகர், பொன் வாணிகர், பண்ட வாணிகர், அறுவை வாணிகர் முதலான பல வணிகர்கள் வாழ்ந்துள்ளனர் எனத் தெரிகின்றது.[85] வணிகர்கள் நல்லானொடு பகடோம்பியும் நான் மறையோர் புகழ் பரப்பியும்[86] வாழ்ந்தனர் எனப் பட்டினப்பாலை குறிப்பிட்டுள்ளது.

**வேளாளர் :**

வேளாண் தொழில் செய்து வாழ்க்கை நடத்திய மக்களே வேளாளர் எனப்பட்டனர். இத்தொழிலில் ஈடுபட்டவர்களை இரு பிரிவுகளாகப் பிரிக்கலாம். அவை, 1. உழுவித்து உண்போர், 2. உழுதுண்போர் இப்பிரிவுகளுள் யார் வேளாளர் என்பதில் அறிஞர்களிடையே கருத்து வேறுபாடு நிலவுகின்றது. சங்க காலத் தொழிற்பகுப்புகளில் வேளாளர் என்போர் சங்க இலக்கியங்களில் கூறப்படும் வேளிர் குடியினரே என்று மு. இராகவையங்காரும், மறைமலையடிகளாரும் கூறுகின்றனர். இக்கூற்றினை அறிஞர் கே.கே. பிள்ளை ஏற்கவில்லை. நச்சினார்க்கினியர் வேளாளரை உழுதுண்போர், உழுவித்துண்போர் என்று பகுப்பதையொட்டி அவற்றுள் இரண்டாம் வகைக்குரியவராக வேளாளரை எண்ணுதல் பிழை என்று பிள்ளையவர்கள் கருதுகிறார். அறிஞர்களின இத்தகு கருத்து வேறுபாட்டை கு.வே.பாலசுப்பிரமணியம் அவர்கள் சுட்டியுள்ளார்.[87] வேளாண் தொழில் சார்ந்த இவ்விரு பிரிவினரையுமே வேளாளர் என்று கூறும் பிள்ளையவர்களின் கருத்து ஏற்புடையதேயாகும். தொடக்கக் காலத்தில்

வயல்வெளிகளை உருவாக்கி அதில் வேலை செய்து பொருளாதார மேம்பாடு அடைந்தவர்களே பெரும்பாலானோர் பிற்காலத்தில் உழுவித்துண்போராக உயர்நிலையடைந்தனர் என்றும் எண்ணுதற்கு இடமுண்டு.

**தச்சர் :**

ஒரு நாகரிகச் சமுதாயத்திற்கு வேண்டிய அடிப்படையான கைத்தொழில்கள் அனைத்தும் பண்டு நன்கு வளர்ச்சியுற்றிருந்தன. அவற்றுள் சிறப்பானவை தச்சுத்தொழில், கொல்லுத் தொழில், நெசவுத் தொழில், மட்பாண்டத் தொழில் ஆகியவையாகும்.

பண்டைத் தமிழகத்தில் பெரிய வண்டிகள் வலிய கால்களைக் கொண்ட தேர்கள் செய்யப்பட்டன.[88] படகுகள் செய்யப்பட்டன. வீடுகளின் தூண்களும், நிலைகளும் அழகாகச் செய்யப்பட்டன.[89] பாண்டிமாதேவியின் கட்டில் பற்றி நெடுநல்வாடை கூறும் செய்திகள் அக்காலத் தச்சர் அடைந்திருந்த தொழில் தேர்ச்சியை விளக்க வல்லனவாகும்.[90]

**கொல்லர் :**

கொல்லருள் பொற்கொல்லர், இரும்புக் கொல்லர் என இரு பிரிவினர் இருந்தனர். பொற்கொல்லரின் கட்டளைக் கல் பல இடங்களில் சுட்டப்படுகின்றது.[91] பொன் வணிகரும், பொற்கொல்லரும் புலவராய் விளங்கியுள்ளனர்.[92] இரும்பு கொல்லரின் உலை பற்றிய செய்திகள் பலவிடங்களில் இடம் பெறுகின்றன.[93] அவர்கள் பயன்படுத்திய மிதியுலை, சம்மட்டி, குறடு ஆகியவை பற்றிய குறிப்புகள் கிடைக்கின்றன.[94] அன்றாடத் தேவைப் பொருட்களும், போர்க் கருவிகளும் இவர்களால் செய்யப்பட்டன.

ஊர்தோறும் கொல்லர் இருந்திருக்க இடமுண்டு. தன்னூர்க் கொல்லனை இரக்கும் என்னும் குறிப்பால் கொல்லர் ஊரின் பொதுப்

பணியாளராய் விளங்கினர் என உணர முடிகின்றது. 'ஏழூர்ப் பொது வினைக்கு ஓரூர் யாத்த மிதியுலை' (குறுந்.172:5-6) பற்றிய குறிப்பும் உண்டு.

**குயவர் :**

மட்பாண்டக் கலைஞரைக் குயவன் என்றும் வேட்கோ என்றும் கலஞ்செய்கோ என்றும் குறிப்பர்.[95] குயவரின் சூளையும் சாகாடும். அவரால் செய்யப்பட்ட தாழிகளும் பற்றிய செய்திகள் அறியக் கிடக்கின்றன.[96] அன்று பெரும்பான்மையான மக்கள் மட்பாண்டங்களையே பயன்படுத்தினர் என்று தெரிகின்றது.

**நெசவாளர் :**

சங்க இலக்கியத்தில் ஆடைகள் பற்றி இடம்பெறும் குறிப்புகள் நெசவுக்கலை அன்று அடைந்திருந்த முன்னேற்றத்தை விளக்குகின்றன. பாலாவி, பாம்புரி, மூங்கிலின் உள்தோல், புகை, எண்ணெய் நுரை ஆகியவை மெல்லிய ஆடைக்கு உவமைகளாகக் கூறப்பட்டுள்ளன.[97] சிலந்தியின் கூடு, பனிமூட்டம், வெயில் புகை, அருவி ஆகியவை வெண்துகிலுக்கு உவமைகளாகக் கூறப்பட்டுள்ளன.[98] ஆடைக்குக் கரையமைத்தல், வண்ணமூட்டல் ஆகிய கலைகளில் நெசவாளர் தேர்ச்சி பெற்றிருந்தனர்.[99]

**பிறதொழில் பிரிவினர் :**

அந்தணர் என்னும் பிரிவினர் சமூகத்தின் மேல்நிலையில் வைத்துப் போற்றப்பட்டனர் என்பது முன்னர்க் கூறப்பட்டது. இதற்கு நேர்மாறாக, அனைவராலும் தாழ்ந்தோராகச் சில பிரிவினர் கருதப்பட்டமை விளங்குகின்றது. 'காழியர்' என்பார் ஆடை வெளுக்கும் பிரிவினராவர்.[100] இக்குடியைச் சார்ந்த பெண்ணைப் 'புலைத்தி' எனப் புலவர் பெருமக்கள் சுட்டியுள்ளனர். பசை விரற் புலைத்தி (அகம் 34:11), வறனில் புலைத்தி (நற்றினை 90:3) என்று காழியர் குடிப்பெண்கள் சுட்டப்படுகின்றனர். ▯புலைத்தி▯ என்னும் சொல் பொதுவாக 'இழிந்தோர்' என்னும் பொருள் கொண்டதாகத் தெரிகின்றது. தெய்வமேற்பட்ட புலைத்தி குதித்தாடுதலைப் பற்றிப் புறநானூற்றுப் பாட்டொன்று குறிப்பிடுகின்றது.[101]

தண்ணுமையை முழக்கி வீரர்கள் போருக்குரிய பூக்கொள்ளும் நாளை அறிவித்தவனை இழிந்தோனாகப் புறநானூறு குறிப்பிடுகின்றது.[102] துடி கொட்டுபவனையும், இழிந்த பிறப்பினனாக இந்நூல் குறிப்பிடுகின்றது.[103]

'துடியெறியும் புலைய
எறிகோல் கொள்ளும் இழிசின !'[104]

என்னும் புறநானூற்றுப் பகுதியால் புலையனும், இழிசினனும் ஒருவரே என்று உணரலாம். இடுகாட்டிலிருந்து இறந்தோர்க்குச் செய்யும் சில சடங்குகளைச் செய்தோரும் புலையர் என்றே சுட்டப்படுகின்றனர்.[105]

துடி கொட்டுவோன் தண்ணுமை முழக்குவோன் இடுகாட்டில் சடங்கு செய்பவன் என்னும் அவர்களை இழிந்தோராகக் கொண்டாற் போலவே தோல்வார் கொண்டு கட்டில் பின்னுவானனையும் இழிந்தோனாகக் கொண்டனர்.[106] பாணனையும் புலையன் எனச் சுட்டும் மரபு சங்க இலக்கியத்திற் காணப்படுகிறது.[107]

பாணன், பறையன், துடியன், கடம்பன் என்னும் நால்வரையும்[108] ஒருசேரக் கூறுவது கொண்டு காண்கையில் இவர்கள் அக்காலச் சமூகத்தில் ஒரு நிகரனராகக் கொள்ளப் பட்டனர் என்று கருத வேண்டியுள்ளது.

பறையும், தண்ணுமையும் முழக்குவாரும் சுடுகாட்டில் இருந்து பிணம் சுடுவாரும் இன்றளவும் தமிழ்ச் சமூகத்தில் தாழ்ந்தோராகவே கருதப்பட்டு வருகின்றனர். சங்க காலத்தில் புலையன் என்றும், இழிபிறப்பாளன் என்றும், இழிசினன் என்றும் சுட்டப்பட்டவர் இன்றைய தாழ்த்தப்பட்ட மக்களின் முன்னோர்களே என்று கொள்வதில் தவறில்லை. வருணப் பிரிவுகள் தமிழகத்திற்கு வருமுன், மக்களிடையே பல்வேறு தொழிற்பிரிவுகள் இருந்தன. அவை அவ்வந்நிலத்துக் கருப்பொருளோடு உறவுடையன.

"அந்தணர், அரசர், அளவர், இடையர், இயவர், உப்பு வாணிகர் (உமணர்), உழவர், எயிற்றியர், கடம்பர், கடைசியர், கம்மியர், களமர், கிணைஞர், கிணைமகள், குயவர், குறத்தியர், குறவர், குறும்பர், கூத்தர், கொல்லர், கோசர், தச்சர், துடியர், தேர்ப்பாகர், நுளையர், பரதவர், பறையர், பாடினி, பாணர், பாணிச்சி, புலையர், பூண்செய் கொல்லர், பூவலைப் பெண்டு, பொதுவிலை மகளிர், பொருநர், மடையர், மழவர், மறத்தியர், மறவர், மோரியர், யவனர், யாழ்ப் புலவர், யானைப்பாகர் யானைவேட்டுவர், வடவடுகர், வண்ணாத்தி, வணிகர், வலைஞர், விலைப்பெண்டிர், வேடர்"[109] என்று அக்காலத்திலிருந்த தொழிற்பிரிவுகளை உ.வே. சாமிநாதையர் குறிக்கின்றார். வருண அடிப்படையிலான உயர்வு, தாழ்வு உண்டான பிறகு இத்தொழிற்பிரிவுகளிலும் உயர்வு தாழ்வு கருதப்படும் சூழ்நிலை உருவாகிவிட்டது. உடலுழைப்புப் பணிகள், மண்ணோடு தொடர்புடைய தொழில்கள், தோல் தொடர்பான செயல்கள், ஆடை வெளுத்தல், பிணம் சுடுதல் போன்றவையெல்லாம் இழிவு எனக் கருதப்பட்டிருக்கின்றன. இவ்வகை உணர்வே சாதிக்கு அடித்தளமிட்டிருக்கின்றது. துடி எறிவோர், பறையறைவோர், சுடுகாடு காப்போர், ஆடை வெளுப்போர், கட்டில் பின்னுவோர், நாற்று நடுதல் முதலான வேளாண் வினை செய்வோர் ஆகியோர் இழிசினர், புலையர், கடைசியர் என்னும் சொற்களால் குறிக்கப் பெறுகின்றனர்.[110]

பண்டைத் தமிழ்ச் சமூகத்தில் நிலவியற்கையையொட்டியும், தொழில்களையொட்டியும் மக்கள் பல்வேறு குடியினராய் வாழ்ந்தனர் என்பது இதுகாறும் விளக்கப்பட்டது. இம்மக்களுக்குள் செல்வ வறுமை வேறுபாடுகள் தோன்றி நிலைபெற்றிருந்தன என்பது தெளிவாக விளங்குகின்றது.

**பொருளாதார ஏற்றத் தாழ்வு :**

செல்வப் பெருக்கத்திற்கு உழவும், வாணிகமும் அடிப்படைகளாக இருந்தன என்பது முன்னர் கூறப்பட்டது. வளமையைப் பாடிய புலவர்கள் வருமையையும் பாடியுள்ளனர்.

செல்வரின் சிறார்கள் முக்காற் சிறுதேர் உருட்டி விளையாடிக் களைத்துச் செவிலியர் மார்பில் பாலுண்டு அமளியிசை உறங்கினர்.[111] வினைஞரின் சிறார் வயல்வெளிகளில் ஈருடைத் தலையினராய் அலைந்தனர்.[112] செல்வர் வான்தோயும் உயர் மாடத்தில் வாழ, வறியோர் நனைந்த சுவரைக்கொண்ட பழங்கூரையைக் கொண்ட வீட்டில் வாழ்ந்தனர்.[113] செல்வச் சிறார்க்குப் பொற்கின்னத்தில் பாலுணவு ஊட்டப்பட்டது.[114] ஆனால், வறுமையுற்ற தாயோ தன் பிள்ளைக்குப் பாலூட்டவும் முடியாத இல்லி தூர்ந்த பொல்லா வறுமுலையுடையவளாக வருந்தினாள்.[115] செல்வக் குழந்தைகள் உணவுண்ண மறுத்துச் செவிலியர் வருந்துமாறு ஓடவும்[116] வறியோர் குழந்தைகள் உணவில்லா வெறுங்கலம் திறந்து பார்த்து அழுதனர்.[117] பாலிற் செய்தனவும், பாகிற் செய்தனவுமான பண்டங்களைச் செல்வர் உண்ட போது[118] தெண்ணீர்ப் புற்கையையும்,[119] உப்பின்றி வெந்த வேளைக் கீரையையும் உண்டு வறியர் வாழ்ந்தனர்.[120] 'புனிற்று நாய் குரைக்கும் புல்லென் அட்டில்' என்று வறியரின் அட்டில் விளக்கப்படுகிறது.

அவிழ்புகு வறியாததாக வறியோரின் குடல் விளக்கப்பட்டுள்ளது.[121] எலும்புகள் வெளியில் தோன்றும் வண்ணம் வறியோரின் உடல் இளைத்திருந்தது.[122] அழுக்கேறிய கந்தலுடையை வறியோர் ஓம்பியுடுத்தினர்.[123] பொருளாதார அடிப்படையில் செல்வர், வறியர் என்னும் வேறுபாடு தோன்றியிருந்த வண்ணமே பிறப்பால் உயர்ந்தோர் தாழ்ந்தோர் என்னும் வேறுபாடும் தோன்றியிருந்தமை புலப்படுகிறது.

**வருணப் பாகுபாடு :**

வருணம் என்பதற்கு நிறம் என்பது பொருள். முதலில் நிற அடிப்படையில் தோன்றிய பாகுபாடே நால்வருணத்திற்கும் எண்ணிறந்த சாதிகளுக்கும் வழிவகுத்தது. ஆரியர் வருகைக்கு முன் தமிழகத்தில் அத்தகைய பிரிவுகள் இல்லை என்பதைப் பழந்தமிழ் இலக்கியப் பகுதிகள் சில உணர்த்துகின்றன. ஆரியர் புகுந்த பிறகு தோன்றிய வருணப்

பிரிவுகளையும் அவற்றையொட்டிய உயர்வு தாழ்வுக் கருத்து நிலைகளையும் சங்க இலக்கியத்தில் காணமுடிந்தாலும், பிற்காலத்தில் பெருகி வளர்ந்த சாதிப் பகுப்புகளையோ, தீண்டாமையினையோ இப்பனுவல்களில் காண முடிவதில்லை.

இன்னின்னவர், இன்னின்ன தொழில் செய்ய வேண்டுமென்ற வரையறையும் அவர்களால் கூறப்பட்டது. இருக்கு வேதத்தின் புருட சூக்தத்தில் கூறப்பட்டதே வைவசிய மனுவால் மேலும் வளர்க்கப்பட்டுப் பிரமனின் வாயிற் பிறந்தவர் பிராமணர், தோளில் தோன்றியவர் அரசர், வயிற்றில் உதித்தவர் வணிகர், தொடையிற் கிளைத்தவர் சூத்திரர் என்று கூறப்பட்டதென்பது அறிஞர் சர்மாவின் கூற்றாகும்.[124] இந்த வருணனையே நாகரிகக் குறைவினதென்று அவர் கருதுகின்றார். பதஞ்சலி வெள்ளை நிறத்தவர் பிராமணர் எனப் பொதுப்பட மொழிந்தார்.[125]

இருக்கு வேத காலத்தில் இரண்டு வருணங்களே இருந்தன என்றும், அவை காலப் போக்கில் நான்காகக் கிளைத்தன என்றும் பி.எல். பார்கவா என்பார் குறிக்கின்றார். [126] உடலுழைப்பில் சூரிய ஒளியில் வருத்தி உழைக்கும் தொழிலில் ஈடுபட்டுக் கருநிறம் பெற்றவர்க்கும் உண்ட வியர்ப்பன்றி உழைத்த வியர்ப்பறியாப் பொன்மேனியார்க்கும் இடையிலமைந்த வேறுபாடே வருணத் தோற்றத்திற்கு வழிவகுத்தது என்று ஏ.எல்.பாடம் கூறுகிறார்.[127] இந்நிற அடிப்படையில் இரண்டாக இருந்த சமூகப் பகுப்பு, மூன்றாகிப் பின் நான்காகியிருக்கின்றது. வெள்ளை நிறத்தவனே அறிவில் கூர்மையுடையவனாகக் கருதப்பட்டிருக்கிறான். பிராமணன் அறத்தின் உருவம் என்று மனு கூறுகின்றார்.[128] பார்ப்பார்க்கு ஆறு கடமைகள் உண்டு என மனு எடுத்துக்காட்டுகின்றார்.[129] சூத்திரர் எனப்படும் நான்காம் வருணத்தினர் பெரும்பாலும் அடிமைகளாகவே இருந்திருக்கின்றனர். இத்தகையோருக்குச் சொத்துரிமை இல்லையென்றும் இவர்கள் பொருள்களைப் பிராமணர் கவர்ந்து கொள்ளும் உரிமையுடையவர் என்றும் குறிக்கின்றனர்.[130]

தொல்காப்பியத்திலும் சங்க இலக்கியங்களிலும் இத்தகைய இறுக்கமான நால் வருணக் கோட்பாடும் கீழோரை ஒறுக்கும் பண்பும் இல்லை.

"அறுவகைப் பட்ட பார்ப்பனப் பக்கமும்

ஐவகைப் பட்ட அரசர் பக்கமும்

இருமூன்று மரபின் ஏனோர் பக்கமும்"[131]

என்று தொல்காப்பியம் நால்வருணப் பிரிவுகளைக் குறிக்கின்றது. அகத்திணையியலிலும், களவியலிலும் இவ்வருணக் கூறுபாடு தெளிவாகப் புலனாகும் வண்ணம் நூற்பாக்கள் அமைந்துள்ளன.[132] உயர்ந்தோர், மன்னர், பாங்கின் பின்னோர், ஏனோர், நால்வர் ஆகிய சொற்களுக்கு வருணச் சார்பின்றிப் பொருள் கூறும் முயற்சிகள் எல்லாம் வலிந்து கூறுவனவாகவே உள்ளன. களவுத் திருமணத்தை மறையோர் தேயத்து மன்றலாகிய கந்தருவத்துடன் ஒப்பக் கூறுவது ஆராயத்தக்கது. அயலவர் திருமண முறை வேறு, நம்மவருடைய மணமுறை வேறு என்று உணரும் அளவை இந்நூற்பா காட்டுகின்றது. பண்டைத் தமிழ் மணமுறையினை அகநானூற்றின் இருபாடல்கள் காட்டுகின்றன (அகம் 86, 136). ஆரியப் பண்பாடு தமிழகத்தை முழுவதும் ஊடுருவி விடாத ஒரு நிலைக்கு இவைகள் எடுத்துக்காட்டாகும். எனினும், வருண அடிப்படையில் மேல் கீழ் எனப் பகுக்கும் வழக்கம் புகுந்துவிட்டது என்பதை

"மேலோர் மூவர்க்கும் புணர்த்த காரணம்

கீழோர்க் காகிய காலமு முண்டே"[133]

என்ற நூற்பாவாலும் அறியலாம். மேற்பால், கீழ்ப்பால் எனப் புறநானூறு கூறுவனவும் வருணப் பாகுபாடுகளே.[134] நிலவியற்கை சார்ந்த வாழ்விலிருந்து பிறப்பைச் சார்ந்த ஒரு செயற்கை நெறியான வருண நெறியின் பால் பண்டைச் சமூகம் அடியெடுத்து வைத்தமையினை இத்தகைய நூற்பாக்கள் காட்டுகின்றன. இன்றைய திருமண முறையில், ஆரிய மொழியும், சடங்கும் முற்றக் குடியேறி விட்டமையினை நாம்

எண்ணுதல் வேண்டும். வருணப் பகுப்பின் நிழல் படரத் தொடங்கிய பண்டைக் காலத்தில் மொழியையும், தமக்குரிய சடங்குகளையும் இழக்கவில்லை என்பது எண்ணத் தகும். இவ்வருணப் பாகுபாட்டிற்கும், ஆரியர் சடங்குகளுக்கும் பழந்தமிழகத்தில் எதிர்ப்பிருந்தது என்பது உய்த்துணரத்தக்கதாக உள்ளது. ஆரிய அரசன் பிரகத்தனுக்குக் கபிலர் தமிழ்க்களவு நெறியைக் கற்பிக்கும் வகையில் குறிஞ்சிப் பாட்டுப் புனைதலும், எழுதாத கல்வியாகிய நும் வேதத்துள்ளும் இத்தகைய அகக் காதல் நெறியுண்டா? எனப் பெண்ணொருத்தி மறையவன் ஒருவனை வினவுதலும், பாணன், பறையன், துடியன், கடம்பன் (புறம், 335) என்று இந்நான் கல்லது குடியுமில்லை என்று மாங்குடி கிழார் பாடுவதும் வருணப் பாகுபாட்டை எதிர்த்துக் கூறும் கருத்துகளேயாகும்.

வருணப் பாகுபாட்டின் காரணமாக மேல், கீழ் என்று பகுத்து எண்ணும் நிலை சங்க காலத் தமிழகத்தில் இருந்தது என்பது திருக்குறளாலும் அறியப்படும். சங்க காலத்திலிருந்தே கள்ளுண்ணுதல், பரத்தமை ஆகியவற்றைத் தீயன என்று திருவள்ளுவர் குறிக்கக் காணலாம். பிறப்பின் அடிப்படையில் உயர்வு தாழ்வு கருதுதல், ஒழுக்கத்தை அடிப்படையாகக் கருதாமல், மந்திரங்கள், சாத்திரங்கள் ஆகியவற்றைக் கற்றிருப்பதன் அடிப்படையில் கற்பிக்கப்பட்ட உயர்ச்சியைக் கருதுதல் ஆகியன தவறு என்று கூறப்படுகின்றன.[135]

பிறப்பின் அடிப்படையில் வேறுபாடு கற்பித்த வடநூல் நெறிகளுக்கு முற்றும் முரணாக இது தமிழ்நெறி என்று அறிவிக்கும் வகையில் ‘பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும்’ என்று கூறினார்.

வருணக் கருத்தைப் புறக்கணிக்கும் ஒரு கருத்தைத் திருவள்ளுவர் கூறியிருப்பதற்கு அற்றைத் தமிழ்ச் சமூகம் வருணப் பாகுபாட்டை முழுக்க உடன்படாமையே காரணமாகும். சங்க காலத் தமிழகத்தில் சிற்றூர்ச் சமூக அமைப்பை வருணம் சிறிதும் அசைக்க இயலவில்லை. நகரத்தில் வாழ்ந்தவர்களையும், அரசக் குடியினரையுமே இது பெரிதும்

கவர்ந்திருக்கிறது. ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன் மேற்பால், கீழ்ப்பால் எனப் பகுப்பிருந்தமையினையும், கல்வி நலத்தால் அப்பகுப்பு கருதப் படாமையினையும் பாடுகின்றான் (புறம்-183). மேற்பால், கீழ்ப்பால் உள்ளமையினை ஒப்பிய நிலையில்தான் இப்பனுவல் இயற்றப்பட்டுள்ளது. சாத்தந்தையாரும், கழாத்தலையாரும், உறையூர் மருத்துவன் தாமோதரனாரும் இழிபிறப்பாளன், இழிசினன் என்ற சொற்களை உடன்பாட்டு நிலையில் ஆள்கின்றனர்.[136] பிறப்பின் அடிப்படையில் மேல், கீழ் எனக் கருதும் பாகுபாட்டை இழிபிறப்பினன் என்ற சொல் தெளிவுறக் காட்டுகின்றது.

சங்க இலக்கியங்களில், பிறப்படிப்படையில் கற்பிக்கப் பெற்ற வருணப் பாகுபாட்டிற்கு மறுதலையாக பண்புநலன்களின் அடிப்படையில் மனிதர்களை மதிப்பீடு செய்யும் எண்ணம் வெளிப்படுத்தப் பெறுகின்றது. சங்க காலத்தில் இவ்வருணப் பாகுபாட்டின் தாக்கம் சில தொழில்களை இழிவானவை என்று எண்ணும் நிலையை மட்டுமே உருவாக்கியிருக்கிறது. தீண்டாமை அகமணம் போன்ற கட்டுப்பாடுகளை அக்கால வாழ்வியலில் காணுதற்கில்லை.

நான்கு வருணத்தார்க்கும் உரிய கல்வி, தொழில் ஆகியன குறித்த செய்திகளை உரையாசிரியர்கள் கூறுகின்றனர். பார்ப்பார் அறுதொழிலோர் என்பதனைப் பதிற்றுப்பத்துக் குறிக்கின்றது.[137] ஓதல் முதலாகிய தொழில்களைக் குறிக்கும் உரையாசிரியர்கள் வேளாளர் எனப்படும் நான்காம் வருணத்தினர் வேதம் ஒழிந்த கல்விக்கே உரியர் எனக் கூறுகின்றனர்.[138] இது மனுவின் சிந்தனையை ஒத்ததாகும். சங்க காலத் தமிழகத்தில் கல்வியின் எப்பகுதியும் யார்க்கும் மறுத்துரைக்கப் பெறவில்லை என்பது கருதுதற்குரியது. எழுதாத கல்வியாக வேதத்தை வைத்திருந்ததும் வருண அடிப்படையில் கீழ்த்தட்டில் இருப்பவர் அதனைக் கற்கக் கூடாது என்ற எண்ணத்திலே யாகும். நான்காம் வருணத்தினன் ஒருவன் உயர்வர்க்கத்தினரோடு வாதுக்குச் சென்றால் அவனுக்கு அளிக்கத்தக்க கடும்

தண்டனைகள் குறித்து மனு சுமிருதி கூறுகின்றது.[139] இத்தகைய நிலை தமிழ் நிலத்தில் தோன்றியதில்லை என்பது பெருமைக்குரியதே ஆகும்.

**சங்க இலக்கியங்களும், சாதிப்பிரிவுகளும் :**

தொடக்கத்தில் ஒரே வகையான உடலமைப்புடைய உயிரினத் தொகுதியைக் குறிக்கச் சாதி என்னும் சொல் பயன்பட்டிருப்பதை உய்த்துணர முடிகிறது. தொல்காப்பியம் இச்சொல்லை மனித இனப்பிரிவுக்கு வழங்காமல் பறவைத் திரட்சிக்கு வழங்கக் காணலாம்.[140] தொல்காப்பியத்திலும், சங்க இலக்கியங்கள் எவற்றிலும் சாதி என்னும் சொல் மனித இனப்பகுப்பைக் குறிக்க வழங்கவில்லை என்பது எண்ணத்தக்கதாகும். முன்னர் குறித்தவாறு தொல்காப்பியத்தில் வருணப் பாகுபாடு பற்றிய செய்திகள் உள்ளன. தொல்காப்பியத்திலும், சங்க இலக்கியங்களிலும் சாதி இல்லை எனக் கொள்ளலாமேயன்றி வருணமில்லை எனக் கருதுதல் பொருந்தாது.

வேற்றுமை தெரிந்த நாற்பால் என்ற சங்க இலக்கியத் தொடர் குறித்துக் கூறும் அறிஞர் க. மீனாட்சிசுந்தரம், "அரசர், அந்தணர், வணிகர், வேளாளர் எனப்பட்ட சமுதாயத் தலைவர்களுடைய மரபுகளையே இவ்வடிகள் தெரிவிக்கின்றன. நாளடைவில் அந்நால்வகை மரபினரிடையே செய் தொழிலால் சிறப்பும், சிறப்பின்மையும் உண்டாயிருக்கலாம். எக்காலத்திலும் உலகின் பல்வேறு நாடுகளில் ஆட்சியாளர்களும், வணிகர்களுமே சமுதாயத்தில் சீரும், சிறப்பும் செல்வமும் செல்வாக்கும் பெற்று விளங்கியதாக வரலாறு பேசுகிறது. இதனால் 'கீழ்ப்பாலொருவன்' என்னும் தொடர் சமுதாயத்தின் கடைநிலையில் வறுமையில் வாழ்ந்த மக்கள் கூட்டத்தைச் சேர்ந்த ஒருவனைக் குறிப்பதாகலாம்"[141] என்று கருதுகிறார்.

வாகைத்திணை நூற்பாவும், ஓதல், தூது ஆகியவற்றுக்கு உரியோரைத் தெரிவிக்கும் அகத்திணையியல் நூற்பாவும், இழிசினன், இழிபிறப்பாளன் என்ற குறியீடுகளும், வருணப்பாகு, பாடுண்மையைத் தெளிவு செய்கின்றன.

பெரும்பாணாற்றுப்படையில் 'கடுப்புடைப் பறவைச் சாதி' என்ற வகையில் அஃறிணைத் திரளுக்குரியதாகச் சாதி என்ற சொல் வழங்கப்படுகிறது.[142] முதன்முதலில் இதனை மனித இன வகைக்குரியதாக வழங்குதலைச் சிலப்பதிகாரத்தலே காண முடிகிறது.[143] 'சாதி குலம் பிறப்பென்னும் சுழிபட்டுத் தவிக்கும் ஆதமிலி நாயேன்' என்று திருவாசகத்தில் மக்கள் இனப்பிரிவைக் குறிக்க வழங்குகிறது.[144] 'சாதி மாணிக்கம் என்கோ' எனத் திவ்வியப் பிரபந்தத்தில் பொருளில் உயர்ந்தது என்பதைக் குறிக்கின்றது.[145]

கால வளர்ச்சியில் இச்சொல் உயர்பொருளைப் பெறும் நிலையிலிருந்து கொண்டு சமுதாய மனப்பாங்கை உய்த்துணரலாம். பேராசிரியர் ந. சுப்பிரமணியன் சங்க இலக்கியங்களில் சாதி அமைப்பைக் குறித்துத் தெரிவிக்கையில் சங்க இலக்கியத்தில் பார்ப்பனரே பூணூல் அணிந்தவராகக் காணப் பெறுகின்றனர். ஏனைப் பிரிவினருக்குப் பூணூல் இல்லை. இதிலிருந்து தமிழகச் சாதிமுறை பார்ப்பனர்களையே அடிப்படையாகக் கொண்டு அமைந்தது என்பது விளங்கும். மையூர் கிழான், உப்புரிகுடி கிழான், மகன் ஆகிய வேளாளரும் அக்காலத்தில் பார்ப்பாராகி ருக்கின்றனர். ஆரியப் பார்ப்பாரின் மெய்யியற் கோட்பாடுகளால் ஈர்க்கப்பட்ட முனிவரும், துறவியரும், குருக்கள்மாரும், தத்துவ வித்தகரும், அறிஞரும் பிராமணர்களாக மாறி ஆரிய நாகரிகத்தையும், வேதச் சடங்குகளையும் பரப்புவோராகவும், புரப்போராகவும் ஆயினர். இக்காலத்தில் வட பகுதியில் இருந்து இங்கு வந்த பார்ப்பார் வடமர் எனப்பட்டனர். தமிழ்ப் பார்ப்பாரே கலப்பற்ற வேத நாகரிகத்தையும், சமசுகிருத மொழி மரபுகளையும் பாதுகாப்போராக விளங்கினர்.

"சாதி அமைப்பின் அறிமுகம் நாட்டில் புரட்சியினை உருவாக்கவில்லை. கீழ்க்கண்ட கொள்கைகளையே அது பரவச் செய்தது.

1.பார்ப்பாரின் உயர்தன்மை.

2. பிறப்பு வழியே வரும் தொழில்முறை எனினும் கல்வியும், ஒழுக்கமும் மனிதனின் சமூக நிலையை முடிவு செய்வனவாக இருந்தன

என்பது ஓர் ஆறுதல் அளிக்கும் செய்தியாகும். சுருக்கமாகக் குறிப்பிடுகையில் சாதிமுறையின் கடுமை, சமூகத் தலைவர்களால் செயல்முறையில் குறைவுபடுத்தப் பெற்றது" என்ற செய்திகளைத் தருகிறார்.[146]

இக்குறிப்புகளிலிருந்து இரு கருத்துகள் பெறப்படுகின்றன. 1. தமிழகச் சாதிமுறைக்குப் பிராமணரே மூலக்காரணியர். 2. தொடக்கத்தில் ஒரு சாதியினர் தம் ஒழுகுநெறியால் உயர்சாதியினராக மாறிக் கொள்ள முடியும்.

இக்கருத்துகள் சங்கப் பனுவல்களைக் கொண்டு ஆராயத்தக்கன. நானில அடிப்படையில் தோன்றிய தொழிற்பிரிவுகள் பிற்காலத்தில் மேலும் பற்பலவாகக் கிளைத்தன என்றும், அவையே சாதிப்பிரிவுகள் தோன்ற வழிவகுத்தன என்றும், கே.கே.பிள்ளை அவர்கள் கூறுவதை, கு.வெ. பாலசுப்பிரமணியம் அவர்கள் காட்டியுள்ளார்.[147]

"கால வளர்ச்சியில் புதிய தொழில்களின் தோற்றம் சமூகத்தில் புதிய பிரிவுகளை உண்டாக்க வழிவகுத்தது. நிலப்பிரிவுகளும் தொழிற்பிரிவுகளும் பல்வேறு உட்பிரிவுகள் தோன்றக் காரணமாயின. ஆகவே, சங்க காலத்தில் இனக்குழுவினரையும், நிலப்பிரிவுக்குரிய குழுவினரையும் தவிர தொழிற்பிரிவு அடிப்படையில் கைக்கோளர், கம்மாளர், துன்னக்காரர் ஆகியன போலும் எண்ணற்ற பிரிவினர் தோன்றினர். இந்நிலையில் பழைய தொழிற்பிரிவினரிடையேயும் உட்பிரிவுகள் தோன்றின. எடுத்துக்காட்டாக வேட்டுவர். குறவர் என வேறுபாடுடைப் பிரிவுகள் தோன்றின. வேட்டுவர் வேட்டைத் தொழில் புரிவோராகவும் இருந்தனர். குறவர் எனும் மலைமக்கள் அமைதியான தொழில் புரிவோராகவும் இருந்தனர். இக்குறவருள்ளும் பொருளாதார நிலையில் தாழ்ந்தோர் கொடியர், கொடிச்சியர் எனப்பட அந்நிலையில் உயர்ந்தோர் குறவர் குறத்தியர் எனப்பட்டனர். சங்கப் பாடல்களிலிருந்து கீழ்க்கண்ட மக்கட் பிரிவுகள் பற்றிய செய்திகள் அறியப்படுகின்றன. அளவர், இடையர், இயவர், உமணர், உழவர், எயிற்றியர், கடம்பர், கம்மியர், கணமர், குயவர், குறவர்,

குறும்பர், கூத்தர், கொல்லர், கோசர், தச்சர், துடியர், தேர்ப்பாகர், நுளையர், பரதவர், பறையர், பாணர், புலையர், பொருநர், மழவர், வடுகர், வண்ணார், வணிகர், வேடர் இப்பிரிவுகள் தொழில் அடிப்படையிலானவையே. கலந்து உணவு கொள்ளும் வழக்கத்திற்கு அக்காலத்தில் தடையில்லை. அகமணக்கட்டுப்பாடுகள் சங்க காலத்திலேயே தோன்றத் தொடங்கிவிட்டன" என்று கூறப்படும் செய்திகள் ஆராயத்தக்கன.

குறவர் என்பது குன்றவர் என்பதன் தொகுத்தல் விகாரப்பெயர். இது நில உடைமைப் பெயர். மலைகெழு நாடன், கான்கெழு நாடன் என்றாற் போலவாம். ஆயர், வேட்டுவர் என்பன தொழிலாற் பெற்ற பெயர். நிலப்பெயர், குடிப்பெயர், குழுவின் பெயர், வினைப்பெயர், உடைப்பெயர் என்ற பல்வேறு அடிப்படைகளில் மக்கள் பெயர் தோன்றுதலைத் தொல்காப்பியர் குறிக்கின்றார். இவற்றுள் உடைப்பெயருக்குச் சேனாவரையர், அம்பர்கிழான், பேரூர்கிழான், வெற்பன் சேர்ப்பான் என்பவற்றைக் காட்டுவர்.[148] ஆகவே, நில உடைமை, சொத்துடைமை ஆகியவற்றின் அடிப்படையில் ஒரு மேலாண்மை உருவாகியிருப்பதை இப்பெயர்கள் காட்டுகின்றன. 'உடையார் முன் இல்லார் போல்' (குறள் 395) என்னும் திருக்குறள் உவமை இத்தகைய செல்வர்களின் உயர்நிலையைத் தெளிவுறக் காட்டும். உடைமைகளில் அக்காலத்து மிகப்பெரியதாக மதிக்கப்பெற்றது விளைநிலமே. நிலத்தின் அளவடிப்படையிலும், வளத்தின் அடிப்படையிலும் மனிதர் உயர்ச்சி மதிக்கப் பெற்றிருக்கிறது. அம்பர் கிழானையும் பொறையாற்றுக் கிழானையும் கல்லாடனார் பாடும்போது அவர்களின் நெல் விளையும் வயற்சிறப்பைப் பாடுவர்.[149]

இந்நிலக்கிழார்கள் தம் உடைமை காரணமாக அரசர்க்கு நிகராக மதிக்கப் பட்டனர் என்பதை ஆராய்ச்சியாளர் காட்டுவர்.[150] நில உடைமையாளர்களிடம் ஊதியம் பெறுவோராகப் பணியாற்றிய உழைக்கும் இனத்தவர் பற்றிய குறிப்புகள் சங்கப் பாடல்களில் பலவிடங்களில் கிடைக்கின்றன.[151]

இக்குறிப்புகளில் தொழுவர், களமர், கடைசியர், வன்கை வினைஞர் ஆகிய சொற்கள் எண்ணத்தக்கன. உழவர் என்பார் நில உடைமையாளர் என்றும் கடைசியர் என்பார். வேளாண் கூலிகள் என்றும் மாரியப்பன் கூறுவது எண்ணத்தக்கதாகும்.[152] கடைசியர் என்பார் இன்றைய பள்ளர், பறையரின் முன்னோரேயென்பார்.[153] தொழுவர் என்ற சொல்லே பிற்காலத்தில் குற்றேவல் செய்வார் என்ற பொருளுடைய தொழும்பர் என்றும் தொம்பர் என்றும் ஆகியிருக்கிறது. களம் என்ற இடப்பெயரின் அடிப்படையில் களமர் என்னும் சொல் தோன்றியுள்ளது. வன்கை வினைஞர் என்னும் தொடர் கடுமையான உடல் உழைப்பினர் என்பதைத் தெளிவாகக் காட்டுகிறது. இவர்களைத் தாழ்ந்தவர் என்று எண்ணும் கருத்துநிலை சங்க காலத்தில் இருந்தது என்பதை மேலேக் காட்டப்பட்டுள்ளது.

ஆடுமாடுகளின் தோல், பிணம், அழுக்கு இவற்றைத் தூய்மையின்மை என்ற அடிப்படையில் கருதும் மனநிலையில் இவற்றோடு தொடர்புடைய ஏவலர் தாழ்ந்தவராகக் கருதப்பட்டுள்ளனர். இவர்கள் வேளாண் தொழிலோடு தொடர்புடையவர்கள், வன்கை, கருங்கை (புறம் 170:5-6) என்ற குறியீடுகளால் இவர்களின் தழும்பேறிய உழைப்புத் திறன் அறியப்படும். இவ்வடிப்படையில் கடுமையாக உழைக்கும் ஓர் இனம் தாழ்வாகக் கருதப்பட்டுள்ளமை அறியப்படுகிறது. நில உடைமையாற் பெற்ற செல்வ மேம்பாட்டால் வருந்தி உழைக்காத வாழ்க்கையும், அதனால் உடலளவில் மென்மையும் விளர்த்த நிறமும் பெறுதல் இயல்பு.

> கற்சோ றுண்டு வருந்துதொழி லல்லது
> பிறிதுதொழி லறியா வாகலின் நன்றும்
> மெல்லிய பெரும தாமே...[154]

எனக் கையின் மென்மைக்குக் காரணம் கூறுவர் கபிலர். உடலளவிலும், நிறத்தளவிலும் அமைந்த வேறுபாடுகளே செல்வர், இல்லார் ஆகியவர்க்குரியனவாக அமைந்து உயர்வு தாழ்வு கற்பித்ததற்கும் உரிமையாயின.

**சமயம் :**

சமயம் என்பது கடவுள் நம்பிக்கை சார்ந்த ஓர் அமைப்பாகவே கருதப்பட்டு வந்திருக்கிறது. கிரிசுடபர் டாவ்சன் என்ற சமூகவியல் அறிஞர் "எங்கெல்லாம், எப்பொழுதெல்லாம் தன்னை விட உயர்ந்த புரியாத தெய்வீகமான சக்தியை உணர்ந்து அச்சக்தியைச் சார்ந்து மனிதன் செயற்பட முற்படுகிறானோ அங்கெல்லாம் மதம் காணப்படுகிறது" என்று கடவுள் சார்ந்த தன்மையடிப்படையில் ஒரு விளக்கம் கூறுவார்.[155] மனித வாழ்க்கை, பிறப்பு, இறப்புகள், உயிர், உடல் பற்றிய சிந்தனைகள், பிறப்புக்கு முன்னும் இறப்பிற்குப் பின்னும் உள்ள நிலைகளைப் பற்றிய எண்ணங்கள், உலக வாழ்வின் இன்ப துன்பங்களுக்கான மூலங்களைப் பற்றிய கருத்துகள் ஆகியன பொதுவாகச் சமயங்களின் தத்துவம் சார்ந்த பகுதியாக அமய, சடங்குகள், பூசை நெறிகள், உடை இவற்றைக் கொள்ளுதலில் அமைந்த ஒழுக்கங்கள் இறந்தபின் உடலை எரித்தல், புதைத்தல் போன்ற வழக்கங்கள் ஆகியன சமயங்களின் நடைமுறை நெறிகளாக அமைகின்றன. சமயங்கள் பலவற்றுக்கும் கடவுட் சிந்தனையுண்டு. எனினும் சடங்குகள், கிரியைகள் ஆகியவற்றில் ஒவ்வொரு சமயமும் பிறிதினின்று வேறுபடுகிறது.

அறிஞர் மக்டூகல், பிராய்டு ஆகியோரின் கருத்து சமயங்குறித்து எண்ணத்தக்கவை ஆகும். மக்டூகல், "மத இயல்பூக்கம் என்பதனை ஏற்காமல், சமயம், அச்சத்தாலும் நன்றியறிதல் கலந்த வழிபாட்டுணர்ச்சியாலும் தோன்றியது" என்பார். பிராய்டு "சமயம் என்பது நனவிலியிலிருந்து (Unconscious) தோன்றியதென்றும் மனிதன் தன் தந்தையில் இருந்து உருவகித்துக் கொண்டதே கடவுள் பற்றிய கோட்பாடென்றும்" கருதுகிறார். சமயத் தோற்றத்தைப் பற்றிக் கூறுகையில்,

> "சமயத்தைப் பற்றிப் பேசுவோருள் சிலர் அறிவுப் பகுதியையும், வேறு சிலர் செயல் பகுதியையும் மற்றும் சிலர் உணர்ச்சிப் பகுதியையும் முதன்மையாகக் குறிக்கின்றனர். ஆனால், இம்மூன்றும் ஒன்றுபட்டு இயங்கும்போதுதான் நிறைவான சமயம் தோன்றுகிறது"[156]

- என்று அறிஞர் தேவசேனாபதி குறிப்பிடுவார். நிறைவான சமயம் என்ற நிலை மனிதன் தோன்றியதற்குப் பன்னெடுங் காலத்திற்குப் பிறகே என எண்ணுதல் பொருந்தும். எட்வர்டு டைலர் ஆவிகளை வழிபாடு செய்த தொடக்கக் காலத்திலேயே சமய எண்ணம் முகிழ்த்து விட்டது எனக் கருதுகிறார். ஆன்மாகளின் உயிரித்தன்மை அவை பொருள்களில் அல்லது இடங்களில் தங்கியிருத்தல், மனிதர்களுடன் அவற்றுக்குள்ள தொடர்பு என்ற அடிப்படைகளில் சமயம் தோன்றியதென்றும் இவ்வடிப்படையிலிருந்து முதலில் - பல கடவுட்கோட்பாடும், அதன்பின் ஒரு கடவுட் கோட்பாடும் வந்ததெனக் கருதுகிறார். துர்க்கீம் மேக்சு வெபர் முறையாகப் பெறப்பட்ட பண்பாட்டு வடிவங்களிலிருந்து ஒழுங்குற அமைத்துக் கொள்ளப்பட்டதே சமயம் என்கிறார்.[157]

இக்கருத்துகள் அனைத்தையும் நோக்க, சமயம் என்ற கட்டமைப்பில் கோட்பாடுகள், ஐதீகங்கள், ஒழுக்கநெறி போதனைகள், சடங்குகள், சமூக நிறுவனங்கள், மத அனுபவம் தரும் உந்துதல் அல்லது இயக்கப்பாட்டுயிர்ப்பு ஆகிய ஆறு பரிமாணங்கள் உள்ளன என எடுத்துக்காட்டுவார்.[158] இவையாவும் ஒரே காலநிலையில் உருவாகியிருத்தல் இயலாது. இந்திய வரலாறு கண்ட முதற்பண்பாடாகிய சிந்துவெளிப் பண்பாட்டில் சமயக் கோட்பாடுகளோ, நெறிமுறைகளோ இல்லை என்பார் அறிஞர்.[159] இலிங்க வடிவங்களை அவர்கள் வழிபட்டது கொண்டு கட்டமைப்புடைய ஒரு சமயத்தைச் சார்ந்திருந்தனர் என்று கூற இயலாது. திராவிட நாகரிகத்தின் சமயஞ்சாராத ஓர் இயற்கை நெறிக் காலம் சிந்துவெளி நாகரிகத்திலிருந்தே தொடர்ந்து வந்திருக்க வேண்டும். மர வழிபாடு, தாய்த் தெய்வ வழிபாடு, ஆவிகளில் நம்பிக்கை ஆகியன சிந்து சமவெளி நாகரிகக் கூறுகளாக இருந்திருக்கின்றன. சிந்துவெளி நாகரிகம் கி.மு.1600 அளவில் அழிந்துபட்டதாகக் கருதுவர். இதற்கும் பல நூற்றாண்டுகளுக்குப் பின்னர்த் தோன்றிய சங்கக் காலத்தில் வைதீகச் சமயக் கருத்துகள் சமண, பௌத்த, ஆன்மீக நெறிகள் ஆகியன தமிழகத்தில் புகுந்திருக்கின்றன என்பதை அக்கால இலக்கியங்கள் காட்டுகின்றன.

**வைதீகச் சமயம் :**

சங்க காலத்தில் வேத வழிபட்ட ஆரிய சமயம் நன்கு வேரூன்றியிருந்தது என்பதற்கு வலுவான சான்றுகள் கிடைத்துள்ளன. சமூகத்தின் மேல்தட்டில்தான் இதன் செல்வாக்கு மிகுதியாக இருந்தது. அதிலும் மதுரை, புகார், வஞ்சி போன்ற நகரங்களிலேயே வைதீகம் பரவியிருந்தது. ஊர்ப்புறங்களில் பெரும்பாலும் பழைமையான வழிபாட்டு முறையே நிலவிற்று.

கௌணிய கோத்திரத்தாரும், வடம கோத்திரத்தாரும் அக்காலத்தில் இங்கு இருந்தனர். வடம வண்ணக்கண் பேரிசாத்தனார் (புறம் 198) போன்ற மறையவர் குலத்தவர் புலவர்களாக இருந்தனர். பூஞ்சாற்றூரில் கௌணிய மரபில் பிறந்த விண்ணந்தாயனை ஆவூர் மூலங்கிழார் பெரிதும் பாராட்டியுள்ளார்.[160]

**வேத வேள்வி :**

செந்தீப் பேணி வேள்வி செய்து வழிபடும் முறை மூவேந்தர் நாட்டிலும் மிகப் பரவியிருந்ததாகத் தெரிய வருகிறது. அந்தணர் வேள்வி நடத்துதற்கு உரியவராகக் கூறப்படுகின்றனர். காடுகளில் முனிவர் செய்யும் வேள்வியைப் பற்றிய குறிப்பும் உண்டு. சேர, சோழ, பாண்டிய மன்னர்களும், பாரி, அதிகமான் முதலிய குறுநில மன்னர்களும் அந்தணரைக் கொண்டு வேள்வி செய்வித்து வழிபாடு நிகழ்த்தினர் என்பது புறநானூறு, பதிற்றுப் பத்து, மதுரைக் காஞ்சி முதலியவற்றிலிருந்து தெளிவாகத் தெரிய வருகின்றது.

வேள்வி செய்த முறைமையையும் அதில் நெய் முதலியன வார்த்து வழிபட்டமையும், ஒரு சில பாடல்களில் விவரிக்கப்பட்டுள்ளன. முக்கியமாகப் 'பார்ப்பன வாகை' என்னும் துறையில் அமைந்த 166 ஆம் புறப்பாட்டைச் சான்றாகக் குறிப்பிடலாம். இருபத்தொரு துறைகள் வேள்வியுள் உண்டு என்பது. புறப்பாடல் பகுதியால் புலப்படும்.[161] வேள்வியில் காட்டுள்ளும், நாட்டுள்ளும் வாழும் பதினான்கு வகைப்

பசுக்களிலிருந்து கிடைக்கும் நெய்யை நீர் நாணும்படியாக மிகுதியாகச் சொரிந்து எண்ணற்ற பல வேள்விகளைச் செய்தனராம். கொழுப்புடன் கூடிய ஊன் கலந்த சோற்றைப் பலியாகத் தீயில் சொரிந்தனர்.[162] மந்திர விதிகளின் முறைப்படிச் செய்யப்படுவது வேள்வி என்பது 'மந்திர விதியின் மரபுளி விழா அந்தணர் வேள்வி' (முருகு-95, 96) என்பதால் பெறப்படும்.

பெருஞ்சேரலிரும்பொறை தன் மனைவியோடு அமர்ந்து யாகம் செய்வித்த பயனால் அவனுடைய தேவியின் கருவில் சால்பு, செம்மை முதலிய நற்குணங்கள் நிரம்பிய புதல்வனைப் பெற்றான் என்று தெரிவிக்கப்ப பெற்றிருக்கிறது. யாகம் செய்தார் சுவர்க்கம் புகுவர் என்னும் நம்பிக்கையும் காணப்படுகிறது. 'ஆவுதி மண்ணி, மா விசும்பு வழங்கும் பெரியோர் போல்' (மதுரை 494-495) என்னும் மதுரைக் காஞ்சி அடிகள் இதனைக் குறிப்பிடுகின்றன. பாலைக் கௌதமனார் என்னும் புலவர் விருப்பின்படி பல்யானைச் செல்கெழு குட்டுவன் ஒன்பது பெருவேள்வி செய்வித்துப் பத்தாம் பெருவேள்வியில் அப்பார்ப்பனப் புலவரும் அவர் பத்தினியும் சொர்க்கம் பெற்றார்கள் என்பது பதிற்றுப்பத்து மூன்றாம் பத்துப் பதிகத்தில் காணும் செய்தி.

முருகப்பெருமான் விளங்கும் திருப்பரங்குன்றத்தில் வேள்வி வழிபாடு மிகுதியாக நிகழ்ந்தமையை ஒரு பரிபாடல் கற்பனை முறையில் தருகிறது.[163] அரசரும், பிறரும் அந்தணரைக் கொண்டு வேள்வி பல செய்வித்த செய்திகள் பலவாக உள்ளன. அரசருள் முதுகுடுமிப் பெருவழுதி சிறப்பாகக் குறிப்பிடத்தக்கவன். இவன் பல வேள்விகளைச் செய்தமையால், பல்யாக சாலை முதுகுடுமிப் பெருவழுதி என்று சிறப்பிக்கப்படுகிறான்.[164]

'யூபம் நட்டவியன்களம் பலகொல்' (புறம் 15:21) என வரும் புறநானூறு இவனுடைய யாகசாலையில் நாட்டப்பட்டுள்ள தூண்களை வியந்து போற்றுகிறது. இவன் யாகம் செய்த பெருஞ்சிறப்பால், 'நெடியோன்' என்று போற்றப்படுகிறான். இவனைத் தவிர, தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன், நான்மறை முனிவர்

- சுற்றமாகவும் மன்னர் ஏவல் செய்யவும் வேள்வி செய்தான்.[165] சோழர்களில் கரிகாலன் செய்த வேள்வியும், சோழன் குளமுற்றத்து துஞ்சிய கிள்ளி வளவன் செய்த வேள்வியும் குறிக்கப் பெற்றுள்ளன. கிள்ளிவளவன் நாட்டில் வேள்வி பலவாக நிகழ்ந்தது என்பதனை.

"அறுதொழில் அந்தணர் அறம்புரிந்து எடுத்த
தீயொடு விளங்கும் நாடன்"[167]

என இவன் போற்றப் பெறுதலால் நன்கு புலனாகும். சோழன் இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளி என்பானைப் பற்றிய குறிப்பு புறநானூற்றிலே நான்கு பாடல்களில் காணப்படுகிறது.[168] இவன் இராசசூயம் என்னும் பெருவேள்வி செய்தான் என்பதனை இவனது பெயருக்குரிய சிறப்பு அடைமொழி தெரிவிக்கும். இதுவன்றிப் பாடல்களில் தெளிவான சான்று இல்லை. 377 ஆம் புறப்பாட்டில், "அவி யுணவினோர் புறங்காப்ப அறநெஞ்சத்தோன் வாழ்நாள்" என்று இவன் வாழ்த்தப் பெறுகிறான். இதிலிருந்து இவன் அவியுணவினோராகிய தேவரை வேள்வியாற் போற்றினான் என்பது குறிப்பால் பெறப்படும்.

பல்யானைச் செல்கெழுகுட்டுவன், செல்வக்கடுங்கோ வாழியாதன், பெருஞ்சேரலிரும்பொறை என்னும் சேரமன்னர் மூவர் செய்த வேள்வியைப் பதிற்றுப்பத்து குறிப்பிடுகிறது.[169]

அதியமான் நெடுமானஞ்சி,[170] பாரி வள்ளல்,[171] கரும்பனூர் கிழான்[172] என்னும் குறுநில மன்னர்கள் அமரர்ப் பேணியும் ஆவுதி அருந்தியும் வழிபட்டனர் என்று தெரிய வருகிறது. தென்னவன் மறவன் பண்ணி என்பான் செய்த பயங்கெழு வேள்வியை அகநானூறு குறிப்பிடுகின்றது.[173]

காட்டில் தவமுனிவர் இயற்றும் வேள்வியும் சில இடங்களில் சிறப்பிக்கப் பெற்றிருக்கின்றது. முனிவர் இயற்றும் வேள்விக்கு யானை, மந்தி முதலிய விலங்குகளும் உதவி செய்கின்றனவாம்.[174]

முனிவர்களுள் சிறந்தவராகிய பரசுராமன் செய்த வேள்வி நிகழ்ச்சியை அகநானூற்றின் பாடற்பகுதி விளக்குகிறது.[175]

வேள்வி செய்யும் அந்தணர்கள் நன்கு போற்றப்படுகின்றனர். அரசர்களும் வணங்கிப் போற்றுவதோடு அவர்களைக் கொண்டு வேள்வி செய்தும், அவர்களுக்கு நிலம், பொருள்கள் முதலியன தானம் செய்தும் அவர்களைப் பேணி வந்துள்ளனர். 'பார்பார்க்கு அல்லது பணிபு அறியலையே' (பதிற்று 63:1) என்பது பதிற்றுப்பத்து.

**சமணமும் பௌத்தமும் :**

வேதவிதிக்கு மாறுபட்ட வேற்றுச் சமயங்களாகிய சமணம், பௌத்தம் என்னும் சமயங்களும், அச்சமயங்களின் வழிபாட்டு முறைகளும், ஆலயங்களும் எங்கும் வேரூன்றி விளங்கின என்பதைத் தெரிவிக்கும் ஒருசில குறிப்புகள் சங்கப் பாடல்களில் உள்ளன.[176]

மதுரைக் காஞ்சியும், பட்டினப்பாலையும் கூடலிலும் காவிரிப் பூம்பட்டினத்திலும் விளங்கிய புத்த, சமணப் பள்ளிகளைக் குறிப்பிட்டுக் கூறுதல் கவனிக்கத்தக்கது. சோழ, பாண்டியர்களுடைய கோநகர்களில் புத்த சமணர்கள் மிகுதியாய் இருந்தனர் எனில், அந்நாளில் தமிழ்நாட்டிலே இச்சமயத்தார்களும் மிகுந்திருந்தனர் என்று கொள்ளலாம் அன்றோ?

காவிரிப்பூம்பட்டிணத்துச் சிறப்புகளைக் கூறுமிடத்து அங்குள்ள பல இடங்களையும் காட்டி வரும் பட்டினப் பாலை.

"பகட்டு எருத்தின் பல்சாலை
தவப் பள்ளி தாழ்காவின்
அவிர் சடை முனிவர் அங்கி வேட்கும்
ஆவுதி நறும்புகை"[177]

என்பவற்றையும் குறிப்பிடுகிறது. இங்கே தவப்பள்ளி என்பது தவம் செய்யும் அமண பள்ளி, பௌத்தப்பள்ளிகளைக் குறிப்பதாகும்.

இப்பள்ளிகளையும் இங்கு மக்கள் சென்று வழிபாடு இயற்றுதலையும் மதுரைக்காஞ்சி விளக்கமாகத் தருகிறது.[178]

பேரிளம் பெண்டிர்கள் தமது குழந்தைகளை எடுத்துக் கொண்டு தத்தம் கணவன்மாருடன் கூடி, தாமும், கணவரும், பிள்ளைகளும் சீலத்தாலே விளங்கும்படியாகப் பௌத்தப் பள்ளிகளுக்குச் செல்கின்றனர். அங்கே, தாம் வழிபாடியற்றும், பூசைக்கு வேண்டிய பூவினையும் தூபங்களையும் ஏந்தியவர்களாய்ச் சென்று துதித்து வணங்குகின்றனர்.[179]

அமணப் பள்ளிகளில் சமண சமய விரதம் காக்கும் இல்லறத்தாராகிய சாவகர்கள் பூக்களையும் புகையினையும் ஏற்றித் துதிக்கிறார்கள். அங்கே முக்கால நிகழ்ச்சிகளையும் உணர்ந்து உரைக்கும் ஆற்றல் வாய்ந்தவரும், தேவருலகிலும், நிலவுலகிலும் ஆன எல்லாச் செய்திகளையும் தம் நெஞ்சால் எண்ணி அறிவோரும் ஆகிய ஆன்றோர்கள் உறைந்திருக்கின்றனர். அவர்கள் தமக்கு அமைந்த விரதங்களை மேற்கொண்டவர்கள். விரதங்காத்தலுக்குச் சளைக்காத உடம்பினையுடையவர்கள். நோன்பு செய்கைக்காகச் சிறிய வாயையுடைய குன்டிகையைப் பலவடங்களையுடைய நூல் உறியிலே தூக்கிச் செல்வர். அவர்களுடைய கோவில் மலைகள் போல் உயர்ந்து திரண்டு விளங்கின. செம்பால் செய்தாலொத்து விளங்கும் அக்கோயிலின் சுவர்களில் சித்திரம் தீட்டப்பட்டிருக்கும். வழிபடுதற்குரிய நறும்பூக்கள் பலவும் சூழ்ந்து காணப்படும். இவர்கள் பள்ளியைச் சூழ நறியபூஞ்சோலை பொலிந்து விளங்கும். இவ்வகையான தோற்றப் பொலிவுடன் விளங்கும் அமணப்பள்ளிக் காட்சியை மாங்குடி மருதனாரின் வாக்கிலும் கண்டு மகிழலாம்.[180]

சமண சமய முனிவர்கள் உண்ணாது பட்டினி நோன்பு இயற்றியமையால் வாடிய தோற்றத்தை உடையராய் நீராடாமை ஒழுக்கத்தையும் மேற்கொண்டவர் களாவர். இம்முனிவரின் தோற்றத்தை அழகு மழுங்கிய குன்றத்திற்கு உவமையாகத் தருகின்றார் காவிரிப்பூம்பட்டினத்துக்காரிக் கண்ணனார்.[181]

போதியார், இளம்போதியார், உலோச்சனார் போன்ற சில புலவர்களின் பெயர்களும் இம்மதச் சார்புடையனவேயாதல் வேண்டும். மேலும், கொல்லாமை, நிலையாமை, துறவு முதலியவற்றை மிகவும் வற்புறுத்தி வந்தனவும் சமண பௌத்த மதங்களே இவ்வகைப் பொருள்களை வற்புறுத்தியுரைக்கும் பாடற் பகுதிகளும் சங்கப் பாடல்களில் பலவாகும்.

சமணத் துறவிகளும் பௌத்தத் துறவிகளும் வாழ்ந்த குகைகளைப் பாண்டிய நாட்டில் காண்கிறோம். கி.மு. மூன்றாம் நூற்றாண்டிலேயே சமண பௌத்த சமயங்கள் இங்கு வந்து களப்பிரர் காலத்தில் ஓங்கி வளர்ந்தன. எனவே, சங்க நாளில் இவர்கள் பேரளவில் இருந்திருப்பரென்பதில் சிறிதும் ஐயமில்லை. கொல்லாமையைப் போற்றிய இச்சமயத்தாரின் கொள்கையினைச் சிலர் மேற்கொண்டிருந்தனர். காவிரிப்பூம்பட்டினத்து வணிகர்கள் வாழும் இடத்தில் மீன்கள் அச்சமின்றி விளையாடின. இவர்கட்குப் பகைவர் யாருமிலர் ; இவர்கள் கொலையும், களவும் நீக்கினர்.[182] இவர்கள் சமண பௌத்த சமயங்களைச் சார்ந்தோராதல் கூடும்.

குறுந்தொகைப் பாடல்களுள் பாண்டியன் ஏனாதி நெடுங்கண்ணனார் பாடிய பாடல் தமிழக மக்கள் வைதிக சமய நெறிக்கு மாறான நெறியர் என்பதைத் தெளிவுபடக் காட்டுகின்றது.[183]

'அருந்துயர் அவலம் தீர்க்கும் மருந்து' (நற்றினை 140) என்று பூதங்கண்ணனாரின் காதற்றலைவன் கூறுவது காதலைக் குறித்தது எனினும், புத்தரின் அறவுரை போலத் தோன்றக் காணலாம்.

'அரும்பிணி உருநர்க்கு வேட்டது கொடாது மருந்தாய்ந்து கொடுத்த அறவோன்' (நற்றினை 136) என மருத்துவநெறி கூறியாங்கு வாழ்வியற்கு உறுதி தருவனவற்றை அக்காலச் சான்றவருலகம் வழங்கிற்று. நற்றிணையில் இளம் போதியாரின் பாடல் அவர் பெயர்க்கேற்பப் பௌத்த சமயக்

கருத்தை நுவலாவிடினும் பெரியோரெனப்படுவார் பேணத்தக்கனவற்றைப் பேணுதல் வேண்டும் என்ற செய்தியை எடுத்துரைக்கக் காணலாம்.[184]

சமண பௌத்த நெறிகளின் சார்பால் பசு புனிதமானதாகவும் புரக்கப்படுவதற்குரிய தாகவும் கொலைப்படுத்தக் கூடாததாகவும் கருதப்பெற்றது. அரசக் குடியினரை வைதிக நெறி ஈர்த்த நிலையில் வணிகக் குடியினரைச் சமண நெறி ஈர்த்திருக்கிறது.

"கடலிறவின் சூடு தின்றும்

வயலாமைப் புழுக்குண்டும்"[185]

வாழுகின்றவர் புகார் மக்கள்.

சமண சமயத்திற்குரிய சமிதிகள் ஐந்து என்பர். அவற்றுள் இரியா சமிதி தலையாயது. புழு பூச்சிக்கும் கேடு நிகழாது ஒழுகுதலே இரியா சமிதியாகும்.

"தாதுண் பறவை பேதுற லஞ்சி

மணிநா ஆர்த்த மாண்வினைத் தேரன்"[186]

எனத் தலைமகனின் அருட்பண்பை இவ்வண்ணம் விளக்குதற்கு இச்சமூகத்தின் பார்வையில் இரியா சமிதி தோய்ந்த நிலையே காரணமெனலாம். உண்ணா நோன்பிருந்து உயிர் விடும் சல்லேகனை எனும் நோன்பு வடக்கிருத்தல் எனப்பெறும். இந்நோன்பு பௌத்த சமயத்திற்கு உடன்பாடன்று. பற்றற்றவராக நின்று வீடுபேறு ஒன்றனையே குறிக்கோளாகக் கொள்ளும் இந்நோன்பு குறித்துப் புறநானூற்றில் அறியப் பெறுகின்றது.(புறம் 217)

தமிழர் வாழ்வில் வடக்கிருக்கும் நோன்பு இடம் பெற்றிருந்தமை இதனால் விளங்குகின்றது. தன்னை ஒறுத்துக் கொள்வதன் வழி நன்மைபெறும் இம்முயற்சி சமணத்திற்கே உரியதாகும். கி.மு. மூன்றாம் நூற்றாண்டளவில் தமிழகம் போந்த புத்த சமயமும் தன் கொள்கைகளால் தமிழரிடையே மதிப்பைப் பெற்றிருந்திருக்கிறது. புறநானூற்றில் ஆவூர்

மூலங்கிழார் வைதிக நெறியினனான கௌணியன் விண்ணந்தாயன் "இகல் கண்டோர் மிகல் சாய்மார்" (புறம் 166:5) வேதத்துறை பலவும் கற்று முடித்தவன் என்பார். இவ்வடிக்குப் பழைய உரையாசிரியர் புத்த சமயத்தோரது மிகுதியைச் சாய்க்க வேண்டி என உரை கூறுவர்.

இவற்றைத் தவிர பௌத்த சமயம் குறித்த நேரான குறிப்புகள் சங்க இலக்கியத்தில் இல்லையென்றும் மக்கள் சமுதாயத்தில் அக்காலத்தில் பௌத்தம் ஒரு நிலையான இடத்தைப் பெற்றிருந்தது என்பதில் ஐயமிலலை என்றும் கூறுவார் வாசுதேவராவ்.[187] மணிமேகலையில் பௌத்தம் பற்றி ஆராய்ந்த பேராசிரியர் சோ.ந.கந்தசாமி சங்க இலக்கியங்களுள் காணப்பெறும் பௌத்தச் சார்புகளை எடுத்துரைப்பார். 'நிலந்தொட்டுப் புகார் வானமேறார்' என்னும் குறுந்தொகைப் பாட்டு புத்தர் நிகழ்த்திய வித்தைகளைத் தழுவியது என்பார். புறநானூறு கூறும் சிபியின் வரலாறு சரியபிடகத்தில் கூறப்பெறுவதே எனவும் மொழிவார். சங்க வருணன், தேராதரன், சிறுவண்டேரையார் ஆகிய புலவர்கள் பௌத்த சமயத்தினராகலாம் என்று கூறுவார்.[188] இவருள் சிறுவெண்டேரையார் வைதிக நெறியினர்க்கு அறை கூவல் விடுப்பார் போலப் பாடியுள்ள புறப்பனுவல் கருதத்தக்கதாகும்.[189]

வீர நிலைக் காலப்பண்புகளின் எச்சங்கள் பலப்பலவும் நிறைந்த சங்கச் சமூகத்தை இளக்கி ஒரு சமயத் தன்மையை அதற்கு ஊட்டியதற்குப் பௌத்தம் ஒரு பெருங்காரணமாகும். ஆழி மருங்கில் அலவல் ஓம்பவும் மழை நிலத்தே வரித்துச் செல்லும் செந்நிறப்பூச்சிகளைத் தேரின் உருள் சிதையாது பரிகரிக்கவும் தலைவன், பாகனுக்குக் கூறுமளவு அருளுணர்ச்சிப் பரந்து காணப்படுதற்கும் பௌத்த நெறியின் தாக்கமே காரணமெனலாம்.

ஆஅய் எயினன் பறவைகளின் நண்பனாக விளங்குவதும், அவன் களத்தில் வீழ்ந்த ஞான்றைப் பறவையினம் சிறகாற் கோலி நிழல் செய்ததும் நினைக்கத்தக்கன. பசிப்பிணி என வயிற்றுக்கின்மையை நோயெனவும் அதைத் துடைப்போரை மருத்துவரெனவும் கூறும் சிந்தனைப்பாங்கு

பௌத்த சமயச் சார்பாக எண்ணுதல் பொருந்துவதே.[190] சிறுகுடிக்கிழான் பண்ணனைச் சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளவளவன் 'பசிப்பிணி மருந்துவன்' என்று குறிப்பது பௌத்த சமயச் சிந்தனையை யொட்டிய ஒரு வழக்காறு எனலாம்.

வைதிக சமயம், சமண சமயம், பௌத்த சமயம் என்ற அயற்பகுதிகளிலிருந்து வந்த சமய நெறிகள் சங்கக் காலத் தமிழர் வாழ்வை ஊடுருவின. இவற்றால் தமிழகம் அவற்றின்பால் முற்றவும் சாய்ந்து விடவில்லை. எனினும், அச்சமயங்கள் கற்பித்த நன்னெறிகளைத் தம் வாழ்வில் சார்ந்த அறக்கோட்பாடுகளோடு இணைத்துக் கொண்டனர்.

**பெருந்தெய்வம்**

வைதிக, சமண, பௌத்த சமயங்களை பின்பற்றியவர்கள் தங்களுக்குள் தெய்வ வழிபாட்டினை மேற்கொண்டவர்களாயினர். இவர்கள் மேற்கொண்ட தெய்வ வழிபாட்டில் பெருந்தெய்வங்கள் என்பன குறிப்பிடத்தக்க ஒன்றாகும். வேதங்களும் புராணங்களும் இத்தெய்வங்களையே போற்றிப் புகழ்கின்றன. கோள் நாள்களுக்கு எல்லாம் மேற்பட்ட பேராற்றல் வாய்ந்தனவாகவும், ஐம்பெரும் பூதங்களை அடக்கியதாகவும் இப்பெருந்தெய்வங்கள் திகழ்கின்றன.[191] நான்கு திசைகளுக்கு காவலாக இப்பெருந்தெய்வங்களே விளங்குகின்றன.[192] படைத்தல், காத்தல், அழித்தல் என்ற முத்தொழில்களையும், பெருந்தெய்வங்களே நிகழ்த்துகின்றன.[193] ஒப்பாரும், மிக்காரும் இல்லாததாய் தனிப்பெரும் ஆற்றல் வாய்ந்ததாய் பெருந்தெய்வங்ள் வழங்குகின்றன பெருந்தெய்வம் என்ற வழக்கு சங்க காலத்தில் இருந்தமையை

"இருபெருந்தெய்வமும் உடன் நின்றா அங்கு"[194]

என்ற இலக்கிய வரியின் வாயிலாக உணரமுடிகிறது.

**இந்திரன்**

இந்திரன் வானுலகத் தேவர்களின அதபதி வளக்கத்து 'அமரர் செல்வன்' (பரி 5:69) 'அமரர் செல்வன்' (பரி 5:51) 'வானத்து வள்கெழு செல்வன்' (பரி 5:59) என்று சிறப்பிக்கப்படுகின்றான். இவன் வடபல் உயர்ந்தோங்கியுள்ள பெருமலையைக் காவல் புரிபவன். நூறு வேள்விகளைப் புரிந்தவன்; அதனால் வென்று கொல்லும் வெற்றி இயல்புடைய வச்சிராயுதத்தைக் கையில் ஏந்தியவன் நெடியேன் என்பவன் இவன் குறிக்கப்படுகிறான்.[195]

இந்திரனும் பிற தேவர்களும் அமுதை உட்கொள்ளுபவர். ஆகவே அவர்கள் அருந்தும் அமுது. இந்திரர் அமிழ்தம் (புறம் 182:1-2) என்று குறிக்கப்பட்டிருக்கிறது. முருகன் அவதார சரிதத்தில் இந்திரன் தொடர்பும் உள்ளது. இறைவன் உமாதேவியாரோடு கூடியின்புற்றதினால் தோன்றி கருவை இந்திரன் வேண்டுகோளுக்கு இணங்க அவ் இறைவன் சிதைத்தமை, குழவிப்பருவத்தில் படைக்கலம் இன்றியே முருகப்பெருமான் செய்த போருக்கு இந்திரன் தோற்றது, பேராற்றல் படைத்த முருகனே தனது சேனைக்குத் தலைவனாதற்குறியன் என இந்திரன் கருதியது, இந்திரன், அக்கினி, யமன் முதலிய தேவர்கள் முருகனுக்கு ஆயுதங்கள் அளித்தமை,[196] தேவர்க்காக அவுணர்களை அழித்து, இந்திரன் மகள் தெய்வயானையை முருகன் திருமணம் செய்து கொள்ளுதல்[197] முதலிய செய்திகள் இதில் குறிப்பிடத்தக்கனவாகும்.

அந்நாளில் பேரூர்களிலே இந்திரனுக்கு விழா கொண்டாடி வந்தனர். இது 'இந்திர விழா' என வழங்கப்பட்டது. இவ்விழாவில் பூக்களை மிகுதியாகப் பயன்படுத்தி வந்தனர் என்பது,[198] ஐங்குறு நூற்றுப் பாடற் பகுதியால் புலனாகும். சிலப்பதிகாரத்திலே, 'இந்திரவிழவூர் எடுத்த காதை'யில் புகார் நகரில் நடைபெற்ற இந்திரவிழா பற்றிய செய்திகளை விரிவாக இளங்கோவடிகள் பாடியுள்ளமையும் ஈண்டுக் கருதத்தக்கது.

**தேவர்கள்**

தேவர்கள் பிரமனிடத்திலிருந்து தோன்றியவர்கள். 'வானுலகில்' வாழ்பவர்; ஆகவே, இவர்கள் 'வானோர்' (புறம் 213:10), வானத்து நிலை பெறு கடவுள்' (பதிற்.21:15) என வழங்கப்படுகின்றனர். தவிரவும், அமரர் (புறம் 99:1), புத்தேள் (புறம் 22:35), ஐயர் (பதிற் 70:19), உயர்ந்தோர் (177:20), மேலோர் (புறம் 229:29), அவி உணவினோர் (புறம் 377:5), நாற்ற உணவினோர் (புறம் 182:1), முதலிய பெயர்களும் உண்டு. பூவுலகில் நல்வினை செய்வார் இவ் வான் உலகு பெறுவர். உலகில் பிறர்க்கு ஈந்து இசைபட வாழும் நல்லோர்க்கு அல்லாது பிறர்க்கு வானுலகம் கிட்டுதற்கு அரியதாம். இது அரிதின் முயன்று பெறத் தகுவது என்பது 'அரும்பெறல் உலகம்' (அகம் 55:14; புறம் 213:10) என்பதனால் தெரிய வரும். இவ்வுலகு இனிய வளம் பல நல்கும் பொலம் பூங்காவினை (கற்பகக்கா) உடையது; மிக்க எழில் வாய்ந்தது.

பல்வகையாக வேறுபட்ட பன்னிற மலர்களைத் தாங்கிச் செல்லும் வையை யாற்றின் நீரில் தோன்றும் நிற ஒளியைத் துறக்கத்தின் எழிலுக்கு ஒப்பிடுகிறார். ஒரு புலவர்.[200] இங்கே எல்லாரும் எவ்வகைக் குறைபாடுமின்றி இன்பம் துய்த்து வாழ்வர். உடையோர் இல்லார்க்கு ஈதலும், இல்லோர் உடையோர் பால் இரத்தலும் இந்நாட்டில் இல்லை. இவ்வகையான இவ்வானுலகின் இயல்புகளைப் புறப்பாட்டுப் பகுதிகளால் உணரலாம். இவ்வானுலகில் வாழும் தேவர்களோ அழுக்கு நீங்கிய உடம்பினை உடையவர்; தெய்வத் தன்மையால் ஒளி படைத்த வாடாத பூவை அணிந்தவர் ; இதழ் குவியாத கண்களை உடையவர். அவியாகிய நாற்ற உணவினை உண்பவர்கள்.[202]

**மால்**

குன்று தோறும் ஆடும் குழகன் முருகன் மட்டும் அல்லன் ; மாலும் குன்று உறை தெய்வமே. மதுரைக்கு அண்மையிலே திருப்பரங்குன்றத்தில் முருகன் எழுந்தருளிக் காட்சி தருமாறு போல, இந்நகருக்கு மற்றொரு

திக்கில் இருங்குன்றத்திலே மால் எழுந்தருளிக் காட்சி தருகிறான். திக்கெலாம் போற்ற அங்கே மால் குடி கொண்டிருத்தலால், அக்குன்றம், 'மாலிருங்குன்றம்' என்னும் பெயரையும் பெறுவதாயிற்று.

மால் (முல்லை) என்றும், மாயோன் (புறம் 57:2) என்றும் போற்றப்படும் இத்தெய்வம் காடுறை பொதுவர்களால் சிறப்பாக வழிபடப் பெறுவதாம். கலித்தொகையுள் அமைந்த முல்லைக் கலிப் பாடல்கள் பதினேழில் பொதுவர் குரவையாடித் திருமாலைப் போற்றும் செய்திகள் அமைந்தவை ஐந்தாம். இப்பாடல்களிலே ஆயர்தம் வாக்கில் வைத்து, 'தேயா விழுப்புகழ்த் தெய்வம்' (கலி.103:75), 'தொல்கதிர்த் திகிரியான்'(கலி.104:78), 'ஆடுகொள் நேமியான்' (கலி.105:72), மலையொடு மார்பு அமைந்த செல்வன் (கலி 108:55), 'தெய்வமால்' (ïo.107:22) என்று மாலைச் சிறப்பித்துப் பேசுகின்றார். மாலுக்குத் திருவைச் சேர்த்துத் 'திருமால்' என வழங்கும் வழக்கு சங்கப் பாடல்களில் இல்லை.

திருமால் கானவர் போற்றும் சிறப்புத் தெய்வமே ஆயினும் எல்லா நிலத்தும் எங்கும் தொழப்படும் தெய்வமும் அவனே என்கின்றனர். ஆலமர் செல்வனாகிய அரனும், கடம்பு உறை காளை ஆகிய முருகனும், மற்றும் பல்வேறு இடங்களில் உள எனப் போற்றப்படும் தெய்வங்களும் எல்லாம் அவனே என்கின்றார் ஒரு புலவர்.[203]

திருமாலைப் பற்றிய குறிப்பு முல்லைக் கலியில் மிகுந்தும் பிற சங்க நூல்களில் ஆங்காங்கும் காணப்படுகின்றன. பரிபாடல் திருமாலை வணங்கும் ஆறு தனிப் பாடல்களைக் கொண்டுள்ளது[204]. பரிபாடல் திரட்டில் வரும் ஒரு பாடலையும், இதனோடு சேர்ப்பின் இப்பரிபாடல் தொகுதி திருமாலுக்குரிய பாடல்கள் ஏழினைக் கொண்டுள்ளதாகும்.

**முருகன்**

சங்கப் புலவர் முருகு, முருகன், சேய், சேயோன், வேள், செவ்வேள், நெடுவேள், வேலன், வேலான் என்னும் பெயர்களால் முருகனைச் சுட்டுவர்.

காட்சியளிப்பதாகப் புறநானூறு, "எரிமருள் அவிர்சடை" (புறம் 56:1) என்று கூறுகிறது. இவனது சடை மிகவும் நீண்டது ; நீட்சியினால் தாழ்ந்து தொங்குகிறது என்கிறார் ஆலூர் மூலங்கிழார்.[219] இது நல்ல ஒளி வீசித் திகழ்கிறது. இச்சடையிலே நல்ல ஒளியை வீசும் நீரை மறைத்து வைத்துள்ளான்.[220]

பால் போன்று வெள்ளொளி தரும் பிறையை நெற்றியைப் போல பொலியுமாறு தன் திருமுடியிலே கொண்டுள்ளான்.[221] பெருமானது முக்கண்ணையும், கறைமிடற்றையும் சங்கப் புலவர்கள் ஒப்புமையாகவும், பிறவாறாகவும் எடுந்தாண்டுள்ளனர். இவனது முக்கண்களோ இமையாத முக்கண்கள்.[222] இவன் கறைக்கண்டனாக ஆனமைக்குக் காரணம் கரிய நஞ்சை உண்டமைதான். அதனால் இவனைக் 'காரி உண்டிக் கடவுள்' (மணபடு.83), 'மணிமிடறு' (புறம் 56:2) (பரி 9:7) என்னும் சிறப்பைப் பெற்றுள்ளது.

பலரும் புகழும் சிக்கென்ற தோள்களைப் படைத்தவன் [223] எண்கையாய் (கலி 1:4) என விளிக்கப்படுதலினால் இவனுக்கு எட்டுக் கைகள் உள்ளமை தெரியவரும். தோளிலே கொன்றை மாலையைத் தரித்திருப்பவன். ஆகவே இவன், 'மாண்மலர்க் கொன்றையவன்' (கலி 142:28), 'அயம் திகழ் நறுங்கொன்றை அலங்கல் அம் தெரியலான்' (கலி 150:1) என்று சிறப்பிக்கப்படுகின்றான். முக்கண்ணன் தனது வெற்றிக்கொடியாகக் கொண்டிருப்பது ஏறு; இதனால் இவன்; 'ஆன் ஏற்றுக் கொடியோன்' (கலி 26:5) என்று அழைக்கப்படுகிறான். இவன் ஏறிச் செல்லும் ஊர்தியும் ஏறுதான் அது வெண்ணிறமுடையது [224].

இவன் 'கணிச்சி' என்னும் மழுப்படையைத் தாங்கியவன் [225]. ஆகவே, வில்லும் இவனுக்கு ஆயுதமாக உள்ளமை தெரியவரும். முக்கண் செல்வன் உமையை ஒரு பாகத்தே கொண்டு உயர்ந்த மலையாகிய கயிலை மலையிலே அமர்ந்து யோகியாகக் காட்சி தருகின்றான் [226]. இவன் காம வதுவையுள் உமையோடு புணர்ந்து அமையாப் புணர்ச்சியில்

அமைந்ததனாலே முருகன் தோற்றம் அளித்தான். ஐந்தலைப் பெருமானாகிய முக்கண்ணன் ஆறுமுகப் பெருமானை ஈன்றளித்தான்[227].

இவனே அருந்தவ முதல்வனாய் ஆலின் கீழ் அமர்ந்து அறமுரைக்கும் யோகியாகவும் காட்சி தருகின்றான்[228]. 'ஆல்கெழு கடவுள்' (புறம் 198:9) என்று போற்றப்படுகிறான். கயிலை மலையைப் பெயர்த்தெடுக்க இராவணன் முற்பட்டதும், அவனுக்கு வாளும் வாழ்நாளும் அருளியதும் ஆகிய நிகழ்ச்சி குறிஞ்சிக் கலி பாடிய கபிலர் ஒரு பாடலில் உவமையாக எடுத்துரைக்கின்றார்.[229] முக்கண்ணன் முப்புரம் எரித்த செய்தியை விரிவாகவே சங்கப் பாடல்கள் தருகின்றன. [230]

முப்புரத்தை அழித்தது போலவே எல்லாவறறையும் அழிக்கும் கடவுளாக விளங்குபவனும் அவனே. அதனால் அவன், 'காய் கடவுள்' (கலி 5:13) ஆகின்றான். பல்லுயிரும் வருத்தத்தை அடையும் ஊழி முடிவிலே எருமை ஏற்றின்மேல் ஏறும் கூற்றைத் தன் காலாலேயே பிளந்து போட்டு எல்லா உயிர்களையும் உண்ட அந்தக்கூற்றுவனது உயிரையும் மாய்க்கின்றான்.[231]

**கொற்றவை**

முருகன் உமைபாலன் என்று புகழப்படுவது போலவே,

"வெற்றி வெல்போர்க் கொற்றவை சிறுவ
இழை அணி சிறப்பின் பழையோள் குழவி "[232]

என்றும் பாராட்டுகின்றார் நக்கீரர். சார்ந்த சக்தியாய் அமைந்துள்ள உமையே, முக்கண்ணானுக்குப் போர்ச்சக்தியாகக் 'கொற்றவை' என்னும் பெயருடன் காட்சி தருகிறாள். 'முதுமுதல்வன்' (புறம் 166:2) என்று முக்கண்ணானைக் குறித்தது போலவே இவளையும் பழையோள் எனறு கூறுதல் நோக்கத்தக்கது.

இவள் காட்டில் வாழும் மறவர்களால் போற்றப்படும் வெற்றிமகள் என்பதை 'ஓங்கு புகழ் கான் அமர் செல்வி' (அகம் 345:3-4), 'பெருங்காட்டுக் கொற்றி' (கலி 89:8), 'விடர் முகை அடுக்கத்து விறல் கெழு சூலி' (குறுந்.218:1) என வரும் பகுதிகளால் அறியலாம். கொற்றவையின் கோலம் பற்றிய குறிப்பு ஒன்று மகளிரின் தைந்நீராடல் பற்றிக் கூறும் பரிபாடல் பகுதியில் காணப்படுகிறது.[233]

'விறல்கெழுசூலி' (குறுந்.218:1) என இவளை அழைத்தலிலே இவள் தன் கரத்தில் சூலப் படையுடன் விளங்குகின்ற காட்சியும் காணலாம்.

'விறல்கெழு' என்னும் அடைமொழியால் இவள் வெற்றி மடந்தையாவாள் என்பது தெளிவு. இவள் வென்ற பெரும்போர் மகிடாசுரனை வதைத்ததேயாகும் என்பர். 'வெல்போர்க் கொற்றவை' என்றது மகிடனைச் செற்றதனை என்று நச்சினார்க்கினியர் கூறுகின்றார்.[234] 'வெற்றிக் கொற்றவை சிறுவ' (முருகு 248) என்னும் தொடருக்கு, 'வெற்றியை உலகத்திற்குக் கொடுக்கும் வன துர்க்கையினுடைய புதல்வ' என்று உரை எழுதுதலும் இங்குக் கருதத்தக்கது.

கொற்றவையின் கோட்டம் காட்டகத்தே விளங்குகிறது. இக்கோட்டத்தின் வருணனையை புறநானூற்றில் காணலாம்.[235]

கொற்றவையைத் தொழுது அவளுக்குப் பலிக்கடன் செலுத்துவர் மறவர் முதலியோர். அப்பொழுது காப்பாகத் தம் கையில் நூல் கட்டிக் கொள்ளுதலும் உண்டு.[236]

அயிரை மலையில் உறையும் தேவியைக் குறிக்குமிடத்து மார்பினின்று உண்டாகும் குருதியைப் பலியாகப் பெறுவதல்லாமல் நிவேதனமாக அளிக்கும் பிற பொருளை ஏற்றுக் கொள்ளாத அச்சம் வருகின்ற முறைமையையுடைய கடவுளாவாள் என்றுபதிற்றுப்பத்து கூறுகிறது.[237] மேலும், குருதியைத் தெளித்துக் கலந்த திரட்சியான சோற்றுப் பிண்டங்களால் இந்த அயிரைமலைக் கொற்றவையை

இளஞ்சேரலிரும்பொறை வழிபட்டான் என்னும் செய்தி பதிற்றுப்பத்தில் காணப்படுகிறது.[238]

**சிறுதெய்வம்**

பெருங்கடவுளர் என்று ஒரு சில கடவுளர்க்குக் கோவிலும், விழாவும் எடுத்து வழிபட்டமையைப் பேரூர்களிலும் நாகரிகம் வளர்ச்சி பெறத் தொடங்கிய சிற்றூர்களிலும்தான் சங்க நாளில் காண முடிகிறது. இந்த ஊர்களிலும் கூடப் பற்பல சிறுசிறு தெய்வங்களையும் மக்கள் போற்றி வந்திருக்கின்றனர். இந்தத் தெய்வங்களில் பெரும்பாலனவும் மக்களுக்குத் துன்பமும், கொடுமையும் புரிந்தனவாகும். இவற்றை 'உருகெழு மரபின் கடவுள்' (பதிற் 21:5) என்று கொண்டனர்.

அச்சம், வருத்தம் என்னும் பொருள் தரும் அணங்கு, சூர் முதலிய பெயர்களால் இத்தெய்வங்களைக் குறிப்பிடுதலும் கவனிக்கத்தக்கது. ஆகவே, மக்கள் தமக்கு அச்சத்தை விளைவித்த பல பொருள்களும் தம்மை வருத்தும் இயல்பின எனவும், பேராற்றல் படைத்தன எனவும் கொண்டு, அவற்றைத் தெய்வமாகவே தொழுதனர். இவர்களுடைய வணக்கத்திற்கு மலை, காடு, மரம், சுனை, ஆற்றிடைக் குறை, கழி, கடல் முதலியன எல்லாம் உரியவாகின்றன. யாழ், முரசு, ஆயுதம் முதலிய கருவிகளிலும் தெய்வம் உறைவதாகப் போற்றப்படுகிறது. எனவே, தமது வாழ்வுக்கு வளம் சேர்க்கும் பொருள்களிலும் தெய்வம் உறைவதாகக் கருதி அவற்றை வழிபட்டு வந்துள்ளனர். மக்கள் வாழும் வீட்டிலும் இல்லுறை தெய்வங்கள் சில இடம் பெறுகின்றன. ஊர்களில் உள்ள தெருச்சந்திகள், மன்றங்கள், பொதுச் சபையிடங்கள் இவற்றிலும் தெய்வங்கள் குடிகொண்டுள்ளன. சிறு தெய்வத்தை நாட்டுப்புற தெய்வம் என்றும் வழங்குவர்.

**மலை உறை தெய்வம் :**

மலை வழியில் செல்லும் கூத்தர்களுக்கு இவ்வகையான தெய்வங்களின் இருப்பிடங்கள் நடுக்கத்தைத் தருவன. ஆதலால்

மலைநாட்டில் பல நாள் தங்கியிருத்தல் கூடாது என்று அறிவுறுத்துதலை மலைபடு கடாத்துள் காண்கிறோம்.[239] வரையர மகளிர் என்பார் மலைக்குகைகளிலே பார்ப்பார் கண்களுக்குத் தென்படாது மறைந்து உறைபவராவர்.[240] இதனால் இவர்கள் காட்சிக்கு அரியராயுள்ளனர் என்பது தெரிய வரும்.

மலைவாழ் தெய்வங்களுக்குப் பலியிட்டுக் குன்றவர் வழிபாடு செய்கின்றனர். குன்றவர் தமது சுற்றத்தார்களுடன் கூடி வழிபாடு இயற்றுகின்றனர். கோடையில் முற்றி முதிர்ந்து பழுத்த தேனினும் இனிய மாங்கனிகளோடு பலாச் சுளைகளையும் இட்டுத் தேனுடன் கூட்டி, மூங்கில் குழாய்களிலே இட்டு வைத்து முதிர்ந்த பக்குவம் அடைந்த கள்ளினை மலைத்தெய்வத்திற்குப் படைக்கின்றனர். வழிபட்டபின் அந்தக் கள் முதலியவற்றை மகளிர் தர உண்டு, தம்மையும் மறந்து கள்ளின் மயக்கிலே ஆழ்ந்து இன்புறுகின்றனர்.[241] வரைஉறை தெய்வம் மகிழ குரவையாடியும் அவர்கள் போற்றுகின்றனர்.

**காடு உறை தெய்வம்**

மலையைத் தவிர தெய்வம் உறைவிடங்களாகக் காடும். சிறுகாடும். பெருவழிகளும் மற்றும் எங்ஙனும் உறைவிடங்களாக அமைகின்றன. காட்டில் உறையும் தெய்வங்கள் மரஞ்செடி கொடிகளிலும் மலர் மண்டிக் கிடக்கும் சோலைகளிலும் உறைதல் வியப்பன்று. காடும் காவும் கவின் பெறு துருத்தியும் (முருகு 223) தெய்வம் உறைறயும் இடங்கள் என்பார் நக்கீரர். ஆலமரம் (குறுந்.15:1; நற்.343:3-6; புறம் 199:1) மாமரம் (குறுந்.87:1-2; மலை 395; கலி101:13) கடம்பு (பதிற்.88:6) வேங்கை (நற் 216:6-7) ஓமை (அகம் 29:11), வேம்பு (அகம் 309:4-6), மருது (பெரும் 232) மனை (நற்.303:3-4) கள்ளி (புறம் 26:5) என்னும் மரங்களில் தெய்வம் உறைதல் குறிப்பிடப்பட்டுள்ளது. வெற்றி மடந்தையாகிய தெய்வம் வாகை மறத்தில் வாழ்கின்றனளாம்.[242] இம்மரங்களில் உறையும் தெய்வங்களுக்கு மகிழ்ச்சி உண்டாக வேண்டி நெடிய மாலைகளை அம்மரக்கொம்புகளிலே

தொங்கவிடுவர்.[243] மரங்களில் உறையும் தெய்வங்களுக்கு அம்மரங்களின் அடியில் பலிச்சோறு இடுதலும், பிற பலிகளைக் கொடுத்தலும் உண்டு.

**நீர்த்துறைத் தெய்வம்**

நீர் நிலை பெற்றுள்ள சுனை, குளம், ஆறு, ஆற்றுத்துருத்தி, கடல், கழிமுகம் என்பவற்றிலும் தெய்வம் உறைவதாக வழிபட்டமையும் சங்கப் பாடல்களில் காணலாம். 'உண்துறை அணங்கு இவள்' (ஐங்.28:1), 'துறை எவன் அணங்கும்' (ஐங்.58:1), 'அருந்திறற் தெய்வம் அல்லன்' (182:3-4), என வரும் ஐங்குறுநூற்று அடிகள் மகளிரை வருத்தும் நீர்த்துறைத் தெய்வங்களைச் சுட்டிக் காட்டுகின்றன. 'கடவுட் கற்சுனை' (நற்.34:1), 'சூர்ச்சுனை' (அகம் 91:4) என்பன சுனை உறை தெய்வத்தைக் குறிக்கும். ஆற்றின் நடுவில் அமைந்துள்ள துருத்தி எனப்படும் திட்டுக்களிலும் தெய்வம் காண்கின்றனர். 'நல்யாற்று நடுவும்' (பா.4:67), 'கவின்பெறு துருத்தியும்' (முருகு 223) என்று பரிபாடலும் முருகாற்றுப்படையும் துருத்தியில் தெய்வம் உறைதலைச் சுட்டும். ஆறு கடலோடு கலக்கும் நீர்ச்சுழிகள் நிறைந்த கழிமுகத்திலும் கூட ஒரு தெய்வம் உறைகின்றது. தெய்வம் சுட்டி ஆணையிடும் தோழி செவிலித்தாயை நோக்கி,

"கொடுஞ்சுழிப் புகாஅர்த் தெய்வம் நோக்கி,
கடுஞ்சூழ் தருகுவன், நினக்கே"[244]

என்று கழிமுகத்துறைத் தெய்வத்தின் மேல் ஆணையிட்டுப் பேசுகிறாள். எல்லா நீர்களையும் ஏற்கும் பெரிய கடற்பரப்பில் உறையும் தெய்வம் நீர்த்தெய்வங்களிலே மிகப் பெரிதும் போற்றி வணங்கப்படுகிறது. இப்பெருங்கடல் தெய்வத்தின் மேல் ஆணையிட்டுக் கூறுதலும் உண்டு.[245]

கொற்கைத் துறையிலே நெய்தல் நில மகளிர் பனித்துறைக் கடவுளுக்கு முத்தும், வலம்புரிச் சங்கு முதலியனவும் சொரிந்து வழிபாடு இயற்றும் காட்சியையும் அகநானூறு தருகிறது. நீருரையும் தெய்வத்திற்கும் வழிபாடு செய்யும் வழக்கமும் தெரிய வருகிறது.[246]

**வருத்தும் தெய்வம் அணங்கும் சூரும்**

மலை, மரம், நீர் ஆகியவற்றில் உறையும் தெய்வங்களில் பெரும்பாலனவும் வருத்தும் தெய்வங்களேயாம். அச்சமும், வருத்தமும் விளைவிக்கும் காரணம் பற்றி இத்தெய்வங்களை 'அணங்கு' என்றும், 'சூர்' என்றும் குறிப்பிடுகின்றனர். இவற்றுள் 'அணங்கு' என்பது தெய்வத்தைக் குறிக்கும் பொதுப் பெயராகவும் வழங்கப்பட்டிருக்கிறது.[247] மக்களைத் தீண்டி வருத்தும் இயல்புடைய அணங்குகளைத் 'தாக்கு அணங்கு' (பரி 11:122) என்று கவிஞர்கள் குறிப்பிடுகின்றனர். தாக்கு அணங்கு தம்மை எதிர்ப்பட்டாரைத் தாக்கும் என்பதும், சிறப்பாகக் கன்னி மகளிரைத் தீண்டித் துன்புறுத்தும் என்பதும் புலனாகும்.

அணங்கைப் போலவே வருத்தும் தெய்வம் சூர் என்பதுவும், மலைநாட்டில் உள்ள வழிகளில் செல்லுதற்கு அருமை பற்றி விளக்கவந்த இடத்தில் அங்குச் செல்வார்க்குக் கொடுமை செய்யும் 'சூரை'யும் உடன் கூறுகிறது குறிஞ்சிப்பாட்டு.[248]

அணங்கு, சூர் என்னும் தெய்வங்களின் ஆவேசம் வரப்பெற்றார் துள்ளித்துள்ளி ஆடுவர். துள்ளிச் செல்லும் ஆனிரைக்குத் தெய்வம் மெய்யின்கண் ஏறிய புலைமகளை 'முருகு மெய்ப்பட்ட புலைத்தி போல, தாவுபு தெறிக்கும் ஆன்' (புறம் 259:5-6) ஒப்பிடுகின்றார் ஒரு கவிஞர் என்பது வாக்கு. 'சூர் நசைந்தனையையாய் நடுங்கல் கண்டே' (குறுந்.522) என்பதும், சூரினால் விரும்பிப் பற்றப்பட்டார் நடுக்கம் அடைதலைத் தெரிவிக்கும். மக்கள் மட்டுமல்லர் ; பிற உயிரினங்களுக்குக் கூடச் சூரினால் பற்றப்பட்டால் நடுக்கம் எய்தும் என்பது 'சூர் உறு மஞ்ஞையின் நடுங்க' (குறிஞ்சி 169) என வரும் குறிஞ்சிப் பாட்டு அடியால் உணரலாம்.

**யாழ்த்தெய்வம்**

யாழ், முரசு முதலிய கருவிகளில் உறையும் தெய்வமும் அணங்கு எனவே குறிக்கப்பட்டிருக்கிறது.

"மனம் கமழ் மாதரை மண்ணியன்ன
அணங்கு மெய்ந் நின்ற அமைவரு காட்சி
ஆறுஅலை கள்வர் படைவிட அருளின்
மாறுதலை பெயர்க்கும் மருவு இன் மாலை" [249]

என்று பொருநன் கையில் ஏந்திச் செல்லும் பாலை யாழைப் பொருநராற்றுப்படை வருணிக்கிறது.

**ஆயுதத்திலும் முரசிலும் அமர்ந்துறை அணங்கு**

வீரர்கள் கைக்கொண்டிருக்கும் ஆயுதங்களிலும் அணங்கு அமர்ந்து அவர்களுடைய தொழில்களில் வெற்றி நல்குகிறாள்.

"அரவின் பொறியும் அணங்கும் புணர்ந்த
உரவு வில்மேல் அசைத்த கையை" [250]

என வருவது விற்படையில் சேர்ந்துறையும் அணங்கைக் குறிப்பிடுகிறது. அரசர்கள் தமது வீரமுரசத்தைச் சிறப்பாகப் போற்றினர். இம்முரசு வைக்கப்பெற்றிருக்கும் பீடம் முரசுக் கட்டில் என வழங்கப்படுகிறது. இந்த முரசும் தெய்வத்திற்குரிய சிறப்பைப் பெறுகிறது. இதனை நீராட்டி இதற்கு மாலை முதலியன அணிவித்துக் குருதிப்பலி கொடுத்துப் போற்றுதல் மரபு.[251]

முரசுறை தெய்வத்திற்குச் செய்யும் வழிபாட்டினைப் பதிற்றுப்பத்தின் முப்பதாம் பாடல் விரிவாக விளக்கி உரைக்கின்றது. முரசுறை தெய்வத்தை வழிபடுவோன் மிக்க சினத்துடன் உரக்க உச்சரிக்கப்படும் மந்திரங்களால் குருதி, கள்ளு முதலிய பலிகளைக் கொடுக்கிறான். இவன் முரசுறை தெய்வத்திற்குப் பலியாக இட்ட பிண்டத்தைப் பேய்மகளும், எறும்பு முதலியனவும் நடுங்கி நெருங்காமல் இருக்க, காக்கையும் பருந்தும் உண்ணுகின்றன.[252]

மன்னர்கள் போரிடும் போர்க்கள நிகழ்ச்சிகளும், அவர்தம் வெற்றிச் சிறப்புகளும் பேசப்படும் இடத்துப் பேய், பிசாசு,பூதம் முதலிய பெருந்துன்பம் விளைவிக்கும் சிறு தெய்வங்கள் இடம் பெறுகின்றன. வருத்துகின்ற தெய்வத்தன்மை 'அணங்கு சால் உயர்நிலை' எனப்படும். மக்களுக்குப் பேரச்சத்தை விளைவித்து வந்தமையால், இவை 'உருகெழு தெய்வம்' என வழங்கப்பட்டன. அவையாவன 'பேயும், பூதமும், நிரையப்பாலரும், அணங்குதல் தொழிலராகிய சவந்தின் பெண்டிர் முதலாயினாரும் பிறருமாம்' என்பர். பேயினத் தெய்வங்கள் பாசம், பிசாசு, கழுது, பழு, அணங்கு, கூளி, பூதம் முதலிய பெயர்களைப் பெறுகின்றன. மதுரைக் காஞ்சியடிகளில் பேய், அணங்கு, கழுது என்பன குறிக்கப்பட்டுள்ளன.[253]

உதியஞ்சேரலாதன் தன் போர்ப்படை வீரர்களுக்குப் பெருஞ்சோறு அளித்த காலத்துப் போர்க்களத்தே கூடியிருந்த குட்டை, நெட்டை, கட்டையான பேய்களின் உருப் போன்ற சிறிய, பெரிய குன்றங்கள் காட்சியளிக்கின்றன என்று மாமூலனார் உவமிக்கின்றார்.[254]

இவையெல்லாம் கொற்றவையின் பரிவாரங்களாம். பேய், பிசாசுகளிலும் ஆண், பெண் பால் வேற்றுமை உண்டு.[255]

பேய்களின் உருவத்தோற்றத்தைச் சங்கப் பாடல்கள் பல்வேறு வகையாக வருணித்துள்ளன. அவற்றால் அவற்றின் தோற்றம் ஒருவாறு நமக்குப் புலப்படுகிறது. பொதுவாகப் பேய்கள் கண்ணுக்கு இனிய காட்சியை உடையனவல்ல ; தூய்மையும் நன்மணமும் வாய்க்கப் பெற்றனவல்ல.[256] பேயின் தலை தாழை மரத்தின் தோற்றம் போல் உள்ளது.[257] 'கவைத் தலைப் பேய்மகள்' (பதிற் 13:15) என வரும் தொடர், பேய்களின் தலை இரண்டாகப் பிளவுபட்டும் தோன்றும் என்பதைக் குறிப்பிடுகிறது. இப்பேய்களின் கண்கள், முரசின் கண்கள் போன்றவை.[257]

கொடிய கண்கள் என்னும் பொருளில் 'கருங்கண் பேய்' (பதிற் 22:37) என்றும் கூறப்படுகிறது. பேயின் பார்வை மிகவும் கடுமையாக இருக்கும். 'கடு நோக்கத்துக்குப் பேய்' (மதுரை 161) காதுகளில் வெள்ளாட்டு மறியைக் காதணியாகப் பூண்டிருக்கும்.[259] வலிய வாயினைக் கொண்டிருக்கும்.[260] மேல்நோக்கி எரியும் நெருப்புக் கொழுந்து சாய்ந்தாற் போன்ற நாக்கு உண்டு.[261] இவற்றின் பற்கள் ஒன்றுடன் ஒன்று மாறுபட்டுத் தோன்றும் நீட்சியுடையவை.[262] பேயின் பாதங்கள் பிளவுபட்டுத் தோன்றுவனவாம். கவை அடிப் பேய் இவ்வகையான உறுப்புகளைக் கொண்ட பேய்களின் தோற்றம் அழகுடையதல்ல ; கண்டார்க்கு அச்சமும், வருத்தமும் தோன்றச் செய்யும் வடிவம் இப்பேய்களின் வடிவம் ஆகும்.[263]

பேய்கள் உருவத்தில் மிகவும் குள்ளமானவையாம். இப்பேய்கள் சுற்றித் திரியும் இடம் பிணங்களை எரித்தலும், புதைத்தலும் செய்யும் சுடுகாடாகும். சுடுகாட்டில் இவை கூட்டம் கூட்டமாகத் திரிந்து கொண்டிருக்கும்.[264] அழகிழந்து பாழ்பட்ட மன்றங்களிலும் பிற பாழிடங்களிலும் இவை திரிந்து கொண்டிருக்கும்.[265] ஆகவே சுடுகாடும் பாழ்பட்ட இடங்களும் பேயின் வாழ்விடங்களாகின்றன என்பது தெரியவரும். அணங்கு, சூர் என்பன போலவே பேயும் மனிதரைப் பற்றிப் பீடிக்கும் இயல்புடையன. இதற்குச் சாந்தி செய்யும் பொருட்டு வழிப்போவார் செல்லும் வழியில் உள்ள கவர்த்த சந்திப்பு இடங்களில், அதாவது நால்திசையும் செல்லும் வழிகள் பிரியும் இடத்தில் வழிபாடு இயற்றுவர். அப்பொழுது பலியாக ஆட்டின் கழுத்தை அறுத்துத் தினையையுடைய பலியை இட்டு, பல்வகை இசைக் கருவிகளை முழக்குவர். கவர்த்த வழிகளில் பேய் பிடித்தாருக்காகச் சாந்தி வழிபாடு இயற்றுதலைக் குறுந்தொகைப் பாடல் அறிவிக்கின்றது.[266]

சங்கப் பாடல்களில் போர்க்களம், போர்க்களத்தில் பேய்களின் செயல்கள், அவை ஊன் உண்டு செருக்குதல், துணங்கைக் கூத்தாடுதல் என்னும் செய்திகள் பல படப் புனைந்து கூறப்பட்டிருத்தல் காணலாம்.[267]

போர்க்களத்தில் பேய்களோடே கூடத்திரியும் மற்றொன்று பூதமாகும். பூதம் போர்க்களத்தில் காவல் புரிந்து நிற்பது.[268] இவையும் குறள் வடிவின ஆயினும் பேயினும் பெரிய உடம்பு படைத்தவை. களத்தில் அடுக்கப் பெற்ற நெற்கதிரின் சூடுகளும், அச்சூட்டின் மேல் சிலந்தி வெண்ணூல் பரப்பி இழைத்திருக்கும் கூடுகளும் துணங்கைக் கூத்தாடும் பூதங்கள் வெண்மையான ஆடையை உடுத்தி நிற்கும் தோற்றம் போன்று உள்ளது[269] என்று வருணிக்கிறார் கடியலூர் உருத்திரங்கண்ணனார்.

இப்பூதங்கள் காளி கோயிலின் வாயிலில் நின்று காவல் புரிதலும் தெரிய வருகிறது. காளியின் படைகளில் பேய்ப்படையைப் போல இப்பூதப் படைகளும் அவளுக்குத் தொண்டு புரிந்து வருவன.[270]

**நடுகல்**

பேரமரிலே அஞ்சாது பகைவர் எதிர்நின்று தம் வில்லாற்றல் காட்டி விழுப்புண் பட்டு மாய்ந்த வீரர்களின் பெயரையும் வீரச்செயலையும் பெருமையையும் கல்லில் எழுதி நாட்டி, அதற்கு வழிபாடும் செய்து வந்துள்ளனர். நடுகல் நாட்டற்குரிய தகுதி படைத்த வீரர்களின் தகைமையைச் சங்கப் பாடல்கள் நன்கு விவரித்துள்ளன.[271] வீரர்களுக்குரிய கற்கள் மக்கள் நடமாடும் வழிகளில் நாட்டப் பெற்றிருந்தமையும் 'அதர்தொறும்' (அகம் 67:9) 'அதர' (அகம் 179:8) எனக் குறித்தவற்றாலும், அவற்றை வழிச் செல்வார் நோக்குதல் 'ஆறுசெல் வம்பலர் விட்டனர் கழியும்' (அகம் 297:10) என்பதனாலும் புலப்படும். வீரர்க்கு நட்ட நடுகற்களையும் மக்கள் தெய்வமாகவே கருதிப் போற்றினர்.[272]

நிரை கவர்ந்து செல்லும் வெட்சியாரை வீழ்த்தி, வெற்றி கொண்டு மாய்ந்த மறவர்களைப் புதைத்து, அம் மேட்டின் மேலே இட்டு மூடிவைத்த கற்களிலும் நடுகல்லைப் போன்றே தெய்வம் உறைவதாகப் போற்றுகின்றமையும் தெரிய வரும்.[273]

போரில் வீரமரணம் எய்திய அதியமான் நெடுமான் அஞ்சியைக் குறித்து ஔவையார் பாடிய கையறு நிலைப் பாடலில் அவனுக்காக் கல் நட்டு வழிபடப்போகும் செய்தி குறிப்பிடுகின்றார்.[274] வடக்கிருந்து உயிர்நீத்த கோப்பெருஞ்சோழனுக்கும் கல் நட்டமையைப் புறநானூற்றில் காணலாம்.[275]

நடுகல்லுக்கு நன்னீர் கொண்டு நீராட்டுகின்றனர். மஞ்சளை அதன்மேல் பூசுகின்றனர். அதிரல்பூ, கரந்தைப்பூ, வேங்கைப்பூ செந்நிறப் பூக்கள் ஆகியவற்றால் தொடுத்த கண்ணி, மாலை ஆகியவற்றைச் சாத்துகின்றனர். கல்லின் மேலாகத் துணியாலாகிய பந்தரும் இடுகின்றனர். மயிற்பீலியும் சூட்டுகின்றனர். வேலாயுதத்தை நடுகல்லின் அருகில் ஊன்றி, அதனோடு பரிசையையும் உடன் வைக்கின்றனர். நறுமணமுள்ள தூபம் புகைக்கப்படுகின்றது. துடியையும் முழக்குகின்றனர். தோப்பிகள்ளும், இல்லில் அடும் பிற கள்வகைகளும், நாரால் அரித்தெடுக்கப்படும் மது வகையும் ஆன பல திறப்பட்ட கள் வகைகள் படைக்கப்படுகின்றன. வெள்ளாட்டைப் பலியாகக் கொடுக்கின்றனர். இங்ஙனமாக நடுகல்லை வழிபடும் வழக்கம் பலபடப் பேசப்பட்டிருக்கின்றன.[276]

**சதுக்கம், சந்தி, மன்று, பொதியில் கந்து**

முருகாற்றுப்படையுள் முருகன் உறைந்து காட்சி தரும் இடங்களைக் கூறுமிடத்து நக்கீரர்,

"சதுக்கமும் சந்தியும், புதுப்பூங் கடம்பும்
மன்றமும் பொதியிலும், கந்துடை நிலையினும்"[277]

என்று கூறியுள்ளார். இவையெல்லாம் மக்கள் சேர்ந்து வாழும் ஊரகத்தே உள்ளனவாகும். இவற்றுள் சதுக்கம் என்பது நான்கு தெருக்கள் கூடும் நாற்சந்தி. சந்தி என்பது முச்சந்தி, ஐஞ்சந்திகளைக் குறிக்கும். ஊர்க்கு நடுவாய் எல்லாரும் வந்து கூடியிருக்கும் மரத்தடியே மன்று. பொதியில் என்பது அம்பலம் என வழங்கும் பொது இடம். பொதியிலில் மரம் இருப்பது உண்டாயினும் மன்றத்தில் கட்டடம் எதுவும் இன்றித் திறந்தவெளியாக

இருக்கும். பொதியிலில் அமைத்து வழிபடப் பெறும் மூர்த்தமே கந்து என்பது.

"புற்றுடைச் சுவர புதல் இவர் பொதியில்

கடவுள் போகிய கருந்தாட் கந்தத்து"[278]

என்பதால் பொதியில் சுவர் எழுப்பி அமைக்கப்பட்ட பொது இடம் என்பதும், அப்பொதியில் பாழ்பட்டு அங்கு வந்து வழிபடுவார் அற்றுப் போகவே அப்பொதியில் கந்துடை நிலையில் நின்ற தெய்வமும் அதைத் துறந்து சென்று விடுகிறது என்பதும் தெரிய வருகின்றன.

மன்றம் அந்தந்த ஊர்களில் எல்லாரும் கூடும் நிலையில் வளர்ந்திருந்த மரங்களில் ஏதோ ஒன்றின் அடியாதல் பெறப்படும்.

"மன்ற மராஅத்த பேஎம் முதிர்கடவுள்"[279]

"இரத்தி நீடிய அகன்தலை மன்றம்"[280]

"மறுகுடன் கமழும் மதுகை மன்றத்து,

அலந்தலை இரத்தி அலங்கு படு நீழல்,

கயந்தலைச் சிறாஅர் கணை விளையாடும்

அருமிளை இருக்கை யதுவே."[281]

எனவரும் பாடற்பகுதிகள் மன்றத்துறை தெய்வநிலையைக் குறிப்பன. நெய்தல் நிலத்தின் பனைமரத்தடியே மன்றமாக அமைகிறது.[282]

மேலும் , நெய்தல் நில மக்கள் சுறாமீன் கொம்பை நட்டு, அதனிடத்து ஏற்றிய தெய்வத்தை வழிபட்டு, வெண்டாளி மாலையும் தாழை மலரும் புனைந்து பனங்களைக் குடித்து விளையாடுவதும் உண்டு. இவ்வழக்கத்தை, பட்டினப்பாலை அடிகளில் காணலாம்.[283] பொதியில் எனப்படும் ஊரம்பலத்தில் சித்திர வேலைப்பாடுகள் செய்யப் பெற்றிருந்தன. இதற்கு 'எழுது எழில் அம்பலம்' (பட்டினம் 18:28) என்ற பரிபாடல் சான்றாகும். பொதியிலிலே தெய்வம் உறை கந்தில் வழிபாடு இயற்றியது போலவே, அங்குள்ள சுவரில் தெய்வத்தின் உருவத்தை எழுதியும் வழிபடுவர் என்றும்

தெரிய வருகிறது. பொதியிலில் ஊருக்குப் புதியதாய் வருவோர் தங்குதலும், அங்கு மகளிர் முதலியோர் வந்து வழிபாடு செய்தலும் உண்டு.[284]

**இல்லுறை தெய்வம்**

ஊர்களில் உலாவும் அணங்குகள் இல்லுறை தெய்வங்களாம்,

"கொழுங்குடிச் செல்வரும் பிறரும் மேவிய,

மணம் புணர்ந்து ஓங்கிய, அணங்குடை நல் இல்"[285]

எனவரும் மதுரைக் காஞ்சியடிகள் வளம்மிக்க குடிப்பிறந்த செல்வரும் அவர் வழி சார்ந்த பிற செல்வர்களும் வாழும் இல்லங்கள் தெய்வங்களை உடையனவாயிருக்கின்றன என்பதைக் குறிப்பிடுகின்றது. இல்லத்தின் வாயில் நிலைகளிலும் தெய்வம் நிலை பெற்றிருப்பதாகக் கொண்டாடினர்.[285] இவ்வாயில்களில் இல்லுறை தெய்வம் மகிழும் வண்ணம் மலர் அணிந்து கொடிகளும் கட்டியிருப்பார்களாம்[287]. மாலைக் காலத்தில் மகளிர் இரும்பால் செய்த தகளியில் விளக்கு ஏற்றி நெல்லையும் மலரையும் தூவி இல்லுறை தெய்வத்தை வணங்கி வழிபடுகின்றனர். தெருக்களில் உள்ள மாளிகைகளில் எல்லாம் மாலைக்காலத்தை இவ்வாறு மகளிர் கொண்டாடுகின்றனராம்.[288] தவிரவும் மனைகளில் வெண்சோறும் கருணைக் கிழங்கால் ஆக்கியக் கறியும் கூட்டித் தெய்வத்திற்குப் பலியிடுகின்றனர்.[289]

தலைவி ஒருத்திக்காகக் குறித்த மணநாள் விரைவில் வரட்டும் என்று தோழி அத் தலைவியுடனே மனையில் உறையும் தெய்வத்தைக் கைகூப்பி வணங்கி, அதற்குரிய பலியையும் செலுத்துவோம் என்று தலைவியிடம் பேசுகின்றாள்.[290] இல்லத்தில் மகளிர் வணங்கி வந்த தெய்வத்துள் ஒன்று பாவை என்பது, இது சுவரில் ஓவியமாகத் தீட்டப்பெற்று வழிபடப் பெறுவது ஆகும். இதற்குப் பலி முதலியன படைத்து மகளிர் வழிபடுவர். தலைவி ஒருத்தி உடன் போக்கு ஒழுக்கத்தால் தலைவனுடன் சென்று விடுகிறாள். அம்மனைச் சுவரிடத்திலுள்ள பாவைத் தெய்வமும் இவள் பிரிவால் பலியைக் கொள்ளவில்லை என்கிறாள் செவிலி.[291]

**பாவை தெய்வம்**

சித்திரகாரிகள் பல வண்ணங்கள் கொண்டு சுவரில் பாவை வடிவம் தீட்டுதலும் உண்டு. இங்ஙனம் தீட்டும் சுவர்ப் பாவைகள் இல்லத்திலும், மன்றங்களிலும் தெய்வங்களின் பொருட்டு எழுதப்படுவனவாம்.[292] ஊர்களில் மக்கள் கூடும் மன்றங்களிலேயும் ஒரு பாவைத் தெய்வம் உண்டு. இதுவும் வண்ணம் தீட்டி அமைக்கப்பட்டதாகும். பகைவர் படையெழுச்சியின் காரணமாகக் குடிபெயர்ந்த மக்கள் இல்லாத ஓர் ஊரின் மன்றப் பாவையை அகநானூற்றுப் பாடல் ஒன்று குறிப்பிட்டுள்ளது.[293]

பாவைத் தெய்வங்களிலே 'கொல்லிப்பாவை' என்பது புலவர் பலராலும் பெரிதும் போற்றி உரைக்கப்பட்டுள்ளது. இது சேர மன்னனுக்குரிய கொல்லி மலையின் மேற்புறத்தில் அமைந்திருந்ததாம். இம்மலை முதலில் வல்வில் ஓரிக்கும், பின் சேரமானுக்கும் உரிமைப்பட்டிருந்ததாகத் தெரியவருகிறது. இம்மலைப்பகுதி மிகுந்த அச்சம் தருவதாம். இங்கே உள்ள பாவைத் திருவுரு தெய்வத்தால் எழுதி வைக்கப்பட்டது; மிக்க அழகு வாய்ந்தது. மகளிரின் அழகுக்கு இப்பாவையை ஒப்புமை கூறுவது புலவர் மரபாகும்.[294]

**கோளும், நாளும்**

ஞாயிறு, திங்கள், செவ்வாய், புதன், வியாழன், வெள்ளி, சனி என்னும் ஏழும் இராகு, கேது என்னும் இரு பாம்புகளும் ஆக ஒன்பதும் கோள்கள் (கிரகங்கள்) எனப்படும். இவை ஞாயிற்றை (சூரியனை) முதலாக வைத்து எண்ணப்படும். சூரிய, சந்திரரும், பிற கோள்களும், நட்சத்திரங்கள் என வழங்கும் நாள்களும் மேருமலையைச் சுற்றிவருவனவாம். நாள்களாவன அசுவினி, பரணி, கார்த்திகை முதலிய இருபத்தேழு நட்சத்திரங்களாம். இந்நாள்களும் கோள்களும், மீன் என்னும் சொல்லுடன் இணைத்து, 'நாள்மீன், கோள்மீன்' என்றும் வழங்கப்படும். நாள் மீன்களுடன் கலந்தே கோள்மீன்களும் வலம் வருகின்றன. பட்டினப்பாலைப் பகுதி, இவை பற்றி விளக்குகிறது.[295]

**ஞாயிறும், திங்களும்**

ஒளியுடைப் பொருள்களில் எல்லாம் பேரொளியாய் விளங்குவதும், உலகத்தாரால் தெய்வம் எனப் போற்றப்படுவதும் ஆகிய சிறப்பினைப் பெற்றவை ஞாயிறும், திங்களுமே. 'இருசுடர்' (புறம் 65:7) எனத் தொகைப்பெயரால் குறிப்பிடப் பெறுபவை. இவ்விரண்டனையும் 'ஞாயிற்றுப் புத்தேள்' (கலி 108:13) , 'திங்கள் புத்தேள்' (கலி 27:14) எனச் சுட்டுதல் கொண்டு இவற்றைத் தெய்வங்கள் என மக்கள் போற்றியமை விளங்கும். வானத்தில் தோன்றி உலகின்கண் நிறைந்த இருளைப் போக்கி, என்றும் அழியாது நிலைத்து இவை உலகத்தைக் காப்பவையாகும்.[296] ஞாயிறு பகலிலும், திங்கள் இரவிலும் வந்து ஒளி செய்து ஒரு நாளின் இரு கூற்றிற்கும், அதிபதியாய் விளங்குகின்றனர். இந்த இரு பொழுதுகளையும் ஆக்குபவரே இவர்தாம்.[297] உலகுக்கு இவர்களால் விளையும் நன்மை கருதிப் பண்டைத் தமிழர் இவர்களை தெய்வமாக வணங்கினர்.

ஒரு புறப்பாட்டு ஞாயிறு, திங்கள், மழை இம்மூன்றையும் முறையே ஓர் அரசனது வன்மை, மென்மை, கொடை என்னும் மூன்றற்கும் ஒப்பிட்டுக் கூறுகின்றது.[298] ஆகவே, உலகை நிலைநிறுத்துவதில் ஞாயிறும், திங்களும், மழையும் முதல் இடம் பெறுதல் பெறப்படும். தலைவி ஒருத்தி தன் தலைவன் எங்கு இருப்பினும் அவனைக் காட்டியருள்க என்று ஞாயிற்றுப் புத்தேளிடம் வேண்டுகிறாள்.[299]

உலகியல் அறியாதாரை மிகவும் சீறிக் கதிரவன் ஒறுப்பான் என்று ஆன்றோர் கருதினர். இதனைக் கேட்டறிந்த ஒரு தலைவி, தன்னைக் கைவிட்டுச் சென்ற தலைவனைச் சீறுகின்ற பொழுது! ஞாயிறு மிக ஒறுக்கும் என்று அஞ்சி, ஞாயிற்றைச் சீறாதபடி இரந்து வேண்டிக் கொள்கின்றாள்.[300] 'ஞாயிற்றுப் புத்தேள்' என்று மக்கள் தொழுது ஏத்தக் கீழ்த் திசைக்கண்ணே என்றும் தோன்றி ஞாயிறு உலகிற்கு இன்னருள் புரிகின்றான்.[301]

மூன்றாம் நாளில் தோன்றும் பிறையைத் 'தொழுது காண பிறை'என்று ஒரு புலவர் உரைக்கின்றார். பிறையைத் தொழுது வணங்கும்

மரபு; அந்நாள் வழக்கில் மட்டுமன்று; இந்நாளிலும் இருந்து வருவதேயாகும். இங்ஙனம் பிறை தொழும் மரபு மகளிர்க்கே உரிய தனிப்பண்புமாகும்.[302] பதினாறு கலைகளும் நிறம்பிய, பிறையாய் வளர்ந்த அழகிய குளிர்ச்சி மிக்க நிறைமதி, தேவர்களுக்கு உணவாக அமைகிறது.[303]

மதியைப் பாம்பு பற்றுதல் பற்றிய செய்தி சங்கப் பாடல்களில் அங்கங்கே உவமையாக எடுத்துக்காட்டப்பட்டுள்ளது. ஆனால் சூரியனை அரவு பற்றும் சூரிய கிரகணம் பற்றிய செய்தி சங்கப் பாடல்களில் எவ்விடத்தும் காணக்கூடவில்லை. பாம்பினால் பற்றப்படும் கிரகண காலச் சந்திரனை 'அரவு நுங்குமதி' (குறுந் 395:4) என்றும் , 'அரவு குறைப்படுத்த பசுங்கதிர் மதியம்' (நற் 377:6-7), 'பாம்பு ஊர்மதி' (நற்.128:2),'பாம்பு சேர் மதி' (கலி 15:17),'அரவு செரி உலவு மதி' (பரி 10:75), 'அரவின் வாய்க் கோட்பாட்டுப் போதரும் பால்மதி' (கலி 105:45-46), எனக் கவிஞர்கள் காட்டுகின்றனர். இதிலிருந்து உவாக்காலத்து உளதாகிய நிறைமதியே அரவினால் பற்றப்படுவது புலனாகும். பாம்பு மதியைப் பற்றும். மெல்ல மெல்ல மதியைப் பற்றி விழுங்கி அதனை மறைக்கின்றது. சூரியன் மெல்ல மெல்ல ஒளி மழுங்கி மறைதலை அரவின் வாயினுள் புகும் மதிக்கு உவமை காட்டிக்[304] கூறப்படுகிறது.

**பிற கோள்கள்:**

இனி, எஞ்சிய கோள்களாகிய செவ்வாய், புதன், வியாழன், வெள்ளி, சனி என்னும் ஐங்கோள்களையும் இப்பகுதியில் காணலாம். பதினோராம் பரிபாடல், மழை பெய்தற்குரிய நிலையில் கோள்கள் அமைய, சைய மலை எனப்படும் மேற்கு மலையில் மழை பொழிகின்றது பற்றி உரைக்கப்பட்டுள்ளது. இந்தக் கோள்களும் நாள்களும் மதியம் விசும்பில் திகழ, கார்த்திகை, திருவாதிரை, பரணி என்பனவற்றை முதலாகக் கொண்டு முறையே இடபம், மிதுனம், மேடம் என்னும் மூவகை வீதிகளில் ஒவ்வொன்றற்கும் ஒன்பது, ஒன்பது நட்சத்திரங்களாக 27 நட்சத்திரங்களும் அமைந்து வரும் இராசிச் சக்கர நிலையும் இங்குக் காணலாம். இங்கே பாம்பு

மதி மறையவரும் நாளாகிய ஆவணி மாதத்து மதிநிறை நாளாம் அவிட்ட நாளில் இக்கோள்கள் தத்தமக்குரிய இராசிகளில் நிற்பது உணர்த்தப்பட்டுள்ளது.[305]

இவ்வகையான மழைக்கோள் பற்றிய செய்திகள் பிற இடங்களிலும் காணப்படுகின்றன. மழை பெய்தற்குக் காரணமாக இருக்கும் வெள்ளியைச் 'சீர்சால் வெள்ளி' (பதிற் 24:24) என்று பதிற்றுப்பத்து குறிப்பிடுகிறது. மழைக் கோளாகிய வெள்ளி வடபக்கத்துத் தாழுமாயின் மழை உண்டாதலும், அது தெற்குப் பக்கம் எழுந்தால் மழையில்லையாதலும் நேரும்.[306] 'அழல்' என்னும் செவ்வாய்க் கோள் சென்ற பக்கத்தில் சுக்கிரன் சேராமல் மழைக்குரிய பிற கோள்களுடன் இயைந்து நிற்றல் கூறப்படுதல் காணலாம்.[307] வெள்ளிக்கோள் தெற்கே ஏகுதல் மழை வளத்தைப் பாதிக்கும் என்பதனை புறநானூறு, பட்டினப்பாலை பகுதிகளால் அறியலாம்.[308]

சுக்கிரன் எனப்படும் கோள் வெண்ணிறம் வாய்ந்தது ஆனது பற்றியே இது 'வெண்மீன்', 'வெள்ளி' என்னும் பெயரிட்டு அழைக்கப்படுகிறது. சூரியன் உதயமாவதற்கு முன்னாக வைகறையில் காட்சி தருவது. எனவே, 'வைகுறுமீன்' என்றும் இதனைக் குறிப்பர். இருள் செறிந்த விடியற் கருக்கலிலே விரிகின்ற வெள்ளிய கதிர்களைக் கொண்டு எழுவது. 'விரிகதிர் வெள்ளி முளைத்த நள் இருள் விடியல்' (பொருநர் 71-72) என்பது பொருநராற்றுப்படை 'இலங்குக் கதிர் வெள்ளி' (புறம் 35:7)என்பதும் இதன் ஒளிச்சிறப்பைக் காட்டும்.

வெள்ளியும், வியாழமும் முறையே அசுரர்க்கும் தேவர்க்கும் குருவாகக் கூறப்படும் பெற்றியர். இவர்கள் இருவரும், கள்ளை உணல் ஆகாது என்று நீக்கின தேவர்க்கும், அதனை உண்டலை நீக்காத அசுரர்க்கும் வரைதலும் வரையாமையும் ஆகிய இவ்விரண்டினையும் கைக்கொண்டு அறத்தொழிலாக இன்பமுறுத்தும் வியாழமும், வெள்ளியுமாகிய குருமார் இருவரும் செய்த வேறு வேறு வழிமுறைகளை யாத்தனராம். இவ்வியாழ, வெள்ளிகளை,

'நறவினை வரைந்தார்க்கும் வரையார்க்கும் அவை எடுத்து,

அறவினை இன்புறூஉம் அந்தணர் இருவரும்'[309]

எனவரும் கலித்தொகைப் பகுதி காட்டுகிறது. செவ்வாய் கோள் செந்நிறம் வாய்ந்தது. 'செம்மீன்' என்று இது குறிக்கப்பட்டிருக்கிறது.

'முந்நீர் நாப்பண் திமில் சுடர் போல,

செம்மீன் இமைக்கும் மகா விசும்பின்' [310]

என்பது புறம்.

'அழல் சென்ற மருங்கின் வெள்ளி ஓடாது' [311]

என வரும் பதிற்றுப்பத்துப் பாடலடியில் 'அழல்' எனக் குறிப்பிட்டிருப்பது இச் செவ்வாய்க் கோளினையே. நெருப்புப் போன்ற செந்நிறப் பிழம்பாய்த் தோற்றம் அளிப்பது இந்தக்கோள். இதற்குப் 'படிமகன்' (பரி 11:4) என்றும் பெயருண்டு. 'புதன்' என்னும் கோள், 'புந்தி மிதுனம் அடைய' (பரி 11:5) எனச் சுட்டப்பட்டிருக்கிறது. சனிக்கோள் கருநிறம் கொண்டது. அதனால் இது 'மைம்மீன்' எனப்படுகிறது.[312] கோள்களைப் பற்றிக் கூறும் சங்க இலக்கியம் அவற்றோடு தொடர்புடைய நாள்களைப் பற்றியும் பேசுகிறது.

**உரோகிணி:**

விண்மீன்களுக்குள் மதிக்கு உகந்த துணையாக அமைந்த சிறப்புறும் பேற்றைப் பெற்றது உரோகிணி. இது மதியை விட்டுப் பிரியாது அதனோடு சேர்ந்தே எப்பொழுதும் நிலைப்பெற்றிருக்கும். திருமணம் செய்வதற்குத் தேர்ந்தெடுக்கும் மணநாளாகத் திங்களை உரோகிணியுடன் கூடியிருக்கும் நாள் தேர்ந்தெடுக்கப்படுதலை அகநானூறு அறிவிக்கின்றது.[313]

**ஓணமும், ஆதிரையும்:**

நாள்களுக்குள்ளே தெய்வத் தொடர்பு பெற்ற பெருமை உடையவை ஓணமும், ஆதிரையும்.

'கணம் கொள் அவுணர் கடந்த பொலந்தார்

மாயோன் மேய ஓண நல் நாள்'[314]

என மாயோனும்,

'ஆதிரை முதல்வன்'[315]

அரும் பெறல் ஆதிரையான்'[316]

என்று கறைமிடற்றண்ணலும் சிறப்பாகப் புகழ்ந்து பேசப்படுவர். தெய்வத் தொடர்பால் இந்த இரு நாள்களும் நாள்களுக்குள்ளே 'திரு' என்னும் அடைமொழி பெற்றுத் 'திருவோணம்', 'திருவாதிரை' என வழங்கப்படுதலும் தனிச்சிறப்பு, இந்த நாள்களில் இந்த இருபெருந்தெய்வங்களுக்கும் விழா எடுத்துச் சிறப்புச் செய்தும் வந்துள்ளனர்.[317]

**அறுமீன்:**

கார்த்திகை நாள் அறுமீன்கள் சேர்ந்த ஒரு கூட்டமாகும். கார்த்திகைத் திங்களின் நிறைமதி நாள் இக்கார்த்திகை மதியுடன் சேர்ந்து திகழும்.

'மழை கால் நீங்கிய மாக விசும்பில்

குறுமுயல் மறு நிறம் கிளர. மதி நிறைந்து

அறுமீன் சேரும் அகல் இரு நடுநாள்'[318]

என்னும் அகநானூற்றுப் பாடல் இச்செய்தியினைத் தெரிவிக்கின்றது.

**எழுமீன்:**

நற்றிணைப் பாடல் ஒன்று இந்நாளினைக் குறிப்பிடுகிறது. மாசு மறுவின்றி விளங்கும் நீலமணி போன்ற ஆகாயத்திலே தோன்றி உலகத்தாரால் தொழப்படும் தகுதியுடைய எழுமுனிவரின் தோற்றம் போலேயாய் இரா நின்றது.

'மை அற விளங்கிய மணி நிற விசும்பில்

கைதொழும் மரபின் எழுமீன் போல,'[319]

**வடமீன்(அருந்ததி):**

வானத்து வடவயின் விளங்கும் ஏழு முனிவருள் வசிட்ட முனிவரின் பத்தினி; இவள் கற்பினுக்கு அருங்கலமாக எடுத்துப் பேசப் பெறுகிறாள். அருந்ததி வானத்தின் வடபகுதியில் விளங்கும் ஒரு சிறிய செம்மீன் என்று சங்கப்பாடல்கள் தெரிவிக்கின்றன. எங்கும் கற்பின் தெய்வமாக இவள் போற்றப்படுதல் நன்கு வெளிப்படுகிறது.[320] அடைமொழி யாதுமின்றி 'மீன் என்றே போற்றத்தகும் கற்பு மீனாக இவள் பாராட்டப்படுகின்றமையும் தெரிய வருகின்றது.

**மகவெண்மீன்:**

பொய்கைக்கு இம்மீன் ஒப்பிடப்பட்டுள்ளது. மகம் என்னும் வெண்மீன் போன்ற வடிவுடன் இலங்கியது பொய்கை ; அது திண்மை வாய்நத உயர்ந்த கரையை உடையதாக இருந்தது. இவ்வாறு பட்டினப்பாலையில் பொய்கைகளின் தோற்றம் உணர்த்தப்படும் இடத்தில், அதன் வடிவத்தை குறிக்கும் முகத்தான் மக நட்சத்திரம் குறிக்கப்பட்டிருக்கிறது. [321]

**பரணி முதலிய பிற நாள்கள்:**

பதினொன்றாம் பரிபாடலில் பரணி, அவிட்டம் முதலிய சில நாள்கள் பற்றிய குறிப்புகள் உள. எரி - கார்த்திகை (பரி 11:2), சடை - திருவாதிரை (பரி 11:25), வேழம் - பரணி (பரி 11:27), முடப்பனையத்து நாள் - அனுடம்; (புறம் 229:3), கடைக்குளத்துக் கயம் - புனர் பூசம்; (புறம் 229:4), புறம். 229 - ல் மேலும் மூலம். மிருகசீரிடம் என்னும் நட்சத்திரங்கள் பற்றிய குறிப்புகள் உள்ளன.

**விசும்பு வீழ் கொள்ளி:**

உலகிற்கு உற்பாதமாக இந்த எரிவீழ் கொள்ளி வீழ்தலைக் கருதுவர். 'திசை இரு நான்கும் உற்கம் உற்கவும்' ( புறம் 41:4) என்று பகைவர் நாட்டில் இவ்வகை உற்பாதம் நிகழ்ந்து அவருக்கு அழிவு நேரும் என்பதைப்

புலப்படுத்துவதாயிருக்கும் என்று குறிக்கப்பட்டிருக்கிறது. ஒரு தலைவன் ஏறிச் சென்ற தேர்ச்சக்கரம் பசும் பயிர்களை அழித்துச் செல்லும் செயலுக்கு இவ் விசும்புவீழ் கொள்ளியினால் நிகழும் அழிவு ஒப்புமையாகக் கூறப்பட்டுள்ளது.[322] கூடலூர் கிழார் என்னும் புலவர் விசும்பினின்று வீழ்ந்த ஓர் எரிகொள்ளி கண்டு, இதனால் தம் மன்னன் சேரமான் யானைகட்சேய் மாந்தரஞ் சேரலிரும் பொறை ஏழு நாட்களுள் இறந்துபடுவன் என்று அஞ்சினராம். மன்னன் கேடு இன்றி நோயையுடையன் அல்லனாக வேண்டும் என்னும் உள்ளத்தோடு மடிந்து வாழ்கின்றனர். அப்புலவர் அஞ்சியபடியே விண்வீழ்கொள்ளி வீழ்ந்த ஏழாம் நாளில் அம்மன்னன் இறந்து படுகின்றான். அப்பொழுது அப்புலவர் பெருமான் மனம் நொந்து பாடிய கையறுநிலைப் பாடலிலே 'விண் வீழ் கொள்ளி' வந்து விழுந்த வகையையும், அதனால் நேர்ந்த விளைவுகளையும் சுட்டி உரைத்துள்ளார்.[323]

**நாள், கோள்களால் நலமும் தீங்கும் விளைதல்:**

நாளும் கோளும் நாள் தவறாமல், நொடி தவறாமல் தத்தம் வீதியில் விண்ணிலே இயங்கி வருவதினாலே உலகமும் ஒரு நிலையில் நிற்கிறதாம். இவற்றுள் ஏதேனும் ஒன்றின் நிலை தவறுமாயின், அதனால் உலகிற்குக் கேடு உண்டாகும். என்னும் செய்தியும் தெரிய வருகிறது. மக்கள் தம் வாழ்க்கையில் நாள் கோள்களினால் தடை உளதாகும் என்றும், நல்ல கோள்களின் நிலையிலேயே நற்செயலைத் தொடங்குதல் வேண்டும் என்றும் கருதி வந்தமை ஒரு சில குறிப்புகளினால் தெரியவரும். தோழி ஒருத்தி ஒரு தலைவனிடம், 'தலைவியை விட்டுப் பிரிந்து செல்லாதே: அங்ஙனம் பிரிந்து செல்லின் உன்னை நாளும், கோளும் தடுத்தலைச் செய்யும்' என்று கூறுகின்றாள்.[324]

திருமணம் புரிதற்கு ஏற்ற காலமாக, மதியத்தை உரோகிணி சேரும் நாளைத் தேர்ந்தேடுக்கிறார்கள்.

'கோள்களால் நீங்கிய கொடுவெண் திங்கள்
கேடு இல் விழுப்புகழ் நாள் தலைவந்தென,'[325]

இங்கே கோள் என்றது தீய கோள்களை, இங்ஙனம் தீமை பயவா நாள்கோள்களைத் தேர்ந்தேடுத்தல் அவற்றால் உளவாகும் நன்மை கருதியே ஆகும். உவாநாளில் பரதவர் கடலில் மீன் பிடிக்கச் செல்லுதல் தவிர்த்து ஊரின்கண் உண்டு மகிழ்ந்தமையை, (பட்டினம் 90-92) பட்டினபாலை அடிகளால் உணரலாம். நாள் கோள்களின் நல்லியக்கத்தினால் நலம் விளைந்தமையை பின்வரும் மதுரைக் காஞ்சியடிகள் புலப்படுத்துகின்றன.[326] நாளும் கோளும் மக்களின் வாழ்க்கை விதியை முன்னின்று நடத்தும் இன்றியமையாப் பொருளாக அந்நாளில் நிலை பெற்றிருந்தமை தெளிவு.

**காலச்சுழல்:**

நாள் கோள்களின் இயக்கத்தால் காலச்சக்கரம் சுழல்கிறது. ஞாயிறும் திங்களும் பகலிரவுகளை ஆக்குகின்றனர். திங்களின் பிறை வளர்ந்தும் தேய்ந்தும் முப்பது நாள்களைக் கொண்ட திங்களைத் தோற்றுவிக்கின்றன. திங்கள் பன்னிரண்டு என்பதும், அவற்றுள் தை, மாசி, பங்குனி, கார்த்திகை முதலிய மாதப் பெயர்களைச் சங்கப்பாடல்கள் குறிப்பதனாலும் ஓர் ஆண்டில் சித்திரைத் திங்கள் முதற்கொண்டு பங்குனி ஈறாக எண்ணும் தமிழ் ஆண்டின் மாதப் பெயர் வழக்கும் பழைமையானவை என்பது பெறப்படும். சங்க இலக்கியக் குறிப்புகளைக் கொண்டு ஒவ்வொரு திங்களிலும் நிறைமதி நாளில் சந்திரனோடு ஒரு விண்மீன் சிறப்பாக உடன் சேர்தலும், அது கொண்டு மாதப்பெயர் வழங்கப்படுதலும், தெளிவுபடும்.[327] மேலும் இவை முறையே கார்த்திகை, மார்கழி, மாசி என்னும் மாதங்களைக் குறிப்பிடுகின்றன. பாரி மகளிர் பாடிய புறப்பாடலில் 'அற்றைத் திங்கள் அவ்வெண் நிலவின்' (புறம் 112:1) என்றும் ; இவற்றைத் 'திங்கள் இவ்வெண் நிலவின்' (புறம் 112:3) என்றும் 'திங்கள்' என்றும் பெயர் மாதத்தையும், சந்திரனையும் குறித்தல் காணலாம்.

'............வைகல்
எண்தேர் செய்யும் தச்சன்
திங்கள் வலித்த கால் அன்னனோ' [328]

என்னும் பாடல் நாள், திங்கள் காலப் பாகுபாட்டை உணர்த்துகிறது. ஓர் ஆண்டின் பருவ காலங்கள் தோன்றுவதற்கும் ஏதுவானவை கோள்களே. வெயில், மழை, பனி என முப்பருவங்கள் முதன்மையானவை. இவற்றையே இளவேனில், முதுவேனில், கார், கூதிர், முன்பனி, பின்பனி என அறுவகைப் பருவமாகக் கொள்ளும் மரபும் உண்டு. இங்ஙனமே ஒரு நாளின் காலக் கூற்றினைக் காலை, நன்பகல், ஏற்பாடு, மாலை, யாமம், வைகறை என ஆறு பகுதிகளாகப் பாகுபடுத்தியுள்ளனர்.[329]

**வழிபாடு:**

பெருந்தெய்வங்களுக்கும் சிறு தெய்வங்களுக்கும் கோயில் எடுத்தும் வழிபட்டனர். கோயில் ஊர்வாழ் மக்கள் யாவரும் வந்து வணங்கத்தக்க வகையில் ஊரின் நடுநாயகமாக அமைக்கப்பட்டிருந்தது. மதுரை மாநகரின் கோயில் அமைப்பும் ஊர் அமைப்பும் பற்றிப் பரிபாடல் தரும் செய்தியால் இதனை ஊகித்து உணரலாம். கூடல்மாநகர் திருமாலின் உந்தித் தாமரை போலுள்ளதாம் ; அப்பூவின் நடுவில் அமைந்திருக்கும் கொட்டை போல உள்ளதாம் இறைவன் திருக்கோயில் ; தாமரைக் கொட்டையைச் சூழவிருக்கும் பூவிதழ் போலவும், மகரந்தம் போலவும் தெருக்களும் குடியிருப்பிடங்களும் அமைந்துள்ளன[330] என்கிறார் கவிஞர்.

கோயில்களில் வழிபட்ட தெய்வங்கள் அவரவர் மனப்பான்மைக்கு ஏற்ற வண்ணம் பல்வகை உருவங்களை உடையனவாயிருந்தன.[331] தெய்வங்கள் பல தொழப்படினும் வழிபடு தெய்வமாக அவரவர் தமக்கு ஒரு தெய்வத்தைக் கொண்டிருந்தனர். குன்றக் குறவர் முருகனையும், முல்லை நிலத்து ஆயர் மாயோனையும் தம்குலத்திற்கு உரிய வழிபடு தெய்வமாகக் கொணடு போற்றிய செய்திகள் பல சங்கப் பாடல்களில் காணலாம்.[332]

வழிபாட்டிற்குப் பல்வகைச் சாந்து, புகை, விளக்கு, மலர் தெய்வத்திற்குப் படைப்பதற்குரிய பால்மடை, பலிச்சோறு முதலிய பலவும்

கொண்டு செல்லுதல் மரபு.[333] பல்வகை மலர்களாலும் மாலை கட்டித் தெய்வத்திற்கு அணிதலும், பூக்களைக் கொண்டு அருச்சித்தலும் செய்து வழிபட்டனர். 'பூப்பலி விட்ட கடவுளைக் கண்டாயோ?' (கலி 93:24) 'பல்மலர் சிதறிப் பரவுறு பலிக்கே' (நற் 322:11-12) என்பன மலரிட்டு அருச்சித்து வழிபடுதலைக் குறிக்கும். தெய்வத்திற்கு இன்ன மலர் என்று இல்லை: எருக்கம் பூவைக் கூட கடவுளர் விரும்புவாராம்.[334] முல்லை, குருந்து, காந்தள், குவளை என்னும் மலர்கள் சிறப்பாகக் கொள்ளப்படுகின்றன.[335] எல்லாப் பூக்களிலும் தாமரைப்பூ தெய்வத்தன்மை பொருந்திய பூவாகப் போற்றப்பட்டது. தெய்வத் தன்மையோடு கூடிய தாமரைப் பூவின் சிறப்பைப் பலவாறு போற்றியுள்ளனர்.[336]

மலர் மாலைகளோடு, மலர்களின் இடையிடையே பச்சிலைகளையும் சேர்த்துக் கட்டிய மாலைகளையும் ஆக்கித் தெய்வத்திற்குச் சாத்தி மகிழ்ந்தனர்.[337] நடுகல்லிற்கு நீராட்டி தூப தீபங்களுடன் பலி முதலியன இட்டு வணங்குதல், (புறம் 329:1-5) அரசனுக்கு உரிய முரசத்தை நீராட்டிப் போற்றுதல் (புறம் 50:1-5) என்னும் வழக்கங்களைப் பார்க்குமிடத்து, தெய்வத் திருவுருவங்களுக்கு நீராட்டுதலும் பண்டிருந்தது எனக் கொள்ள இடமுண்டு, நீராட்டி, மலர் அணிந்து, விளக்கேற்றி, தூபம் புகைத்து உயரிய பொருள்களைப் பலியாகவும் படைக்கின்றனர். இப்பலி 'தெய்வமடை' (பெரும் 233) எனப்படும். மன்றங்களிலும் வெறியாடும் களங்களிலும் வழிபட்ட தெய்வங்களுக்குக் குருதிப் பலியும் செய்கின்றனர். அரிசியைப் பலியாகச் சிதறுதல், ஆட்டு மறியை அறுத்தல், மறியின் குறுதியைச் சோற்றுடன் கலந்து திரளையாகச் செய்து பலி தூவுதல், கள் வைத்தல் முதலியன உண்டு. பலியிடுதற்கு பலிபீடமும் அமைக்கப்பட்டிருந்தது.[338] பலியிடும் பொழுது மந்திரங்களை உச்சரித்தல் மரபு.[339] வழிபாட்டுக் காலத்தில் பல இனிய இசைக் கருவிகளையும் இயக்குவர்.[340]

நாள்தோறும் பல்வேறு காலங்களில் முறைப் படவும் தெய்வ பூசை ஆற்றி வந்தனர் என்பது ஒருசில குறிப்புகளால் புலனாகும். 'நாட்பலி' (அகம் 213 : 7) என்பது காலை வேளையில் கடவுட்கு ஆற்றிய வழிபாட்டினைச் சுட்டுவதாகும். சிவபெருமான் மாயோன் முதலிய கடவுளரின் ஆலயங்களில் தெய்வங்களுக்கு மாலையில் பூசை செய்து மக்கள் வழிபட்டமையை மதுரைக் காஞ்சி விவரிக்கிறது.[341] சுற்றத்தாருடன் கூடிச் சென்று திரண்டு நின்று வழிபாடு ஆற்றுதல் குன்றக் குறவர்களிடையேயும் கூடக் காணப்பட்டது.[342]

பல்வேறு பயன் கருதிப் பரங்குன்றத்து மகளிர் வழிபட்டமையைப் பரிபாடலில் காணலாம். ஒரு சில மகளிர் தாம் காதலரோடு அளவளாவியதாகக் கண்ட கனவு பழுதாகாமல் நனவில் அவருடன் நீராடி மகிழ, வையை நதி புது வெள்ளத்தைப் பெற வேண்டும் என வரம் வேண்டுகின்றனர். இன்னும் சிலர் எமக்குக் கருப்பம் உண்டாக வேண்டும் என்று காணிக்கை செலுத்துகின்றனர். 'எம் கணவருக்குப் பொருள் வாய்ப்பதாக' என்றும், 'எம் கணவர் போரில் வெற்றி பெறுவாராக' என்றும் வேறு சில மகளிர் கடவுளை வேண்டுகின்றனர்.[343] குறவர் மழை பெய்ய வேண்டியும், வேண்டாத போது பெருமழை பெய்யின் அது நிற்க வேண்டியும் தெய்வத்தைப் போற்றினர் என்று புறநானூறு தெரிவிக்கின்றது.[344] உலகை வாழ்விக்கும் அம்மழையையே தொழுது போற்றவும் தலைப்படுகின்றனர் மக்கள்.

மேலும் கடவுட்குப் பல பொருள்களைக் காணிக்கை செலுத்துதலும் நேர்த்திக் கடன் செய்தலும் உண்டு. தாங்கள் ஆற்றும் விளைவின் பயனை கடவுட்கும் படைத்து மகிழ்ந்தனர். குறவன் ஒருவன் தான் பயிரிட்ட தினைப் புனத்தில் விளைந்த தினைக் கதிர் சிலவற்றை தெய்வத்திற்காக என நேர்ந்து விட்டிருந்தானாம்.[345] தெய்வங் காட்டி சூளுரைக்கும் பழக்கமும் மக்களிடையே காணப்படுகிறது.[346]

**சடங்குகள்:**

மக்கள் தாங்கள் செய்துவரும் வழிபாடு, விழா முதலியவற்றை முந்தையோர் முறைப்படி செய்து வந்தனர். இங்ஙனம் பரம்பரை வழக்கமாகச் செய்துவரும் செயல்களே சடங்குகளாம். இவை நூல் முறையாலும் சான்றோர் நெறியாலும் வழிவழி வருவன. இவற்றை அறிந்த முதியோர் ஏனையோர்க்கு வழிகாட்ட இவை பின்பற்றப்படுபவை. வெறியாட்டு, விழா எடுத்தல் முதலிய தெய்வ வழிபாடுகளில் அவற்றை செய்வதற்குரிய வேலன், அந்தணர் முதலியோர் அவற்றை நிகழ்த்துவிக்கின்றனர். ஆதிரை விழாவைத் தொடங்கியோர் நூல்நெறி முறைமையால் விழாச் சடங்குகளை அறிந்த அந்தணர் ஆவார்.[347] ஆகம நெறியுணர்ந்தாரே விழாச் சடங்கு ஆற்றுகின்றமை இதனால் தெரியவரும். வேள்வி செய்விப்போரும் அம்பாவாடல் புரிதற்கு உதவுவோரும் அவ்வந் நெறி முறை தெரிந்தோர்களாவர்.

மக்கள் தமது பிறப்பு தொடங்கி வாழ்க்கை முற்றிலும், தாங்கள் புரியும் பல்வேறு நிகழ்ச்சிகளிலும் பற்பல சடங்குகளை மேற்கொண்டிருந்தமையும் இலக்கியங்களால் புலனாகின்றன. வழிபாடு, விழா முதலிய சடங்குகள் மக்கள் பயன் கருதிச் செய்யப்படுவனவே. தகடூர் எறிந்த பெருஞ்சேரல் இரும்பொறை தன் தேவியுடன் செய்த பெரு வேள்வியால், அவனது தேவியின் கருவில் புகழ் அமைந்த புதல்வனைப் பெற்றெடுத்தான் [348] எனப் பதிற்றுப் பத்து கூறுகிறது. முந்தித் தவம் கிடந்து முந்நூறு நாள் சுமந்து மகப் பெற்றனர் மக்கள். கடவுளை பேணிக் குறவன் ஒருவன் பெண் மகவு ஈன்றமையை ஐங்குறுநூறு கூறுகிறது.[349] சூல் கொண்ட மகளிர் தேவராட்டியுடன் நின்று தெய்வத்திற்கு மடை கொடுத்தல் மரபு.[350] மகப்பெற்ற மகளிர் அணங்கு முதலியன அண்டாவண்ணம் காப்பாக நெய்யுடனே வெண் சிறு கடுகை மாளிகையிடத்தே பூசி வைக்கின்றனர். நறும்புகையும் புகைத்தல் உண்டு. குழந்தைக்கு மையும் தீட்டுகின்றனர்.[351]

ஈன்றணிமை நீங்கியபின் மகப்பெற்றார் குளத்து நீரில் சென்று குளிப்பர். புதல்வர்களை ஈன்ற மகளிர் நீராடுதலை மதுரைக் காஞ்சி

கூறுகிறது.[352] குழந்தைகளுக்கு தெய்வ உணர்ச்சி இளமையில் தானே படியும் வண்ணம் அவர்களைக் கோயில்களுக்குத் தம்முடன் அழைத்துச் சென்று வழிபடச் செய்வர். தலைவி ஒருத்தி, கடவுள் உறையும் கோயில்கள் தோறும் தன் குழந்தையை வலஞ் செய்வித்து வணங்கி வரும்படி தோழியுடன் மகனை அனுப்பிய செய்தி மருதக்கலியால் தெரியவரும்.[353] தந்தை குழந்தையைச் சான்றோனாக ஆக்குதற்கு அவனுக்கு வேண்டும் கல்வி அளிக்கின்றான். ஆசிரியரிடத்தில் கற்று அவருக்குக் காணிக்கை செலுத்தினர். கற்ற மாணவன் ஆசிரியர்க்கு உரிய காணிக்கை செலுத்தாவிடில் அவனுடைய செல்வம் குன்றும் என்றும் கூறுகிறார் ஒரு புலவர்.[354] கற்கும் இளைஞர் பிரமச்சரிய விரதம் காத்துக் கல்வியையும் பெற்றனர்.[355]

கன்னி மகளிர் இளமையில் நோற்கும் நோன்புகளிலே ஒன்று அம்பாவாடல்; இதனை 'தைந்நீராடுதல்' என்றும் குறிப்பிடுவர். இவர் சிறுமியாதலின் தாயார் அருகே நிற்க நீராடுகின்றனர். மார்கழி மாதத்து நிறைமதி நாளாகிய திருவாதிரையில் பூசகர் தெய்வத்திற்கு விழா எடுக்க, கன்னிப் பெண்கள் கூடி 'பூமியானது மழை வளம் பெற்றுக் குளிர்வதாக' என்று அம்பா ஆடலை மேற்கொள்கின்றனர். அவர்களுக்கு சடங்கு அறிந்த முதுபார்ப் பனிமார் நோன்பு நோற்கும் முறைமையைத் தெரிவிக்கின்றனர். அவர்கள் சுட்டிய முறைப்படி அதிகாலையில் நீராடிக் கன்னி மகளிர் நோன்பு நோற்கின்றனர்.[356]

'புகை, பூ, அவி, ஆராதனை, அழல் பல ஏந்தி
நகை அமர் காதலரை நாளணிக் கூட்டும்
வகை சாலும் வையை வரவு'[357]

என வையையின் வரவு கூறுதலின் மகளிர் நதியில் நீராடி அதற்கு வழிபாடு செய்தற்கு வேண்டும் புகை, முதலியன கொண்டு சொல்லுதல் புலப்படும்.

பாவையை நீர்த்துறையில் அமைத்துச் செய்யும் நோன்பு. ஆதலால் அது பாவை நோன்பு எனப்பட்டது போலும். இப் பாவைக்கு அரும்பு

முதலிய நீர்ப்பூக்களைப் பறித்து அணிதலும் உண்டு.[358] கன்னியர் தமக்கு ஏற்ற கணவனைப் பெற்று, அவனுடன் கூடி என்றும் இன்பம் பெற்றுச் சுற்றமுடன் சிறந்து வாழ வேண்டும் என்று வேண்டுதலும் மற்றொரு பயனாகும்.[359]

வளர்பிறை நாளில், உதய காலத்தில், தீய கோள்களின் சேர்க்கையின்றி நற் கோள்கள் பயின்றிருக்கும்; காலமே திருமணத்திற்கு உரிய காலமாகக் கொள்ளப்படுகிறது.[360] நன்னிமித்தங்கள் வாய்க்கப் பெற்றுச் சந்திரன் உரோகிணி முதலிய நல் நட்சத்திரங்களுடன் கூடிய நாளாகவும் இருக்க வேண்டும்.[361] வேங்கை மலர்தலும் மணநாளுக்கு உரிய காலமாகிறது.[362] மணநாளுக்கு ஏற்ற முகூர்த்தம் குறிப்பதற்குக் கணியை (சோதிடனை) முன்னிட்டுச் சான்றவர்களுடன் கூடி மணமகள் இல்லத்திற்கு வருகின்றனர்.[363]

திருமண நிகழ்ச்சிக்கு முன்பாகத் தலைவியின் காலில் அணிந்திருக்கும் சிலம்பைக் கழற்றுவதற்கு ஒரு சடங்கு நிகழ்த்தப்படும். இதனைச் 'சிலம்புகழி நோன்பு' என்பர். இந்தச் சடங்கு தன் இல்லத்தில் நிகழ வேண்டும் என்று தாயார் விரும்புகின்றனர். உடன் போக்கில் செல்லும் தலைவியர்க்கு இந்நோன்பும் மண வினையும் தலைவனது இல்லத்திலேயே பெரும்பாலும் நிகழ்ந்து விடும்.[364]

மணமகளின் பெற்றோர் மது அருந்தி, வீட்டை அலங்கரித்து, மணலைக் குவித்து, எமது மகளுக்குத் திருமணம் செய்ய நிச்சயித்துள்ளோம் என்னும் செய்தி கூறி திருமணத்தின் முன்னர் செய்யப்படும் திருமண உறுதி விழா ஒன்றும் நிகழ்த்தப்படுகிறது.[365]

திருமணத்தை முன்னிட்டு இல்லற தெய்வங்களுக்குச் சிறப்பு செய்தலை ஒரு தலைவியின் கூற்றால் உணர்கிறோம்.[366] திருமணப் பந்தலிலே நல்ல புதுமணல் பரப்பியிருக்கின்றனர். மண மனையில் எங்கும் நல்ல விளக்குகளை வைத்துள்ளனர். மாலைகளைத் தொங்க விடுகின்றனர்.[367] ஆயர் திருமணத்தின் முன் அவர் தம் இல்லத்தைச் செம்மண்ணால் பூசிப்

புதுக்குதலும், எருமை மாடு அளித்தலும் குறிக்கப்பட்டிருக்கிறது.[368] இதனால் மண அலங்காரமும், பிற நடைமுறை நிகழ்ச்சிகளும், அவரவர் சமுதாயப் பண்பாட்டிற்கு ஏற்றவகையில் சிறிது மாறுபட்டிருந்தது எனலாம்.

திருமண இல்லம் நறுமணப் பொருள்களால் பொலிந்து விளங்கும். சுற்றமும், நட்பும் சூழ மணவினை தொடங்கப்படுகிறது. முழவு முதலிய இன்னிசைக் கருவிகள் முழங்குகின்றன.[369] மணமனை புகுவார் மலர்சூடி நல்லாடை புனைந்து வருதல் பெறப்படும்.[370] மணமனை வருவார்க்கு உண்டி அளிக்கப்படுகிறது. உளுந்து கலந்து ஆக்கிய சோற்றை மணநாளில் வழங்குவதாக அகநானூற்றின் 86 ஆம் பாடல் குறிப்பிடுகிறது. ஆனால் 136 ஆம் அகப்பாட்டு இறைச்சியொடு கலந்த வெண்சோற்றைக் கொடுப்பதாகக் கூறுகிறது. ஆக மணவினையில் உளுந்துச் சோறும், இறைச்சியுடன் கலந்து புழுக்கின நெய்கலந்த வெண்சோறும் படைக்கின்றமை புலனாம். இங்ஙனம் உண்டியளித்தல், 'பெருஞ்சோற்று அமலை' எனப்படும்.

திருமணத்தில் முதற்கண் கடவுளைப் பேணிப் பின் மணமகளுக்கு வதுவை நீராடும் புரிகின்றனர். இந்நீராட்டு 'வதுவை நன் மணம்' என்று குறிக்கப்படுகிறது. நீராட்டுவர் மகப்பேறு வாய்க்கப்பெற்ற நான்கு மகளிர் சேர்ந்து கற்றபின் 'வழுவாதபடி கணவனைப் பேணும் சிறந்த மனைவியாகுக' என்று வாழ்த்தி நீராட்டுவர். நீராட்டுவதற்குரிய மஞ்சள் நீர் முதலியவற்றையும் வேறு சில மங்களப் பொருள்களையும் சுமங்கலிகளுக்கு முது பெண்டிர் தந்து உதவுவர். இந்த மஞ்சன நீரில் பூவும் நெல்லும் கலந்து காணப்படும். அறுகம்புல்லின் கிழங்காகிய பாவையையும் குளிர்ந்த நறுமணப் பூமுகையையும் வெண்ணூலால் சேர்த்துக் கட்டி அவளுக்கு அணிவர். அவள் அழகில் நல்லாடை புனைந்து திகழ்வாள். மணப் பெண்ணின் கூந்தல் முல்லை முதலிய மண மலர்களால் புதுமணம் பெற்று விளங்கும்.[371]

பரத்தையிற் பிரிந்த தலைமகன் விடுத்த தூதைக் கண்டு ஒரு தலைவி பேசும் பேச்சிலிருந்து, மணக் காலத்தில் தீ வேட்டனரோ என்றும் கருத

இடமுண்டு. தலைவனுடைய தூதுவனைக் கண்ட தலைவி, 'அவன் என்னை மணந்த காலத்து இருந்த அன்புடை நிலையில் சிறிதும் மாறாமல் நாம் இருக்கின்றோம். நெய்யைப் பெய்த தீயைப் போல நாம் அவனை ஏற்றுக் கொள்வோம்' என்று பேசுகிறாள்.[372]

திருமணத்தின் அறிகுறியாக இப்பொழுது மணப்பெண்ணிற்கு மணமகன் கட்டும் தாலி போன்று ஏதேனும் அணியும் வழக்கம் முன்பு இருந்ததா என்று வெளிப்படையாகத் தெரியவில்லை. ஆயைக் குறித்து முடமோசிரியர் பாடிய 127 ஆம் புறப் பாட்டில் அவன், தன்பால் உள்ள பொருள்களையெல்லாம் இரப்போர்க்கு ஈந்தான் என்று குறிப்பிடுகின்றார். அவன் மனைவியரிடம் எவ்வகையான அணிகலன்களும் இல்லை. ஆனால் அவர்களிடம் 'ஈகை அரிய இழை' ஒன்று மட்டுமே எஞ்சியிருந்தது என்கிறார்.

நெடுநல் வாடையில் அரசனைப் பிரிந்த நிலையில் தனியே படுக்கையில் கிடந்த அரசியைப் பற்றிக் கூறிவரும் செய்திகளில், மார்பிடத்தே திருமாங்கலியம் மட்டும் அசைந்து கிடப்பதேயன்றி வேறோர் அணியும் காணக் கூடவில்லை என்று கவிஞர் கூறுகின்றார்.[373] மண நிகழ்ச்சிகளில் மணமகளின் பெற்றோர் 'பெருமனைக்கு உரிமையுடையவளாகுக' என்று வாழ்த்தி, அவளை மணமகனுக்கு அளிப்பர். பின்னர் இரவில் மணமக்கள் ஓர் அறையில் உடன் உறைந்து இன்புறுவர்.

புதுமணப் பெண் புக்ககம் சென்றபின், நல்ல நறுஞ்சுவை உணவுகளை ஆக்கிக் கணவனை உண்பிக்கின்றனர். முதல் முதல் மணப்பெண் பாலை உலையாக வைத்துச் சோறு சமைத்தல் முறையாகும். அவள் சமைத்துப் படைக்கும் பாலடிசிலைத் தொட்டு உண்டு தலைவன் அருந்தும் முதல் உணவும் ஒரு சடங்கேயாகும்.[374]

விழா முதலியவற்றில் இரவலர்க்கும் பிறர்க்கும் தானம் செய்தலும் உண்டு. தானம் செய்கின்ற பொழுது நீரட்டித் தானம் செய்வர்.[375] உயிர்ந்தோர்க்கு நீரட்டித் தானம் செய்தலையும் காணலாம். போரில்

விழுப்புண் பட்டு வந்த வீரர்களின் புண்களைப் பேய்கள் தீண்டித் துன்புறுத்தா வண்ணம் காப்பதற்கு அவர் தம் மனைவியர் சில சடங்குகள் செய்வர். இரவ மரம், வேப்பமரம் ஆகியவற்றின் தழைகளை ஒடித்து மனையில் செருகி வைபபர். ஐயவியைப் புகைப்பர்; மையிடுவர் ; பல இயம் ஒலிக்க, மணி அடித்து காஞ்சி பண்ணைப் பாடுவர். இவ்வகையானப் பேய் தீண்டாது மகளிர் பாதுகாப்பு அளித்தமையை 281, 296 ஆகிய இரண்டு புறப் பாடல்கள் விளக்குகின்றன.

வீர மறவர்களோ போரில் இறத்தலையே பெரும்பேறாக விரும்புவர் மன்னர்களில் போர்க்களத்து இறக்கப் பெற்றாரே துறக்கம் பெறுவர். அன்றி நோய் முதலிய ஏதுவால் அவர்கள் இறந்துபட்டால், அவர்கள் போரில் புண்பட்டு இறவாத தீங்கைப் போக்குவதற்கு அங்ஙனம் இறந்த மன்னர் உடம்பைத் தருப்பைப் புல்லிலே கிடத்தி, போரில் இறந்துபட்ட வீரர்செல் உலகத்தை இவரும் அடைவாராக! என்று கூறி, அந்தணர் வாளால் அவர்தம் உடம்பைப் பிளந்து பின்பு அடக்கம் செய்வார்களாம்.[376] அன்றியும், மன்னர் பரம்பரையில் சாக்குழவியும் ஊன் பிண்டமுமாகப் பிறந்தாலும் வாளால் பிளந்து அடக்குதல் செய்வார்களாம்.[377] இறக்குமவர்களை எரித்தலும் தாழியி; கவிழ்த்தலும் மரபு.[378]

இறந்த பெருவீரர்க்குக் கல் நாட்டி வழிபடுதல் உண்டு. இறந்த கணவர்க்கு அவன் காதலிமார் புல்லின் மேல் பிண்டம் வைத்து வழிபடுவார்.[379]காதலி பிண்டம் வைத்தலேயன்றி இழிபிறப்பினனாகிய புலையன் புல்லின் மேல் கள்ளும், பிண்டமும் வைத்து இறந்தார்க்கு வழிபாடு செய்தலும் உண்டு.[380] இறந்த தாய், தந்தையார்க்கு புதல்வன் நீர்க்கடன் முதலியன செய்தல் மரபாகும். முன்னையாருக்கு நீர்க்கடன் ஆற்றுதற்குப் புதல்வர் பேறு அவசியமானது என்றும் கருதுகின்றனர். போர் தொடங்கும் முன் புதல்வர் பெறாதாரும் அப்பால் விலகிச் சென்று விடுமாறு எச்சரிக்கின்றனர்.[381] கோப்பெருஞ்சோழன் வடக்கிருந்த காலத்தில் புலவர் பொத்தியாரும் உடன் வடக்கிருக்கச் சென்ற போது, அவர் புதல்வர்ப்

பெறாமையினாலே அவரைக் கோப்பெருஞ்சோழன் விலக்கிப் புதல்வனைப் பெற்ற பின் வா எனக் கூறித் தடுத்து விடுகின்றான்.[382] உதியஞ் சேரலாதன் துறக்கம் எய்திய தமது முன்னோர்க்குப் பலியாக அவன் பிண்டம் ஈந்த போது பிறர்க்கும் பெருஞ்சோறு அளித்தனன். அவன் இட்ட பலிப் பிண்டத்தை உண்ண அவ்விடத்துக் குறியவும் நெடியவும் பேய்க் கூட்டங்கள் வந்து சூழ்ந்தனவாம்.[383] உலகின் நிலையாமை கண்டு நிலையான வீட்டின்பத்தை நாடும் ஒழுக்கத்தில் செல்லும் துறவு நிலையாளரும் உளர்.[384] ஆகவே, உலகியலில் மட்டுமே உழன்று திரியாது பற்று நீங்கித் துறவு அடைதல் வேண்டும் என்று 363 ஆம் புறப்பாட்டு அறிவுறுத்துகிறது.

**நிமித்தம்:**

போர் நிகழ்ச்சியின் போதும், பிற முயற்சிகளில் ஈடுபடும் போதும் நாள் கோள் நோக்கியும், பல்வகை நிமித்தங்களைக் கவனித்தும் செயல் தொடங்கினர். நிமித்தம் என்பது புள் என்றும் கூறப்படும் முதலில் பறவைகளால் நிமித்தமட பார்க்கும் வழக்கம் ஏற்பட்டிருந்தது பின் பிற நிமித்தங்களுக்கும் அதுவே பெயராக வழங்கப்பட்டது.[385]

நிமித்தங்களில் நல் நிமித்தமும், தீ நிமித்தமும் உண்டு. பினவருவன நல் நிமித்தங்களாகும்.

"இடூஉ ஊங்கண் இனிய படூஉம்
நெடுங் சுவர்ப் பல்லியும் பாங்கில் தேற்றும் ;
மனை மா நொச்சி மீமிசை மாச்சினை,
வினைமாண் இருங்குயில் பயிற்றலும், பயிற்றும் ;
உரம் புரி உள்ளமொடு சுரம்பல நீந்தி
செய்பொருட்கு அகன்றனர் ஆயினும் பொய்யலர்"
"வருவர் வாழி -தோழி!"[386]
"நுண்ஏர் புருவத்த கண்ணும் ஆடும் ;

மயிர்வார் முன்கை வளையும் செறூஉம்;

களிறு கோட் பிழைத்த கதம் சிறந்து எழுபுலி"[387]

"குருகும் இரு விசும்பு இவரும்; புதலும்

வரி வண்டு ஊத வாய் நெகிழ்ந்தனவேள;

சுரிவளைப் பொலிந்த தோளும் செற்றும்,

வருவர்கொல் வாழி -தோழி!"[388]

"அணிமாலைக் கேள்வற் தரூஉமார், ஆயர்

மணிமாலை ஊதும் குழல்"[389]

இங்ஙனமே தீய நிமித்தங்களை 41 ஆம் புறப்பாட்டு தொகுத்து தருகின்றத. அவை வருமாறு.

'திசை இரு - நான்கும் உற்கம் உற்கவும்,

பெருமரத்து, இலைஇல் நெருங்கோடு வற்றல் பற்றவும்,

வெங்கதிர்க் கனலி துற்றவும், பிறவும்,

அஞ்சுவரத் தகுந புள்ளுக்குரல் இயம்பவும்

எயிறு நிலத்து வீழவும், எண்ணெய் ஆடவும்

களிறு மேல் கொள்ளவும், காழகம் நீப்பவும்,

வெள்ளி நோன்படை கட்டிலொடு கவிழவும்,

கனவின் அரியன காணா, நனவில்

செருச் செய் முன்ப ; நின் வருதிறன் நோக்கி,

மையல் கொண்ட ஏமம் இல் இருக்கையர்'[390]

தீய நிமித்தம் நேர்ந்த விடத்து, மனம் தளர்தலும், தீங்கு நேராதிருக்க வேண்டிக் கடவுளைத் துதித்துப் போற்றுதலும் மாந்தர் இயல்பு என்பது 260 ஆம் புற பாட்டில் வரும் பாணனது செயலால் புலப்படும்.

பாணன் இன்னிசை எழ எழுப்ப, அது வேறுபட்டு இரங்கற் பண்ணாக ஒலிக்கிறது. அது கேட்டு யாது தீங்கு நேருமோ என்று அவன்

வருகின்ற வழியில் உள்ள கள்ளி நிழலில் கண்ட கடவுளை ஏத்தி வழி நடந்து வருகின்றானாம். பாலை நிலத்தில் வழிச் செல்வார் ஓந்தியை நிமித்தமாகக் கொள்கின்றனர்.[391] புள் நிமித்தம் பார்த்தல் போல விரிச்சி கேட்டலும் உண்டு. 'புள்ளும் ஓராம் விரிச்சியும் நில்லாம' (குறுந் 218:3) என்பது காணத்தகும். 'விரிச்சி' என்பது நற்சொல்; இக்காலத்தில் 'அசரீரி வாக்கு' என்று சொல்வது போல கேட்கும் குரலால் நலம் தீங்கு அறிதல் ஆகும். மனையிலே உள்ள மணற்பந்தரிலே. மணி ஒலிக்க, நாழியிற் கொண்ட நெல்லுடனே நறிய முல்லைப் பூவும் நீரும் சொரிந்து முது பெண்டிர்கள் விரிச்சி கேட்டு நிற்பர்.[392] இவ்வாறு விரிச்சி கேட்டு நிற்கும் பொழுது, காதில் விழும் சொற்களைக் கொண்டு நலம் தீங்கு அறிவர்.

விரிச்சி கேட்டல் போன்றே பல்லியின் சொல்லும் அவர்க்கு நிமித்தமாகின்றது. தலைவன் பிரிவில் அவன் வருகையை வேணடிச் சுவரில் அவன் சென்ற நாள்களைக் கணக்கிடச் செய்து வரும் குறிகளை எண்ணி ஏங்குகிறாள். அப்பொழுது பல்லி பொலபொலவென ஒலிச் செய்கிறது. பல்லி சொல் நல் நிமித்தமாகவே கொள்ளப்படுகிறது.[393] பெண்களின் இடக்கண் துடித்தலும் இங்ஙனமே நல் நிமித்தம் ஆகும்.[394]

தெய்வங்களும் கனவில் காட்சி தருதல் உண்டு என்று நம்பினர். மகளின் வேறுபாடு முருகன் அணங்கியதனால் நிகழ்ந்தது என்று கொண்டு வெறியாட்டெடுக்க முனைகிறாள் தாய். அப்பொழுது தோழி தலைவியை நோக்கி,'இந்த முருகன் நம் அன்னையின் கனவிலே தோன்றி, இந்நோய் என்னால் வந்தது அன்று; மலைகிழ வோனாகிய தலைமகனால் நேர்ந்தது என்ற உண்மையைச் சொன்னால் முருகனுக்கு யாது குறை உண்டாகும்' என்று வினவுகிறாள். இது கொண்டு கனவில் தெய்வக் காட்சிப் புலப்படுதல் கூடும் என்னும் நம்பிக்கை மக்களிடை உள்ளமை உணரலாம்.[395]

**முடிவுரை:**

ஒரு நாட்டின் சமூக அமைப்பை அங்குள்ள இயற்கைச் சூழலே தீர்மானிக்கின்றது. இதற்கு பல நாடுகளின் சமூக அமைப்புகள் சான்று பகிற்கின்றன. தமிழக இயற்கை அமைப்புகளுக்கு ஏற்ப குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்று பகுக்கப்பட்டு இயற்கை வழி சார்ந்த சமூகம் தொடக்க காலத்தில் நிலவியது. அந்தந்தப் பொது நிலப்பகுதிக்குத் தக்கவாறு மக்கள் தொழிலில் ஈடுபட்டனர். தொழிலுக்குத் தக்கவாறு பெயர்கள் தோன்றின. இயற்கைச் சார்ந்த சமூகம் நாளடைவில் தொழிலடிப் படையிலான சமூகமாக மாற்றம் பெற்றது.

கால மாற்றத்தினாலும் தொழில்களில் ஏற்பட்ட முன்னேற்றத்தினாலும் தொழில்கள் பலவாகப் பெருகி அதில் பல பிரிவுகள் தோன்றின. மக்கள் தாங்கள் மேற்கொண்ட தொழிலின் தன்மைக் கேற்ப சமூக மதிப்பை பெற்றனர். இந்நிலையே சமூகத்தில் ஏற்ற தாழ்வுகள் ஏற்பட காரணமாக அமைந்தது.

எனினும் இந்தக் கால கட்டம் வரை, பிறப்படிப்படையில் ஏற்றத் தாழ்வு கருதும் நிலை காணப்படவில்லை. தொழிற்பிரிவுகளே வருணப் பாகுபாடும், சாதிய அமைப்புகளும் உருவாகக் காரணமாக அமைந்தன. தற்காலத்தில் உள்ளது போல் சங்கக் காலத்தில் கடுமையான பிரிவினைகளும் வருணசாதிய வெறியும் காணப்படவில்லை. கல்வியும், பொருளாதாரமுமே மதிப்பினைத் தீர்மானித்தன.

இயற்கைச் சார்ந்த வழிபாடு காலப் போக்கில் பல மாற்றங்களை அடைந்து, வருணபகுப்பும், சாதிய பகுப்பும், வழிபாட்டு நெறிகளில் கலந்து சமயங்கள் உருவாக அடித்தளமாக அமைந்தன. சங்க காலத்தில் வைதீக, சமண, பௌத்த சமயப் பிரிவுகள் காணப்பட்டன. முருகன், சிவன், திருமால், இந்திரன், கொற்றவை உள்ளிட்ட பெருந்தெய்வங்களையும், மழை, காடு, நீர்த்துறை, கருவிகள், வீடுகள் உள்ளிட்ட பொருள்களில் உறையும் சிறு தெய்வங்களையும் நடுகல்லையும் சங்க கால மக்கள் வழிபட்டனர்.

அச்சம் தரக் கூடிய அனைத்து சக்திகளையும் தெய்வமாக வழிபட்டனர். சமயப் பிரிவுகள் தோன்றி வாதங்கள் நிகழ்ந்ததேயன்றி வெறுப்புணர்ச்சியோ, வன்முறைகளோ நிகழ இடம் கொடுக்கவில்லை. இம்மை. மறுமை பற்றிய எண்ணங்களும் நிலையாமைக் கருத்துகளும் சமயப் பிரிவுகளால் சமூகத்தில் தோற்றுவிக்கப்பட்டன. ஆவி, பேய், நிமித்தம் போன்ற பல நம்பிக்கைகள் மக்களிடையே அக்காலத்தில் நிலவின.

**சான்றெண் விளக்கம்**

1. கலைக்களஞ்சியம் தொகுதி நான்கு - பக் - 477
2. வாழ்வியல் களஞ்சியம் தொகுதி எட்டு - பக் - 588
3. மேலது - பக் - 590
4. கலைக் களஞ்சியம் தொகுதி நான்கு - பக் - 479
5. The New Encyclopedia Britannica Macromedia, Vol IX – P – 315
6. The Oxford English Dictionary, Vol IX's – P – 360
7. K.K.Pillay, A.Social History of the Tamil's Part 1 – P – 13
8. K.K. Panikkar, Geographical Factors in Indian History P-IX
9. C.K.Mahadevan Cultural Heritage of Ancient Tamil's P – 41
10. The Story of Civilization, Vol II, The Life of Greece – P – 10
11. மேலது - P - 107
12. Xavier Thaninayagam, Natar in Ancient Tamil Poetry P – 1
13. கே.கே.பிள்ளை, தமிழக வரலாறு, மக்களும் பண்பாடும் பக் - 24
14. Xavier Thaninayagam, Natar in Ancient Tamil Poetry P – 4-5
15. தொல் பொருள் இளம் - 5
16. மேலது - 20
17. மேலது - 22
18. அகம் 22:2, 52:8; நற் 17:12; 36:4; குறுந் 362:6
19. நற் 38:5;127:8; நற் 4:4; 163:12; நற் 31:21; 49:10
20. அகம் 26:4; 56:8; நற் 20:2; குறுந் 73:1

21. குறுந் 208:3; ஐங் 213:2; நற் 65:6; அகம் 168:13

22. புறம் 108:1; நற் 22:1; குறுந் 214:3

23. குறுந் 95:3; "குடிக் குறவன்"

24. நற் 75, 85; அகம் 172,182

25. அகம் 28; 318; நற் 276,285

26. குறுந் 379; ஐங் 208; மலைபடு 322; அகம் 322; அகம் 12; புறம் 236; ஐங் 213; நற் 44, 102; குறுந் 82

27. அகம் 348; புறம் 168

28. கலி 101:34; 49; 102:30; 105:27; அகம் 14:7; 54:10; 74:16; குறுந் 117:3; 210:1; பதிற் 88:9; அகம் 59:5; நற் 142:4; 169:7; அகம் 94:4

29. கலி 101:38; 103:64; 110:9; புறம் 33:2

30. கலி 103:33; 105:58

31. மேலது 107:2-3

32. மேலது 108:3

33. பெரும் 155:165

34. நற் 3:5; 79:9; குறுந் 10:3; புறம் 13:11

35. அகம் 6:5; 44:16-19; 220:13; புறம் 24:22; 385:9; அகம் 96:14

36. புறம் 328:2; "புன்புலச் சீறூர் நெல்விளை யாதே"

37. பட்டினம் 14-15

38. நற் 26:3-4

39. ஐங் 48:3

40. புறம் 16:15-16 கரும்பல்லது காடாயா பெருந்தண் பண்ணை,

41. பெரும் 260; 261

42. திமில் அகம் 240; வலை, அகம் 60, 70; தூண்டில் நற் 199; உளி. நற் 190; அகம் 210; 340

43. அகம் 100, 240

44. மேலது 280:350

45. மீன் நெய் அட்டிக் கிளிஞ்சில் பொத்திய சிறுத் விளக்கு நற் 175:3-4

46. நற் 254:6; அகம் 60 /

47. அகம் 87:7; 89:10; 101:5; 121:11; 79:14

48. மேலது 31:7; 89:16; 319:3

49. மேலது 63:10-13; 101:4-11; 105:13-15; 377:5

50. நற் 352:1-3;குறுந் 77; அகம் 113:10-35; 161:1-4; 175:1-6; 313:13-15

51. அகம் 375:3-5

52. N. Sanjeevi, A Critical Study of Purananuru, Unpublished M.Litt, Thesis Pag – 189, 190

53. K.K. Pillay, A Social History of Tamil's Part I – P – 253; Ibid, Chap – VI.F, Not::141

54. தொல்காப்பியம் பொருளதிகாரம் இளம்பூரனர் உரை 63:4-5

55. புறம் 55:6-9

"வேந்துமேம் பட்ட பூந்தார் மாற
கடுஞ்சினத்த கொல்களிறும் கதழ்பரிய கலிமாவும்
நெடுங்கொடிய நிமிர்தேரும் நெஞ்சுடைய புகன்மறவருமென
நான்குடன் மாண்ட தாயினும் மாண்ட"

56. திருக்குறள் 955

57. *பதிற்று 44:22; புறம் 186:2; 331:11; 319:12; 314:5; 308:4; 340:9*

58. *புறம் 178; 179; 181; 313:26*

59. *மேலது 95:6-8*

60. *மேலது 109:14-18*

61. *மேலது 60*

62. *தொல்காப்பியம் பொருளதிகாரம் நச்சினார்க்கினியார் உரை நூற்பா 36*

63. *புறநானூறு 126:87, 100; பதிற் 74:14-21*

64. *பதிற் 74:20-21*

65. *புறம் 50; 317*

66. Narendra Nath Law Aspects of Ancient Indian Polity P – 38-39

67. *மேலது* - P - *39*

68. *மதுரைக் காஞ்சி - 496-499*

69. *இராமச்சந்திரன் சி.ஈ. தமிழ்நாட்டு வரலாறு சங்ககாலம் அரசியல் ஆட்சிமுறை, பக்.561*

70. Altekar A.S. State and Government in Ancient India – P – 167.

71. *இராமச்சந்திரன் சி.ஈ. தமிழ்நாட்டு வரலாறு சங்ககாலம் அரசியல் ஆட்சிமுறை, பக்.560*

72. K.K. Pillay, A Social History of the Tamil's Part I – P – 218

73. *மேலது* P - *164*

74. *பெரும் - 297 - 301*

75. *பெரும் - 305 - பறவைப் பெயர்படுவத்தம்*

76. *பதிற் 63:1 "பார்ப்பாரக் கல்லது பணிபஷு்யலையே"*

77. அகம் 140; 390; புறம் 60:7

78. பெரும் 67-76

79. அகம் 39:10; 167:7-9

80. குறுந் 11:7; அகம் 67:12; 262:17

81. மு.வரதராசன், ஓவச் செய்தி பக் - 6

82. K. Sivathambi Drama in Ancient Tamil Society P – 175

83. அகம் 167:4; 181:20-21; 205:12-13; 369:14-15; 227:19

84. அகம் 369:15; "நிதியுடை நன்னகர்"

227:19 "விழுநிதி துஞ்சம் வீறுபெறு திருநகர்"

85. கூலவாணிகன் சீத்தலை சாத்தனார் காவிரிப் பூம்பட்டினத்துப் பொன் வணிகனார் மகனார் நப்பூதனார், அறுவை வாணிகன் இளவேட்டனார், மதுரை பண்ட வாணிகன் இளந்தேவனார் என்போர் புலவராய் வாழ்ந்துள்ளனர்.

86. பட்டினம் 200 - 201

87. கு.வெ.பாலசுப்ரமணியம் சங்க இலக்கியத்தில் சமூக அமைப்பு பக்- 74

88. பெரும்பாண் 46-50; அகம் 301:6-7; புறம் 87; கலி 81:8; நற் 111:6; குறுந் 123:5; 10:10; 60:3

89. பட்டினம் 250; பருவநிலை நெடுந்தூண்

90. நெடுநல் 115-131

91. நற் 3:3; குறுந் 192:4; ஐங் 215:1; 263:2

92. தங்காற் பொற்கொல்லன் வெண்ணாகனார், கொல்லன் புல்லன், கொல்லன் அழிசி;

93. நற் 125:4; 133:9; அகம் 202:6; 224:3

94. பெரும்பாண் 207-208; புறம் 170:16

95. நற் 203:4; 293:2; புறம் 32:8; 256:1

96. புறம் 228:2-3; 256:2; 228:12; 238:1; 256:5

97. பெரும்பாண் 469: "ஆவியன்ன அவிர்நூற் கலிங்கம் "

பெரும்பாண் 83: "அரவுரியன்ன அறுவை "

புறம் 383:10 "கழை படு சொலியன் இழையணி வாரா"

புறம் 50:6-7: "நுரைமுகந்தன்ன மென்பூஞ்சேக்கை"

98. பெரும்பாண் 328. "கொன்றை மென் சினைப் பனிதவழ் பாவைபோல்"

நற்றிணை 43:1; 92:2 "துகில் விரிந்தன்ன வெயில் "

புறம் 398:20 "புகைவிரிந்தன்ன பொங்கு துகில்"

குறிஞ்சி 55: "அவிர்துகில் புரையும் அவ்வெள்ளருவி"

99. பொருநர் 155: "கொட்டைக் கரையபட்டுடை"

புறம் 274:1 "நீலக்கச்சைப் பூவாராடை"

100. அகம் 89:7

101. புறம் 259:5-6

102. புறம் 289:10: " மடிவாய்த் தண்ணுமை இழிசினன்"

103. மேலது 170:5-6

104. மேலது 287:1-2

105. மேலது 360:16-19 கள்ளி போகிய களரி மருங்கின்

வெள்ளில் நிறுத்த பின்றைக் கள்ளோடு

புல்லகத் திட்ட சில்லவிழ் வல்சி

புலையன் ஏவப் புல்மேல் அமர்ந்துண்டு !"

106. மேலது 82:3: " கட்டில் நினைக்கும் இழிசினன்"

107. கலி 95:10

108. புறம் 335:7-8

109. புறநானூறு உ.வே.சாமிநாதையர் பதிப்பு விசேடச் செய்திகள்-பக்- 85

110. புறம் 61, 82, 170, 287, 289, 390; கலி 72, 92, 311; நற் 77, 80, 345, 350; அகம் 204

111. பெரும்பாண் 248-252

112. மேலது 213-223

113. அகம் 87:13; பெரும்பாண் 333; புறம் 211:18-19

114. குறுந் 356

115. புறம் 164:4-5

116. நற்றிணை 110:1-8

117. புறம் 160:20-21

118. மேலது 381:2 : " பாலிற் பெய்தவும் பாகிற் கொண்டவும்"

119. மேலது 64:7: " நெடுநீர்ப் புற்கை நீத்தனம் வரற்கே"

120. சிறுபாண் 137-138

121. புறம் 160:5 : " அவிழ்புகு வஷையா தாகலின் வாடிய"

122. மேலது 68:1: " உடும்புரித் தன்ன வென்பெழு மருங்கிற்"

123. மேலது 69:3-4: "வெற்ஷைழை நுழைந்த வேர்நனை சிதா அர் ஓம்பி யுடுத்த வுயவற் பாண"

124. R.N. Sharma "Ancient India according to Mana – P – 37"

125. R.N. Sharma "The description itself betrays and stage of Civilization P – 37"; Sukla Bhasvara White Brilliant – P – 44

126. P.C. Bhargava; "Fundamentals of Hinduism – P – 88"

127. A.L. Basham. "The Wonder that was India – P – 137-138"

128. R.N. Sharma "The description itself betrays and stage of Civilization – P – 43"

129. மேலது – P – 45

130. மேலது – P – 50

131. தொல்காப்பியம், பொருள் இளம் உரை. நூ 74

132. தொல்காப்பியம், பொருள், அகத் இளம் உரை. நூ 28, 33, 36

133. தொல்காப்பியம், பொருள் இளம் உரை. நூ 142

134. புறம் 183

135. திருக்குறள் 972, 973, 133, 139, 259

136. புறம் 82, 287, 289, 170

137. பதிற் 24:6-8

138. தொல்காப்பியம், பொருளதிகாரம் இளம்பூரனர் உரை. நூ 74; நச்சர் உரை 75

139. மனுதர்ம சாஸ்திரம் இராமானுசார்யர் - பக் - 216

140. தொல்காப்பியம், பொருள் இளம் உரை. நூ 588; 608

141. தமிழ்நாட்டு சங்ககாலம் வாழ்வியழுழுழ்ழ்வியல் - பக் - 72-73

142. பெரும்பாண் 229

143. சிலம்பு 8:41

144. திருவாசகம் 31:5

145. நாலாயிர திவ்யபிரபந்தம் திருவாய் மொழி 3:4

146. Subramanian. N. Sangam Polity – P – 268-269

147. கு.வெ. பாலசுப்ரமணியம் சங்க இலக்கியத்தில் சமூக அமைப்பு - பக் - 74,75

148. தொல்காப்பியம் சொல் சேனா வரை நூற்பா 165

149. புறம் 385:8-9; காவிரி யாணையும் தாழ்நீர்ப் படப்பை
நெல்லினை கழனி அம்பர் கிழவோன்"
3911:2-4 "விண்டு வனைய விண்டோய்ப் பிறங்கல்
முகடுற வுயர்ந்த நெல்லின் மகிழ்வரப்
பகடுதரு பெருவளம்..."

150. மாரியப்பன், தமிழக வரலாறு ஒரு சமூக பொருளாதாரக் கண்ணோட்டம் -பக்-19-20

151. நற்ஷிணை 350; மலைபடு 471; புறம்-24:1; 61:1-8; 209:2-5

152. மாரியப்பன், தமிழக வரலாறு ஒரு சமூக பொருளாதாரக் கண்ணோட்டம் - 68,70

153. மேலது - பக் 69

154. புறம் 14:14-16

155. பாஸ்கல் கிஸ்பர்ட் சமூகவியலின் அடிப்படைக் கோட்பாடுகள் நாராயணன் - ஜெ (மொ.ப) - பக் 281

156. கலைக் களஞ்சியம் தொகுதி 4 - பக் - 452

157. பாஸ்கல் கிஸ்பர்ட் சமூகவியலின் அடிப்படைக் கோட்பாடுகள் நாராயணன் - ஜெ (மொ.ப) - பக் 382

158. மேலது - பக் - 412

159. மேலது - பக் - 392

160. புறம் 166

161. மேலது 166:8-9 "மூவேழ் துறையும் முட்டுஇன்று போகிய
உரைசல் சிறப்பின் உரவோர் மருக"

162. மேலது 166:19-23; 384:15-18; 15:17-21; 21:5-7

163. பரி 17: 28-32 'வசை நீங்கிய வாய்மையால், வேள்வியால்
திசை நாறிய குன்று அமர்ந்து, ஆண்டு ஆண்டு
ஆவி உண்ணும் அகில் கெழு கமழ்புகை
வாய்வாய் மீபோய், உம்பர் இமைபு இறப்ப
தேயா மண்டிலம் காணுமாறு இன்று'

164. மதுரைக் 759-763

165. புறம் 26:12-15

166. மேலது 244:4-9

167. மேலது 397:20-21

168. மேலது 16, 125, 367, 377

169. பதிற் 21, 70, 74

170. புறம் 99:1; 350:1

171. மேலது 122

172. மேலது 384

173. அகம் 13:11-12

174. பெரும்பாண் 494-500

175. அகம் 220:5-9

176. புறம் 166:1-9

177. பட்டினம் 52-55

178. மதுரை - 464-467

179. மேலது 465-467 "காமர் கவினிய பேரிளம் பெண்டிர்,
பூவினர் புகையினர் தொழுவனர் பழிச்சிச்
சிறந்து புறங்காக்கும் கடவுட் பள்ளியும்"

180. மேலது 475-488

181. அகம் 123:1-4 "உண்ணாமையின் உயங்கிய மருங்கின்
ஆடாப் படிவத்து ஆன்றோர் போல,
வரை செறி சிறு நெறி நிரையுடன் செல்லும்
கான யானை கவின் அழி குன்றம்"

182. பட்டினம் 194-199

183. குறுந் 156

184. நற்றிணை 72

185. பட்டினம் 63-64

186. அகம் 4:11-12

187. Vasudeva Rao, " Buddhim's in the Tamil Country – P – 68

188. Kandaswamy. S.N. Buddhims as expounded in Manimekalai – P – 4-5

189. புறம் 362

190. கந்தசாமி சோ.ந. பௌத்தம் - பக் 179

191. மதுரை 453-455

192. முருகு 160:16

193. முருகு 148:174, பரி 1:44-51

194. புறம் 58:16

195. பரி 9:1-3; 18:30; முருகு 156; கலி 105:15; புறம் 241:3

196. பரி 5:21-70

197. மேலது 9:9

198. ஐங் 62:1-2 "இந்திர விழாவிற் பூவின் அன்ன
புன்தலைப் பேடை வரிநிழல் அகவும்"

199. பரி 8:3-7

200. மேலது 12:77-84

201. புறம் 50:14-17; 174:19-20

202. புறம் 62:16-19; மதுரைக் 456-460

203. பரி 4:66-69 "அழல்புரை குழை கொழு நிழல் தரும் பலசினை
ஆலமும், கடம்பும், நல் யாற்று நடுவும், கால் வழக்கு
அறுநிலைக் குன்றமும், பிறவும்
அவ்வவை மேவிய வேறு வேறு பெயரோய்"

204. பரி 1-4, 13-15

205. முருகு 220-226

206. பெரும்பாண் 458-459; கலி 81:9; 83:19
'தணிவுறத் தாங்கிய தனிநிலைச் சலதாரி
மணிமிடற்று அண்ணற்கு மதிஆரல் பிறந்தோய் !'

207. முருகு 1-11; 77-125

208. பரி 5:11-12; 14:2; 21:67

209. குறுந் 1:2; புறம் 56:8; பதிற் 11:16; பரி 5:2; 17:44; 21:1-2; 18:26

210. முருகு 38-39

211. குறிஞ்சி 51-52; சிறுபாண் 172; முருகு 45-46; பரி 5:7; 21:8-9; 21:66

212. பரி 5:63-70

213. முருகு 45-46; 59-60; 275

214. முருகு 266; பரி 8:29; 19:26; 102-103

215. முருகு 6, 175; பரி 9:9, 58

216. முருகு 101-102; பரி 8:69; 9:67; 14:21-22; 19:95

217. குறிஞ்சி 174-175; நற் 288:10; அகம் 98:9-10

218. அகம் 360:6-9 "வெருவரு கடுந்திறல் இருபெருந்தெய்வத்து
உரு உடன் இயைந்த தோற்றம் போல,
அந்தி வானமொடு கடல்அணி கொளாஅ,
வந்த மாலை பெயரின்"

219. புறம் 166:1-2 "நன்று ஆய்ந்த நீள் நிமிர்சடை
முது முதல்வன்" .

220. கலி 1:4; "மாறாப் போர் மணிமிடற்று எண்கையாய்
150:9 "பிறங்கு நீர் சடைக் கரந்தான்".

221. புறம் 91:5-6; 55:4-5; கலி 103:25; 142:24-28

"பால் புரை பிறை நுதற் பொலிந்த சென்னி
நீலமணி மிடற்று ஒருவன் "

222. முருகு 153; கலி 2:4; 104:10; அகம் 181:16

223. முருகு 152

224. மேலது 151

225. கலி 2:6; 101:8; 103:25; 105:15; 38:1; புறம் 56:2; 55:1-3; பரி 5:24-25;
பரி.தி 1:76-77

226. முருகு 153; கலி 38:1-2

227. பரி 6:53-54

228. கலி 100:7-8; 81:9; 83:14; சிறுபாண் 97

229. கலி 38:1-5

"இமையவில் வாங்கிய ஈர்ஞ்சடை அந்தணன்
உமை அமர்ந்து உயர்மலை இருந்தனனாக

ஐ - இரு தலையின் அரக்கர் கோமான்

தொடிப்பொலி தடக்கையின் கீழ்ப்புகுந்து, அம்மலை

எடுக்கல் செல்லாது உழப்பவன் போல"

230. பரி 5:22-27; 1:75-78; கலி 38:1; புறம் 55:1-4

231. கலி 101:24-26; 103:43-45

232. முருக 258-259

233. பரி 11:99-100 "நெற்றி விழியா நிறை திலகம் இட்டாளே ;
கொற்றவை கோலம் கொண்டு ஓர்பெண்"

234. குறுந் 218:1 - நச்சர் உரை

235. புறம் 247:1-2

236. குறந் 218:1-2 "விடர்முகை அடுக்கத்து விறல்கெழு சூலிக்குக்
கடனும் பூணாம் ; கைந்நூல் யாவாம்"

237. பதிற் 79:14-18

238. பதிற் 88:11-12 "குருதி விதிர்த்த குவவுச் சோற்றுக் குன்றொடு
உருகெழு மரபின் அயிரை பரவி"

239. மலைபடு 188:11-12 "அனையது அன்று அவன் மலைமிசை நாடே -
நிரை இதழ்க் குவளைக் கடிவீ தொடினும்,
வரை அர மகளிர் இருக்கை காணினும்,
உயிர்செல வெம்பிப் பனித்தலும் உரியிர் ;
பலநாள் நில்லாது நிலநாடு படர்மின்"

240. அகம் 342:11-12

241. நற் 165:3-5; அகம் 348:2-10

242. பொருநர் 47-52; பதிற் 66:15

243. கலி 106:26-29

244. அகம் 110:4-5

245. கலி 131:1-2 "பெருங்கடற் தெய்வம் நீர் நோக்கித் தெளித்து, என்
திருந்திழை மென்றோ மணந்தவன்"

246. அகம் 156:1-2

266. குறுந் 263:1-4

"மறிக்குரல் அறுத்து, தினைப் பிரப்பு இரீஇ,
செவல் ஆற்றுக் கவலைப் பல்இயம் கறங்க,
தோற்றம் அல்லது நோய்க்கு மருந்து ஆகா
வேற்றுப் பெருந்தெய்வம் பல உடன் வாழ்த்தி"

267. புறம் 459; 4-5; 62: 2-6; 370:23-25; 371:21-26: பதிற் 36:11-14; மதுரைக் 24-27; முருகு 51-56; பதிற் 35:6-10

268. புறம் 369:15-18

269. பெரும்பாண் 234-237

"கணம்கொள் சுற்றமொடு கைபுணர்ந்து ஆடும்
துணங்கை அம் பூதம் துகில் உடுத்தவை போல்,
சிலம்பி வாய் நூல் வலந்த மருங்கின்,
குழுமு நிலைப் போரின் முழுமுதல் தொலைச்சி"

270. பட்டினம் 57

"பூதம் காக்கும் புகல் அருங் கடி நகர்"

271. அகம் 131: 6-9; 179:7; 269:3-6; 67-7; 387:13-14; 35:6; 53:10; ஐங் 352:1; மலைபடு 386-387; புறம் 253: 5-8; 314:1-2

272. மலைபடு 394-396; புறம் 306;2-4; அகம் 29:1-4;

273. அகம் 35:5-7

"முனைஆத் தந்து, முரம்பின் வீழ்த்த
வில்ஏர் வாழ்க்கை விழுத்தொடை மறவர்
வல்ஆண் பதுக்கைக் கடவுட் பேண்மார்"

274. புறம் 232

275. மேலது 221, 222, 223

276. புறம் 232:3-4; 260:26; 261:13-14; 264:2-3; 265:3-4; 329:1-4; அகம் 35:8-9; 67:10-11;131:2,12; 269:2-3; 8-9; பட்டினம் 79-80

277. முருகு 225- 226

278. அகம் 307:11-12

279. குறுந் 87:1

280. புறம் 34:12

281. மேலது 325:10-13

282. நற் 303:1-5

283. பட்டினம் 81-93

284. மேலது 246-249

"கொண்டி மகளிர், உண்துறை மூழ்கி
அந்தி மாட்டிய த்நந்தா விளக்கின்
மலர் அணி மெழுக்கம், ஏறிப் பலர்தொழ
வம்பலர் சேக்கும் கந்துடைப் பொதியில்"

285. மதுரை 577-578

286. மேலது 353-354

"தொல்வலி நிலைஇய, அணங்குடை நெடுநிலை,
நேய்படக் கரிந்த திணபொரிக் கதவின்-"

287. பட்டினம் 160

288. நெடுநல் 42-44

"இரும்பு செய் விளக்கின் ஈர்ந்திரிக் கொளீஇ,
நெல்லும் மலரும் தூஉய், கைதொழுது,
மல்லுல் ஆவணம் மாலை அயர"

289. நற் 361:1-2

"கருங்கண் கருனைச் செந்நெல் வெண்சோறு
சூருடைப் பலியொடு கவரிய, குறுங்கால்"

290. அகம் 282:16-18

"வல்லே வருக, வரைந்த நாள்! என
நல் இறை மெல்விரல் கூப்பி,
இல் உறை கடவுட்கு ஆக்குதும் பலியே!"

291. மேலது 369:7-8

"காழ்புனைந்து இயற்றிய வனப்பு அமை நோன்சுவர்ப்

பாவையும் பலிஎனப் பெறாஅ; நோய் பொர,"

292. மதுரைக் 723-724;

"வல்லோன் தைஇய வரிப்புனை பாவை

குருகு இயன்றன்ன உருவினை ஆகி"

கலி 22:5 "தாய் உயிர் பெய்த பாவை போல"

293. அகம் 157:11-14

"முனைப் புலம் பெயர்த்த புல்லென் மன்றத்து,

பெயல் உற நெகிழ்ந்து, வெயில் உறச் சாஅய்,

மனை ஒழிந்திருத்தல் வல்லுவோர்க்கே!"

294. அகம் 62:12-16; 209:15-17; குறுந் 89:4-7; 100:5-6; நற் 185:6-11; 192:8-11; 201:5-12

295. பட்டினம் 67-69

"நீலநிற விசும்பிளன் வலன் ஏர்பு திரிதரும்

நாள்மீன் விராய கோள்மீன் போல

மலர்தலை மன்றத்துப் பலர் உடன் குழீஇ"

296. புறம் 6:27-29; 56:21-25

297. மதுரை 7-8

'பகற் செய்யும் செஞ்ஞாயிறும்

இரவு செய்யும் வெண்திங்களும்'

298. புறம் 55:13-17

299. கலி 147:26-29

300. மேலது 143:22-24

301. கலி 141:11-12, நற் 283:5-7; முருகு 1-2

302. குறுந் 307:1-3; அகம் 239:9-10; மதுரைக் 193-194

303. பரி 3:51-53

'அணி நிழல் வயங்கு ஒளி ஈர் எண் தீம் கதிர்,

பிறைவளர், நிறைமதி உண்டி

அணி மணிப் பைம்பூண், அமரர்க்கு முதல்வன் நீ '

304. அகம் 114:4-5

'உரவுக் கதிர் மழுங்கிய கல்சேர் ஞாயிறு

அரவு நுங்கு மதியின் ஐயென மறையும்'

305. பரி 11:1-15

306. பதிற் 24:23-25;

'வயங்கு கதிர் விரிந்து வானகம் சுடர்வர,

வறிது வடக்கு இறைஞ்சிய சீர்சால் வெள்ளி

பயம்கெழு பொழுதொடு ஆநியம் நிற்ப'

69:13-16 'நிலம் பயம் பொழிய, சுடர் சினம் தணிய,

மயங்கெழு வெள்ளி ஆநியம் நிற்ப,

விசும்பு மெய் அகல, பெயல் புரவு எதிர,

நால்வேறு நனந்தலை ஒராங்கு நந்த'

307. மேலது 13:25-28

308. புறம் 35:6-8; 117:1-3; 388:1-2

309. கலி 99:1-2

310. புறம் 60:1-2

311. பதிற் 13:25

312. புறம் 117:1 மைம்மீன் புகையினும், தூமம் தோன்றினும்

313. அகம் 136:4-6

'அம் கண் இரு விசும்பு விளங்க, திங்கட்

சகடம் மண்டிய துகள்தீர் கூட்டத்து,

கடிநகர் புனைந்து கடவுட் பேணி,'

314. மதுரைக் 590-591
315. பரி 8:6
316. கலி 150:20
317. மதுரைக் 590-599: பரி 11:74-92
318. அகம் 141:6-8
319. நற் 231:1-2
320. பெரும்பாண் 302-303; அகம் 16:17-18; ஐங் 442:3-5; புறம் 122:8; கலி 2:21, பதிற் 31:27-28; 89:19-20
321. பட்டினம் 33-38
322. அகம் 254:13-14

'இழை அணி நெடுந்தேர் ஆழி உறுப்ப,
நுண்கொடி மின்னின் பைம்பயிர் துமிய'

323. புறம் 229
324. கலி 5:9

'நாளும் கோள்மீன் தகைத்தலும் தகைமை'

325. அகம் 86:6-7
326. மதுரைக் 1-12
327. அகம் 141:7-8; பரி 11:76-77; பட்டினம் 34-35
328. புறம் 87:2-4
329. கலி 74:10-11; குறுந் 32:1-3
330. பரி.தி 8:1-5
331. குறிஞ்சி 6 "வேறுபல் உருவின் கடவுட் பேணி"

'அழிவிலர் முயலும் ஆர்வ மாக்கள்
வழிபடு தெய்வம் கண் கண்டா அங்கு'

'வழிபட்ட தெய்வம்தான் வலி எனச் சார்ந்தார்கண்
கழியும் நோய் கைம்மிக அணங்கியது போல'

'வண்மையும் மாண்பும் வளனும் எச்சமும்
தெய்வமும் யாவதும் தவமுடையோர்க்கு'

332. நற் 9:12; கலி 132:21-22; பதிற் 74:25-26

333. பரி 8:97-102; முல்லை 8-10; நற் 358:6-7

334. புறம் 106:1-3

'புல் இலை எருக்கம் ஆயினும், உடையவை
கடவுள் பேணேம் என்னா'

335. புறம் 335:2-3;

'........ குருந்தே, முல்லை என்று
இந்நான்கு அல்லது பூவும் இல்லை

அகம் 152:17; 'கடவுட் காந்தள்'

மலைபடு 189 'நிரை இதழ்க் குவளைக் கடிவி'

336. சிறுபாண் 72-73; பெரும்பாண் 289-290; மதுரை 710

337. அகம் 166:5; புறம் 39:12-13

338. அகம் 167:14-16

'கடுஞ்சினம் கடாஅய் முழங்கும் மந்திரத்து
அருந்திறல் மரபின் கடவுட் பேணியர்
உயர்ந்தோன் ஏந்திய அரும்பெறல் பிண்டம்'

339. முருகு 120-121; 239-240; குறுந் 15:1-2; நற் 322:11-12

340. மதுரைக் 455-460

341. ஐங் 259:3-4; நற் 165:3-5

342. ஐங் 259:3-4; நற் 165:3-5

343. பரி 8:102-109

344. புறம் 143:1-5

345. குறுந் 105:1-4

346. குறுந் 36:3-6; 53:5-7; நற் 214:4-6;358:1-7; 386:6-8; அகம் 110:4-5; 166:7-10; 175:6-9; 266:20-24; 378:18-19; 386:7-10; குறிஞ்சி 208-210;

*கலி 63:12-13; 88:20-21; 94:35-36; 95:23-24; 149:8-11; பரி 6:94-95; 8:61-66; கலி 91:7-8; 124:17-18; 98:32-33; 108:55-56*

347. *பரி 11:75-78*

'பனிப்படு பைதல் விதலைப் பருவத்து
ஞாயிறு காயா நளிமாரிப் பிற்குளத்து
மாஇருந் திங்கள் மறுநிறை ஆதிரை
விரிநூல் அந்தணர் விழவு தொடங்க'

348. *பதிற் 74*

349. *ஐங் 257*

'குன்றக் குறவன் கடவுட் பேணி
இரந்தனன் பெற்ற எல்வளைக் குறுமகள்'

350. *மதுரைக் 604-610*

351. *நற் 370:2-4; 380:1-4*

352. *மதுரைக் 600-603*

353. *கலி 84:5-7; 82:4-5*

354. *கலி 149:4-5*

'கற்பித்தான் நெஞ்சு அழுங்கப் பகர்ந்து உண்ணான் விச்சைக்கண்
தப்பித்தான் பொருளே போல் தமியவே தேயுமால்'

355. *குறுந் 33*

356. *பரி 11:74-92*

357. *மேலது 6:11-13*

358. *நற் 272:2-3*

'படிவ மகளிர் கொடி கொய்து அழித்த
பொம்மல் அடும்பின் வெண்மணல் ஒருசிறை'

359. *பரி 11:115-121*

360. *அகம் 86:5-7*

361. மேலது 136:3-5

362. நற் 206:6-8

'எந்தை வந்து உரைத்தனனாக, அன்னையும்
நல்நாள் வேங்கையும் மலர்கமாஇனி என
என் முகம் நோக்கினள்'

363. கலி 39:46-51

364. ஐங் 399:1-5; நற் 279:9-11

365. அகம் 221:1-4

366. மேலது 86: 3-4; 136:6

367. கலி 114: 12-14

368. அகம் 397:3-4; கலி 70:10

'தருமணல் தாழப்பெய்து, இல் பூவல் ஊட்டி
எருமைப் பெடையொடு, எமர் ஈங்கு அயரும்
பெருமணம் ! '

369. ஐங் 432:2-3

370. அகம் 244:4-5

'சுடுபொன் அன்ன கொன்றை சூடி
கடி புகுவனர் போல் மள்ளரும் உடைத்தே'

371. குறுந் 106

372. அகம் 244:4-5

373. குறுந் 106

374. அகம் 141:12-18; 394:8-12

375. குறுந் 233:4-7

376. புறம் 93:1-11 'கார் எதிர் புறவினதுவே - உயர்ந்தோர்க்கு
நீரொடு சொரிந்த மிச்சல், யாவர்க்கும்
வரைகோள் அறியாச் சொன்றி,
நிரைகோல் குறுந்தொடி தந்தை ஊரே'

377. மேலது 74:1-2

378. மேலது 246:11-15; 256; 62:12-15

379. மேலது 234, 249:10-14

380. மேலது 360:17-12; 363:10-18

381. மேலது 9:3-5 ‘தென்புல வாழ்நர்க்கு அருங்கடன் இறுக்கும்
பொன்போல் புதல்வர்ப் பெறா அதீரும்
எம் அம்பு கடி விடுதும், நும் அரண் சேர்மின்’

382. மேலது 222, 223

383. அகம் 233:7-10

384. புறம் 194

385. புறம் 204:10-11; 124:1-4; மலைபடு 448; அகம் 20:1-4

386. நற் 246:1-7

387. ஐங் 218:1-3

388. குறுந் 260

389. கலி 101:34-35

390. புறம் 41:4-13

391. குறுந் 140:1-3

392. முல்லை 6-11

393. அகம் 351

394. கலி 11:19-22

395. நற் 173.

# இயல் நான்கு

## வாழ்வியல் ஆதாரங்களும், வாழ்க்கைப் போக்கும்

**முன்னுரை :**

சங்க் காலத் தமிழரின் பண்பாட்டை வெளிப்படுத்தும் காரணிகளாக உணவு, உடை, அணிகலன்கள், உறையுள் உள்ளிட்ட வாழ்வியல் ஆதாரங்கள் அமைகின்றன. இவ்வாதாரங்களை மையமாகக் கொண்டே பண்டைத் தமிழரின் வாழ்க்கைப் போக்கு அமைந்திருந்தது. இதனால், இவ்வியல் இவ்வாறு அமைக்கப்பட்டுள்ளது. இயற்கையோடு இயைந்த வாழ்வைப் பண்டைத் தமிழர் மேற்கொண்டனர். ஆதலால், தாங்கள் வசித்த பகுதியில் கிடைக்கும் பொருட்களைக் கொண்டு தம் தேவைகளை நிறைவு செய்து கொள்ளப் பழக்கப்பட்டிருந்தனர்.

ஈராயிரம் ஆண்டுகளுக்கு முன்பே சங்க கால மக்கள் முழுமையான வாழ்வியல் வரையறையை வகுத்துக் கொண்டு விட்டமை அக்கால இலக்கியங்கள் வாயிலாகப் புலப்படுகிறது. அத்தகு வளர்ச்சி நிலைக்கு அவர்களின் முன்னோர் தம் வாழ்வில் சந்தித்ததும், சிந்தித்ததும் ஒரு வகையில் காரணமாக அமைந்தது எனலாம். ஆதலால்தான் சங்க கால மக்களின் வாழ்க்கைப் போக்கினை அறிய முட்பட்டுள்ள இவ்வேளையில் வரலாற்றுக்கு முற்பட்ட மக்களின் வாழ்க்கை முறையினையும் அறிய வேண்டியது இன்றியமையாததாகிறது. இதற்குச் சங்க இலக்கியத்தில் ஆங்காங்கு காணப்படும் ஆதிகால மக்களின் வாழ்க்கை எச்சங்கள் துணை புரிகின்றன.

**உணவு :**

பண்டைத் தமிழர்கள் சுவைமிக்க உணவுப் பொருள்களைச் சமைப்பதில் தேர்ந்திருந்தனர். அவரவர் வாழ்ந்த நிலத்திற்கேற்ப உணவு வேறுபட்டது. அவரவரின் பொருளாதார நிலையையொட்டியும் உணவின்

தரம் வேறுபட்டிருக்கும் என்பதிலும் ஐயமில்லை. மரக்கறி உணவோடு புலாலுணவும் பெரிதும் விரும்பியுண்ணப்பட்டது. பல்வகையான மது வகைகளையும், விரும்பியுண்டனர். மன்னர்கள் இரவலர்க்கு அளித்த விருந்துகளில் புலாலுணவே பரிமாறப்பட்டது என அறிகிறோம்.

பண்டு தமிழகத்து மருத நிலங்களில் பல வகையான நெல்வகைகள் பயிரிடப்பட்டன. இராசா அன்னம் என்பது உயர்வகை நெல்லாகும். பண்ட மாற்றில் விலையை அறுதியிட நெல்லே பயன்பட்டது. நெல்லைப் புழுக்கிக் காய வைத்து இரும்பு உலக்கையினால் குத்தி அரிசியாக்கினர். என்பதால் நெற்சோற்றை நண்டுக் கறியோடு உண்டனர்[1] என அறிகின்றோம். நெற்சோற்றோடு காய்கறி வகைகளையும் உண்டனர். கடுகு இட்டுக் காய்கறிகளைத் தாளித்தனர்.[2] முளிதயிர் பிசைந்து தயிர்க் குழம்பு வைத்துப் பரிமாறிய தலைவியைக் குறுந்தொகையில் காண்கிறோம். அது நன்கு தாளிக்கப்பட்டு இனிமையாக இருந்ததைத் 'தீம்புளிப் பாகர்' ( குறுந்: 167) என்று புலவர் கூறுவர். மாங்கனிச் சாறும், களாப்பழமும், துடரியும், நாவற்பழமும் புளிப்புக்காகப் பயன்படுத்தப்பட்டன. வரால் மீன் குழம்புக்கு மாவின் தீங்கனி புளியாகப் பயன்பட்டதை,

"ஓங்குசினை மாவின் தீங்கனி நறும்புளி
மோட்டிரு வராஅல் கோட்டுமீன் கொழுங்குறை"[3]

என்னும் சான்றால் அறியலாம். மாங்காயை நசுக்கிச் சாறெடுத்துப் பருகினர்[4] என்பதனை அகநானூறு குறிப்பிடுகிறது. மாதுளங்காயை மிளகுப்பொடியும் கறிவேப்பிலையும், இட்டுப் பசுவெண்ணெயில் பொரித்துப் பார்ப்பார் உண்டனர்.[5] அக்காலத்தில் ஊறுகாய் போடும் பழக்கமும் இருந்துள்ளது. உமணர்கள் வண்டியின் முன் புறத்தில் கயிற்றால் வரிந்து கட்டி வைத்திருந்த ஊறுகாய் பானை மத்தளம் போல் காட்சியளித்ததாம்.[6] பார்ப்பனப் பெண்கள் விருந்தினர்க்கு மாவடு ஊறுகாயோடு உணவு பரிமாறுவர்[7] என பெரும்பாணாற்றுப்படை குறிப்பிடுகிறது.

எயினர்கள் களர் நிலத்தில் வளரும் ஈச்சம்பழம் போன்ற மேட்டு நிலத்தில் விளைந்த சோற்றினை நாய் வேட்டையாடிக் கொணர்ந்த உடும்புக் கறியோடு உண்டனர்.[8] ஆயர்கள் பெரிய சுற்றத்தைக் கொண்ட நண்டின் சிறு குஞ்சுகளைப் போன்ற தினைச் சோற்றைப் பாலுடன் கலந்துண்டனர்.[9] இங்ஙனமே உழவர்கள் பூளைப்பூப் போன்ற வரகுச் சோற்றை அவரைப் புழுக்கோடு உண்டனர்.[10] மருத நிலத்தவர்கள் வினைஞர் தந்த வெண்ணெற் சோற்றைக் கோழி இறைச்சியின் வற்றலோடு உண்டனர்.[11]

கடலோரத்தில் வாழ்ந்த வலைஞர்களின் உணவு பற்றியும் பெரும்பாணாற்றுப் படை குறிப்பிடுகின்றது. குற்றாத கொழியலரிசியைக் கூழாக ஆக்குவர் ; அகன்ற வாயுடைய தட்டுப் பிழாவிலே ஊற்றி உலர வைப்பர். புற்றாஞ்சோறு போன்ற பொலிவுடைய முளையை இடித்து அதனை அக்கூழொடு சேர்ப்பர். அதிலே இனிமை பிறக்கும்படி இரண்டு பகலும், இரண்டு இரவும் அறியாமல் வைத்திருப்பர். அது நன்கு முற்றிய பிறகு விரலாலே அரித்து அக்கள்ளினைத் தண்ணிய மீன் சூட்டோடும் உண்பர்.[12]

அக்காலத்தில் பன்றியிறைச்சியை விரும்பி உண்டனர். வேடுவர்கள் பன்றி வேட்டையாடுவது பற்றி பெரும்பாணாற்றுப்படை பேசுகிறது. மழை வறண்ட காலத்து நீர் பெறுதற்காக வெட்டிய குழிகளில் பதுங்கிக் கொண்டு நடுயாமத்திலே வாகைப் பூவின் வடிவினைக் கொண்ட பற்களையுடைய பன்றியின் வரவை எதிர்பார்த்திருப்பராம்.[13] இவ்வாறே முயலை வேட்டையாடி உண்டனர். பகற்பொழுதிலே திறந்த வாயையுடைய வேட்டை நாயுடன் கானகம் சென்று வேலிகளில் வலையை மாட்டி வைத்துப் பசிய புதர்களிலிருந்து முயல்களை வெளிப்படச் செய்து அகப்படுத்துவர். அதன் இறைச்சியை விரும்பியுண்டனர்.[14]

நீர்ப்பெயற்றுத் துறையென்னும், பட்டினத்தில் ஆண் பன்றிகளைப் பெண் பன்றியுடன் புணராது காப்பாற்றி, நெல்லை இடித்து, மாவாக்கி அதனை உண்ணச் செய்தனர். ஒரு குழியின்கண் அதனைப் பல நாள்

நிறுத்திப் பாதுகாத்தனர். அங்ஙனம் நின்ற கொழுத்தப் பன்றியினைக் கொன்று அதன் இறைச்சியைக் கள்ளொடும் உண்டனர்.[15] ஈயலைக்கூட உணவாகக் கொண்டனர். நன்கு புளித்த மோரில் ஈயலை ஊறப்போட்டுப் புளிங்கறி சமைத்துண்டனர்.[16] ஊன்துண்டங்களைக் கம்பியிலே கோத்து நெருப்பில் வாட்டி உண்பதுண்டு.[17]

மன்னர்கள் பாணர்க்கும், புலவர்க்கும் அளித்த பெருவிருந்துகளில் ஊன் சோறே பரிமாறப்பட்டது ஓரிடத்திலும் புலாலுணவு பழிக்கப்படவில்லை. புலவர்கள் அதனைப் பெரிதும் பாராட்டியே பாடியுள்ளனர். செம்மறியாட்டின் தயிரில் வரகரிசியைப் பெய்து, ஈயலை இட்டுச் சமைத்த புளிச் சோற்றில் வெண்ணெய் இட்டுத் தலைவனின் ஏவல் இளையரைத் தலைவி உண்ணச் செய்துள்ளாள்.[18] தன் தந்தை மீன் பிடித்து வருமுன்னரே ஒரு பெண் தான் உப்பு விற்றுப் பெற்ற பொருளால் உணவமைத்துத் தந்தைக்குக் கொடுத்தமை கள்ளுண்டு களித்திருந்த தன் தந்தைக்கு ஒரு பெண் புளிக்கறியோடும், கருவாட்டோடும் கூடிய உணவை வழங்கியமை போன்ற செய்திகளால்[19] சங்க காலத்தில் மணமெய்தும் முன்னரே மகளிர் தம் பெற்றோரிடம் வாழும் போதே அடிசில் அமைக்கும் திறம் பெற்றவராகவும் இருந்துள்ளனர் என்பது புலனாகிறது.

நிலத்திற்கேற்ற வாழ்வு முறை கொண்ட சங்க காலத்தில் மகளிர் அந்தந்த நிலத்தில் கிடைக்கும் பொருளைக் கொண்டு உணவு அமைக்கும் முறையைக் கையாண்டுள்ளனர். ஆய்மகள் தினை அரிசிச் சோற்றைப் பாலுடன் கலந்து விருந்தினர்க்கு வழங்கியமை பார்ப்பனி பாற்சோறு, பருப்புச் சோறு, கொம்மட்டி மாதுளை, மாவடு, ஊறுகறி ஆகியவற்றை விருந்தினர்க்குக் கொடுத்து உபசரித்தமை குறமகள் மூங்கில் அரிசியொடு புளியம்பழத்தின் புளிப்பையும், மோரினையும் கலந்து ஆக்கிய சோற்றை விருந்தினர்க்கு அளித்தமை, பழையர், பெண்டிர் வாளை மீனை, வராலின் கறியோடு கலந்து ஆக்கிய உணவையும், கள்ளையும் கூத்தர்க்கு வழங்கியமை, எயிற்றியர் புளிங்கறிச்சோற்றை, ஆமான் சூட்டிறைச்சியோடு

விறலியர்க்கும் பாணர்க்கும் அளித்தமை போன்ற செய்திகளால் மகளிரின் அட்டில் வன்மையை அறியலாம். இதனால் மகளிர் தம் அட்டில் வன்மையால் விருந்தினரையும், பரிசிலரையும் ஓம்பினர் என்பது புலனாகிறது. வேளைப்பூவைத் தயிரில் பெய்து புளிங்கூழ் சமைத்ததையும் சமைத்த உணவிற்கு மணமூட்டவும், சுவை கூட்டவும் தாளிக்கும் வழக்கம் அன்றே இருந்தது என்பதையும் புறநானூற்றால் அறிய முடிகிறது.[20]

இங்ஙனமே கள்ளுண்டலையும் அக்காலத்தோர் தவறாகக் கருதிடவில்லை. கபிலர் போன்ற அந்தணப் புலவர்களும் அதனைப் பாராட்டியே பேசினர். ஊர்களின் வளத்தினைப் பேசும்போது கள் மிகுதியையும் இணைத்துப் பேசியுள்ளனர்.[21] நன்கு புளித்த கள் தேள்கடுப்பன்ன கடுமையுடையதாகும் [22] எனப் பாடியுள்ளார். தேறலைப் புளிக்க வைப்பதற்கு அதனை மூங்கிற் குழாயினுள் ஊற்றி நிலத்தினடியிலே புதைத்து வைத்தனர்.[23] தென்னை பனை மரங்களிலிருந்து இறக்கிய கள்ளைத் தவிர வீட்டிலேயே சமைத்த ஒருவகைக் கள் 'தோப்பி' என வழங்கிற்று. பெரும்பாணாற்றுப் படையில், மறவர்கள் ஆட்டுக்கிடாயினை அறுத்து உண்டு, இல்லத்தில் சமைத்தத் தோப்பியைப் பருகி தண்ணுமை ஒலிக்கத் தம் வலிய தோளை உயர்த்தி ஆடுவது பேசப்படுகிறது.[24] தோப்பியும் பாம்பின் கடுப்பைப் போல் கடுமை உடையதாகவிருந்தது. உள்நாட்டுக் கள்ளைத் தவிர வெளிநாட்டிலிருந்து வருவித்த மது வகைகளையும் உண்டனர். பெரும்பாலும் செல்வர்களும், மன்னர்களும் இதனையுண்டனர் எனலாம். நக்கீரர், பாண்டிய மன்னன் ஒருவனை வாழ்த்தும் போது,

"யவனர் நன்கலம் தந்த தண்கமழ் தேறல்
பொன்செய் புனைகலத் தேந்தி நாளும்
ஒண்டொடி மகளிர் மடுப்ப மகிழ்சிறந்து
ஆங்கினிது ஒழுகுமதி பூந்தார் மாரப"[26]

என்கிறார். சங்க கால மக்கள் காய்கறி, கிழங்கு, கீரை வகைகளையும்

மீன் ஆடு ஈசல் கோழி, மான் போன்றவற்றின் இறைச்சி வகைகளையும் நெய், தயிர், வெண்ணெய் போன்ற பால் படுபொருட்களையும் நெல், வரகு, தினை போன்ற அரிசி வகைப் பொருட்களையும் பயன்படுத்தி, பலவிதமான பக்குவ முறைகளைக் கையாண்டு சுவைபடச் சமையல் செய்வதில் வல்லமையுடையவராய்த் திகழ்ந்தனர் என்பதை இதன் மூலம் உணரலாம்.

**உடை :**

"ஆடையில்லா மனிதன் அரை மனிதன்", "ஆள் பாதி ஆடை பாதி" போன்ற பழமொழிகள் ஆடையின் இன்றியமையாமையினை உணர்த்துகின்றன. தட்பவெப்ப நிலைகளிலிருந்து பாதுகாத்தல், மான உணர்வு, அழகுமிகுவித்தல், தன் தகுதி உணர்த்துதல், கலை உணர்வு காட்டல் ஆகியனவற்றை ஆடை அணிவதற்குரிய காரணங்களாக கே. பகவதி என்பார் சுட்டுவார்.[27] தழையாடை, தோலாடை, மரவுரியாடை போன்றவை முதல்முதலில் பயன்படுத்தப்பட்ட ஆடை வகைகளாகும். சங்க இலக்கியம் தழையாடையை மிகுதியாகச் சிறப்பித்துள்ளது. அரசியல், சமுதாயப் பொருளாதார மாற்றங்களுக்கேற்ப ஆடை அணிவதிலும் மாறுபாடுகள் தோன்றி வருகின்றன. சங்கத் தமிழர் ஆடை குறித்து உடை, தழை, துகில், கலிங்கம், அறுவை, ஆடை, உடுக்கை, கச்சு, ஈரணி, தானை, போர்வை, காழகம், கச்சை, வம்பு, மடி, பட்டு, சீரை, படம், படாம், பூங்கரைநீலம், கம்பலம், கவசம், தூசு, மடிவை, சிதர், சிதவல், வார், மெய்ப்பை, மெய்ம்மறை, மெய்யாப்பு, வெளிது, ஒலியல், புட்டகம், நூல், பக்குடுக்கை போன்ற சொற்களைப் பயன்படுத்தினர்.[28]

சங்ககாலத்தில் தமிழர்கள் அவரவரின் தகுதிக்கு ஏற்ப உடையணிந்தனர். ஆடவர் இடையில் ஓர் ஆடையும் மேலே ஒரு துண்டும் அணிந்தனர் போலும். "உண்பது நாழி உடுப்பவை இரண்டே" (புறம் 189) என்னும் நக்கீரர் வாக்கால் இதனை உணரலாம். மேலாடையும் கச்சும் அணிவது பற்றி மதுரைக் காஞ்சியும் கூறுகின்றது.[29] வீரர்கள் நீலநிறக் கச்சையினை அணிந்தனர். அதிலே பூ வேலை செய்யப்பட்டிருந்தது.[30] அன்று, இன்று போல் அனைவரும் மேற்சட்டை அணிந்திலர். சிலரே

அணிந்தனர். அது கஞ்சுகம் எனப்பட்டது. அரண்மனைப் பொற்கொல்லர் சட்டையணிந்திருந்தனர்.[31] இங்ஙனமே பாண்டியன் அரண்மனையில் பணிபுரிந்த அயல் நாட்டவரா யவனரும் சட்டையணிந்துள்ளனர்.[32] கஞ்சுமணிந்த பாண்டிய நாட்டு வீரர்கள் செங்குட்டுவனுக்குத் திறைப் பொருள் கொணர்ந்து கொடுத்தனர். அவர்கள் ஆயிரம் பேராவர்.[33] இடையர் போன்றோர் மிக எளிய ஆடையையே அணிந்தனர். [34] என்பது காணத்தகும். பெண்டிர் இடையில் மட்டும் புடவையுடுத்தனர் என்றும், மார்பகத்தைத் துணியால் மூடும் வழக்கம் அன்றில்லையென்றும் கூறுவர். சந்தனத்தால் தொய்யில் எழுதியும், மலர்களை இட்டும் மார்பகத்தை மூடினர் என்பர்.[35] இடையில் மேகலையணிந்து அதன் மேல் பூந்துகிலை சுற்றிக் கொண்டனர்.[36]

ஆடவரே மேலாடை புனைகின்ற வழக்கம் பெற்றிருந்த காலத்தில் பெண்டிர் மேலாடையற்றவர் என்ற கருத்து ஏற்புடையதன்று. ஆடை, உடை என்பன வேறுபடுபொருண்மையுடையன ஆடை என்பது புடவையொத்தது. உடை என்பது தையற்றொழிலொடு கூடியது. 'உடை பெயர்த்துடுத்தல்' (மெய் நூ. 14) என்பது தொல்காப்பியர் காட்டும் மகளிர்க்குரிய மெய்ப்பாடாதலின் மகளிர் உடம்பின்கண் பொருந்தும் உடை உடுத்தினர் என்பது புலனாகும். சிற்பங்களைக் கொண்டு அக்காலப் பெண்டிர் இடுப்பிற்கு மேல் எவ்வித ஆடையும் அணிந்ததாகக் கூற முடியவில்லை என்பர் மா. இராசமாணிக்கனார்.[37] உடற்கூற்று நுட்பம் காட்டுவதற்குத் தடை என்ற அளவில் சிற்பிகள் கல்லில் மேலாடைப் புனைவைத் தவிர்த்திருக்கலாம். பண்டைச் சிற்பங்கள் பலவற்றில் மேலாடையோடு கூடிய அமைப்புகள் உள்ளன. மலைநாட்டில் வாழும் மகளிர் சிலரும் பழங்குடி இனத்தவராய மகளிரும், ஆதிவாசிகளும் மார்பாடைக்கு முக்கியத்துவம் கொடுக்காமல் இருந்திருக்கலாம். மேலாடையைக் குறிக்க உத்தரியம், ஒலியல், தானை, துகில் போன்ற சொற்கள் சங்க இலக்கியங்களில் பயின்று வந்துள்ளன.[38] வம்பு, கச்சு, வார் என்பன மகளிரின் முலைக்கச்சினைக் குறிப்பவையாகும் என்று தமிழ்ப் பேரகராதி குறிப்பிடும்.[39]

சங்க கால மகளிர் வம்பு, கச்சு, வார் என்னும் மேலாடையினைச் சில நேரங்களில் அணிந்தும், சில நேரங்களில் அணியாமலும் இருப்பர். நீராடுங்காலத்து ஈரணி என்பதை அணிந்து கொண்டதனை அகநானூறும், பரிபாடலும் சுட்டுகின்றன.[40] 'புட்டகம்'[41] எனப்படும் புடவைகளையும், நீராடுங்காலத்து மகளிர் அணிந்து கொள்வதுண்டு. பருவகாலங்களுக்கேற்ற ஆடைகளை அணிந்து ஒப்பனை செய்து கொள்ளும் வழக்கம் பண்டைத் தமிழக மக்களிடையே இருந்தது. திருமணத்தின் போது மணப்பெண் அணிந்த ஆடை 'கலிங்கம்' எனப்படும் வகையினது என்பதனை அகநானூறு காட்டுகின்றது.[42] அவ்வாடை 'கோடிக்கலிங்கம்' எனவும், 'முருங்காக் கலிங்கம்' எனவும் கூறப்பட்டுள்ளது. அதனால் மணத்தின் போது அணியப்படும் கலிங்கம் புதியது என்பதும் கஞ்சியிட்டமையால் கசங்காத் தன்மையது (முருங்காத் தன்மை) என்பதும் புலனாகின்றன. கலிங்க நாட்டிலிருந்து வந்த பருத்தியாடைக்குக் 'கலிங்கம்' எனவும், பட்டாடைக்கு 'நூலாக் கலிங்கம்' எனவும் பெயரிட்டனர் எனக் கூறுவர்.[43] பரத்தையரும் பூ வேலைப்பாடு கொண்ட கலிங்கத்தை அணிந்ததாகக் குறிப்பு உள்ளது.[44] இன்று சட்டை என வழங்கப்படும் உடுப்பினையொத்த படம், மெய்ப்பை என்பனவற்றைப் பண்டு ஆடவர் அணிந்தனர்.[45] கணவர் பிரிந்து சென்ற காலங்களில் மகளிர் உடை ஒப்பனையில் மிக்க கவனம் செலுத்தாது மாசுடைய எளிய ஆடையோடு இருப்பர்.

பாண்டியன் நெடுஞ்செழியனைப் பிரிந்து வருந்தும் தேவி கணவன் இருக்கும் காலத்தில் அணிந்த ஆடைக்கும், கணவன் பிரிந்துச் சென்ற காலத்தில் அணிந்த ஆடைக்கும் உள்ள வேறுபாட்டை நெடுநல்வாடை,

"பூந்துகில் மரீஇய ஏந்துகோட்டு அல்குல்
அம்மாசு ஊர்ந்த அவிர்நூற் கலிங்கமொடு"[46]

எனக் காட்டுகின்றது. மேலும் மகளிர் விழாக்கள், நோன்புகள் போன்ற காலங்களில் பட்டாடைகளையும், புத்தாடைகளையும் அணிந்து மகிழ்வர். கணவனை இழந்த மகளிர் வெண்ணிற ஆடை உடுத்தினர்.

கணவனை இழந்தப் பெண்கள் நூற்புத்தொழிலில் ஈடுபட்டனர். எனவே, அவர்கள் 'பருத்திப் பெண்டிர்' எனப்பட்டனர். ஆளில் பெண்டிர் தம் முயற்சியினால் நூற்ற நூலைப் பற்றி இலக்கியம் பேசுகின்றது.[47]

வெண்ணிறப் புடவையை அணிந்து பெண்கள் பந்தாடினர். செக்கர் வானைப் போன்ற செவ்வண்ணமூட்டிய பூத்தொழில் செய்யப்பட்ட நுண்ணிய புடவைகள் மதுரையில் விற்கப்பட்டன.[48] அக்காலத்து ஆடைகளின் நேர்த்தியும், அழகும் பற்றிய பல குறிப்புகள் கிடைக்கின்றன. கண்ணுக்குப் புலப்படாத, மெல்லிய இழைகளால் ஆடை நெய்யப்பட்டது. அழகிய பூத்தொழில் செய்யப்பட்டிருந்தது. பாம்பின் சட்டையைப் போல அவ்வளவு மென்மையாக ஆடை விளங்கிற்று.[49] மூங்கிலின் உட்புறத்து வெண்டோல் போலவும் அமைந்த பூங்கலிங்கம் பற்றிப் புறநானூறு பேசுகின்றது.[50] புகையைப் போலவும், பாலாவியைப் போலவும் ஆடை விளங்கிற்று.[51] இந்திரகோபப் பூச்சியைப் போன்ற செந்நிறம் கொண்ட பூவாடையைத் திருமுகாற்றுப் படை குறிப்பிடுகின்றது.[52] ஆடைகளில் பகன்றை மலர் போன்ற வடிவங்கள் அமைக்கப்பட்டன.[53] துணிகட்குப் பல வண்ணங்கள் ஊட்டும் கலையில் தமிழக நெசவாளர் தேர்ந்திருந்தனர். புகார் நகரத்தில் இருந்த உவவனம்.

"வித்தகர் இயற்றிய விளங்கிய கைவினைச்
சித்திரச் செய்கைப் படாஅம் !"[54]

போர்த்தது போல் விளங்கியதாக மணிமேகலையில் குறிப்பிடப்பட்டுள்ளது.

சங்க காலத்திலேயே மெல்லிய ஆடைகள் எகிப்து யவனம் போன்ற நாடுகட்கு ஏற்றுமதி செய்யப்பட்டன. விளிம்பில் கொற்கை முத்துகளை வைத்து இணைத்தனர். பொன் வண்டுகளின் மஞ்சள், நீலம், பச்சை வண்ண இறகுகளை இணைத்தனர். இத்தகு ஆடைகள் வெளிநாடுகளில் நன்கு விலையாயின.[55] இதனால் நெசவாளர்கள் தனித்தெருவில் வாழ்ந்தனர் என அறிகிறோம்.

துணிகளை மண்ணால் வெளுப்போர் மண்ணார் எனப்பட்டனர். அக்குலப் பெண்டிர் புலைத்தி எனக் குறிக்கப்பட்டுள்ளனர்.

"சோறமை வுற்ற நீருடைக் கலிங்கம்"

என்பதால் இதனை அறியலாம்.

"வறணில் புலைத்தி எல்லித் தோய்த்த
புகாப்புகர் கொண்ட புன்பூங் கலிங்கமொடு"[56]

என்பது கொண்டு புலைத்தியின் செயலை அறியலாகும்.

"களர்ப்படு கூவற் றோண்டி நாளும்
புலைத்தி கழீஇய தூவெள் ளறுவை."[57]

"நலத்தகைப் புலத்தி பசைதோய்த் தெடுத்து"[58]

"பசைகொல் மெல்விரல் பெருந்தோட் புலைத்தி"[59]

என்னும் சான்றுகளால் துணி வெளுக்கும் மக்களைப் பற்றி அறிகிறோம்.

தழையாடை ஆதியில் இருந்ததென்றும், அதை நயமுறப் பின்னுவதில் தமிழர் தேர்ச்சி பெற்றிருந்தனர் என்றும் கூறுவார் கா. சுப்பிரமணியப்பிள்ளை.[60] சங்க இலக்கியம் மகளிரின் தழையாடையைச் சிறப்பிக்கின்றது. அறுபத்தாறு இடங்களில் தழையுடை பற்றிக் கூறப்பட்டுள்ளது என்பார் கே. பகவதி.[61] இளைய மகளிரே தழையாடை அணிந்தனர் என்பதனைப் பாடற் குறிப்புகளின் வாயிலாக அறிய முடிகின்றது.[62] விழவு, வழிபாடு, நீராட்டு, விளையாட்டு போன்ற பல நிகழ்வுகளில் மக்கள் தழையாடையை அணிந்து மகிழ்ந்தனர்.[63] நெய்தல், ஞாழல், ஆம்பல், குவளை, செயலை, நொச்சி, அசோகு போன்றவற்றின் தழைகள், மலர்கள் கொண்டு செய்யப்பட்ட ஆடையே தழையாடையாகும். பூக்கள், தளிர்கள், தழைகள் ஆகியன அவ்வாடைக்குரிய மூலப்பொருட்களாக விளங்கின.

தகுதிக்கேற்ப உடை உடுத்தல் பண்டுதொட்டே தமிழரிடம் காணப்பட்டது என்பார். வி. கனகசபைபிள்ளை.[64] உடையின் தரத்திலும் உடை உடுத்தும் முறையிலும் இவ்வேறுபாடுகள் காணப்பட்டன. அரசர், அரசியர், உயர்நிலை மக்கள், செல்வ மக்கள், அணிந்த ஆடைகளுக்கும் பாணர், புலவர், விறலியர், தாழ்நிலை மக்கள், ஏழை மக்கள் அணிந்த ஆடைகளுக்கும் நிரம்ப வேறுபாடு காணப்பட்டது. முன்னவர் பருத்தி, பட்டு ஆகியவற்றால் நெய்து, அழகுறுத்தப்பட்ட ஆடை வகைகளையும், பின்னையோர் எளிய கிழிந்த, நைந்த ஆடை வகைகளையும் அணிந்தனர். அவற்றால், அரசர்களும், வள்ளல்களும் தம்மை நாடிவரும் பரிசிலர், பாணர் முதலியோர்க்கு நல்லுடை, நல்லுணவு தந்து பாதுகாத்தலைச் சங்க இலக்கியங்கள் காட்டுகின்றன.

பருத்தியுடை இந்திய நாட்டில் தான் முதன்முதலில் வழக்கத்தில் வந்தது என்றும், அது சிந்தம் என்னும் பெயரால் மேலை ஆசிய நாடுகளுக்குச் சென்றது என்றும் கா.சுப்ரமணியப்பிள்ளை கூறுவார்[65]. பருத்தியை விளைவித்துப் பஞ்சினை எடுத்துக் கொட்டை நீக்கி வில்லால், அடித்துப் பின் நூலாக நூற்று ஆடையாக நெய்யும் தொழில் பழந்தமிழகத்தில் சிறந்து விளங்கியது.[66] நூல், பஞ்சு, இழை எனப் பருத்தியாடையைச் சுட்டும் மரபு பழந்தமிழரிடம் காணப்பட்டது.

செல்வர் சூழலுக்கேற்ப உடை மாற்றி அணிவர் என்பதனை, மகளிர் தாம் உடுத்திய பட்டுடையை நீக்கிப் புணர்ச்சிக் காலத்துக்கு நொய்தாகிய வெண்துகிலை உடுப்பர் என்று பட்டினப்பாலை குறிப்பிடுவதனால் அறியலாம்.[67] பருத்தியினால் மட்டுமின்றிப் பட்டினாலும், ஆட்டு உரோமத்தாலும், எலி உரோமத்தாலும் ஆடைகள் நெய்யப்பட்டன.[68] மனிதர்க்கேயன்றித் தெய்வங்கட்கும் ஆடைகள் சுட்டப்படும் நிலையும் காணப்படுகிறது. முருகனுக்குச் செவ்வாடையும் சிவனுக்குத் தோலாடையும், திருமாலுக்குப் பொன்னாடையும் உரியனவாகக் கூறப்பட்டுள்ளன.[69]

**அணிகலன்கள் :**

ஒரு நாட்டின் பண்பாட்டையும், நாகரிகத்தையும் காட்டும் பலவற்றுள் ஆடைகளும், அணிகளும் சிறந்த இடம் பெறுகின்றன. பண்டைத் தமிழ் மக்கள் ஒப்பனைக்குப் பலவகையான அணிகலன்களைப் பயன்படுத்தியுள்ளனர். உலக மக்களில் தமிழர்களைப் போல் ஒப்பனைக்கு அணிகலன்களை மிகுதியாகப் பயன்படுத்தியவர்கள் வேறு எந்நாட்டவரும் இல்லை என்பர்.[70] சங்கக் காலத்தில் மகளிர் இயற்கையில் கிடைக்கும் தளிர், மலர், தழை, மொட்டு, கொடி போன்றவற்றைக் காதுகளில் செருகியும், கழுத்தில் அணிந்தும், கைகளில் சுற்றியும் தலையிற் சூடியும் அணிந்து மகிழ்ந்தனர். அவ்வியற்கை அணிகள் பண்டைத் தமிழ் மக்களின் இயற்கையோடு இயைந்த வாழ்வைச் சுட்டுகின்றன. பின்னர்த் தோன்றிய செயற்கை அணிகளுக்கு அவ்வியற்கை அணிகளே அடிப்படையாய்த் திகழ்வனவாயின. சங்க கால மக்கள் அவ்விருவகை அணிகளையும் அணிந்த நிலையைச் சங்க இலக்கியங்கள் காட்டுகின்றன. பிறப்பு, காதணி, திருமணம், வளைகாப்பு போன்ற வாழ்வின் பல கட்டங்களிலும் அணிகள் சிறப்பிடம் பெற்று விளங்குகின்றன. சங்க இலக்கியங்களில் அணிகள் பல இடம்பெற்றிருப்பினும், தாலி, வளை, சிலம்பு, புலிப்பல் தாலி, வீரக்கழல் போன்றன சமுதாயத்தில் இன்றியமையாத அணிகளாக விளங்கி, அக்காலச் சமுதாயத்தைப் பிரதிபலித்துக் காட்டுவனவாக உள்ளன.

ஆம்பற் தண்டினாலும், குவளைத் தண்டினாலும் வளைகள் செய்து மகளிர் அணிந்திருந்தனர்.[71] காதில் நீல மலரையும், குவளை மலரையும், அசோகின் தளிரையும் செருகிக் கொண்டனர்.[72] சூரர மகளிர் காதுகளில் அசோகின் தளிர்களைச் செறுகிக் கொண்டதை முருகாற்றுப்படை கூறும்.[73] மகளிர் ஆம்பற்பூவின் இதழ்களால் ஆகிய மாலையைக் கழுத்தில் அணிந்தும், கூந்தலிற் செருகியும் அணிசெய்துகொண்டனர்.[74]

நாகரிகம் வளரவளர பலவிதமான உலோகங்களை மனிதன் கண்டுபிடித்தான். இரும்பு, பித்தளை, செம்பு, ஈயம், வெள்ளி, பொன்

முதலிய உலோகங்கள் மக்களின் பயன்பாட்டிற்கு வந்தன. அவற்றைப் பல வகையான அணிகலன்களாகச் செய்து ஆண், பெண் இருபாலரும் தம்மை அழகு செய்து கொண்டனர். உலோகங்கள் மட்டுமன்றி முத்து, பவளம், வயிரம், நீலம், வயிடூரியம், கோமேதகம், மரகதம், மாணிக்கம், புட்பராகம் ஆகிய நவமணிகளையும் அணிகலன்களில் பதித்து அழகுபட அணிந்து மகிழ்ந்தனர்.

சங்ககால மக்கள் தலையணி, நுதலணி, காதணி, கழுத்தணி, தோளணி, மார்பணி, கையணி, விரலணி, இடையணி, காலணி எனும் பலவகையான அணிகலன்களை உடலுறுப்புகளில் அணிந்தனர். அவ்வணிகளால் அவர்களின் அழகு நலம் மேலும் சிறந்து விளங்கியது.

சங்க இலக்கியங்களில் அணி, பூண், பணி, இழை, கலன், நகை, குழை, தொடி, வளை முதலிய சொற்கள் அணிகலன்களைக் குறித்து வழங்கப்படுவனவாக அமைந்துள்ளன.[75] தொடக்கக் காலத்தில் காதுகளில் அழகுக்காகச் செருகிக் கொண்ட குழை (தளிர்) காலப் போக்கில் பொன்னாற் செய்யப்பட்டாலும் குழை என்னும் பெயரையே பெற்றுள்ளது. சுருளாகச் சுருட்டிக் காதில் அணிந்து கொள்ளப்பட்ட பனையோலை காதோலை எனவும், பூவிதழ்த் தோடு எனவும் பெயர் பெற்றது. தொடக்கத்தில் அரையில் அணிந்து கொண்ட கொடி அரைஞான் எனப்பட்டது.

இயற்கையில் கிடைக்கும் மலர்களையும், மலர்மாலைகளையும் கூந்தலில் அணிந்த சங்ககால மகளிர் அவற்றைப் பொன்னால் செய்து வாடாப் பொன்னரி மாலைகளாகக் கூந்தலிற் சூடினர்.[76] விறலியர் அழகு செய்யப்பட்ட கரிய மயிரிடம் அழகு பெறும்படி, பொன்னாற் செய்த மாலையைச் சூடினர் எனப் பெரும்பாணாற்றுப்படை குறிப்பிடும்.[77] தலைக்கோலத்தின் ஓர் உறுப்பாகிய 'தொய்யகம்' தலைமயிரில் அழகுபட அணியப்பெற்றது.[78] அது, தலையின் நடுவில் முடியின் பிரிவில் அணியப்பட்டது. இக்காலத்து நெற்றிச்சுட்டி போன்ற அமைப்புடையது

எனலாம். நுதலில் தொங்கும் படியாகவும் அதனை அணிந்தனர்.[79] 'தெய்வ உத்தி' (சீதேவி) என்னும் தலைக்கோலத்துடன், வலம்புரி வடிவாகச் செய்த தலைக்கோலத்தையும் சூரர மகளிர் அணிந்தனர். தலைக் கோலத்தினின்று நுதலிலே தாழும்படி ஒரு வடமாகச் செருகி வைக்கப்படும் 'வயந்தகம்' என்னும் அணியை அரங்கத்தில் ஆடுகின்றவள் அணிந்திருந்தாள்.[80] கைத்தொழில் வல்ல கம்மியன் இரத்தினக் கற்களை இட்டிழைத்த பொன்னாலாகிய 'சுரிதகம்' என்னும் அணியை மகளிர் அணிந்ததாக நற்றிணை கூறுகிறது.[81] அவ்வணி திருகுப்பூப் போன்று வட்டமானதும், மணிகள் பதித்ததுமான பொன்னணி ஆகும். திருமகளைப் பொறித்து வைத்த புனைந்த தலையணி 'உத்தி' எனக் கலித்தொகையில் கூறப்பட்டுள்ளது.[82] பரிபாடல், 'மகரவலையம்' என்னும் தலையணியைக் கூறியுள்ளது.[83] அவ்வணி ஆளை எறிந்து கொல்லும் மகரமீனின் வடிவத்தை உடையதாய்ச் செய்யப்பட்டது. முத்துகளைக் கொண்டு செய்யப்பட்ட தலையணியாகிய மத்தக நித்திலத்தை (தலைக்கோல முத்து) வையையில் நீராடும் மகளிர் அணிந்திருந்தனர்.[84]

மகளிர் ஒப்பனையில் நுதலுக்கு முதன்மை கொடுத்து நுதலிலும் அணிகலன்களை அணிந்து அழகு செய்து கொண்டனர். நெற்றிச்சுட்டி, நெற்றிப்பட்டம், திலகம் ஆகிய நுதலணிகளை மகளிர் அணிந்தனர். திலகம் என்பது நெற்றிப்பொட்டைக் குறிப்பதன்றி நுதலில் அணியும் பொன்னாற் செய்யப்பட்ட ஓர் அணிகலனைக் குறிக்கும் பெயராகவும் சங்க காலத்தில் வழங்கப்பட்டுள்ளது.[85] மகளிர் மட்டுமன்றி ஆடவரும் காதுகளில் அணிகள் அணியும் வழக்கம் இருந்தது. சங்க கால மகளிர், பொலங்குழை, ஒண்குழை, கனங்குழை, சிறுகுழை, மகரக்குழை, கொடுங்குழை, தோடு ஆகியவற்றைக் காதுகளில் அணிந்தனர்.[86] மதுரை நகரச் செல்வமகளிர் ஒண்குழலையையும், தோட்டையும், பாண்டிமாதேவி மகரமீன் வடிவுடைய மகரக்குழையையும், தாளுருவியையும், ஆயர்மகளிர் சிறுகுழையையும் அணிந்திருந்தனர்.[87] புல்லிகை என்னும் காதணியைக் கலித்தொகை குறிப்பிட்டுள்ளது.[88] மகளிர் குழை அணிவதற்கு முன் கடிப்பு என்னும் அணியை இட்டுக் காதைப்

பெரிதாக்கிய பின் குழையை அணிவர். கடிப்பு அணி பற்றிப் பரிபாடலில் குறிப்பு காணப்படுகின்றது.[89] குழையிற் பதித்த மத்தகமணியாகிய அணியைச் 'சூட்டு' என அகநானூறு குறிப்பிடும்.[90]

கழுத்தில் அணியப்படும் கழுத்தணிகள் அன்றும், இன்றும் ஏனைய அணிகளினும் மிகுதியாக அணியப் பெறுகின்றன. கழுத்தணிகலன்கள் நூற்றுக்கு மேற்பட்டவை உள்ளன என்கிறார் அ. இராகவன்.[91] சங்கு, பவளம், இரத்தினம், முத்து, பொன் ஆகியவற்றால் செய்யப்பட்டோ, பலவகையான வடங்களைக் கொண்டு செய்யப்பட்டோ அமைந்த கழுத்துச் சங்கிலிகளையும் தொங்கும் பதக்கங்களையும் அன்றைய மகளிர் விரும்பியணிந்தனர்.[92] பொன்னாற் செய்யப்பட்ட காசுகள் பலவற்றைக் கோத்துக் காசுமாலையாகக் கழுத்தில் அணிந்தனர்.[93] பந்தர் கொற்கையில் விளைந்த முத்து அணிதலும், வலம்புரிச்சங்கில் விளைந்த முத்து அணிதலும், கொடுமணத்தின் பொன்னணிகள் அணிதலும் சிறப்பெனக் கருதினர்.[94] முத்தும், மணிகள் பிறவும் சேரக் கோர்த்த உருட்சி அமைந்த மூன்று வடமாகிய மாலையைக் கலித்தொகை குறிப்பிடுகிறது.[95] மதுரை மாநகரத்துப் பேரிளம் பெண்டிர் மதாணி என்னும் அணியை அணிந்து தம்மை ஒப்பனை செய்து கொண்டனர்.[96] புலிப்பல்லைக் கோர்த்துச் சிறுவர்க்கும், அதனோடு பொன்னைச் சேர்த்துச் சிறுமியர்க்கும், 'தாலி' என்னும் அணியை அணிந்தனர்.[97]

பாண்டியன் நெடுஞ்செழியனின் தேவி, அவனது பிரிவால் வருந்தி நெடுவீழ் (தாலி) அணியைத் தவிரப் பிற அணிகளைத் துறந்து நின்றாள்.[98] தாலி என்றே பாடலில் நேரடியாகக் கூறப்படாமல் 'வீழ்' என்று குறிப்பிடப்பட்டுள்ளது. அதற்கு உரை வரைந்த நச்சினார்க்கினியர் 'தாலி' என்று குறிப்பிட்டுள்ளதால் அதனை அறிய முடிகிறது.

சங்ககால மகளிரும், ஆடவரும் தோளணிகளை அணிந்தனர். மன்னர்களும், வீரர்களும், தொடியணிந்து ஒப்பனை செய்து கொள்வர். மகளிர் தோளில் அணிந்து கொள்ளப்பட்ட அணிகளில், தொடி,

தோள்வளை அல்லது வாகுவளையம் முக்கியமானவையாகும்.[99] மதுரை மாநகரத்து மகளிர் பொன்னாற் செய்த பூண்களையும், பூத்தொழில் அமைந்த தொடியினையும் அணிந்திருந்தனர்.[100] மார்பில் அணியும் அணி பூண் எனப்பட்டது. அரசர், அரசியர், பரத்தையர், விறலியர், மனைமகளிர் ஆகிய அனைவரும் பூண் அணிந்த செய்தி சங்க இலக்கியங்களில் கூறப்பட்டுள்ளது.[101]

மகளிர் கைகளில் அணிகள் அணியும் வழக்கம் தொன்றுதொட்டு இருந்து வருகின்றது. தொடி, கடகம், வளை, கைவந்தி போன்றவை கைகளில் அணியப்பட்டன. முத்து, சங்கு, பொன், பவளம், இரத்தினம் போன்றவற்றால் வளைகள் செய்யப்பட்டன. அவ்வளைகள் பல நுண்ணிய வேலைப்பாடுகளுடன் அமைக்கப்பட்டன. அவ்வளைகள் ஒரே கோடு போன்றும், பல முறுக்குகள் கொண்டும், பூ வடிவத்திலும், பல்வேறு வடிவத்திலும் செய்யப்பட்டன. வளைந்த கோணலான நகை 'வளை' எனப்பட்டது என்றும், காப்பு என்பது இவ்வகையைச் சார்ந்தது என்றும் கூறுவார் மா.இராசமாணிக்கனார்.[102] இக்காலத்தில் வளைகள், அரக்கு, கண்ணாடி ஞெகிழ் (பிளாஸ்டிக்) போன்றவற்றாலும் செய்யப்படுகின்றன.

கடலில் கிடைக்கும் வெண்மையான சங்குகளை அறுத்து வளையாகச் செய்து மகளிர் அணிந்து கொண்டனர். சங்கை அறுத்துச் செய்யும் தோள்தொடியும், கைவளையும் ஐங்குறுநூற்றில் வளைப்பத்து (191 : 200) என்னும் பத்துப் பாடல்களில் செய்திகளாகச் சொல்லப்பட்டுள்ளன. பாண்டியமாதேவி பொன்வளைகளோடு வலம்புரிச் சங்கை அறுத்துப் பண்ணின வளையையும் அணிந்திருந்ததை நெடுநல்வாடை குறிப்பிடும்.[103] தலைவி ஒருத்தி கைத்தொழில் வல்லோன் வாளரத்தால் அராவிய வளைந்த வளையைக் கைகளில் அணிந்திருந்தாள் என்று நற்றிணையும், 'அறம் போழ்ந்து, அறுத்த கண்ணேர் இலங்குவளை' என்று மதுரைக் காஞ்சியும், 'வேளாப் பார்ப்பான் வாளரம் துமித்தவளை' என்று அகநானூறும் கூறுவதால் வளை செய்யும் தொழில் வல்லோர் பலவகையான வளைகளைச் செய்தனர் என்பது பெறப்படுகின்றது.[104]

தலைவி, தலைவனை முயங்கும்போது பொன்வளையல்கள் ஒலியெழுப்பின என ஐங்குறுநூறு குறிப்பிடும்.[105] மகளிர் வெள்ளியினால் செய்த வளைகளையும், முத்தினை அழுத்திச் செய்த வளைகளையும் அணிந்திருந்தமையை அகநானூறும், கலித்தொகையும் குறிப்பிடுகின்றன.[106] கைகளில் அணிந்து கொள்ளும் அணிகளில் கைவந்தியும் ஒன்று. இது கையில் தோளின் கீழ் அணியப்படும் அணிவகையாகும். இக்காலத்தில் அதனைக் 'கைவங்கி' என்று கூறுவர்.

மதுரை நகரத்துச் செல்வ மகளிர் பொலிவுடைய கைவந்தியை அணிந்திருந்ததை மதுரைக் காஞ்சி கூறுகிறது.[107] மகளிர் முன்கையில் கடகம் அணிந்திருந்தனர்.[108] அது உட்புரை உடையதாக அமைக்கப்பட்டிருந்தது. மகளிர் கையில் செறிவாக இடப்படுவதோர் அணியாக 'நீலக்கடைச்செறி' என்னும் அணியைக் கலித்தொகை குறிப்பிடுகிறது.[109] மகளிருள் சிலர் தம் கைகளில் சில வளைகள் அணிவதையும், சிலர் கை நிறைவெய்தும்படி செறிந்த வளையல் அணிவதையும் விரும்பினர்.[110]

விரல்களின் அழகுக்காக மகளிரும், ஆடவரும் விரலணியை அணிவர். விரலணி அணியும் பழக்கம் அன்று முதல் இன்று வரை இருந்து வருகின்றது. விரலணிகள் மோசை, செங்கேழ் விளக்கம், மோதிரம், விரலணி, ஆழி என்னும் பெயர்களால் சுட்டப்பட்டுள்ளன. மோதிரங்கள் சுறாமீன் வடிவத்திலும், மீனின் அங்காந்த வாய் போன்ற வடிவத்திலும் செய்யப்பட்டன.[111] 'மோசை' என்னும் விரலணி மகளிர் அணிந்த வளையோடு பிணைக்கப்பட்டிருக்கும்.[112]

'செங்கேழ் விளக்கம்' என்பது வாளை மீனின் அங்காந்த வாயையொக்க முடக்கத்தையுண்டாக்கிச் செய்யப்படும் சிவந்த நிறத்தையுடைய மோதிரமாகும். பாண்டியன் நெடுஞ்செழியனின் தேவி முடக்கென்னும் மோதிரத்தையும், அவள் கணவன் பொன்னால் செய்யப்பட்டுப் பொலிவுமிக்க மணிகள் பதிக்கப்பெற்ற மோதிரத்தையும் (விளக்கம்) அணிந்திருந்தமையை நெடுநல்வாடை, மதுரைக்காஞ்சியால்

அறியலாம்.[113] பரிபாடல் கால்விரல் மோதிரத்தைக் 'காலாழி' எனக் குறிப்பிடுகிறது.[114]

பண்டைக் காலத்திலிருந்தே மகளிர் இடையணி அணியும் வழக்கம் காணப்படுகின்றது. ஆடவர் இடபப்பூணும் அரையில் அணிவர். அதனோடு வெட்டாத வாளும் மழுவும் இரண்டு புறத்தும் கட்டப்பட்டிருக்கும் இடையேயுள்ள இடபப்பூண் ஈசல் பூச்சியின் நிறம் போன்று பவளத்தால் செய்யப்பட்டிருக்கும்.[115]

பூப்பு நீராட்டு, விழாக்காலங்கள், திருமண உறுதிப்பாடு (நிச்சயதார்த்தம்), திருமணம் போன்ற மங்கல நிகழ்வுகளில் மகளிர் இடையணி அணிவர். இது ஒட்டியாணம் என்றும் அழைக்கப்படும். அஃது ஆடைக்கோர் இறுக்கியாக இருந்ததுடன் மகளிரின் இடையழகை மிகுத்துக் காட்டுவதாகவும் உள்ளது. பொன், வெள்ளி இவற்றால் செய்யப்பட்ட இருப்புப்பட்டை, உதரபந்தம், ஒட்டியாணம், சன்னவீரம் ஆகியவற்றை மகளிர் இடையில் அணிந்தனர்.[116] ஆடவர் பொன் அல்லது வெள்ளியால் செய்த அரைஞாணை அணிவர்.

மகளிரின் இடையணிகளில் பாண்டில், மேகலை, சில்காழ், பல்காழ், பைங்காழ், பருமம், காஞ்சி, ஏணிப்படுகால், விரிசிகை ஆகியன குறிப்பிடத்தக்கனவாகும். பொன்னால் வட்டமாகச் செய்யப்பட்டு, அதனைச் சுற்றி மணிகள் கோர்க்கப்பட்ட ஒட்டியாணம் போன்றதோர் அணிவகை பாண்டில். பாண்டில் என்னும் இடையணியைத் தலைவியொருத்தி அணிந்ததை ஐங்குறுநூறு சுட்டும்.[117]

சங்க கால மகளிர் மேகலை எனப்படும் இடையணியை அணிந்தனர். இது பல முத்து வடங்கள் தொங்கவிடப்பட்டுப் பட்டையாக அமைக்கப்படும். இருகோவை முதல் முப்பத்திரெண்டு கோவை ஈறாகச் செய்யப்பட்ட மேகலைகளும் உண்டு. அதனை 'ஏணிப்படிகால்' என்று வழங்குவர்.[118] எண்கோவை காஞ்சி என்றும், எழுகோவை மேகலை என்றும்,

பதினாறு வடம் கொண்டது கலாபம் என்றும், பதினெட்டு வடம் கொண்டது பருமம் என்றும் முப்பத்திரண்டு வடம் கொண்டது வரிசிகை என்றும் கூறப்படும் என்பர் நச்சினார்க்கினியர்.[119] சூரர மகளிர் சில்காழ் எனப்படும் பலமணிகள் கோர்த்த ஏழுவடமாகிய மேகலையை அணிந்திருந்தனர்.[120] மகளிர் இரு வடமாய்த் துகிற்குள் அணிந்த மேகலையையும், எண் வடமாய் அவ்வாடையின் புறத்தே அணிந்த காஞ்சியையும் வையையாறு கவர்ந்து சென்றது.[121] விறலி, பல வண்டினங்களின் இருப்பையொத்த பலமணிகள் கோர்த்த வடங்களையுடைய பல்காழாகிய மேகலையை அணிந்திருந்தாள்.[122] தொண்டை நாட்டுப் பட்டினத்தைச் சேர்ந்த செல்வமகளிர், பசியமணிகள் கோர்த்த வடங்களை அணிந்திருந்தனர்.[123] திருவாவினன் குடியில் முருகனைப் புகழ்ந்து பாடிய கந்தருவ மகளிர், ஒளி உமிழும், பதினெண் கோவையாகிய பருமம் (அரைப் பட்டிகை) என்னும் மேகலையை அணிந்திருந்தனர்[124] என்பதைத் திருமுறுகாற்றுப்படை தெரிவிக்கின்றது. வகைவகையாகக் கோர்த்த மேகலை, எண்கோவை மேகலை, தமனிய மேகலை ஆகியவற்றைப் பரிபாடலும், கலியும் சுட்டுகின்றன.[125]

மக்கள் கணுக்கால்களிலும், கால்விரல்களிலும் அணியப்படும் அணிவகை காலணிகலன்கள் எனப்படும். வேதகால இலக்கியம் போன்ற முற்கால இலக்கியங்களில் காலணி பற்றிய செய்திகள் இடம் பெறவில்லை என்பர் கே. பகவதி.[126] சங்கக்காலத்தவர் மகளிர் சிலம்பு, கிண்கிணி ஆகிய காலணிகளை அணிந்திருந்தனர். சிலம்பு பொன்னாலும், வெள்ளியாலும் செய்யப்பட்டது. இரத்தினக் கற்களையும், முத்துக்களையும் பரல்களாக உள்ளே இட்டுச் சிலம்பு அமைக்கப்பட்டது.[127] சங்க இலக்கியத்தில் நூபுரம், ஞெகிழம், குடைச்சூல் என்னும் பெயர்களும் சிலம்பினைக் குறிக்க வழங்கப்பட்டுள்ளன.[128]

மகளிர் மணம்புரிந்து கொள்ளுமுன் இளவயது தொட்டே அணிந்த சிலம்பை அகற்றுதல் ஒரு விழாவாகக் கொண்டாடப்பட்டுச் 'சிலம்புக்கழி

நோன்பு' என்னும் பெயர் பெற்றது. தொண்டை நாட்டுச் செல்வமகளிர் பொற்பூண்களும், பொற்சிலம்புகளும் ஒலிக்குமாறு பந்தாடினர்.[129]

மதுரை நகரச் செல்வமகளிர் தெள்ளரிப் பொற்சிலம்புகள் ஒலிக்கும்படி, மேல்மாடத்தினின்றும் திருவிழாவைக் காண இறங்கி வந்தனர்.[130] இவற்றால் மகளிர் பொற்காப்பு, பொற்சிலம்பு முதலிய காலணிகளை அணிந்திருந்தனர் என்பது தெரிகின்றது. தலைவி, வில்லினைப் போலும் வகையமைந்த குடைச்சூல் ஆகிய சிலம்பினை ஒலியாது அடக்கி, அஞ்சியவளாய் இரவுக்குறியிடத்தே வந்து தலைவனைத் தழுவி மீண்டாள் என்று அகநானூறு குறிப்பிடும்.[131] சிலம்பின் ஒலியால் அன்னை தந்தையர் விழிப்பர் எனக் கருதி அவ்வாறு செய்தனள். அவ்வாறே தலைவி உடன்போக்கில் தலைவனுடன் செல்லுங்கால் தன் சிலம்பொலி கேட்டு அன்னை முதலியோர் விழிப்பரென அஞ்சிச் சிலம்பினைக் கழற்றி வைத்துவிட்டுச் செல்வதும் உண்டு.[132]

செறிந்த உள்ளிடுமணிகளையுடைய சிலம்பணிந்த மகளிர் ஆன்பொருநை யாற்று மணலிடத்துப் பொற்கழங்கு கொண்டு விளையாடினர்.[133] சிறுவர்களும், பெண்களும் கிண்கிணி அணிந்திருந்தனர். இது பொன்னாலும், வெள்ளியாலும் செய்யப்பட்டு மணிகள் இடப்பெற்று நடக்கும் போது ஒலி உண்டாக்கும். இது அங்காந்த தேரை அல்லது தவளையின் வாய் வடிவத்தில் செய்யப்பட்டிருந்தது.[134] ஆடு, கோட்பாட்டுச் சேரலாதனின் தேவி பல மணிகள் கோர்த்த கிண்கிணி அணிந்திருந்தாள்.[135] செவிலியர் பாராட்டத் தலைவி பொற்கிண்கிணி அணிந்த அடிகளால் மணல்பரந்த முற்றத்தில் நிலம் வடுக்கொள விளையாடினாள் என்பதை அகநானூறு சுட்டும்.[136] காற்சரி, சுழல், கட்டுவடம், கால்தண்டை, பாதசாலம் முதலியனவும் காலணிகளாகும் என்பர்.[137] மகளிர் காலில் சிலம்பணிவதைப் போல ஆடவர் காலில் கழல் அணிதல் பண்டைக் கால மரபாகும். பாகைவரைவென்று அவர்தம் முடிப்பொன்னால் வீரக்கழல் செய்து அணிதல் அக்கால மன்னர்களின் இயல்பாகும்.[138]

சங்க இலக்கிய அணிகலன்கள் பற்றிய செய்திகளை ஆராய்வதன் மூலம், பொன்னைத் தீயிலிட்டுத் தூய்மை செய்த பின் பயன்படுத்தியமையும், பொன்னை உரைத்து மாற்றுக் காணும் கட்டளைக்கல் இருந்தமையும், அணிகலன்களைப் பாதுகாப்பாக வைக்கப் பெட்டியைப் பயன்படுத்தியமையும், பல்வேறு தொழில் நுட்பத்தோடு அணிகள் செய்யப்பட்டமையும் அறிய முடிகின்றது.

**உறையுள் :**

மனித வாழ்க்கைக்கு இன்றியமையாத அடிப்படைத் தேவைகளுள் மிகவும் முக்கியமானதாகப் போற்றப்படுவது உறையுள் என்று சொல்லப்படுகின்ற இருப்பிடம் ஆகும். ஒவ்வொரு மனிதனும் தன்னைச் சார்ந்துள்ள குடும்பத்தோடு ஓரிடத்தில் வசிப்பது கட்டாயமான ஓர் உலகியல் சூழல் என்பதால் அவன் தனது இருப்பிடத்தை அமைத்துக் கொள்ள வேண்டியது அவசியமானதாகிறது. பொதுவாக உறையுள் என்பது மக்கள் தாங்கள் வாழும் நிலப்பகுதிக்கும், சூழ்நிலைக்கும் தக்கவாறு அமைகிறது. உறையுள் மனிதனின் பண்பாட்டை வெளிப்படுத்தும் காரணியாகவும் விளங்குகிறது. இவற்றைச் சங்க இலக்கியங்கள் விரிவாகப் பேசுவதைக் காணலாம்.

முல்லை நிலத்து ஆயர்கள் குறுகிய இறப்பினையுடைய சிறு வீடுகளில் வாழ்ந்தனர். வீட்டின் குறுகிய கால்களில் ஆடுகள் தின்பதற்குரிய தழைக்கொத்துக்கள் கட்டப்பட்டிருந்தன. அதன் வாயில் சிறிய தூறு அமைந்திருந்தது. கழிகளால் கட்டப்பட்ட கதவு இருந்தது. கழிகளை வரிந்து கட்டி அதிலே வரகுக் கற்றை வேய்ந்த சேர்க்கையின் மேல் இடையன் ஆட்டுத் தோலை விரித்துப் படுத்திருந்தான். வீட்டின் மருங்கில் முளையடிக்கப்பட்டுச் சிறிய தாம்புகளில் ஆடுகள் கட்டப்பட்டிருந்தன. கட்டுமுள்ளை வைத்து வேலி கட்டியிருந்தனர்.[139] மூங்கிற் கழிகளைக் கொண்டு அவற்றின் குறுக்காக வெள்ளிய கோடுகளை நிரைத்துத் தாழை நார் கொண்டு பிணித்துத் தருப்பைப் புல்லால் வேயப்பட்ட குறுகிய

இறப்பினைக் கொண்ட வீடுகளில் பரதவர் குடியிருந்தனர்.[140] வரகு, வைக்கோல், செந்நெல்கதிர், கரும்பு, கூவையிலை ஆகியவற்றாலும் குடிசைகள் வேயப்பட்டன.[141] இவ்வீட்டின் முன்னர் மீன் பிடிக்கும் பறி தொங்கிற்று. புன்னை மரக் கொம்புகளால் கட்டிய பந்தலிலே பாகற்கொடி படர்ந்திருந்தது. காய்கள் தொங்கிக் கொண்டிருந்தன. தாழை மடல்களால் வேயப்பட்ட கடலோரத்துக் குடியிருப்பினை நற்றிணைச் செய்யுளும் பேசுகிறது.[142] பாலை நிலத்தில் எயினர்கள் வாழ்ந்தனர். அவர்களுடைய குடிசைகள் வேல் போன்ற நுனிகளையுடைய ஈந்தின் இலைகளால் வேயப்பட்டு எய்ப்பன்றியின் தோற்றத்தோடு விளங்கின.[142] எயினர்கள் அரண் அமைத்து வாழ்ந்த இடம் பற்றிய வருணனையும் காண்கிறோம். புலால் நாற்றம் வீசும் வேலும் கேடயமும் பத்திப்பத்தியாயிருந்தன. விற்கள் சார்த்தப்பட்டிருந்தன. உயர்ந்த அவர்களின் வீடுகளின் கூரை ஊகம் புல்லால் வேயப்பட்டிருந்தது. மலையில் தேன்கூடு தொங்குவதுபோல் அம்புக்கூடுகள் தொங்கின. பந்தலில் துடிகள் தொங்கின. வலிய சங்கிலியால் பிணித்த நாய்கள் கட்டப்பட்டிருந்தன. உயிருள்ள முள்வேலிகள் இடப்பட்டிருந்தன. கழுக்கள் நடப்பட்ட வாயில்களைக் கொண்டிருந்தன.[144]

மலையடிவாரத்தில் வாழ்ந்த மக்கள் சிலருடைய வீடுகள் மிக அழகாகத் தீட்டிய வண்ண ஓவியம் போலக் காட்சியளித்தன.[145] உழவர்களின் வீடுகள் நெடிய சுவர்களைக் கொண்டிருந்தன. அவற்றில் வண்டிச் சக்கரங்களும், கலப்பைகளும் சார்த்தி வைக்கப் பட்டிருந்தன. முன்னாலிருந்த பந்தலில் யானைகள் நின்றாற் போலக் குதிர்கள் இருந்தன. பிடியடி போன்ற திரிகைக் கற்கள் இருந்தன. பக்கத்தில் மாட்டுத் தொழுவம் இருந்தது. கரிய வைக்கோலால் வீடுகள் வேயப்பட்டிருந்தன. முள்வேலி இடப்பட்டிருந்தது.[146]

அந்தணர்கள் கோழியும், நாயும் நெருங்காத இடத்தில் வாழ்ந்தனர். அவர்களின் வீடுகள் பெரிய அளவினவாகும். எனவே, 'நன்னகர்' என்று

குறிக்கப்படுவதும் உண்டு. வீட்டில் பசிய சாணமிட்டு மெழுகினர். புனிதமான அவ்வீட்டின் முன்னர் செழுங்கன்று கட்டப்பட்ட பந்தல் இருந்தது.[147] இதுகாறும் கண்டவைப் பாமரரும் எளிய மக்களும் குடியிருந்த உறையுள்கள் ஆகும். இவை பெரும்பாலும் சிற்றூர்களில் காணப்டும் குடில்களாகவே தோற்றம் அளிக்கின்றன.

இனி நகரங்களில் காணப்படும் இல்லங்களைப் பற்றி அறிவோம். நகரங்களைப் பெரிய மாடி வீடுகள் அணி செய்தன. இவ்வீடுகட்கு வேயா மாடங்கள் என்னும் பெயர் உண்டு. தொண்டைமான் இளந்திரையனுடைய நாட்டில் விண்ணுற வேங்கிய மாடங்கள் மிகுந்திருந்தன.[148] கொடும்பூண் அணிந்த மகளிர் மால்வரை மீது மயிலாடுவது போல் காற்சிலம்பு கலீர் கலீர் என இசைக்க விண்டோய் மாடத்தில் வரிப்பந்தாடினர். [149] இவ்வீடுகட்கு வேயா மாடங்கள் என்றும் பெயர் உண்டு.[150] இவை சுட்ட செங்கல்லால் எழுதப்பட்டவை. செல்வந்தர்கள் மாளிகைகளில் வாழ்ந்து வந்த நிலையில் அரசர்கள் வாழ்ந்த உறையுளுக்கு அரண்மனை என்று குறிப்பிடப்பட்டது. அரண்மனையைச் சுற்றி ஒரு வெற்று வெளி இருக்கும். அதற்குச் செண்டுவெளி என்று பெயர்.[151] மாளிகையைச் சுற்றிலும் ஆழமான கிடங்குகள் இருந்தன.[152] குன்றுகள் பல குழுமினாற் போலப் பெரிய வீடுகள் நிறைந்திருந்தன.[153] கதவுகளை மூடிக் குறுக்கே கணையமரம் ஒன்றைப் பூட்டுவார்கள்.[154] இதற்கு நுகம் என்று பெயர். வீடுகளுக்கு இரட்டைக் கதவுகள் அமைப்பதுண்டு.[155]

சங்கக் கால மக்களின் வளமனைகள் பற்றிய செய்திகள் கலையும், கலிப்பும் என்ற இயலில் குறிப்பிடப்பட்டுள்ளது.

### இனக்குழு வாழ்க்கை

சங்க கால மக்களின் வாழ்க்கைப் போக்கினை ஆராய விழைந்துள்ள நாம் வரலாற்றுக்கு முற்பட்ட மக்களின் வாழ்க்கைப் போக்கையும் இணைத்து ஆராய்வது சாலச் சிறந்ததாகும். தமிழகத்தில் ஏறத்தாழ கி.மு. 300 இல் வரலாற்றுக் காலம் தொடங்குகிறது. தென்னிந்தியாவில் மனித

இனம் தோன்றியது. 3 இலட்சம் ஆண்டுகளுக்கு முன் என்று நீலகண்டசாந்திரியார் கூறுவார்.[156] இவற்றிற்கிடைப்பட்ட காலமே தமிழகத்தின் வரலாற்றுக்கு முற்பட்ட காலமாகும். வரலாற்றுக்கு முற்பட்ட காலத்தில் இனக்குழுக்கள் உலகெங்கும் நிலவின. தமிழகத்தில் இனக்குழுக்கள் திணைகளின் அடிப்படையில் பாகுபடுத்தப்பட்டிருந்தன. இப்பாகுபாடு மானிடவியல் விளக்கத்திற்குப் பொருந்தி வருவதைப் பி.டி. சீனிவாச அய்யங்கார் போன்ற அறிஞர்கள் எடுத்துக் காட்டியுள்ளனர்.[157]

சங்க இலக்கியங்களில் உணவு சேகரிக்கும் வாழ்க்கை நிலை, வேட்டையாடும் வாழ்க்கை நிலை, காடுகளை அழித்துப் பயிர் செய்யும் வாழ்க்கை நிலை, கால்நடை வளர்ப்பு நிலை, பயிர்த்தொழில் செய்யும் வாழ்க்கை நிலை ஆகியவற்றை அங்கங்கே காண முடிகிறது.

ஆதிகால மக்கள் வாழ்க்கை நிலையின் எச்சங்கள் சங்க இலக்கியத்தில் காணப்படுகின்றன. அவற்றை இங்கு இணைத்துக் காண்போம். வரலாற்றுக்கு முற்பட்ட மக்கள் விலங்கு நீர்மை நிலையிலும் அநாகரிக நிலையிலும் வாழ்ந்து வந்தார்கள். இரும்புக் காலத்தில் நாகரிக நிலை உருவாயிற்று. உலகமெங்கும் மேற்சொன்ன நிலைகளில் சமுதாய வளர்ச்சிப் பரிணாமம் அடைந்து வந்ததைக் கார்டன்சைல்டு என்ற அகழ்வாய்வாளர் சுட்டியுள்ளதைக் கா. சுப்பிரமணியன் எடுத்துக் காட்டியுள்ளார்.[159]

இனக்குழு மக்களின் வாழ்க்கை நிலை முதல், சங்க கால மக்களின் வாழ்க்கை நிலையிலான பரிணாம வளர்ச்சியினை இங்கு விரிவாகக் காணலாம். வரலாற்றுக்கு முற்பட்ட காலத்தில் வாழ்ந்த இனக்குழு மக்கள், காய்கனிகள் சேகரிப்பதையும், வேட்டையாடுதலையும் தம் தொழிலாகக் கொண்டிருந்தனர். வேட்டை முற்சமுதாயத்தில் உற்பத்தி கிடையாது. விதைகள், பழங்கள், காய்கள், வேர்கள், கிழங்குகள், சிறுபிராணிகள் ஆகிய கிடைத்தவற்றைப் பகுத்துக் கொண்டனர். மலை நிலத்துக் குறவர்கள் தாம் வேட்டையாடிய உடும்பிறைச்சி, கடமானிறைச்சி, பன்றியிறைச்சி முதலியவற்றை உண்டனர். மூங்கிலரிசியால் சமைத்த உணவைப் பலாக்கொட்டை மாவோடு கலந்து உண்பர்.

இனக்குழுத் தலைவன் நள்ளி, வேட்டையாடச் சென்றான். காட்டில், கலைஞர் உணவின்றி வருந்தியதைக் கண்டான். வேட்டையாடிய விலங்கைத் தானே சமைத்து, அவர்களுக்கும் பரிமாறி மகிழ்ந்தான். இனக்குழு மக்களிடம் நிலவிய இயல்பான பெருந்தன்மையின் வெளிப்பாடாக நள்ளியின் செயல் அமைந்தது.[160] மேலே காட்டபட்ட எடுத்துக்காட்டுகள் இனக்குழு மக்கள் கிடைத்த உணவைப் பகுத்துக் கொண்டமையை வெளிப்படுத்துகின்றன.

தொடக்கத்தில் மக்கள் நாடோடிக் கூட்டமாக வாழ்ந்து வந்தனர். இத்தகைய நாடோடி வாழ்க்கை நிலையை இலக்கியங்களும் காட்டுகின்றன. கலைஞர்கள் வயிற்றுப் பிழைப்பிற்காக நாடோடிகளாய் வாழ்ந்தமையைச் சங்க இலக்கியம் பேசுகிறது. விழாவில் ஆடல், பாடல் நிகழ்த்துவோர்க்கும் பிறர்க்கும் சோறு அளித்தலும் உண்டு. ஒரு பேரூரிலே விழா கழிந்து விட்டால், வேறு விழாக் காணும் ஊரை நாடிப் பொருநர், பாணர் முதலியோர் சென்று விடுகின்றனர். இங்ஙனம் அவர்கள் செல்வது விழாவில் அளிக்கப் பெறும் சோற்றினைப் பெறும் பொருட்டும் ஆகும். இவ்வகைப்பட்ட பொருநர் தன்மையை,

“அறாஅ யாணர் அகன்தலைப் பேரூர்
சாறு கழிவழிநாள் சோறு நசை உறாது
வேறு புலம் முன்னிய விரகு அறி பொருந !”[161]

எனப் பொருநராற்றுப் படையில் வரும் பொருநனின் இயல்பு கூறுமாற்றால் புலப்படும். சங்க இலக்கியம் காட்டும் இத்தகைய கலைஞர்களின் நாடோடி வாழ்க்கை வரலாற்றுக்கு முற்பட்ட காலத்தில் வாழ்ந்த இனக்குழு மக்களின் நாடோடி வாழ்க்கையை எதிரொளிப்பதாக அமைந்துள்ளது.

இன்றளவிலும் ஒரு சாரார் பறவைகளையும், சிறிய விலங்குகளையும் கைத்துப்பாக்கியைக் கொண்டு சுட்டுத் தின்று நாடோடிகளாய் வாழ்ந்து வருகின்றனர். அரசு இவர்களுக்குக் குடியிருப்புகளைக் கட்டிக் கொடுத்து

நிரந்தரமாக ஓரிடத்தில் தங்கி வாழ வழி செய்துள்ளது. இதுவும் இனக்குழு வாழ்க்கையின் எச்சமாகவே கருதலாம். வரலாற்றுக்கு முற்பட்ட மக்கள் காய்கனி, விலங்குகள் கிடைக்கும் இடங்களில் தங்கியிருந்தனர். அப்பொருட்கள் தீர்ந்ததும் இடம் விட்டு வேறிடம் சென்று விடுவர். அந்நிலையில் திருமணமும், குடும்பம் என்ற அமைப்பும் எவ்வித ஒழுங்கும் அம்மக்களிடம் இல்லை. ஆண், பெண் ஆகிய இருவருக்குமிடையே பாலினத் தொடர்பு மட்டுமே இருந்து வந்தது. அத்தொடர்பு முடிந்ததும் இருவரும் பிரிந்து விடுவார்கள். பிறக்கும் குழந்தை தாயிடம் நெடுங்காலம் இருந்தது. தந்தை, தாய் யார்? என்று அறியாது. அக்குழந்தை வாழ்ந்த நிலையில் தாய்வழிக் குடும்பங்கள் இருந்தன. குடும்பச் சூழலை மையமாகக் கொண்டு இயற்றப்பட்ட சங்க அக இலக்கியங்கள் நற்றாய், செவிலி, தலைவி, தோழி, பாங்கியர் என மகளிரை முதன்மைப்படுத்திப் பேசுவது தாய்வழிச் சமூகம் நிலவியதன் சாரமாகக் கொள்ளலாம். தொடக்கக் காலத்தில் பெண் பயிர்த்தொழிலைத் தொடங்கியதால் பெண்ணிற்கு முதலிடம் அளிக்கப் பெற்றது.[162] மழை, வளம் ஆகியவற்றை வேண்டிச் செய்யப்படும் சடங்குகளில் அக்காலத்தில் பெண்கள் முதலிடம் பெற்றது இதனாலேயே எனலாம். பழங்காலச் சமுதாயத்தில் தேவராட்டி நிறைந்து விளங்கியதற்குக் காரணம் இதுவேயாகும். திருமுருகாற்றுப்படையின் குறமகள், வெறியாட்டு நிகழ்த்துதல் கூறப்பட்டுள்ளது.

சிலப்பதிகாரம் கொற்றவை வழி பாட்டை சாலினி நடத்துவதாகச் சித்திரிக்கிறது. கொற்றவையாகக் கோலங் கொண்டதும் எயினர் குலக்குமரியே ஆவாள். படிமத்தாள் முன்னம் கூறுதலை அகநானூறு உணர்த்தும். அகவன் மகள் குறிசொல்லுதலைக் குறுந்தொகை சுட்டிக் காட்டுகிறது. கட்டுவிச்சி கழங்கு கொண்டு குறி சொல்வதை அகநானூறு உணர்த்துகிறது. இது போன்று பேய்ப் பெண்டிர், பேய் மகளிர்[164] என்பவர் பூசாரிணிகளாவர். இந்தச் சான்றுகள் தாய்வழிச் சமூகம் நிலவியதைப் புலப்படுத்துகின்றன.

இத்தகைய சூழலில் உள்ள இனக்குழு மக்களின் வாழ்வியலைப் பண்பாட்டு மானுடவியலாளர்கள், சமுதாயத்தினர் பயன்படுத்திய கருவிகளைக் கொண்டு காலத்தை வரன்முறைப்படுத்தியுள்ளனர். அவ்வடிப்படையில் பகுக்கும் முறை வருமாறு; 1. பழைய கற்காலம், 2.புதிய கற்காலம், 3. உலோகக் காலம்.

**பழைய கற்காலம் :**

பல நூற்றுக்கணக்கான ஆண்டுகள், மாந்தர், உணவு சேகரிக்க அலைந்து, திரிந்து வாழ்ந்தனர். உணவுப் பொருள்களை உருவாக்குவதற்கு அறிவுத்திறன் இல்லாத அக்காலத்தில் விலங்கினங்களையும், பறவைகளையும் வேட்டையாடினான். இதற்காக மனிதன், கைக்குக் கிடைத்த கற்களை அப்படியே பயன்படுத்திய காலம் பழைய கற்காலமாகும். இக்காலத்தின் தொடக்க நிலையில் மக்கள் தங்களுக்குக் கிடைத்த காய், கனி, கிழங்கு, விதை, வேட்டையாடிய விலங்குகள் முதலியவற்றை அப்படியே பசிய பொருளாக உண்டனர். "ஒரு வேடன் பச்சை ஊனைத் தின்றான். பசியக் கொழுப்பு நிறைந்த எச்சில் கை ஈரத்தினைத் தனது வில்லினது கம்பில் தேய்த்தான். நிரை கவரக் கிளம்பிவிட்டான்."[165] என்ற புறநானூற்றின் கருத்தை இதற்குச் சான்றாகக் காட்டலாம்.

பழைய கற்காலத்தின் பிற்பகுதியில் மக்கள் தீயின் பயன் பற்றி அறிந்திருந்தனர். அதன் விளைவாக வேட்டையாடிய விலங்குகளையும், ஏனைய உணவுப் பொருட்களையும் சமைத்து உண்டனர். "வளைந்த வில்லினர் ; கொடிய பார்வையினர் குன்றினை அடைந்தனர் ; எழுச்சியுள்ள எருதினைக் கொன்றனர் ; கொழுப்பு நிறைந்த தசையை நெருப்பில் சுட்டனர் ; பேய்களைப் போல, வெளுத்த ஊனைத் தின்றனர். தாகம் அடங்கத் தோப்பிக்கள்ளைப் பருகினர் ; புலால் நீங்காத வாயினர் ; பூசாத வாயினர் ஆக கோட்டான் குரலோடு, வெண் கடம்ப மரங்களையுடைய சீறூர் பக்கத்தில் கூத்தாடினர்."[166] மேலே காட்டப்பட்ட சங்க இலக்கியச்

சான்றுகளால் வேட்டையாடிய பொருள்களை நெருப்பின் உதவியால் சுட்டுத் தின்றமையை அறியலாம்.

பழைய கற்கால மக்களுக்கு உணவு சேகரித்தல், வேட்டையாடுதல் தொழில்களாயின. வில், அம்பு, அக்கால முக்கியக் கருவிகளாகும். பாலை நிலத்து எயினர் தமது வலிமையால் கொள்ளை கொண்டு உண்ணும் உணவினர். அந்நிலத் தலைவன், தன் வில்லையுடைய சுற்றத்தோடு பகை நிலம் சென்றான். விடியற்காலையிலேயே அவர்களுக்குரிய பசுக்களை ஓட்டிக் கொண்டு வந்தான். கள்ளுக்கு அவற்றை விலையாக்கினான். பின்னர், வீட்டில் சமைத்த நெல்லால் ஆகிய தோப்பிக்கள்ளைக் குடித்தான். வளமுடைய மன்றில் வலிய காளையை அறுத்துத் தின்றான். மத்தளங்கள் முழங்கின. வில் அழுந்திய இடத்தோளை, வலப்பக்கம் வளைத்து, பகல் பொழுதில் மகிழ்ச்சியுடன் ஆடும் இக்குடியிருப்பைப் பெரும்பாணாற்றுப் ·படை விளக்குகிறது.[167] இதன் வாயிலாக வில்லில் அம்பு கொண்டு எய்யும் நிலையைத் தலைவன் ஆட்டம் சித்தரிக்கின்றது. கொடிய விலங்குகளைத் தாக்க, பெரிய கூட்டமாகச் சென்றனர். வேட்டை உணவைப் பாதுகாத்து வைக்க முடியாததால், உபரியைப் பகிர்ந்து கொண்டனர். கானவன் எய்த முள்ளம்பன்றியின் தசையைக் கொடிச்சி, சிறு குடியினருக்கு மகிழ்ச்சியுடன் பகுத்துக் கொடுத்தாள்.[168] புலி ஒரு யானையைத் தாக்கிக் கொன்றது. அப்புலி உண்டு எஞ்சிய ஊனில் ஒரு பகுதியை, மறவர், கோலில் கோத்துக் கொண்டு ஏகினர். அடுத்து அவ்வழியில் வந்த உமணர் அடுப்பு மூட்டி உலைவார்த்து, அவ்வூனைச் சமைத்துண்டனர்.[169]

இனக்குழு வாழ்க்கையின் தொடக்கக் காலத்தில் நிலவிய தாய்வழிச் சமூகம் காலப்போக்கில் உணவு தேடும்பொருட்டு, வேட்டையாடும் தொழிலில் ஆடவரின் வலிமை மிகுதியாகக் காணப்பட்டதால் தந்தைவழிச் சமூகம் தோன்றியது.

**புதிய கற்காலம் :**

புதிய கற்காலத்தில் கற்களை விரும்பிய வடிவில் அமைத்துக் கொண்டனர். இக்காலக்கட்டத்தில் மக்களின் அறிவுநிலை சற்று மேலோங்கிய நிலையில் பானை செய்ய அறிந்தனர். தாழிகள் தானியம் சேகரிப்பதற்குப் பயன்பட்டதோடு மரணச் சடங்குகளிலும் முக்கியத்துவம் அடைந்தன. பண்டை நாளில் மட்பாண்டங்களையே பயன்படுத்தினர். சமைத்தலுக்கு மட்டுமின்றி உடல்களைப் புதைப்பதற்கும் தாழிகள் தேவைப்பட்டன. வேட்கோவர்கள் 'கலஞ்செய்கோ' எனப்பட்டனர். மண்பாண்டம் செய்யப் பயன்பட்ட கருவியும் அறியப்படுகிறது. 'அச்சுடைச் சாகாட்டு ஆரம்' (அகம்196) என்பது சான்றாகும். பெரிய சூளைகளில் பானைகளும் பிற கலன்களும் சுடப்பட்டன.[170] பெரிய தாழிகளில் சவங்கள் அடக்கம் செய்யப்பட்டன. அவை செந்நிறமாக இருந்தன.[171]

புதிய கற்கால மக்கள் பானைகள் செய்ய அறிந்திருந்தமை அச்சமூகத்தில் பெரியதொரு மாற்றத்தை ஏற்படுத்தியது. உணவைச் சேகரித்து வைக்க வழியில்லாமல், அவற்றைப் பாதுகாக்கத் தெரியாமல் பகுத்துண்ட மக்கள் பானைகள் கண்டுபிடிப்பினால் உணவுப் பொருள்களைச் சேகரித்து வைக்க முற்பட்டனர். இதனால் எதிர்காலம் பற்றிய சிந்தனை மக்களுக்கு ஏற்படத் தொடங்கியது எனலாம். கால்நடை வளர்ப்பும், புராதன விவசாயமும் தோன்றின. உணவு சேகரிப்போர் பகுதி உற்பத்தியாளராய் மாறினர். விலங்குகளை வேட்டையாடிய மனிதன் காலப்போக்கில் அவற்றை அடக்கி ஆண்டு வளர்க்கத் தொடங்கினான். இவை சமூகத்தில் ஏற்பட்ட மற்றொரு குறிப்பிடத்தக்க மாற்றங்களாகும். விலங்குகளின் எண்ணிக்கை குறைவாக இருக்கும்வரை விவசாயமும் கால்நடை வளர்ப்பும் இணைந்து சென்றன. இனக்குழுவின் வளர்ச்சி காரணமாக ஒவ்வொரு விவசாயக் கால்நடை வளர்ப்புக் குழுவும் இரண்டாகப் பிரிந்தனர்.

சில வேட்டைக் குழுவினர் கால்நடை வளர்ப்பையும், வேறு சில வேட்டைக் குழுவினர் விவசாயத்தையும் துணையாகக் கொண்டனர். ஆனால், வேட்டையில் நிலை பெற்றவர் தமது வாழ்க்கையை மாற்றிக் கொள்ளவில்லை. இதுவே, இனக்குழு வாழ்க்கையில் முதன்முதலாக ஏற்பட்ட பிரிவுகளாகும். பொருளாதார முன்னேற்றத்தில் கால்நடை வளர்ப்பும், வேளாண்மையும் பெரும்பங்கு வகித்ததால் துணைத்தொழிலாகக் கருதப்பட்ட இவை காலப்போக்கில் முதன்மைத் தொழிலாக மாற்றம் பெற்றன. கால்நடை வளர்ப்புக்கு முல்லை நிலம் ஏற்புடையதாதலின் ஆயர்கள் அத்தொழிலையும் பயிர்த் தொழிலுக்கு மருதநிலம் ஏற்புடையதாதலின் உழவர்கள் இத்தொழிலையும் மேற்கொண்டனர். இதனிடையே வேட்டையாடுதலையே தொழிலாக வேறொரு சாரார் கைக்கொண்டனர். இந்நிலையில் வேளாண் தொழிலின் தோற்றத்திலும் பராமரிப்பிலும் மகளிரின் பங்கு பெரும்பான்மையாக இருந்ததால் தாய்வழிச் சமூகம் மீண்டும் புத்துணர்வு பெற்று வளரத் தொடங்கியது. இவற்றின் முன்னேற்றம் இனக்குழு முறை சிதைய வழி செய்தன. பிரிந்து சென்ற ஒவ்வொரு இனக்குழுவும் தனக்கென்று ஒரு தலைமையின் கீழ் செயல்படத் தொடங்கின. இனக்குழுத் தலைவன், அக்குழு மக்களைப் போல எளிய நிலையிலேயே வாழ்ந்தான். அவனுக்கெனத் தனிச் சலுகைகள் கிடையாது. மக்களோடு சேர்ந்து உழைப்பில் பங்கு கொண்டு, உணவு தேடியும், உணவைப் பங்கு வைத்துக் கொண்டு உண்டும் வாழ்ந்தான்.

காலைக் கள்ளைக் குடித்து விட்டு தூசி நிறைந்த, துப்புரவு செய்யப்படாத முற்றத்தில் உறங்குகின்றவன் எமது தலைவர் ; யாம் அவனது பாணர் என ஒரு பாடல் விவரிக்கிறது.[172] இதோ முற்றத்தில் கள் குடித்த மயக்கத்தில் இருக்கின்றவனுக்குப் படுப்பதற்கு, தோலோ, பாயோ எதுவிருக்கிறதோ அதனை விரைவில் கொடுங்கள். அவன் எங்களுக்கும் பிறருக்கும் வாரிக் கொடுத்தவன் என்று இன்னொரு பாடல் கூறுகிறது.[173] இனக்குழுத் தலைவனின் தோற்றமும், செயலும், ஆற்றலும் சில பாடல்களில்

விளக்கப்பட்டுள்ளது. நிரை கவர்தல் அவன் தலைமைப்பண்பாகக் கருதப்பட்டது. பிறரும் நிரை கவரத் துணைப் போயினர்.

ஒரு தலைவன் குச்சுப்புல் நிரைதாற் போன்ற நிறமுள்ள தாடியை உடையவன். அவன் ஊரை விட்டுப் பெரிதும் நீங்காதவன். தனக்கு அரணாகக் காட்டைக் கைக்கொண்டதும் இலன். ஆயினும், விரைவில் பகைவர் நிரையைக் கவர்ந்து வரும் ஆற்றல் பெற்றிருந்தான்.[174] இனக்குழுத் தலைவன், சீறூர் மன்னன், சிறுகுடிக்கிழான், சீறூர் வண்மையோன்[175] எனப் பாராட்டப் பெற்றான். இவன் கூட்டுழைப்பிலிருந்து விலகி, பிறர் உழைப்பில் வாழ்ந்தவன் அல்லன். இனக்குழுத் தலைவன் தேவை நேரும்பொழுதுதான். தலைமைப் பொறுப்பில் செயல்பட்டான். பிற காலங்களில் அவனும் பிறரைப் போல அக்குழுவின் ஒரு எளிய உறுப்பினனைப் போலவே நடந்து கொண்டான். இந்தச் சமுதாய உறவுகளைப் புரிந்து கொண்டால் மட்டுமே சிலவற்றின் முழுப்பொருளையும் உணர்ந்து கொள்ள முடியும்.

ஒரு தலைவன், நிரை கவரச் செல்லுமுன், கள் விற்பவளிடம் கள் கேட்டான். பழைய கடன் இருந்ததால் அவள் அவனுக்குக் கள் தர மறுத்து விட்டாள். அவனும் எதுவும் சொல்லாமல், நிரை கவர்ந்து வந்து அவளுக்குக் கொடுக்க வேண்டிய கடனுக்காகச் சில பசுக்களைக் கொடுத்தான். இன்னொரு தலைவனுக்குக் கள் விற்பவள், கள் தர மறுத்து விட்டாள். அவன் தன் மகனை அனுப்பி வீட்டிலுள்ள யானைத் தந்தத்தை எடுத்து வரச் செய்து அவளிடம் கொடுத்தான். பின்னர் அவள் தந்த கள்ளை அருந்திவிட்டுச் சென்றான்.[176] இனக்குழுச் சமுதாயத்தில் கள் விற்பவளும், தலைவனும் வேறுபாடற்ற நிலையில் வாழ்ந்ததை இச்சான்றுகள் காட்டுகின்றன. நுணுக்கமாக எண்ணிப் பார்க்கும் பொழுது மானுட வளர்ச்சி நிலையையும், காலச் சூழ்நிலை மாற்றங்களையும் நோக்கும் பொழுதும் இங்ஙனம் செயல்பட்டு வந்த தலைமையின் வாயிலாகவே காலப்போக்கில் அரசர்கள் உருவாகி இருக்கின்றனர் என்பது தெரிய

வருகிறது. இனக்குழு முன்னேற்றம், பொருளாதார வளர்ச்சி, ஒவ்வொரு இனக்குழு வாழ்விட நிலப்பரப்பின் அதிகரிப்பு போன்றவை அரசமுறை உருவாக ஏதுவாயிருந்தது.

புதிய கற்காலம் அரசமுறை தோன்றுவதற்கு வித்திட்டது எனலாம். தமிழில் கோன், கோ என்னும் சொற்கள் அரசனைக் குறிப்பனவாகும். இச்சொற்கள் ஆயர்களையும் சுட்டும். அரசன் தன் காவற் கடமையின் சின்னமாகச் செங்கோலைத் தாங்கியுள்ளான். ஆயனும் கையில் கோலை வைத்துள்ளான். எனவே, முல்லை நிலத்தில்தான் முதன்முதலில் அரசமுறை தோன்றியிருக்க வேண்டுமென்று அறிஞர் பி.தி.சீனிவாசு ஐயங்கார் அவர்கள் தம் தமிழர் வரலாறு என்னும் நூலில் குறித்துள்ளார்கள்.[177] வலிமையுள்ள ஓர் ஆயன் இன்னொரு கூட்டத்தார்க்குரிய கால்நடைகளைக் கவரத் தன் கூட்டத்தாரை ஏவியிருப்பான். இதனால் ஏற்பட்ட போரில் இரு திறத்தாரும் தத்தம் தலைவர்களைத் தேர்ந்தெடுத்திருப்பர். போர் என்பது தவிர்க்க முடியாத ஒரு நிகழ்ச்சியென்றும், ஒருவனை ஒருவன் அடுதலும், தொலைதலும் உலகத்து இயற்கையென்றும் கருதினர்.

"ஒருவரை ஒருவர் அடுதலும் தொலைதலும்
புதுவதன்று உலகத்து இயற்கை"[178]

போரில் வெற்றி பெற்ற கூட்டத்தின் தலைவன் "கோன்" ஆகியிருப்பான். அவனே அமைதிக் காலத்திலும் கூட்டத்தின் தலைவனாகியிருப்பான். எனவே, "கோன்மை" நிறுவப்பட்டிருக்கும் இங்ஙனம் கருதுவது சரியாகத் தோன்றினாலும், குறிஞ்சி, மருதம் முதலிய பகுதிகளிலும் இங்ஙனமே தலைமை உருவாகியிருக்க இடம் உண்டு. மலைப் பகுதியில் வேட்டைக்காரர்கள் தமக்குள் வலிமை உடைய ஒருவனைத் தலைவனாகத் தேர்ந்தெடுத்திருத்தலும் நடந்து இருக்கக் கூடியதே, சேர நாட்டு வேந்தர்கள் வில்லைத் தம் சின்னமாகக் கொண்டிருத்தலின் அங்கே வேட்டுவர்களிலிருந்து அரசு உருவாகியிருக்கலாம் என முனைவர் சுப்பிரமணியம் அவர்கள் கருதுவார்கள்.[179] ஆயர்களைப் போலவே

வேடுவர்களும் தம் கையில் கோலைக் (அம்பு) கொண்டுள்ளதனையும் காணலாம். வளம் மிகுந்த ஆற்றுப்பாய்ச்சலுள்ள இடங்களைப் போர்ப்பண்பு மிக்க மலை நிலத்தவரும், காட்டு நிலத்தவரும் கைப்பற்றிய பின்னர் அங்கும் அரசமுறை பரவி இருக்கலாம் என அவரே கருதுகின்றார்.

நாளடைவில் ஏனைய நிலத்தவரினும் மருத நிலத்தவர் முன்னேறிப் பேரரசர்களாக ஆகியிருக்க இடமுண்டு. எது எவ்வாறாயினும் சிறு சிறு கூட்டங்களாக வாழ்ந்த பண்டைத் தமிழரிடையே தம்முடைய பாதுகாப்பிற்காக ஏற்பட்ட குழுத் தலைமையிலிருந்தே அரசமுறை தோன்றியிருக்க வேண்டும் எனக் கருதுவது பொருத்தமாகும். அரசுமுறை சமூக முன்னேற்றத்திற்கு வழிவகுத்துக் கொண்டது. இதுவரையிலும் நிலவி வந்த பகுத்துண்டு வாழும் வாழ்க்கை முறை மாற்றம் பேற்று பண்டமாற்று முறை சமூகத்தில் நிலவத் தொடங்கியது.

**உலோகக் காலம்:**

மனிதர்களின் அறிவு வளர்ச்சியால் உலோகங்கள் கண்டுபிடிக்கப் -பட்டு அதனைக்கொண்டு கருவிகள் செய்து பயன்படுத்திய காலமே உலோகக் காலமாகும். காடுகளை அழிக்க இரும்புக் கோடாரிகளும், வேளாண் தொழிலுக்கு பயன்படும் கலப்பைகளில் இரும்புக் கொழுவும், இக்காலத்தில் புலக்கத்தில் இருந்தன. காடுகளை அழித்து விளைநிலமாக மாற்றும் பணி இக்காலத்தில் வெகுவிரைவாக நடைபெற்றது. இதற்கு இரும்புக் கருவிகள் பேறுதவி புரிந்தன.

"காடு கொன்று நாடு ஆக்கி.
குளம் தொட்டு வளம் பெருக்கி,
பிறங்கு நிலை மாடத்து உறந்தை போக்கி,
கோயிலொடு குடி நிறீஇ
வாயிலொடு புழை அமைத்து,
ஞாயில் தொறும் புதை நிறீஇ,"[180]

உலோகக் காலத்தில் காடுகளை அளித்து நாடு ஆக்கியமையும், விளைநிலங்கள் உருவாக்கியமையும் மாட மாளிகைகள் போன்றவை உருவானமையும் இப்பாடல் கொண்டு உய்த்துணரலாம்.

இந்த உலோகக் காலத்தில் தச்சுத் தொழில் வளர்ச்சியடைந்தது. கொல்லு, நெசவு, படகு கட்டுதல் போன்ற வேலைகள் தோன்றின. தச்சர்கள் மக்கட்கு வேண்டிய தட்டுமுட்டுச் சாமான்களை செய்து கொடுத்தனர். அரசர்கள் பயன்படுத்தும் தேர் முதல் சாமானியர்கள் பயன்படுத்தும் பொருள்கள் வரை இவர்களால் உருவாக்கி தரப்பட்டது.[181]

உமணர்கள் வளர்த்த குரங்குக் குட்டிக்கு உளியால் குடைந்து செய்த மரத்தாலான மணிமாலை உட்பட பலபொருள்கள் இவர்களால் செய்து கொடுக்கப்பட்டன.[182] தமிழர் உலோகத் தொழிலில் மிகவும் மேம்பட்டிருந்தனர். இரும்புசெய் கொல்லரும், பொன் செய்க்கொல்லரும் தனித்தனியே பேசப்படுகின்றார்கள். கொல்லர்கள் இரும்பைக் காய்ச்சிச் சம்மட்டியால் அடித்தனர்.

"கருங்கைக் கொல்லன் இரும்பு விசைத்து - எறிந்த
கூடத் திண்ணிசை."[183]

நெசவுத் தொழிலில் பண்பட்ட பழம்பேரினங்களில் தமிழினம் தலையாயது.[184] உலோகக் காலத்தில் தொழில் துறைகள் வளர்ச்சியடைவதற்கு உண்டான சூழலும் மனிதர்களிடையே அறிவு வளர்ச்சியும் மிகுந்திருந்தது எனலாம். இதனாலேயே கால்வாய் வெட்டுதல் குளம் வெட்டுதல் ஆகிய தொழில்கள் வளர்ந்தன.

"நிலனெளி மருங்கின் நீர்நிலை பெருகத்
தட்டோ ரம்ம இவண் தட்டோரே
தள்ளா தோரிவண் தள்ளா தோரே"[185]

பாண்டிய நெடுஞ்செழியனிடம் குடபுலவியனார், உணவின் இன்றியமையாமை யையும் அதனை விளைவிக்க நீர்நிலைகளைப் பெருக்க வேண்டிய கடமையையும் கூறுவதைக் காணும்பொழுது இவ்வாறே

உலோகக் காலத்திலும் நீர்நிலைகள் உருவாக்கப்பட்டிருந்தன என்பதும் அதற்கு அரசர்கள் முன்னுரிமை கொடுத்திருக்கின்றனர் என்பதும் புலனாகிறது.

தொழில் துறையிலும் வேளாண்மை உத்திகளிலும் பெரிய மாறுதல்கள் ஏற்பட்டன.சமுதாயம் இக்கைவினைஞர்களைக் காப்பாற்றியது. இதற்கு உபரி உற்பத்தி அதிகம் தேவையாயிற்று. இது உழைப்புச் சக்தியை அதிகப்படி வேலை வாங்குதலாயிற்று. இந்நிலை நகர வளர்ச்சிக்கு வழி செய்தது. இவற்றின் இணைப்புச் சக்தியாக அரசு விளங்கியது. புரோகிதர் இந்நிலையை நிலைநாட்டக் காரணம் ஆயினர் உபரி, வணிகரைத் தோற்றுவித்து, ஆயுதங்களையும், கருவிகளையும் படைப்பதில் அசாதாரணமான திறமை. தற்காலிக வேலைப் பிரிவினைக்கும், கொண்டு சென்றிருக்கலாம். அவர்கள் சமூகத்துக்காக வேலை செய்தார்கள். கைத் தொழில்களைக் குறிப்பிட்ட கூட்டுக் கிளையினர். பரம்பரையாகப் பேணி வந்தனர். நாளடைவில் அவை, தனிப்பயிற்சி அடைந்த, தொழில்களாக வளர்ச்சி அடைந்தன. இம்மாதிரியே ஆடல், பாடல், இசைக் கருவிகளை இயக்கும் ஆற்றல் ஆகியவற்றில் அசாதாரணத் திறமையை வளர்த்துக் கொண்டு பாணன்,பறையன், துடியன், பொருநன், கூத்தன் விறலி போன்ற கலைஞர்களும் கூட்டுக் கிளைகளாகத் தோன்றினர்.

**சங்க காலம்:**

சங்க காலம் என்பது சங்க இலக்கியம் இயற்றப் பெற்ற காலமாகும்; சங்க இலக்கியமென்பது பாண்டிய மன்னரால் சங்கம் போற்றப்பெற்ற காலத்தில் இயற்றப்பட்ட செய்யுட்களின் தொகுதி. இவை அக்காலச் சமூக அரசியல் வாழ்க்கை நிலைகளை எடுத்துரைக்கின்றன. அவற்றை ஆக்கியவர்கள் சங்கத்தைச் சார்ந்த அல்லது அவர்கள் காலத்தவரான புலவர்கள். சங்கம் எப்பொழுது திகழ்ந்தது என்பதைக் குறிப்பாக வரையறுத்த முறையில் கூறுவது கடினம். ஆயினும் அத்தகைய இலக்கியம்

இயற்றப்பட்ட அவ்விலக்கியத்தில் கண்ட அரசியல் சமூக வாழ்க்கை நடந்த காலத்தின் அகன்ற வரையறைகளை எடுத்துக் கூறுதல் இயலாததன்று.

'மேனாட்டு அறிஞர்களின் பொதுவான கருத்து கி.பி. 9 ம் நூற்றாண்டுக்கு முற்பட்ட தமிழிலக்கியமே இல்லை என்பது.[186] ஆனால் தமிழர் இலக்கியத்தில் ஆக்கத்திறனும், செம்மையும் சான்றவை யாவையும் 9 ஆம் நூற்றாண்டுக்கு முன்பே இயற்றப்பட்டுவிட்டன என்பதே உண்மையென்று காண்கின்றது. மிகப் பழைய நூல்களிற் சில ஐயமின்றி 2000 ஆண்டுகட்கு முன்பே இயற்றப் பெற்றுவிட்டன' என்று வி.கனகசபை கூறுகின்றார்.[187]

'மிகச் சிறந்த தமிழ்ப்பாக்கள் முந்திய காலத்தவை என்று கருதும் அறிஞர்கள் கருத்து ஏற்றுக் கொள்ளத்தக்கதே: அன்றியும் தமிழிலக்கியத்தின் அகஸ்த காலம் (பொற்காலம்) கிருத்து ஆண்டு முதல் மூன்று நூற்றாண்டுகளில் அமைதல் வேண்டும்.' என்று வி.ஏ. ஸ்மித் கூறுகின்றார்.[188]

'சங்க காலம் கிருத்து ஆண்டு தொடக்க நூற்றாண்டுகளில் அமையும் என்று நாம் கருதவே வேண்டும்' என க.அ. நீலகண்ட சாஸ்திரி கூறுகின்றார்.[189] மேலும் 'தமிழக வரலாற்றின் நன்கு விளக்க முறும் முதற்காலம் கி.பி. முதல் மூன்று அல்லது நான்கு நூற்றாண்டுகளைச் சேர்நத சங்க இலக்கியத்தில் காணப்படுவதே. அதுவே இப்பொழுது கிடைக்கும் தமிழிலக்கியத்தின் மிகப் பழைய அடிப்படை என்றும் அவர் கூறுகிறார்.'[190]

வி.ஆர். இராமச்சந்திர தீட்சிதர் சங்கத்தின்[191] தொடக்கத்தை கி.மு. 5ம் நூற்றாண்டாகவும் சங்கக் கல்வியின் முடிவை கி.பி.5 ம் நூற்றாண்டாகவும் கொள்ளுவார்.[192]

கே.ஆர். சீனிவாச ஐயங்கார், தீட்சிதர் கூறியதையே திரும்பக் கூறுவாராய் மூன்று சங்கங்கள் இருந்த காலம் ஏறத்தாழ 1000 ஆண்டுகள் என்று கொள்வது அறிவுடைத்து என்று தோன்றுகிறது என்பார். கி.மு. 500ரையும் கி.பி. 500ரையும் சங்க காலத்தில் இரு கோடுகளாக அமைத்தால்

நாம் தவறி விடமாட்டோம்.[193] ஆதலால் சங்க காலம் என்பது கிருத்து ஆண்டிற்குச் சில நூற்றாண்டுகள் முன்னாகவும், பின்னாகவும் உள்ள காலத்தைக் குறிக்கும் என்று தென்னிந்திய வரலாற்றாளர்கள் ஒப்புகிறார்கள் என்பது தெளிவு. இப்பொழுது நமக்குக் கிடைக்கும் மிக ஆதிகாலத் தமிழ் நூல்களிற் சில கி.பி. முதல் இரண்டு அல்லது மூன்று நூற்றாண்டுகளைச் சேர்ந்தவை என்பது தெளிவு. இவ்வாறு கூறுவது எளிதாயினும், சங்க காலத்திற்கு இக்கால வரையறையை நாம் ஏன் நிர்ணயிக்கிறோம் என்பதையும் நமது கருத்துப்படி சங்க இலக்கியம் என்பது எவ்வெவ் நுல்களை அடக்கியது என்பதையும் மிகுதியான தகவல்களோடு காண வேண்டும்.

சங்க காலத்தைக் கிருத்து ஆண்டுத் தொடக்க நூற்றாண்டுகளாக ஏற்றுக் கொள்ள நம்மை வற்புறுத்தும் காரணங்கள் யாவை என்பது எளிதில் புலப்படும். சங்கத் தொகைகளில் அடக்கிய பல பாடல்களும் சிலப்பதிகாரம், மணிமேகலை ஆகிய இரு காப்பியங்களும் விளக்கும் சமூகம், கிருத்து ஆண்டு தொடக்க நூற்றாண்டுகளைச் சேர்ந்த கிரேக்க - ரோமானிய ஆசிரியர்களான டாலமி, மூத்த பிளினி, ஸ்ட்ராபோ, பெரிப்ளுஸ் ஆசிரியர் ஆகியோர் குறிப்புகளால் விளக்கமுறும் சமூகத்தின் பொதுப் பண்புகளையே எடுத்துக் கூறுகின்றன.

இவ்வாசிரியர்களுக்கு மூன்று நூற்றாண்டுகளுக்கும் முன்பு மெகஸ்தனிஸ் பாண்டிய அரசைக் குறிப்பிட்டுப் பாண்டிய அரசிக்கு அவள் குடிகள் நிரலே மரபுப்படி வரி செலுத்தும் முறையை எடுத்துக் காட்டியுமிருக்கிறார். இப்பிற்கூறிய வழக்கம் சிலப்பதிகாரத்தால் வலியுறுகின்றது.[194] ஆகையால் மௌரியர் காலம் தொடங்கி (கி.மு.4ம் நூற்றாண்டு) பல்லவர் காலந் தொடக்கம் வரை (கி.பி. 6ம் நூற்றாண்டு) உள்ள நூற்றாண்டுகள் தொடர்ச்சியான ஒருவகைச் சமுதாயப் பண்பாட்டைக் கண்டன. அக்கால அளவில் அப்பண்பாடு புரட்சிகரமானதொரு மாறுபாட்டையும் அடையவில்லை. கிருத்து ஆண்டு

தொடக்க நூற்றாண்டுகளில் வாழ்ந்த உரோமாணிய எழுத்தாளர் தமிழகத்தைப் பற்றிக் காட்டிய அக்கறை உரோமானியப் பேரரசையும் தமிழகத்தையும் பிணைத்த வாணிபச் செயற்பாடுகளால் புகுத்தப்பெற்றது. அவர்கள் தமிழகத்தைத் 'தமரிகே' என்று அறிந்தனர். இவ்வாணிபம் மேலும் மேலும் தழைத்தது. அதனால் தமிழகத்துக் கைத்தொழில்கள் மலிந்த இடங்களும் உரோமானியச் சந்தைகளும் உரோமானியக் கைத்தொழிற் தானங்களும் தமிழ் நாட்டுச் சந்தைகளும் உறவு பூண்டன.

இவற்றின் விளைவான ரோமாணிய - தமிழக வாணிப உறவுகள் என்பவையெல்லாம் தெளிவாகவும், பலகாலும் சங்க இலக்கியம் என்று மரபு வாயிலாக கூறப் பெறும் இலக்கியத்தில் கண்டவை. இவ்விலக்கியம் பாண்டிய மன்னர்களால் ஆதரிக்கப் பெற்ற மதுரை இலக்கியச் சங்கத்தால் உருவாக்கப்பட்டது. கி.பி.6ஆம் நூற்றாண்டளவிலேனும் பல்லவர்கள் தென்னிந்தியாவில் மிக முக்கியமான நிலையிலிருந்தனர். சங்க இலக்கியங்களில் இப்பல்லவர்களைப் பற்றியாதொரு குறிப்புமின்மை தொகைகளும் காப்பியங்களும் பல்லவர்க்கு முற்பட்ட காலத்தைச் சேர்ந்தவை என்பதற்கு மற்றுமொரு சான்றாகும்.

சிம்மவிஷ்ணுவிற்கு (ஏ. கி.பி. 574-600)ஒன்றிரண்டு நூற்றாண்டுகட்கு முன்பே பண்டைய தமிழ் அரசுகளைக் களப்பிரர் கவிழ்த்து விட்டனர் என்பது யாவரும் அறிந்ததேயாகும். ஆதலால் கி.பி.4 ம் நூற்றாண்டுக்கு முந்திய காலத்தைச் சங்க காலம் என்று நாம் கொள்ள வேண்டியிருக்கிறது. ஆதலால் கிருத்து ஆண்டு முதல் மூன்று நூற்றாண்டுக் காலத்தைச் சங்க நூல்களுக்கு ஏற்றுதல் என்னும் யாவரும் மேற்கண்ட முடிவு தவிர்க்க முடியாததென்று காண்கின்றது.

சங்க இலக்கியமென்றால் நாம் எதைக் குறிக்கிறோம் என்று நிர்ணயிப்பதில் ஓர் இடர்பாடு தோன்றுகிறது. மரபுப்படி எட்டுத்தொகை, பத்துப்பாட்டு, பதினெண்கீழ்க்கணக்கு, சிலப்பதிகாரம், மணிமேகலை ஆகிய காப்பியங்கள், இலக்கணப் பெருநூலான தொல்காப்பியம்

என்பவற்றைச் சங்க இலக்கியமென்று கருதி வந்துள்ளனர். இம்மரபு இறையனார் அகப்பொருள் உரையிலிருந்துத் தொடங்குகிறது.[195] பிற்காலத்து எழுந்த புலவர்கள், உரையாசிரியர்கள் ஆய்வாளர்கள் என்போர் யாவரும் இம்மரபுச் செய்தியை முற்றிலும் ஏற்றுக் கொண்டமையே அச்செய்திக்கு ஓரளவு சான்றாக அமையும்.

கோவலன், கண்ணகியின் தீயிறுதிக் கதையைக் கூறும் காப்பியமான சிலப்பதிகாரம், சேரன் செங்குட்டுவன் நிறுவிய பத்தினிக் கடவுள் வழிபாட்டைக் காண, சிங்கள மன்னனான கயவாகு வந்திருந்த செய்தியைக் கூறுகின்றது.[196] சிங்கள ஆராய்ச்சிக் குறிப்புக்கள் இரண்டு கயவாகுகளைப் பற்றிப் பேசுகின்றன என்பதைக் கலைக்களஞ்சியம் காட்டுகிறது.[197] அவர்கள் கி.பி.2ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த ஒருவனும், கி.பி.12ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த மற்றொருவனும் ஆவர். சிலப்பதிகாரம் போன்ற தன்மையும், நடையும் உள்ள ஒரு நூல் கி.பி.12ஆம் நூற்றாண்டில் எழுதியிருக்க முடியாது. ஆகையால் அந்நூற்றாண்டில் செங்குட்டுவன் போன்ற சேரமன்னன் ஒருவனும் ஆளவில்லையாகையால் அக்குறிப்புக்கள் முந்திய கயவாகுவையே குறிக்கின்றன என்னும் தவிர்க்க முடியாத முடிவிற்கு நாம் வருகின்றோம். ஆதலால் செங்குட்டுவன் கி.பி.2ஆம்நூற்றறாண்டைச் சேர்ந்தவனாகிறான். "கெய்கர் முதற் கயவாகுவின் ஆட்சிக் காலத்தை கி.பி. 173-191 வரை அமைந்துள்ளமை உண்மைக்கு மிகவும் நெருங்கியது என்று கொள்ளலாம்"[198] என்று வி.ஏ. ஸமித் கூறுகின்றார். அஃதவ்வாறாயின் செங்குட்டுவன் கி.பி.2ஆம் நூற்றாண்டின் முற்பகுதியைச் சேர்ந்தவன்; ஆதலால், செங்குட்டுவன் தம்பியாகிய இளங்கோ இயற்றிய சிலப்பதிகாரம் கி.பி. 2ஆம் நூற்றாண்டுடையது. சிலப்பதிகாரப் பதிகத்தில்[199] சமகாலத்தவராகக் கூறப்படும் சாத்தனாரால் இயற்றப்பட்ட மணிமேகலையும், அக்காலத்ததே. ஆகையால் கயவாகு செங்குட்டுவன் கால ஒற்றுமை தமிழ் வரலாற்று கால வரையறைக்கு ஒரு ஊன்றுகோலாக அமைகின்றது.

"நீண்ட காப்பியங்களான சிலப்பதிகாரமும், மணிமேகலையும் சங்க காலத்திற்குப் பிற்பட்டவை என்பது யாவரும் ஏற்றுக் கொண்ட கருத்து"[200]. என்று க.அ. நீலகண்ட சாஸ்திரி கூறுகின்றார். திண்ணகரின் (Dignga) நியாயப் பிரவேசத்தில் கண்ட தத்துவக் கூறுகள் மணிமேகலை 29ஆம் காதையுள்ளும்[201] காணப் பெறுகின்றன என்னும் காரணத்தால், மணிமேகலையை மிகப் பிற்காலத்தில் (கி.பி. 6 ஆம் நூற்றாண்டிற்கும் பிறகு) அமைப்பர். ஆயினும் நீலகண்ட சாஸ்திரியே ஒப்புக் கொள்கிறார்; "அக்காதையில் உள்ள தத்துவக் கூறுகளைக் கூர்ந்து ஆராய்வார்க்கு அதன் கண் சில உண்மையான பழைய கோட்பாடுகள் காணப்படுதல் புலனாகும்". ஆகையால் கி.பி. 6ஆம் நூற்றாண்டைப் போன்ற ஒரு பிற்காலத்தை அந்நூலுக்கு ஏற்றுதல் இயலாது. ஆயினும் மணிமேகலை ஆசிரியர் முற்கூறிய (அவர் கேட்டறிந்து பரப்பிய) ஒரு தத்துவக் கூறினைப் பிற்காலத்தில்தின்னகர் எடுத்தாண்டிருக்கக் கூடும் என்னும் கருத்து அறிஞருக்குத் தட்டுப்பாடமை வியப்பிற்குரியதே. ஆகையால் அவ்வொரு காரணத்தால் மணிமேகலைக்கு அவ்வளவு பிற்காலத்தை ஏற்றுதல் இயலாது. 29 - ம் காதை பிற்காலத்தாரால் திருத்தி அமைக்கப்பட்டுள்ளமைக்குச் சான்றுகள் உள்ளன[202] என்று கூறுவதாலேயே நீலகண்ட சாஸ்திரி மணிமேகலைக்கு ஒரு முற்காலத்தையே ஏற்றுகிறார் என்று கொள்ளலாம். "இளங்கோ என்பார் ஒரு பிற்கால ஆசிரியர். அவர் இளங்கோவடிகள் என்று பெயர் கொண்டு ஒரு புனைக்கதைக் காப்பியத்தை இயற்றினார். கரிகாலன், செங்குட்டுவன், நெடுஞ்செழியன் என்போர் சமயகாலத்தவரல்லர்"[203] என்று சிலப்பதிகாரத்தைப் பற்றி கூறப்படுகின்றது.

இம்மூவேந்தரும் சமயக்காலத்தவரல்லர் என்பதற்கு சான்றில்லை. இளங்கோவடிகள் என்பது புனைப்பெயர் என்று ஏன் கருதப்பட வேண்டும் என்பதும் நமக்குப் புரியவில்லை. சிலப்பதிகாரத்தில் கண்ட வானியல் குறிப்புகளைக் கொண்டு எல்.டி.சாமிக்கண்ணுப்பிள்ளையும், வி.ஆர்.இராமச்சந்திர தீட்சிதரும் மிக வேறுபட்ட முடிவுகளுக்கு வந்துள்ளனர். ஆதலால், அக்குறிப்புக்கள் போதுமானவையல்ல பல

முடிவுகளைத் தரக் கூடியவை. அக்காரணத்தால் மேற்கொள்ளத்தக்கவையல்ல. செங்குட்டுவனால் மிகவும் ஆதரிக்கப் பெற்ற பரணர் அம்மன்னனைப் புகழ்ந்துள்ள பாடல்களில்[204] இமய வெற்றியைப் பற்றியோ, ஆரியர் தோல்வியைப் பற்றியோ, கண்ணகி வரலாற்றையோ கூறவில்லை என்பது மற்றொரு காரணமாகக் காட்டப் பெறுகின்றது உண்மையே ; ஆயினும் பதிற்றுப் பத்தின் ஐந்தாம் பத்தின் பதிகம் "கடவுட் பத்தினிக்கற்கோள் வேண்டிக் கானவில் கானம் கணையிற் போகி ஆரிய அண்ணலை வீட்டிப் பேரிசை இன்பலருவிக் கங்கை மண்ணி" ( பதிற் 5ம் பதிவபதிகம்) செய்தியை வெளிப்படையாகக் கூறுகின்றது. பரணர் இயற்றிய 5 ஆம் பத்து செங்குட்டுவனுடைய வட இந்தியப் படையெடுப்பிற்கு முன்னரே இயற்றப்பட்டதாதல் வேண்டும். திருமாவுண்ணி என்னும் கண்ணகியின் துயரங்களைப் பற்றிச் சங்கப் புலவர்கள் நன்கு அறிந்திருந்தனர் என்பது ஒரு நற்றிணைச் செய்யுளால்[205] தெரிய வருகின்றது.

அவ்விலக்கிய நூலின் நடையும், மொழி மரபும், பொருளும் ஒரு சேர அதன் பண்டைமைக்குத் தெளிவான சான்றாக அமைகின்றன. 'உள் உந்து ஆதலும் உரித்தே'(தொல், சொல் 292) என்ற இறந்துபட்ட விதி புறநானூற்றிற்குப் புறம்பாக வேறெந்த நூலிலும் காணப்படுவதில்லை. மணவினைச் சடங்குகளின் மாறுதலைக் குறிக்கும் தொல்காப்பியச் சூத்திரம் அந்நூலை கி.மு. முதல் அல்லது 2ஆம் நூற்றாண்டைச் சேர்ந்ததாகக் காட்டும். பனம்பாரனாரால் தொல்காப்பியப் பாயிரத்தில் ஐந்திரம்[206] குறிக்கப் பெறுவதால் அந்நூல் பாணினிக்கும் முற்பட்டதாதல் கூடும். எனின் அந்நூலைக் கிறித்துவிற்கு ஐந்து நூற்றாண்டுகள் முன்னதாகக் கொள்ள வேண்டும். அதன் நடையாலும், உட்பெறு பொருளாலும், இறந்துப்பட்ட இலக்கண விதிகளாலும், வற்புறுத்தி கூறப்படும் மரபுச் செய்திகளாலும் பிற சங்க இலக்கியங்களை விட மிகப் பழைய காலத்தைச் சேர்ந்த நூல் இத்தொல்காப்பியம் என்று நம்பாமல் இருக்க முடியவில்லை.

பதினெண் கீழ்க் கணக்கு நூல்களில் மிகச் சிறந்தது குறள். அவ்வாசிரியரின் வாழ்க்கையைப் பற்றி நமக்கு ஒன்றும் தெரியாது. ஆனால் குறள் 55 ஆம் பாடல் சிலப்பதிகாரத்துள்ளும், மணிமேகலையுள்ளும் எடுத்தாளப்பட்டுள்ளமையும்[207], புறநானூறு 34 ஆம் பாடல் குறள் 110 யே குறிக்கின்றது என்பதும், யாவரும் அறிந்தவை. குறளுக்கே உரித்தான 134 ஆம் குறட் கருத்து குறிஞ்சிப்பாட்டில் விவரிக்கப்படுகின்றது.[208] ஆதலால் குறள் 'ஐயமின்றிச் சங்கத்திற்குப் பிற்கால நூல்'[209] என்று கொள்ளுதல் எளிதன்று.

பதினெண்கீழ்க்கணக்கு நூல்கள் யாவற்றுக்குமே மிகப் பிற்காலத்தை ஏற்றுவோரில் தலையாயவர் எஸ். வையாபுரிப்பிள்ளை. தொல்காப்பியமும், இருகாப்பியங்களும் பதினெண்கீழ்க்கணக்கும் கி.பி. 6 ஆம் நூற்றாண்டுக்கு முற்பட்டவையல்ல என்று அவர் கருதுவார்.[210]

குறள், நாலடியார், இன்னா நாற்பது, இனியவை நாற்பது என்பவை அற நூல்கள்; பிற சங்க நூல்கள் அறநூல்களல்ல; ஆதலால் இக்கூறிய நூல்கள் சங்க காலத்தைச் சேராதவை என்று அவர் மேற்கொள்கிறார். ஆனால் புறநானூறு மற்றும் பிற தொகைகளும் அறநூல்களில் கண்ட கருத்துகளில் பலவற்றைக் கொண்டு இயங்குகின்றன; அக்கருத்துக்கள் சங்கத் தமிழர் அறியாதவையாகக் கருத முடியாது.

இன்னா நாற்பதை இயற்றியவர், குறிஞ்சிப் பாட்டையும், பதிற்றுப் பத்தின் ஏழாம் பத்தையும் இயற்றிய கபிலரல்லர் என்பார் எஸ். வையாபுரிப்பிள்ளை. ஏனெனில் பதிற்றுப்பத்துக்கபிலர் இறைச்சியையும், கள்ளையும் புகழ்கிறார். விரும்பி உட்கொள்கிறார். ஆனால் இன்னா நாற்பது ஆசிரியர் புலாலை மறுத்துக் கள்ளையும் நீக்குகிறார். இந்நிலையில் முரண்பாடு யாதொன்றும் இல்லை. ஏனெனில் கபிலர் ஒரு மரக்கறியுண்ணும் மாதவர். அவரே பதிற்றுப் பத்தில் புலால் உண்ணும் பாகனாக ஒரு நிலையை மேற்கொண்டு அப்புகழ்ச்சிப் பாடலை எழுதினார். சங்க காலப் புலவர்களுக்கு அங்ஙனம் செய்தல் இயல்பே.

எஸ்.வையாபுரிப்பிள்ளை மேலும் கூறுவர்; புறநானூற்றுப் பாடல்களை இயற்றிய பொய்கையார் களவழி நாற்பது ஆசிரியனின்றும் வேறுபட்டவர் என்று[211] இதற்கு அவர் கூறும் காரணம் ஒரே புலவர் சேர மன்னனையும்,[212] சோழ வேந்தனையும்[213] புகழ்ந்து பாடுகிறார் என்பதே. சங்க இலக்கியத்தை நன்குக் கற்றவர்கள் ஒரு புலவர் பல புரவலர்களைப் புகழ்ந்து பாடுதல் சாதாரண நிகழ்ச்சி என்பதை நன்கு அறிவர். மற்றும் களவழி நாற்பது ஆசிரியராகிய பொய்கையார் வைணவக் குரவரான பொய்கை யாழ்வாரே என்றும் குறிப்பிடப் படுகிறது. ஆனால் களவழி ஆசிரியர் வைணவக் குரவருக்கு முற்பட்டவர், அவரினின்றும் வேறுபட்டவர் என்பது தெளிவு. ஏனெனில் திருமாலடியார் தம் பெருமைக்கேற்பப் பொய்கையாழ்வார் மறந்தும் புறந்தொழாதவர்.[214] களவழிக் காரரோ சோழன் செங்கணான் என்னும் மன்னனை மிகைபடப் புகழ்கிறார். பொய்கையாழ்வாரின் வைணவ பக்தி சங்க காலத்திற்குப் பிற்கால நோக்கு. களவழி ஆசிரியரான பொய்கையார் ஐயமின்றிச் சங்கப் புலவரே.

நச்சினார்க்கினியாரும், பேராசிரியரும் பதினெண்கீழ்க்கணக்கு ஆசிரியர்களை "பிற் சான்றோர்" என்று கூறுவதாக எஸ். வையாபுரிப் பிள்ளை சொல்லுகிறார். அதாவது தொல்காப்பிய உரைகளில் கண்ட "பிறசான்றோர்" என்னும் பாடத்தைப் "பிற்சான்றோர்" என்று மாற்றிக் கொள்கிறார்.[215] பதினெண்கீழ்க்கணக்கும், சிலப்பதிகாரம், மணிமேகலை ஆகிய இரு காப்பியங்களும் பல்லவர் காலத்துக்கு முற்பட்டவை;அதாவது கிறித்து ஆண்டிற்குச் சில நூற்றாண்டுகள் முன்னும் பின்னுமானவை என்பது உறுதி. ஒரு கால் இக்காலத்துக்குச் சற்று முந்தியதாகத் தொல் காப்பியத்தைக் கொள்ளலாம்.

**அன்றாட வாழ்வியல்:**

தொல்காப்பியர் ஒரு நாளிற்குரிய ஆறு சிறுபொழுதுகளை மாலை, யாமம், வைகறை, விடியல், எற்பாடு, நண்பகல் என்ற வரிசையிற் கூறுவர்.[216] பகல், இரவு என்று இரு கூறாக விளங்கும் பொழுதுகளில் இரவை நடுநாள் என்றும், பானாள் என்றும் அரைநாள் என்றும் குறிக்கின்றனர்.[217] நாள் என்னும் சொல் பகற்கும் உரியதாக வழங்கியிருக்கிறது.[218] ஐங்குறுநூற்றில் "நடு நாட்கங்குல்" என்று குறிப்பது கொண்டு பகல் பன்னிரண்டு மணி முதல் இரவு பன்னிரண்டு மணி வரை அரை நாளாகவும், எஞ்சிய பகுதியை அரைநாளாகவும் அக்காலத்தவர் கணக்கிட்டனர் எனக் கருதுவார் டாக்டர் மா. இராசமாணிக்கனார்.[219]

ஒரு நாளின் காலைப் பொழுதிற்குரிய வினைகள் மதுரைக் காஞ்சியில் நன்கு கூறப்படுகின்றன. நாட் காலையில் பூக்களில் தாதுண்ணும் தும்பிகளைப் போல அந்தணர் வேதமோதுவர், யாழோர் மருதம் பண்ணுவர். குதிரை வீரர் கவளம் கொண்டு குதிரைகளை உண்பிப்பர். பண்ணியக் கடையினர் கடையை மெழுகுவர். கள் விற்போர் தம் வணிகம் தொடங்குவர். கணவர் முயக்கத்தில் மயங்கியிருந்த பெண்கள் இல்லப் பணிகள் குறித்து எழுவர். சூதர், மாகதர், வேதாளிகர் ஆகியோர் காலை எழுச்சிக்குரியன இசைப்பர், நாழிகை சொல்வார் தம் கடமை புரிவர், பள்ளியெழுச்சி முரசு ஒலிக்கும். பொறிமயிர் வாரணம் வைகறை இயம்பும். குருகும் அன்னமும் கரையும். அணிமயில் அகவும், பிடிபுணர் பெருங்களிறு முழங்கும். கூட்டில் உறையும் கரடியும், புலியும் குமுமும், செல்வ மகளிர் மதுவுண்டு கணவரோடு புலந்த நிலையில் முத்து வடங்கள் சிந்த எழுவர். வேந்தனோ ஏம வைகறைத் துயிலெழுந்து, நாட்காலைக் கடன் முடித்துத் தெய்வ வழிபாடியற்றிப் படைத் தலைவரும், பிறரும் வாழ்த்த அவைக்களம் புகுந்து படை மறவர்க்கும், களிறெறிந்த காளையர்க்கும், பெருஞ்செய் ஆடவர்க்கும், அறங்கூறவையத்தார்க்கும் வரவு கூறி எளியனாய், இருப்பன். பாணர் முதலான கலைஞர்க்கும், இரவலர்க்கும் தேரும் களிறுமாகப் பரிசில் நல்குவான். வளமனையில் ஊனுணவும், நெய் கமழும் பொரிக் கறிகளும்

சமைக்கப்படும். மதுரை மாநகரின் செல்வச் செழிப்பு மிக்க வளமனைகளிலும், அரண்மனையிலும் தோன்றும் காலைக் காட்சி இன்னது.[220]

"இன்றும் வருவது கொல்லோ நெருநலுங்
கொன்றது போலும் நிரப்பு"[221]

என்ற நிலையில் வாழ்ந்தவர்க்கும் காலை, நண்பகல், மாலை என்ற பாகுபாடின்றி நாள் கழிந்தது. "நெடுநீர்ப் புற்கை" (புறம் 64:7) என்று அவருண்ணும் வறிய கூழ் சொல்லப் பெறும். முளிதயிர் பிசைந்து குய்ப்புகை கமழ அட்ட தீம்புளிப்பாகர், புறவுக் கருவன்ன புன்புல வரகின் பாற் பெய் புன்கம் தேனொடு மயக்கிய கலவை, மலரா மாலைப் பந்து போலும் ஊன் சோற்றமலை, அமிழ்தன மரபின் ஊன்றுவை யடிசில், வெள்ளரிக்காயின் விதை யனைய நல்விளர் நறுநெய், பாலிற்பெய்தன, பாகிற்கொண்டன எனப் பற்பல உணவு வகைகள் காலையிலும் நண்பகலிலும் ஒரு மருங்கு உண்ணப்பட்டன.[222] மற்றோர் புறம்

"குப்பைக் கீரை கொய்கண் ணகைத்த
முற்றா இளந்தளிர் கொய்துகொண் டுப்பின்று
நீருலை யாக வேற்றி மோரின்
றவிழ்ப்பத மறந்து பாசடகு மிசைந்து"[223]

வாழ்ந்த வாழ்க்கையும் இருந்திருக்கிறது. "ஆடு நனி மறந்த கோடுயர் அடுப்பு" (புறம் 164:7) கொண்ட மக்களின் அன்றாட வாழ்க்கை உணவு தேடுவதிலேயே கழிந்திருக்கின்றது. "நள்ளிருள் விடியல் புள்ளெழ" உறக்கம் நீத்த ஆய்மகள் மோர் கடைந்து விற்கச் செல்கிறாள்.[224]

எருமை, பசு, ஆடு எனப்படும் மூவினத்தையும் மேய்க்கும் ஆயர் தம் தொழிலிற் செல்கின்றனர்.[225] குறிஞ்சிக் கானவர் வேட்டை மேற் செல்லக் கானவர் மகள் தினைப்புனங் காக்கும் கடமையாற்றுகின்றாள்.[226]

மருத நில உழவர் தம் தொழிற்குரிய ஏற்றினை ஆய்ந்து கழனிகளிற் புகுகின்றனர்.[227] யாமத்திலேயே மீன்வேட்டம் புரியப் பரதவர் கடல் மேற் செல்கின்றனர்.[228]

பகல் முழுவதும் நானிலத்தவரும் தத்தமக்குரிய வினைபுரிந்து வாழ்விற்குரிய பொருளை ஈட்டுவர். மாலைக்காலம் எல்லாரும் தத்தம் இல்லம் திரும்பி உண்ணவும் களிக்கவும் குடும்பத்தோடு உடனுறையவும் செய்வர்.

"பல்கதிர் மண்டிலங் கல்சேர்பு மறைய
மான்கண மரமுதற் றெவிட்ட வான்கணங்
கன்றுபயிர் குரல மன்றுநிறை புகுதர
வேங்குவயி ரிசைய கொடுவா யன்றி
லோங்கிரும் பெண்ணை யகமட லகவப்
பாம்புமணி யுமிழப் பல்வயிற் கோவல
ராம்பலந் தீங்குழற் றெள்விளி பயிற்ற
வாம்ப லாயிதழ் கூம்புவிட வளமனைப்
பூந்தொடி மகளிர் சுடர்தலைக் கொளுவி
யந்தி யந்தன ரயரக் கானவர்
விண்டோய் பணவை மிசைஞெகிழி பொத்த"[229]

மாலைக்காலம் வருவதாகக் குறிஞ்சிப்பாட்டு கூறும். இம் மாலைக் காலத்தே பல்வேறு புள்ளின் இசைக்குரல் போல ஒலிக்கும் அல்லங்காடி அமையும். மகளிர் கணவர் முயக்கம் விரும்பிச் சீறியாழ் இசைப்பர். போதவிழ் புதுமலர் தெருவுடன் கமழும். கண்டோர் நெஞ்சு நடுங்கச் செய்யும் கொண்டி மகளிராகிய பரத்தையர் யாழிசைக்கவும் முழவொலிக்கவும் ஆடுவர்.

இல்லிருக்கும் குடிப்பிறந்த மகளிர் யாழிற் செவ்வழி பண்ணுவர். பொருதலை விரும்பும் மறவர் கூடிய கள்ளின் தெளிவுண்டு வீதிகளில் திரிவர். ஒரு சார் தேவராட்டியும், ஒருசார் வேலனும் நிகழ்த்தும் வெறியாட்டு இடம்பெறும். இதன்பின் வருகின்ற இரவு தமிழர்க்கு வழிவழி உரிய பேய் அச்சத்தாலும், கள்வர் பொருளைக் கவர்வர் எனும் எண்ணத்தாலும் நடுக்குறுத்தும் பொழுதாகவே பலர்க்கு அமைகின்றது. நாய்கள் நடுங்கும் கடுமையான மழைக்கால இரவிலும் காவலர் யாமந் தோறும் மணி ஒலித்து, 'காப்புடை வாயில் போற்றோ' என முழங்குவர், இத்தகு இரவில் நூலேணி கொண்டு வளமனைகளில் அணிகலன்களைக் களவாட முயலும், கள்வரும் சுற்றம் பார்த்துத் திரிவர், களவுக் காதலியரைத் தேடிவரும் காதலர் ஊர்காவலர்க்கு அஞ்சுவர். இவ்வாறு பற்பலரும் அக்காலத்து நேரமறிந்து செய்த வினைகளாலும், நாழிகைக் கணக்கர், யாமங்கூறுவோர் ஆகியோர் பணியாலும், காலக் கூறுபட வாழ்வை நடத்தும் ஒரு முதிர்ந்த நாகரிகச் சிறப்புடைய சமுதாயம் பண்டைக் காலத் தமிழ்ச் சமுதாயம் என உணரலாம்.[230]

**சங்கக் கால மாறுபட வாழ்வியல் மாற்றங்கள்**

சங்கக் காலம் என்பது ஏறத்தாழ ஆயிரம் ஆண்டுக் கால நிகழ்வு என்பது முன்னமே நாம் கண்ட ஒன்றாகும். முதல் சங்கத்தின் தொடக்கக் காலத்திலிருந்து மூன்றாம் சங்கத்தின் இறுதி காலம் வரையிலான நிலையில் மனிதர்களின் வாழ்வு பல்வேறு மாற்றங்களை அடைந்து வந்துள்ளது இதனை அக்கால இலக்கியங்னள் தெளிவாக காட்டுகின்றன. இயற்கையின் அடிப்படையில் மக்களின் செய்தொழிலும், வாழ்வியல் நிகழ்ச்சிகளும் அமைந்தன. இவ்வியற்கைப் பகுப்பே வாழ்வை இயக்கியமையால் நிலத்தை தமிழ் இலக்கணிகள் முதற்பொருள் என்றனர்.

வாழும் நிலத்தையும், நிலத்தியற்கையும் புறக்கணியாது, இலக்கியத்தில் அவற்றைப் பதிவு செய்யுமாறு அமைந்தது பண்டைத் தமிழ் இலக்கணமாகும். கருப்பொருள்களாகிய விளைப்பொருள்களும்,

இயற்கைத் தட்பவெப்பமுமே ஒவ்வொரு நிலத்தின் பொருளாதார நிலையினையும், அதனையொட்டிய மக்களின் பழக்கவழக்கங்களையும் நல்வாழ்க்கை நிகழ்ச்சிகளையும் குறித்த வகையில் தீர்மானித்தன.

ஆற்றுப் படை நூல்கள் நில அடிப்படையிலான வாழ்வியல்புகளை அருமையாகக் காட்டுகின்றன. நள்ளிருள் விடியலில் ஆய்மகள் புலிக் குரல் மத்தங்கொண்டு தீந்தயிர் கலக்கிச் சுமட்டிற் கொண்டு நாள்மோர் மாறுவாள். ஆயன் கன்றமர் நிறையொடு கானத்திலிருந்து குழலும் யாழும் சமைத்து இசைப்பன். இது முல்லை நிலக் காட்சி. இக்காட்சியிடைச் சமுதாய நுண்குறிப்பொன்று உண்டு. தயிரும், மோரும், நெய்யுமாகிய பாற் பயன்களை ஆக்கும் ஆயமகள் அவற்றை விலைப்படுத்துவோளாகவும் மாறுகின்றாள். நிரை மேய்க்கும் ஆயன் இசைக்கருவி சமைக்கும் தொழில் வல்லனாகவும் பண்ணறிந்து இசைக்கும் கலைஞனாகவும் விளங்குகின்றான். இப்பல்வேறு ஆற்றல்கள் பிற்காலத்தே சிதறிப் போயின. அந்நிலையிலேயே ஆயன் வெறும் மேய்ப்புத் தொழிலனாகவும், வேறுவகை அறிவற்றவனாகவும் ஆகியிருக்கிறான். குடும்பப் பொருளாதாரம் ஆண், பெண் இருபாலராலும் உருவாக்கும் நிலையை இவ்வாழ்க்கை முறை நன்கு காட்டுகின்றது.

மண்ணின் இயல்பு மாறி ஆளில் அத்தமாகிய காடாகவும், ஊரில் வெளியாகிய சுரமாகவும் உருக் கொண்ட நிலையில் பிழைப்பு வேறின்றி வழிச் செல்வாரை அலைக்கும் ஆறலை கள்வராகின்றனர் கொடுவில் எயினர். எனினும் இவரும் முற்ற அருளுணர்ச்சி அற்றவரல்லர். பாலைப் பண்ணுக்கு உருகித் தம் இன்னாச் செயல் தவிரும் பண்பினர். குறிஞ்சியும் முல்லையும் கடுவேனிற் காலத்தே வளங்குன்றிச் சுடுமணற் பரப்பாகி வளந்தப்புதலும், ஆண்டுறைவோர் கொடியராதலும் ஓர் இடை நிகழ்வேயன்றி நிலையான மாறுபாடுகளல்ல என்பது சங்கப் பனுவல்களால் விளங்கும். மருத நில வைப்புகள் ஆண்டு முழுவதும் உழைப்பு வேண்டாத, இயற்கையுடையன. கரும்பும், நெல்லுமாகப் பரந்த கழனிகள் மருதநில மக்களைப் பசித்துயரின்றிப் பாதுகாக்கும் வளமுடையன.

"ஏணிஎய்தா நீணெடு மார்பின்

முகடு தூமித் தடுக்கிய பழம்பல் லுணவிற்

குமரி மூத்த கூடோங்கு நல்லில்....."[231]

என்றவாறு ஆண்டுதோறும் சேமிக்கப்படும் நெற்குவை குமரி மூத்தாற்போல யாரும் பயன் கொள்வாரின்றிப் பழம் பல்லுணவாகக் கிடக்கின்றது. சமூக அமைப்பில் பண்டமாற்றே பெருகிய வழக்குடையதாக அமைந்த கால நிலையில், தேவைக்குப் போக எஞ்சிய கூலத்தைச் செலவழிப்பதற்காகவே விழவும், கொடையும் நிகழ்ந்தன. பொருளைப் பொன்னாகவும், பணமாகவும் மாற்றிக் கொள்ளுதற்கு வாய்ப்பேற்பட்ட காலத்திலேயே கொடைப்பண்பு சுருங்கியது. வாழை, கமுகு, மஞ்சள், மா, பனை, சேம்பு, இஞ்சி என விளை பொருள் மலிந்த பழனஞ் சூழ்ந்த குடியிருப்புகளில் வாழும் ஆடவர், மிக்க உழைப்பு வேண்டாத நிலை அமைப்புக் காரணமாகவும், அறாத வருவாய் மிகுந்த செல்வ நிலை காரணமாகவும் பரத்தையர் நயந்தொழுகிய நயனில் வாழ்க்கையராயினர்.

நில உடைமைச் சமூகத்தின் இருவேறு தட்டுகளின் வாழ்க்கை முறை ஈண்டு எண்ணுதற்குரியது, உழுவித்துண்ணும் செல்வக்குடியினர், தம் செல்வச் செருக்காற் பெற்ற உடற்றினவாழும், உள வேட்கையாலும், ஆடலும், பாடலும் வல்ல கணிகையரைச் சேர அவரிடத்துப் பணி செய்யும் உழுதுண்ணும் எளியர் தம் முதலாளிகளைப் போல ஒழுகும் நெறிவிரும்பி தமக்கொத்த, பொருளாதாக் கீழ்த்தட்டில் காமப்பரத்தைமைக்குரியாரைக் கொண்டனர்.

பள்ளு... போன்ற பிற்கால நூல்களில் இவ்விரு வகையினரின் பரத்தைமையும் பேசப்பெறினும் சங்க இலக்கியங்கள் செல்வத் தகுதி மிக்காரின் பரத்தைமையினையே பேசக் காண்கிறோம். எளிய மக்கள் வாழ்க்கையையும் இலக்கியப் படுத்தும் கலித்தொகையிலும்,

தேரும், பாகனும் கொண்ட தலைமகனின் பரத்தைமையே பேசக் காணலாம்.[232] நிலப் பிரிவும், இயற்கையும் பண்பாட்டில் ஏற்படுத்திய ஆழமான வடுவாகும் இது. இந்நாளைய அரசியற் சூழ் நிலை அடிக்கடி நிகழும் போர் ஆகியவற்றால் ஆடவர் தொகையினும் மகளிர் தொகை மிகுவதற்கு வாய்ப்பிருந்தது. ஆடவர் தொகை குன்றியமையால் மிகுதியாக உள்ள மகளிரை மணக்கும் ஆடவரின்மையின் வரைவில் மகளிர் என்ற பிரிவு உண்டாயிற்று. மேலும், அக்காலத்தில் ஒருவனுக்கு ஒருத்தி என்ற கோட்பாடு ஏற்கப்பட்டிருந்தமையால் ஒருவன் ஒருத்தியை மட்டுமே மணஞ்செய்து கொண்டான். இதுவும் பரத்தை மகளிர் எனும் பிரிவு உண்டாகக் காரணமாயிற்று.

பிற நாட்டிலிருந்து கவர்ந்து வரப்பெற்ற மகளிர் பரத்தையாக்கப்படுவதுண்டு. இதற்குப் போர் நெறி வழிவகுத்தது. போர்வெற்றியின் பொழுது பொருள்களோடு பெண்களும் கவர்ந்து வரப்பெற்றனர் என்பதைப் பட்டினப்பாலையும், மகளிரை அடிமைப் படுத்திக் கொண்டு வரப்பட்டதை பதிற்றுப் பத்தின் பதிகமும் கூறக் காணலாம்.[233] சங்க காலத்தில் பெண்களுக்கு சொத்துரிமை மறுக்கப்பட்டதும், பரத்தமை நெறி தோன்றுவதற்கு ஒரு முக்கிய காரணமாக அமைந்தது எனலாம்.

போர்ச் சமூக அமைப்பின் பண்புகள் முற்றிலும் மாறிவிடாத சங்க காலத்தில் உயிரிழப்புகளும் குருதி வெள்ளமும், கண்ணீராறும் அரற்றும் கம்பலையும் நலத்தின் இயற்கைப் பண்புகளாயிருந்தன. நெய்தல் நிலப்பகுதியில் வாழ்வார் ஆழ்கடலோடிகளாய பரதவர். ஏனை நிலப்பகுதிகளை விட உயிரிழப்புகள் மிகுதியும் நேரற்குரிய வாழ்க்கை இந்நிலத்தவரது ஆகும். இத்திணைப் பாட்டில் இரக்கமும் அவலமும் மிக்கொலிக்கின்றமையினைக் கலித்தொகையில் சிறப்பாகக் காணமுடிகிறது.[234]

இப்பகுதியெல்லாம் கைய்று நிலை என்பது ஒருதலை பாட்டின் இறுதிப் பகுதியன்றிப் பிறவெல்லாம் கணவனை இழந்து புலம்பும் குறிப்பே புலப்படும். கழிபெரும் இரக்கமும், இடையூறு மிக்க வாழ்க்கைச் சூழலும் இந்நிலப் பரதவர்க்குரியதென்பதை ஏனை நூலினும் கலித்தொகை நன்கு காட்டுகின்றது.

சங்க காலம் பல நிலைகளில் கையறுநிலையாக அதாவது (துன்பம் நிறைந்ததாக) இருந்தது என்பதை நாம் ஒப்புக்கொள்ளத் தான் வேண்டும். இதற்கு காரணம் அன்றைய சமூகம் போர் நிறைந்த வீரயுகமாக திகழ்ந்ததே ஆகும். போர் என்ற ஒன்று தவிர்க்க முடியாத செயல்பாடாகும். சங்க நாளில் நிலம் மூன்று பேரரசர்களாலும் பல குறுநில மன்னர்களாலும் ஆளப்பட்டது. அவர்களுக்குள் ஓயாது போர்கள் நிகழ்ந்த வண்ணமிருந்தன. போர்கள் அடிக்கடி ஏற்பட்டதற்குப் பல காரணங்களைக் கூறலாம். மூன்று அரச மரபினரிடையே வழி வழியாக இருந்த பகைமை ஒரு காரணமாகும். அவரவரும் தத்தம் குடிப்பெருமையை நிலைநாட்டிட விரும்பினர். நாடுகளின் எல்லைகள் சரியாக வரையறுக்கப்படாமையால் நாடுகட்கிடைப்பட்ட பகுதிகள் தொடர்பான எல்லைப் போர்கள் தோன்ற வாய்ப்பிருந்தது. மண்ணாசையும், புகழ் பெற வேண்டுமென்ற ஆர்வமும் போரில் இறந்தவர்கட்கு வீர சுவர்கமுண்டு என்ற நம்பிக்கையும், பெரிய நாட்டை ஆள வேண்டுமென்ற பேராசையும், சில போதும் கட்கொடை மறுப்பும் போருக்குக் காரணமாயின எனலாம். பண்டைய கிரேக்கச் சமூகம் போலப் போர்ச் சமுதாயமாக விளங்கியது. சங்க காலம் போர்ச் சமூகமாகத் திகழ்ந்ததை சங்க இலக்கியம் காட்டுவதிலிருந்து அவ்விலக்கியத்தின் உண்மைத் தன்மையை அறியலாம்.

சங்க காலம் பொது மக்களிடையே பல மாற்றங்களை ஏற்படுத்தியது என்பதற்கு மேலும் ஒரு சான்றாக மணமுறையைக் கூறலாம் சங்க காலத்திற்கு மிக முற்பட்ட நிலையில் காதல் வாழ்வே சிறப்புற்றிருந்தது என்று துணியலாம். தமிழ்ச் சமுதாயம் முன்னேறாத காலத்தில் எத்தகைய

திருமண முறைகளும் இருந்திருக்க முடியாது. அப்பொழுது வயது வந்த ஆணும், பெண்ணும் தாமே கூடி குடும்பம் நடத்திருக்க வேண்டும். காதலில் ஈடுபட்டவர்கள் பின்னர் அதனை இல்லை என்று மறுதலித்த நிலை ஏற்பட்ட போது சான்றோர் கரண நிகழ்ச்சியை ஏற்படுத்தினர். தொல்காப்பியர் இத்தகைய நிலையைப் பின்வருமாறு சுட்டுகின்றார்.

"பொய்யும் வழுவும் தோன்றிய பின்னர்
ஐயர் யாத்தனர் கரணம் என்ப"[235]

சமூகம் ஒழுங்குற்றுப் பல்வேறு வரையறைகளை மேற்கொண்டனர் எனலாம். அகத்திணைச் செய்யுட்களைப் பயில்வார் அக்காலத் திருமணம் அனைத்தும் காதல் திருமணமே என்று மயங்க இட மேற்படும். ஆனால் அது பொருந்தாது. பெற்றோர்களே முயன்று முடித்து வைக்கும் திருமணமே அன்று பெருவழக்காக இருந்திருக்க வேண்டும். காதல் திருமணங்களும் ஓரளவு நடந்துள்ளன எனக் கருதலாம்.

சங்க காலத்தில் காதல் திருமணங்களுக்குப் பெருத்த எதிர்ப்பு இருந்தமையை அக்கால இலக்கியங்கள் வெளிப்படையாக எடுத்துரைக்கின்றன. அலர் (நற் 4) இற்செறிப்பு (அகம்.7) தாய்மேல் சீற்றம் (குறுந் 292) உடன்போக்கு (அகம் 383) மடலேறுதல் (குறுந் 17) இவையெல்லாம் காதல் திருமணத்திற்கு சமூகத்தார் மறுப்பு தெரிவித்ததாலேயே ஏற்பட்டன என்பதை எண்ணுவதற்கு உரியது. இச்சான்றுகளால் அன்று காதலுக்கு தடையிருந்ததையும், சமூதாயத்தில் எதிர்ப்பு இருந்ததையும் அறிகின்றோம்.

எனவே ஒத்த குலத்தார் தத்தம் தகுதி நோக்கி, உரிய இடத்தில் மணம் பேசி முடிப்பதே அன்றைய நடைமுறை வழக்கம் என்றும், காதல் சிறுவழக்கு என்பதையும் அறியலாம்.குலவேறுபாடோ, பொருளாதார ஏற்றத்தாழ்வோ பெற்றோர் சம்மதியாமைக்குக் காரணமாக இருந்திருக்கலாம் என்றும் உய்த்துணரலாம்.

சங்க கால மக்களின் வாழ்வியல் மாற்றங்களுக்கு ஒரு இன்றியமையாத காரணமாக வேற்றவர் வருகையைக் கூறலாம். இந்நாட்டின் பழைமையான குடியினரோடு வடநாட்டிலிருந்து வந்து குடியேறிய வைதிகப் பிராமணரும் கலந்து வாழ்ந்துள்ளனர். மேலும் வணிகத்தின் பொருட்டு இங்கே வந்து கடலோரப் பகுதிகளில் குடியேறிய யவனரும் இருந்தனர். இவர்கள் சிறுபான்மையினரே. சமணரும் பௌத்தரும் கி.மு. மூன்றாம் நூற்றாண்டில் இங்கு வந்ததாக அறிஞர்கள் கூறுகின்றனர். இவ்வாறு தமிழகத்திற்கு வேற்றவர் வருகையின் காரணமாக, பண்டைய தமிழரின் நாகரிகம், பண்பாடு கலாச்சரம் போன்றவற்றில் அன்றிய பழக்கவழக்கங்கள் கலப்புற்று பல மாற்றங்களை அடைந்தன. இவை சங்க இலக்கியம் பயில்வார்க்கு வெளிப்படையாக விலங்கும்.

**முடிவுரை:**

சங்கக் காலத் தமிழரின் பண்பாட்டை வெளிப்படுத்தும் காரணிகளாக உணவு, உடை, அணிகலன்கள், உறையுள், உள்ளிட்ட வாழ்வியல் ஆதாரங்கள் அமைந்திருந்தன. இவ்வாதாரங்களை மையமாகக் கொண்டே பண்டைத் தமிழரின் வாழ்க்கைப் போக்கு அமைந்திருந்தது. பண்டைத் தமிழர் தாம் வாழும் நிலப்பகுதியில் கிடைக்கும் பொருட்களை உணவாகப் பயன்படுத்தக் கற்றுக் கொண்டனர். மேலும் பண்டமாற்று முறையின் மூலம் பிற நிலப்பொருட்களையும் உணவாகப் பயன்படுத்தினர். இராசா அன்னம் என்ற உயர்ந்த நெல்லையும்,வெண்நெல்,செந்நெல் அரிசிச் சோற்றையும் உண்டனர் பசிய பொருட்களைச் சமைத்து உண்ணக் கற்றிருந்தனர். சுவை மிகுதியை அதிகப்படுத்த நெய் கருவேப்பிலைக் கொண்டு தாளிக்கும் பழக்கம் அன்று இருந்தது. மாவடு போன்ற பொருட்களில் ஊறுகாய் வைத்திருந்தனர். பன்றி, உடும்பு, முயல், கோழி, ஈசல் போன்ற ஊன் உணவையும் உட்கொண்டனர்.

சங்க காலத் தமிழர்கள் அவரவர் தகுதிக் கேற்ப உடையணிந்தனர். உடுப்பவை இரண்டே என்ற குறிப்பில் இடுப்பிலும், உடம்பிலுமாக இரண்டு துணிகளை அணிந்தனர் போலும் பாம்பின் சட்டை, மூங்கிலின் உட்புறத் தோல், புகை, பால் ஆவி போன்று அக்கால ஆடைகள் மெல்லியதாக அமைந்திருந்தன. பல வண்ணங் கொண்ட ஆடைகள் கலையழகு மிக்கதாகவும் வடிவமைக்கப்பட்டிருந்தன. பருத்தி, பட்டு, உரோமம் போன்றவற்றால் ஆடைகள் செய்யப்பட்டன. சிறியவர் முதல் பெரியவர் வரை ஆண், பெண் என்ற வேறு பாடின்றி அனைவரும் பலவகை அணிகளை அணிந்தனர். இலை, தழை, பூக்களைத் தொடுத்து மாலையாக அணிந்தனர். கழல், சிலம்பு முதலியன இளைஞர்கள் அணிந்தனர். இவ்வாறு பலவித அணிகளை அக்காலத்தவர் அணிந்தனர்.

எளிய மக்கள் வாழ்ந்த சிறு குடிசை வீடுகள் மன்னரும், செல்வந்தரும் வாழ்ந்த வளமனைகள், கோட்டைகள் இவைப் பற்றிய பல தகவல்கள் சங்க இலக்கியத்தில் கிடைக்கின்றன. அக்கால மக்கள் தங்கள் வருவாய்க்குத் தக்கவாறும், வாழும் சூழலுக்குத் தக்கவாறும் வீடுகளை அமைத்துக் கொண்டனர். குடிசையின் கூரைகள் வரகுக் கற்றை, புல், இலை போன்றவற்றால் வேயப்பட்டிருந்தன. அவைகள் மண்ணாலும், செங்கற்களாலும் சுதையாலும் உருவாக்கப்பட்டன. அடுக்கு மாடிக்கட்டடங்களும், மாடங்களும் கொண்ட கட்டட அமைப்பு பற்றிய குறிப்புகள் காணப்படுகின்றன. வீடுகளுக்கு வெண் சுதை பூசி வெள்ளி போன்று காட்சியளித்தன.

இனக்குழு சமூக காலத்திலும், பின்னர் தோன்றிய சங்க காலத்திலும் மக்களின் வாழ்க்கை நிலை பல மாற்றங்களைக் கண்டு வந்துள்ளன. இனக்குழு சமூகம் தொடக்க காலத்தில் உணவு சேகரித்தலையும், வேட்டையாடுதலையும் தொழிலாக கொண்டிருந்தது நாடோடியாக வாழ்ந்த மனிதர்கள் ஓரிடத்தில் நிலையாக தங்கி வாழ்ந்த போது புறதான விவசாயமும் ஏனைய தொழில்களும் உருவாயின. தொடக்க காலத்தில் நிலவிய தாய்வழிச் சமூகம் பின்னர் தந்தை வழிச் சமூகமாக மாறியது.

இனக்குழு வாழ்க்கை முறையை பழைய கற்காலம் புதிய கற்காலம் உலோக காலம் போன்றவற்றைக் கொண்டு அறியலாம். சங்க இலக்கியங்கள் இனக்குழு வாழ்க்கையின் எச்சங்களை கூறுகின்றன. உலோக காலமே சங்கக் காலத்தின் தொடக்கமாகும். முதல் சங்கத்தின் தொடக்க நிலையிலிருந்து மூன்றாம் சங்கத்தின் இறுதி நிலை வரையிலான காலகட்டத்தில் மானுட வாழ்வியல் பல மாற்றங்களை கண்டுவந்துள்ளது. இவை இயற்கையாலும் நிகழ்ந்தன எனலாம். தொழில், மணமுறைகள் பரத்தமைத் தோற்றம் வேற்றவர் வருகையால் தமிழரின் பண்பாட்டில் ஏற்பட்ட மாற்றங்களை இதற்கு எடுத்துக் காட்டலாம்.

**சான்றெண் விளக்கம்:**

1. சிறுபாண்.193-195

"இருங்காழ் உலக்கை இரும்புமுகம் தேய்த்த
அவைப்புமாண் அரிசி அமலை வெண்சோறு
கவைத்தாள் அலவன் கலவையொடு பெறுகுவிர் !"

2. புறம் - 127; 260 "சுவைக்கினி தாகிய குய்யுடை அடிசில்
பிறர்க்கீ வின்றித் தம்வயிறருத்தி"
"குய்குரல் மலிந்த கொழுந்துவை அடிசில்"

3. மேலது 399

4. அகம் - 37

5. பெரும்பாண்.306-308 "சேதா நறுமோர் வெண்ணெயின் மாதுளத்
துருப்புறு பசுங்காய்ப் போழொடு கறிகலந்து
கஞ்சக நறுமுறி யளைஇ..."

6. மேலது 55-56 "நாடக மகளிர் ஆடுகளத் தெடுத்த
விசிவீங் கின்னியம் கடுப்பக் கயிறுபிணித்துக்
காடி வைத்தக் கலனுடை மூக்கின்..."

7. மேலது 308-310

8. மேலது 130-132

9. மேலது 167-168 "இருங்கிளை ஞெண்டின் சிறுபார்ப் பன்ன
பசுந்தினை மூரல் பாலொடும் பெறுகுவிர்."

10. மேலது 192-196

11. மேலது 255-256

.......................... "வெண்ணெல் வல்சி
மனைவாழ் அளகின் வாட்டொடும் பெறுகுவிர் !"

12. மேலது 275-282

13. மேலது 106-111

14. மேலது 111-116

15. மேலது 341-345

16. புறம் 119

17. பொருநர்.105: காழிற் சுட்ட கோழூன் கொழுங்குறை
18. அகம் 397:1-7
19. மேலது 60:4-6; 216:1-4
20. புறம் 10:7; 215:1-5; 250:1
21. மேலது 80; நற்.10 "இன்கடும் கள்ளின் ஆமூர்"

"இன்கடுங் கள்ளின் இழையணி நெடுந்தேர்க்

கொற்றச் சோழர்...!"

22. மேலது 392;376

"தேட்கடுப் பன்ன நாட்படு தேறல்"

"அரவு வெகுண்டன்ன தேறல்"

23. மேலது 120

"நிலம்புதைப் பழுநிய மட்டின் தேறல்

புல்வேய் குரம்பைக் குடிதொறும் பகர்ந்து"

24. பெரும்பாண்.140-146
25. அகம் - 348; பாம்புக் கடுப்பன்ன தோப்பி
26. புறம் - 56
27. கே.பகவதி, தமிழர் ஆடைகள்-பக்.3
28. மேலது பக்.16
29. மதுரை 435-436

"திண்டேர்ப் பிரம்பிற் புரளும் தானை

கச்சம் தின்ற கழல்தயங்கு திருந்தடி "

30. புறம் 274:1; நீலக்கச்சைப் பூவாராடை

"நீலக்கச்சைப் பூவாராடை"

31. சிலப். கொலைக் 107-108

"மெய்ப்பை புக்கு விலங்கு நடைச் செலவின்

கைக்கோற் கொல்லனைக் கண்டன னாகி"

32. முல்லை 66-67

"உடம்பின் உரைக்கும் உரையா நாவின்

படம்புகு மிலேச்சர்"

33. சிலப். கால்கோட் 167-168

"சஞ்சயன் போனபின் கஞ்சுக மாக்கள்

எஞ்சா நாவினர் ஈரைஞ் ஞூற்றுவர் !"

34. பெரும்பான்.1: ஒன்றமர் உடுக்கைக் கூழார் இடையன்

"ஒன்றமர் உடுக்கைக் கூழார் இடையன்"

35. முல்லைக் கலி - 11:16-17

"ஐய பிதிர்ந்த சுணங்கணி மென்முலைமேல்

தொய்யில் எழுதுகோ"

36. சிலம்பு கடலாடு 87-88

"பிறங்கிய முத்தரை முப்பத்திருகாழ்

நிறங்கிளர் பூந்துகில் நீர்மையின் உடீஇ"

37. மா.இராசமாணிக்கனார் பத்துப்பாட்டு ஆராய்ச்சி, பக்.512

38. கலி.96:13; பரி.19:97; நெடு.181; பரி.10:79-80

39. Tamil Lexicon, Vol.VI-pp.3493, 3606

வம்பு - Stays for Women's Breast

வார் - Bodice

Tamil Lexicon Vol.II, p.638

கச்சு - A kind of corest worn by Indian Women in Ancient Times

40. அகம் 166:13-14; 266:5-6; பரி.6:28-29; 7:61

41. பரி.12:17

42. அகம் 86:21; 136:20

43. தமிழ்நாட்டு வரலாற்றுக்குழு - தமிழ்நாட்டு வரலாறு.ப.76

44. நற்.90:4

45. பெரு.69; முல்லை 66;60

46. நெடு.145-146
47. புறம்.326; நற்.353
48. மதுரைக் 431-433; 513
49. பொருநர் 82-83
50. புறம் 383
51. பெரும்பாண்-469
52. திருமுருகு 15:கோபத் தன்ன தோயாப் பூந்துகில்
53. புறம் 393

"போதுவிரி பகன்றைப் புதுமலர்அன்ன

அகன்றுமடி கலிங்கம் !"

54. மணிமேகலை
55. சிலப்பதிகாரம், இந்திரவிழவு ஊர் எடுத்த காதை - மருவூர்ப்பாக்கம்-16

"பட்டினும் மயிரினும் பருத்தி நூலினும்

கட்டும் நுண்வினைக் காருகர் இருக்கை"

56. நற்.90
57. புறம் 311
58. குறுந்.330
59. அகம்-34
60. கா.சுப்பிரமணியப்பிள்ளை தமிழர் சமயம்-பக்.26
61. கே.பகவதி, தமிழர் ஆடைகள் பக்.23
62. நற்றினை 359:3-6; புறம் 248
63. அகம் 176, 320, 210; குறுந் 295; நற்.80, 170; ஐங்.73
64. V.Kanakasubhri, The Tamils Eighteen Hundred years Ago,p.116
65. கா.சுப்பிரமணியப்பிள்ளை தமிழர் சமயம், பக்.27
66. அகம் 133:6; 217:2; நற்.247:4; 299:7; 353:1-2 புறம் 125:1; 326:5
67. பட்டினம் 106-107
68. சிலப்பதிகாரம் 5 இந்திர விழவு ஊர் எடுத்தகாதை - மருவூர்பாக்கம் 16ம் வரி

69. பரி.1:10; 56; 3:88; 15:28; 13:1-2
70. வெ.வரதராசன் தமிழரின் ஒப்பனைக் கலைத்திறன் பக்.33
71. புறம் 63:12; 352:5
72. பரி.11:93-98
73. முருகு 31-32
74. அகம் 136:27-28; குறுந்.80:1
75. வெ.வரதராசன் தமிழரின் ஒப்பனைக் கலைத்திறன் பக்.43
76. கலி.32:3-4
77. பெரும் 485-486
78. கலி.28:6;97:13; பரி.7:46
79. முருகு 23: "தெய்வ உத்தியொடு வலம்புரி வயின்வைத்து"
80. கலி.79:4-5
81. நற்.86:5-6
82. கலி.97:14
83. பரி.10:77
84. பரி-16:5
85. கலி.92:35-36; 97:11; முருகு 23-24
86. பதி.86:11; பெரும் 311-312; மதுரைக் - 709; அகம் 86:27; பரி.தி.1:34; நற்.16:9; பெரும்.161; நெடு.139; அகம்-3:17; பரி.10:115
87. மதுரைக் 709; நெடு.139-140; பெரும்.-161;
88. கலி.96:11: ஞாலியற் மென்காதிற் புல்லிகைச் சாமரை
89. பரி.தி.1:33: கடிப்பிரு காதிற் கனங்குழை
90. அகம் 253:25-26
91. அ.இராகவன், தமிழ்நாட்டு அணிகலன்கள் பக்.170
92. மதுரைக் 680-685
93. குறுந். 67:4
94. பதி 67:1-2; 74:5-6; புறம் 380:1
95. கலி.85: 12-13

96. மதுரைக்-461

97. புறம் 374:9; "புலிப்பற் தாலிப் புனதலைச் சிறாஅர்"

குறுந் 161:3-4; "புலிப்பற் தாலிப் புதல்வற் புல்லி,

அகம் 7:17-19 அன்னா ! என்னும் அன்னையும்..."

98. நெடு. 136-137 "..................... பொன்னொடு

புலிப்பல் கோர்த்த புலம்பு மணித்தாலி

நல்கெழு சிறுகுடிக் கானவன் மகளே !"

99. அகம்.269:1; 25; 265:9-10; 271:16; பரி.7:47

100. மதுரைக் 445-446

101. அரசர் புறம் : 69:15; 76:9; 130:1; பதி.17:14; 65:12; 83:31; அரசியர்-பதி.16:16; 65:6;/பரத்தையர் - அகம் 16:9; ஐங் 127:3; கலி 81:30; /விறலியர் - சிறுபாண் 26;/மனை மகளிர் - சிறு.61; பெரும்பாண்-327; மது.443; அகம் 61:18

102. மா.இராசமாணிக்கனார் பத்துப்பாட்டு ஆராய்ச்சி, பக்.528

103. நெடு.141-142.

104. நற்.77:9-10; மதுரை 316; அகம் 24:1-2

105. ஐங்.24:4: "பொலந்தொடி தெளிர்ப்ப முயங்கி"

106. அகம்-142:16-17; கலித்.59:1-2

107. மதுரை 415

108. புறம் 153:3; "சுடர்விடு பசும்பூட் சூர்ப்பமை முன்கை"

109. கலித்.41:8; "தகையவர் கைச்செறிந்த தாள்போல"

110. கலித்.14:6; நற்.90:9; 198:8; குறுந்.189:6; புறம் 60:5; 64:3; புறம் 255:5; குறுந்.15:6

111. கலித்.84:23; நெடு.143

112. நற்.188:3-4

113. நெடு.143-144; மதுரை 719-720

114. பரி.12:24: "கட்டுவடக் கழலினர்"

115. கலித்.85:8-11

"பூண்டவை எறியா வாளும் எற்றா மழுவும்

செறியக் கட்டி ஈர்இடைத் தாழ்ந்த

பெய் புல மூதாய்ப் புகர்நிறத் துகிரின்

மை அற விளங்கிய ஆன் ஏற்று அவிர் பூண் !"

116. மா.இராசமாணிக்கனார் பத்துப்பாட்டு ஆராய்ச்சி, பக்.526

117. ஐங்.310:1; ஐங்.316:1

118. பரிபாடல் மூலமும் பனமேலழகர் உரையும்.ப.105

119. பத்துப்பாட்டு மூலமும் நச்சினார்க்கினியர் உரையும், பக்.36.

120. முருகு-16: 105. "பல்காசு நிரைத்த சில்காழ் அல்குல்"

121. பரி.7:47

122. பொருநர்.39: "வண்டிருப்பன்ன பல்காழ் "

123. பெரும்பாண்.329: "கொன்றை மென்சினைப் மனிதவாழ்பவை போற்பைங்காழ்"

124. முருகு 146-147

125. பரி.22:30; கலி.56:11; 96:10-15

126. தே.பகவதி, தமிழர் ஆடைகள், பக்.105

127. நற்.110:5; அகம்-321:15; 6:1; 96:11; 22:49; பெரும்பாண்.332; மதுரை 444.

128. கலி.83:16; பரி.21:18; பதி.57:11; 68:18; 90:48; அகம் 198:9

129. பெரும்பாண் 332

130. மதுரை 444

131. அகம் 198:9-11

132. நற். 12:4-6; அகம் 321: 15-17

133. புறம் 36: 3-5

134. கலித்.9: குறுந்.148:2

135. பதிற்.52:18-20

136. அகம் 254: 2-4

137. வெ.வரதராசன், தமிழரின் ஒப்பனைக் கலைத்திறன், பக்.64

138. புறம் 40: 2-4

139. பெரும்.147-154

140. பெரும்பாண் 263-265; குறுந்.215

"வேழம் நிரைத்து வெண்கோடு விரைஇத்

தாழை முடித்துத் தருப்பை வேய்ந்த

குறியிறைக் குரம்பை !"

141. புறம்.22; பெரும்பாண்.190:1

142. நற்றிணை 207

"கண்டல் வேலிக் கழிசூழ் படப்பை

முண்டகம் வேய்ந்த குறியிறைக் குரம்பை !"

143. பெரும்பாண். 83-88 "யாற்றறல் புரையும் வெரிநுடைக் கொழுடல்

வேற்றலை யன்ன வைந்நுதி நெடுந்தகர்

ஈத்திலை வேய்ந்த எய்ப்புறக் குரம்பை !"

144. பெரும்பாண். 119-128

145. புறம் - 25; நற்.268; பதிற் 61:3

146. பெரும்பாண்.185-191

147. பெரும்பாண் 297-299

148. பெரும்பாண் 369-371

"விண்டோய் மாடத்து விளங்குசுவ ருடுத்த

........... ......... ............. ......... .......... ......... ............ ......

நாடு பல கழிந்த பின்றை...!"

149. பெரும்பாண்.327-333

"தமனியப் பொற்சிலம்பு ஒலிப்ப உயர்நிலை

வான் தோய் மாடத்து வரிப்பந் தசைஇ"

150. சிலப்.5:7

151. புறம் 174:7 (உரை)

152. மதுரைக்-352: "மண்ணுற ஆழ்ந்த மணிநீர்க் கிடங்கின்"

"மண்ணுற ஆழ்ந்த மணிநீர்க் கிடங்கின்"

153. மதுரைக் 501-502

"குறும்பல் குழுவிற் குன்றுகண் டன்ன

பருந் திருந் துகக்கும் பன்மாண் நல்லில் !"

154. பெரும்பாண்.127

155. கலித்.83:2

156. Sustri.K.A.N.A. History of South Indian, p.50

157. P.T.Srinivasa Iyangar, History of the Tamils upto 600 A.D., p.4-12.

158. உணவு சேகரிக்கும் நிலை அகம் 309, 331, 337; பெரும்பாண் 89, 97. வேட்டையாடும் நிலை - அகம் 31, 58, 182, 193, 248, 261, 282, 284 நற்றிணை -3, 285;/ காடுகளை எரித்து பயிர் செய்யும் நிலை. ஐங்-252; 259, 266, 270, 295; அகம் 140, 194; நற்றிணை.122, 274, கால்நடை வளர்ப்பு நிலை. அகம் 103, 168,265, 274; நற்றிணை 80, 142, 192;/ பயிர்த்தொழில் அகம் 204, 237, 249; நற்றிணை 60, 210.

159. கா.சுப்பிரமணியன், சங்க காலச் சமுதாயம், பக்.5

160. புறம் 150

161. பொருநர்.1-3

162. சங்ககாலச் சமுதாயம், பக்.30

163. புறம்-62:4: "நிறங்கிளர் உருவிற் பேஎய்ப் பெண்டிர்"

164. புறம்-11, 356, 369, 370, 371

165. புறம்-258:4-6

166. அகம் - 265

167. பெரும்பாண் 136-147

168. நற்றிணை-85

169. அகம்-196

170. புறம்-228 "இருள் திணிந் தன்ன குரூஉத்திரள் பரூஉ உப்புகை

அகலிரு விசும்பின் ஊன்றும் சூளை !"

171. புறம்-238 "கவிசெந் தாழிக் குவிபுறத் திருந்த

செவிசெஞ் சேவலும் பொகுவலும் வெருவா !"

172. புறம் 316:1-4

173. புறம் 317

174. புறம் 257

175. புறம் - 197; 299, 308, 388, 330

176. அகம்-245; பதிற் 30:68

177. தமிழர் நாகரிகமும் பண்பாடும் பக்.13

178. புறம் - 76

179. க.சுப்ரமணியம், சங்க கால சமுதாயம், ப.46

180. பட்டினம் 283-288

181. புறம் 87

182. சிறுபாண்.51-56

183. பெரும்பாண்-437-439

184. தமிழர் நாகரீகமும் பண்பாடும், பக்.47

185. புறம் 18; 28-30

186. அவர் ஓர் அடிக்குறிப்பில் பின்வருமாறு கூறுகின்றார். தமது South Indian Palaegraphy-ல் (Dr.Barnell) பர்னெல்லும் தமது Introduc -tion of the Comparactive grammar of Dravidian Languages-ல் டாக்டர் காட்டு வெல்லும் இக்கருத்தைக் கூறியுள்ளார்.

187. வி.கனகசபை தமிழர் 1800-பக்.2-3

188. வி.ர.ஸ்மித், Early History of India - பக். 445

189. க.அ.நீலகண்ட சாஸ்திரி, Pandiyan Kingdom பக்.24

190. க.அ.நீலகண்ட சாஸ்திரி, History of South Indian, பக்.110

191. வி.ஆர்.இராமசந்திர தீட்சிதர் Studies பக்.21

192. மேலது, பக்.41

193. கே.ஆர்.சீனிவாச ஐயங்கார் "The age of Imperial Unity" பக்.293

194. சிலப்பதிகாரம் XVII:10

195. இறையனார் அகப்பொருள் சூத்திரம் 1: உரை

196. சிலம்பு, உரை பெருகட்டுரை 3, வரந்தரு காதை 157-164

197. கலைக்களஞ்சியம் தொகுதி ஐந்து - பக்.105

198. வி.ஏ.ஸ்மித் Early History cholas of India பக்.452

199. சிலப்பதிகாரம் பதிகம் - 88-89

200. க.அ.நீலகண்ட சாஸ்திரி cholas பக்.3

201. மேலது, பக்.15

அடிக்குறிப்பு 3- இக்காப்பியத்தின் காதை 29க்கும் நியாயப் பிரவேசத்திற்கும் உள்ள தொடர்பினைப் பற்றிய ஆராய்ச்சியில், மணிமேகலை க.டி.400-க்கும் பிற்பட்டது என்பதை பிற்காலத்தில் மாற்றியமைக்கப்பட்டது என்று கொள்ளாவிடில்.

202. க.அ.நீலகண்ட சாஸ்திரி cholas பக்.28 அடிக்குறிப்பு 31

203. க.அ.நீலகண்ட சாஸ்திரி Pandiyan Kingdome பக்.20-21 ஈண்டு எல்.டி. சாமிக்கண்ணுப்பிள்ளையின் கருத்துக்களை மேற்கொள்கிறார்.

204. பதிற்றுபத்து, 5 பத்து

205. நற்றிணை 216,

206. ஐந்திரமாவது இந்திரனால் இயற்றபெற்ற பாணிணிக்கு முற்பட்ட வடமொழி நூல் என்று தெரிகின்றது.

207. 23ம் காதைக் கீழ்காணும் வெண்பாி, 23ம் காதை 59-61

208. குறிஞ்சிப்பாட்டு, வாி.15-18

209. க.அ.நீலகண்ட சாஸ்திரி பக்.128

210. எஸ்.வையாபுரிபிள்ளை, தமிழ் இலக்கிய சாிதத்தில் காவிய காலம், ப.86

211. புறம் 48, 49

212. சேரமான் கோக்காதை மார்பன்

213. சோழன் செங்கனான்

214. நாலாயிரம், முதல் திருவந்தாதி, 11, 63, 64, 88, 94

215. திரிகடுகமும், சிறுபஞ்சமூலமும் எஸ்.வையாபுரி பதிப்பு முகவுரை, பக்.11

216. தொல், பொருள், இனம் நூற்பா 6-11

217. அகம் 118: 9; 94:3; 138:15
218. மதுரைக்காஞ்சி 430
219. இராசமாணிக்கனார் மா. தமிழ்மொழி இலக்கியம் வரலாறு, பக்.118
220. மதுரைக் காஞ்சி 655-686
221. திருக்குறள் 1048
222. புறம் 381:2; 246 : 4-5
223. புறம் 159: 9-12
224. பெரும்பாண். 155-162
225. பெரும்பாண். 148-175
226. அகம் 182: 1-8; 388:1-9
227. பெரும்பாண்.197-201
228. நற்றிணை 388:5
229. குறிஞ்சிப்பாட்டு 216-226
230. மதுரைக்காஞ்சி 536-653; நற்றிணை 132: 8-9
231. பெரும்பாண். 245-247
232. கலித்தொகை 68: 16-18

"சேரியாற் சென்று நீ சேர்ந்தவில் வினாயினேன்

தேரொடு திரிதரும் பாகனைப் பழிப்பேமோ

ஒலிகொண்ட சும்மையான் மணமனை குறித் தெம்மில்

பொலி கெனப் புகுந்த நின் புலையனைக் கண்டயாம்"

233. பட்.246; பதிற் 5:15-17
234. கலித்தொகை 143:27-44
235. தொல்பொருள் - கற்பியல் - 4

# இயல் ஐந்து

# கலையும் களிப்பும்

**முன்னுரை :**

கலை என்பது மக்கள் கண்டும் கேட்டும் களிப்புற்றிருக்க வேண்டும் என்ற உயர்ந்த நோக்கத்தோடு உருவாக்கப்படுவதாகும். மக்களை மகிழ்ச்சிப்படுத்தும் (களிப்பூட்டும்) நிகழ்வுகள் பல இருப்பினும் அவற்றுள் கலைகள் முதன்மை வாய்ந்ததாகக் கருதப்படுகின்றன. இக்காரணங்கள் கருதியே இத்தலைப்பில் இந்த இயல் அமைக்கப்பட்டுள்ளது. ஒரு சமூகத்தின் பண்பாட்டையும், பழக்கவழக்கத்தையும் அறிந்து கொள்வதற்குக் கலைகள் துணைபுரிகின்றன. அதனடிப்படையில் சங்க கால மக்களின் பண்பாட்டை அறிய அக்காலக் கலையும் மகிழ்வினைகளும் துணை புரிகின்றன. இசை, கூத்து, சிற்பம், ஓவியம் போன்றவை கவின் கலைகளாகக் கருதப்படுகின்றன. விழாக்கள், விளையாட்டு, பொழுதுபோக்கு, கள் குடித்தல் போன்றவை மக்களைக் களிப்பூட்டும் நிகழ்வுகளாகும். கலை, களிப்பு ஆகிய இவ்விரு செயல்பாடுகளின் நோக்கம் ஒன்றேயாகும். தொடர்ச்சியாக நடைபெற்ற போர்களாலும் ஓயாது கடுமையாக உழைத்ததாலும் களைப்புற்றிருந்த சங்ககாலத்தவர்க்கு அவ்வப்போது வந்த விழாக்களும் அன்றாடம் அமைந்த விளையாட்டுகளும், பொழுதுபோக்கு நிகழ்வுகளும், கலைச் செயல்பாடுகளும் மகிழ்ச்சியை உண்டாக்கின எனலாம். கலையும், களிப்பூட்டும் நிகழ்வுகளும் மக்கள் வாழ்வில் இரண்டறக் கலந்திருந்தமையும் வேறுபாடின்றி அனைவராலும் இவை விரும்பப்பட்டமையும் சங்க இலக்கியத்தின் வழி அறிய முடிகிறது.

**கலை விளக்கம் :**

'கலை' என்னும் பல்பொருள் ஒருசொல் கல்வி என்னும் சொல்லைப் போலவே 'கல்' என்னும் சொல்லின் அடிப்படையில் தோன்றியதாகும். ஐம்புல உணர்வுகளால் தான் பெற்றவை கொண்டு மனம் ஒன்றைப்

படைத்து வெளியிடுகின்ற போது அது கலைப் படைப்பாக மிளிர்கின்றது. ஆகவே, கலை என்பது படைப்புத் திறனை உள்ளடக்கிய ஒன்று' என்று குறிப்பிடுவது ஏற்கத்தக்கதாகும். கலை என்னும் தமிழ்ச் சொல்லின் பொருளை உணர்த்தும் 'ஆர்ட்' (Art) என்னும் ஆங்கிலச் சொல், 'திறன்' என்று பொருள்படும். அதனை 'ஆர்ஸ்' (Ars) என்னும் இலத்தீன் மொழிச் சொல்லிலிருந்து வந்ததென்று குறிப்பிடுகின்றனர்.

கலை, ஆர்ட் (Art) என்னும் இருவேறு மொழிச் சொற்களும் தரும் பொருளை ஆய்ந்து நோக்குங்கால் அது ஒரு வகையில் ஒத்திருப்பது குறிப்பிடத்தக்கதாகும். 'மனத்திறத்தின் வெளிப்பாடு' என்னும் பொருளில் கலை என்னும் சொல் முதன்முதலில் சிலப்பதிகாரத்தில்தான் இடம்பெறுகின்றது.[2] தொல்காப்பியத்திலோ, சங்க இலக்கியங்களிலோ இச்சொல், இப்பொருளில் வழங்காமல் மான், குரங்கு என்னும் விலங்குகளைக் குறிக்கவே வழங்கப்பட்டுள்ளது.[3] என்றாலும் அற்றைநாள் தமிழர் கலைகளின் இயல்பினை அறிந்து பயன் கொண்டவர்களாகவே விளங்கியுள்ளனர் என்பது தெளிவு. கலைகள் மாந்தர் மனத்திற்கு இன்பத்தையும் மனநிறைவையும் அளிக்கின்றன. அக்கலைகளைக் கண்ணினால் கண்டும், காதினால் கேட்டும், மனத்தினால் உணர்ந்தும் மகிழலாம். கலைகளின் அடிப்படையான தன்மை (கற்பனை, அழகு, இன்பம் தரல்) ஒன்றாக இருந்த போதிலும், அந்தந்த நாட்டின் இயற்கை அமைப்பு, சுற்றுப்புறச் சூழ்நிலை, மக்களின் பழக்க வழக்கங்கள், சமயம் முதலியவற்றிற்கேற்ப அவை வளர்ச்சி அடைந்து வந்துள்ளன. அதனால், நமது நாட்டு அழகுக் கலைகளும் கிரேக்க, சீன, உரோமை போன்ற ஏனைய நாட்டு அழகு கலைகளும் வெவ்வேறு விதமாக வளர்ச்சி அடைந்துள்ளன என்று மயிலை சீனி.வேங்கடசாமி கூறுவார்.[4]

மாந்தர் மனத்தகத்தே இடம் பெற்ற கலையுணர்வு, படைப்புகளாய் வெளிப்படுங்கால், வெளிப்படுத்தப் பெறும் ஊடகங்களுக்கேற்ப அவை இசையாக, கூத்தாக, ஓவியமாக, சிற்பமாக இன்ன பிற வகையில் உருப்பெறுவதோடு உரிய புலன் உணர்வுகளால் உணரப்படுவதாகவும்

மலர்கின்றது. மாந்தரின் கலையுணர்வு, ஓவியம், சிற்பமாக வெளிவருங்கால் கட்புலனாலும் இசையாக, பாட்டாக வெளிவருங்கால் செவியாலும், கூத்தாக வெளிவருங்கால் கண், செவி ஆகிய புலன்களாலும் அறியப்படுவதாக அமைகின்றது. அருமையும், சிறப்பும் கருதிக் கலைகளுள் இசை, ஓவியம், சிற்பம் போன்றவற்றை நுண்கலைகள் (Fine Arts) என்று வகை செய்துள்ளனர்.

இன்றைய கலையுலக ஆராய்ச்சியில் 'கலை கலைக்காகவே' என்றும், 'கலை வாழ்க்கைக்காகவே' என்றும் எழுந்துள்ள விவாதம் அத்துறை அறிஞர்களிடையே இன்றும் முடிவு பெறாத ஒன்றாக இருந்து வருகின்றது. முன்னதற்கு முருகியலும், பின்னதற்குப் பயனியலும் அடிப்படையாகும். எந்த ஒரு கலையிலும் முருகியல் பயனியல் ஆகிய இரு கூறுகளும் பல்வேறு அளவுகளில் கலந்தே விளங்கும் பாங்கினை உணர்ந்த பண்டைத் தமிழர், அவ்விரு கூறுகளையும் உணர்ந்து கலைகளைப் போற்றி முருகியல் இன்பங்களையும், பயனியல் நன்மைகளையும் ஒருங்கே பெற்றுக் கலைப் பயன்களைத் துய்த்துள்ளமையினைச் சங்க இலக்கியங்கள் நன்கு விளக்குகின்றன. அதனால் அவர்களின் கலையுணர்வு தம் பண்பாட்டினைக் காத்துக் கொள்ளவும், தம் மரபினோர்க்கு அதனைக் காத்தளிக்கவும் வாய்ப்பாக அமைந்தமையினை அவ்விலக்கியங்கள் காட்டி நிற்கின்றன.

கலையுணர்வின் வெளிப்பாடு பயன்கோடல் ஆகியன ஆடவர், பெண்டிர் என்னும் வேறுபாடின்றி இருபாலார்க்கும் பொதுவானவையேயாகும். சங்கக் காலக் கலை, அழகு, பயன் என்னும் இவ்விரு கோட்பாடுகளையும் ஒருசேரக் கொண்டிருக்கிறது. அழகாயிருப்பதோடு வாழ்க்கைக்குப் பயன் தரும் கருத்து ஒன்றையும் தன் உள்ளுறையாய்க் கொள்ளும் வண்ணம் கலைப்படைப்பு அமைந்தது. அக்கலை உள்ளத்தைத் திருந்திய நெறிக்கண் செலுத்தும் வகையில் சென்றவிடத்துச் செலவிடாது தடுத்து நிறுத்தும் கடிவாளமாகவும் அமைந்தது என்பர்.[5]

**இசைக்கலை :**

இசை என்னும் சொல் இசைவிப்பது தன் வயப்படுத்துவது என்று பொருள்படும். இசை கல்மனத்தையும் கரைந்துருகச் செய்யும் பெற்றிவாய்ந்தது. கற்றோரும், மற்றோரும் இசையில் வயப்பட்டே நிற்பர். அன்பைப் பெருக்கி ஆருயிரை வளர்ப்பது இசை, ஓரறிவு உயிர்கள் முதல் ஆற்றறிவு உயிர்கள் ஈறாக இசையில் தம்மை மறக்கின்றன. பழந்தமிழ்மொழியின் ஒப்பற்ற இலக்கணத்தைத் தெளிவுறக் கூறும் தொல்காப்பியம்.

> "அளபிறந்து உயிர்த்தலும் ஒற்றிசை நீடலும்
> உளவென மொழிப இசையொடு சிவணிய
> நரம்பின் மறைய என்மனார் புலவர் !"[6]

என்ற வகையில் பரந்துபட்ட இசைத் தமிழ்க் கலையில் விளக்க நுட்பத்தைச் சுட்டிக் கூறிவிட்டது. குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என நிலம் பகுத்து வாழ்ந்த தமிழ் மக்களின் கருப்பொருள்களைக் கூறுமிடத்து அவ்வந் நிலங்களுக்குரிய இசைக் கருவியாய யாழினையும், பறையையும், பண்ணையும் குறிக்கின்றார்.

குறிஞ்சி நிலத்தில் வாழ்ந்த குறவர்கள் குறிஞ்சிப் பண்ணைப் பாடி குதூகலமுற்றனர். அவர் குறிஞ்சி யாழினையும் தொண்டகப் பறையினையும் துணைக் கருவிகளாகக் கொண்டனர். முல்லை நிலத்தில் உறைந்த ஆயர்கள் முல்லைப் பண்ணைப் பாடி எல்லையற்ற இன்பம் கொண்டனர். இவர்கள் முல்லை யாழையும், ஏறுகோட்பறையையும் இசைத்து இன்புற்று வந்தனர். மருத நிலத்தில் குடியேறிய உழவர்கள் மருதப் பண்ணை இசைத்து பொருதலற்று வாழ்ந்தனர். மருதயாழும், மணமுழவும் மீட்டிக் களிப்புற்றனர். இந்த நிலத்தில் பலவகைப் பண்களும், பறைகளும். யாழ்களும் எழுந்தன. நெய்தல் நிலத்திலே இருந்த பரதவர்கள் நெய்தற்பண்ணைப் (செவ்வழிப் பண்ணை) பாடிக் களிப்புற்றனர். இந்நிலமக்கள் விளரி யாழும் செவ்வழி யாழும் மீன்கோட்பறையும்

இசைத்து இன்புற்று வாழ்ந்தனர். பாலை நிலத்தில் வாழ்ந்த எயினர்கள் பாலைப் பண்ணைப் பாடி உவகையுற்றனர். இவர்கள் பாலை யாழினை மீட்டி நிரைகோட்பறையை முழக்கி மகிழ்ந்து வாழ்ந்து வந்தனர்.

பண்டைத் தமிழர் இசை அறிஞர்கள் பண்களைக் கண்டதோடு அமையாது அவைகளுக்குரிய காலமும் கண்டறிந்துள்ளனர். குறிஞ்சிப்பண் பாடுதற்குரிய காலம் யாமம், முல்லைப் பண் பாடுதற்குரிய காலம் மாலை, மருதப்பண் பாடுதற்குரிய காலம் விடியல், நெய்தற்பண் பாடுதற்குரிய காலம் எற்பாடு, பாலைப்பண் பாடுதற்குரிய காலம் நண்பகல் என ஆய்ந்து அறிந்துள்ளனர்.

மருத நிலத்திற்குரிய மருதப் பண்ணை யாழோர் தாள அறுதியை இனிதாக உட்கொண்டு நரம்பை இனிதாகத் தெறித்து மருதத்தை வாசிக்க இருள் மாய்ந்து கதிர்விரியும் விடியற்காலம் தோன்றும் என்பதை மதுரைக் காஞ்சி புலப்படுத்தும்.[7]

நன்னனுக்குரிய மருத நாட்டில் எருதையோட்டும் உழவரோதையுடன் கூட யாழிலே மருதத்தை வாசித்துப் பாணர் தங்கிப் போவர் என்பதை மலைபடுகடாத்துவரிகள் தெளிவுபடுத்துகின்றன.[8] மருதத்தை வாசித்த கரிய தண்டினையுடைய சிறிய யாழின் நம்பினோசைக்கு மேற்போகாது அவ்வோசையுடனே கூடி ஓரோசையாம் இனிதாய பாட்டினைப் பாடுவர் விறலியர் என்பதை மலைபடுகடாம் வரிகள் உணர்த்துகின்றன.[9]

குறிஞ்சிப்பண் நடுயாமத்தில் இசைக்க கூடியது. அதிசயம் பொருந்திய இனிய யாழினையுடைய விறலியர் நறிய கரிய பக்க மலையிலே குறிஞ்சிப் பண்ணைப் பாடுவதை மலைபடுகடாம் தெரிவிக்கின்றது.[10] பெரிய மலைப்பக்கத்தே கொடிச்சியர் குறிஞ்சிப்பண் பாடுவதைப் பெரும்பாணாற்றுப் படை அறிவிக்கின்றது.[11]

நெய்தல், முல்லை நிலங்கட்குரிய மாலை நேரப் பண், செவ்வழிப்பண், மகளிர் முழவு ஆகுளி என்னும் கருவிகளின் ஓசைக்கு ஒத்து ஒலிக்கும் யாழிலே செவ்வழிப்பண்ணை எழுப்புவர். பின்னர், ஒள்ளிய சுடர்விளக்கு முற்படப்பூசைக்கு வேண்டும் பொருளுடன் கோயிலுக்குச் செல்வர். இராக் காலத்தில் முற்பகுதி இவ்வாறு கழியும். இதனை மதுரைக் காஞ்சி அடிகள் புலப்படுத்தா நிற்கின்றன.[12] செவ்வழி இரக்க உணர்ச்சியை எழுப்பும் ஒரு பண் என்பதை, புறநானூறு உணர்த்துகிறது.[13] பிரிந்தார்க்குத் துன்பம் தரும் யாழின் கண்ணே செவ்வழிப் பண்ணைப் பாடி அரிய உயிர்களை வருத்தும் அவ்வோசையை மாரிக் காலத்து மாலைப் பொழுதில் தமியளாயிருக்கும் தலைவி கேட்டு உள்ளம் சோர்வாள் என்பதை அகநானூறு செப்புகின்றது.[14] பாலை நிலத்திற்குரிய பாலைப்பண் நண்பகலில் இசைக்கப்படுவது பாணனது கையிலுள்ள பேரியாழில் பாலைப் பண்ணை அமைத்து மிடற்றுக் குரலோடு ஒன்றுபட்ட இனிய இசையிலே தழிஞ்சி என்னும் துறைப்பொருள் அமைந்த பாடல்களைப் பாடுவர் என்பதைப் பதிற்றுப்பத்து, போற்றுகின்றது.[15] இனிய நரம்புக் கட்டையுடைய பாலை யாழை வாசித்தலில் வல்லோன், பண்கள் எல்லாவற்றிலும் துன்பத்தைச் செய்யும் உறுப்பை உடைய பாலைப் பண்களை மாறிமாறி வாசிப்பான். இத்தகைய பாலைப் பண் வெவ்வேறு சுவையுடைய மதுவிற்கு ஒப்பாகும். இதனை பதிற்றுப்பத்து அடிகளால் உணரலாம்.[16] அழியை அலைக்கும் கள்வர் தம் கையில் உள்ள படைக்கலன்களைக் கைவிடும்படிச் செய்து மறத்தினை அவர்களிடத்து நின்று பெயர்க்கும் தன்மையது பாலைப் பண்ணைக் கொண்ட யாழ். இதனை பொருநராற்றுப்படை வழி விளங்கலாம்.[17] இப்பண் யாழில் அன்றி எழுப்பப்படுவதைப் பெரும்பாணாற்றுப் படை உணர்ந்தா நிற்கின்றது.[18] பண்டைத் தமிழரின் வாழ்வில் இசை இரண்டறக் கலந்து ஒன்றி நிற்பதை மேற்கண்ட செய்திகளின் வழி உணர முடிகிறது.

**சங்க இலக்கியங்களும், இசையும் :**

பழந்தமிழரின் இசை அறிவை வெளிப்படுத்துவதில் சங்க இலக்கியம் சிறப்பிடம் பெறுகிறது. வரலாற்றுச் சான்றாகவும், வாழ்வியல் நூலாகவும் விளங்கும் சங்க இலக்கியம் அக்காலத்திய இசையின் வரலாற்றையும், கலைஞர்களின் வாழ்வையும் அழகுறப் புலப்படுத்துகிறது. சங்க இலக்கியங்களில் காணப்படும் ஆற்றுப்படை நூல்கள் கலையையும், கலைஞர்களையும் உலகுக்கு அறிமுகப்படுத்துகின்றன. பத்துப்பாட்டும், எட்டுத்தொகையும் பல குறிப்புகளைத் தருகின்றன. வரி வண்டுகளின் இசையினால் புதல்களிலுள்ள பூங்கொத்துகள் கட்டு நெகிழ்ந்து மலர்வன என்னும் செய்தியைக் குறுந்தொகை கூறுகின்றது. [19] குறிஞ்சி நிலமகள் ஒருத்தி, பெரிய மலையின் பக்கத்தே குறிஞ்சிப் பண்ணைப் பாடிக் கொண்டு நிற்கின்றாள். தினைக்கதிரினைத் தின்று கொண்டு நின்ற யானை ஒன்று அப்பாட்டைக் கேட்டதும் தான்கொண்ட தினைக்கதிரினையும் உட்கொள்ளாது நின்ற நிலையினின்றும் அகலாது துயில்வரப் பெறாத கண்கள் துயில் வரப் பெற்று விரைந்து தூங்கும் நிலையிதனை அகநானூறு காட்டுகிறது.[20]

இன்னிசை இயக்கிப் பேய்களை வெருட்டிக் கலைத்த நிகழ்ச்சியைப் புறநானூறு கண்முன் நிறுத்துகிறது.[21] விளரி என்னும் இரங்கற் பண்பாடி நரிகளை ஓட்டிய நிகழ்ச்சியினைப் புறம் செப்புகிறது. [22] பரி பாடல் சங்க காலத்தில் வழங்கிய ஒருவகை இசைப்பாடலே. ஒவ்வொரு பாடலுக்கும் பண் வகுக்கப்பட்டுள்ளது. இதை நோக்கின் அக்காலத்து இசைவளம் நன்கு புலனாகும்.

**இசைவாணர்கள் :**

சமுதாயத்தில் பொருளாதார வளம் பெருகப் பெருக இசைக்கருவிகள் பல எழுந்தன. அப்பால் இசை வளர்ப்பதற்கும், இசைக்கருவிகள் செய்வதற்கும், இசைப் பாட்டுகள் இயற்றுவதற்கும், பாடுதற்கும் இசைக்கருவிகளைப் பழுது பார்ப்பதற்கும், அதை

மீட்டுவதற்கும், தனித்தனி இனம் தோன்றியது. சமுதாயாத்தில் பாணன், பாடினி போன்றோர் தோன்றினர். துடியர், பறையர் என்போர் தொல்காப்பியர் காலத்திற்கு முன்பே துளிர்த்து விட்டனர். பாணர்கள் பண்டைத் தமிழகத்தில் பாடுவதையே தொழிலாகக் கொண்டு பண்புடன் வாழ்ந்த ஓரினத்தவர்கள். இவர்களில் ஆண்மக்களைச் சென்னியர், வயிரியர், செயிறியர், மதங்கர், இன்னிசைக்காரர், பாணர் என்றும்[23] பெண்பாலரைப் பாடினி, விறலி, பாட்டி, மதங்கி, பாடல் மகடூஉ, பாண்மகள் என்றும்[24] பிங்கல நிகண்டு கூறுகிறது.

பாணர்களில் இசைப்பாணர், யாழ்ப்பாணர், மண்டைப் பாணர் என மூன்று வகையினர் உண்டு. இசைப்பாணர் மிடற்றால் பாடுபவர்கள், யாழ்ப்பாணர் யாழ் மீட்டுபவர்கள். மண்டைப் பாணர் மண்டையோட்டில் இரந்துண்பவர்கள். யாழ் மீட்டும் பாணர்களில் சீறியாழ் மீட்டும் சிறுபாணர் பேரியாழ் மீட்டும் பெரும்பாணர் என இருவகை உண்டு. சீறியாழ் என்பது செங்கோட்டியாழ் எனப்படும். இது ஏழு நரம்புகளையுடையது. பேரியாழ் பெரிய யாழ் ஆகும். அது பரவையாழ் என்றும் கூறப்படும். இது இருபத்தொரு நரம்புகளையுடையது. சிறுபாணரை ஆற்றுப்படுத்தி இயற்றப்பட்ட நூல் சிறுபாணாற்றுப்படை என்ற நூல். பெரும்பாணரை ஆற்றுப்படுத்தத் தோற்றுவிக்கப்பட்ட நூல் பெரும்பாணாற்றுப்படை என்ற பெருமை சான்ற நூலாகும்.

யாழ்ப்பாணர் என்போர் யாழை மட்டுமின்றிக் குழலையும் மீட்டி வந்தனர் என்று இளங்கோவடிகள் எடுத்துக் காட்டியுள்ளார்.[25] தமிழகத்தில் பழங்குடி மக்களில் பாணர்க்குச் சிறப்பான இடம் அளிக்கப் பெற்றிருந்தது என்பதை நமக்கு மாங்குடிக் கிழார் என்னும் சங்கப் புலவர் ஒருவரும் அறிவுறுத்துகிறார். துடி எனும் இடை சுருங்கிய பறையை இயக்குபவராகிய துடியர், யாழ் எனும் நரம்புக் கருவியை மீட்டுபவராகிய பாணர், பறையாகிய தோற்கருவியை முழக்கும் பறையர் ஆகிய குடிமக்கள் சமுதாயத்தில் இருந்த நிலையினைச் சங்க இலக்கியம் செப்புகின்றது.[26]

இசைக்கலைஞர்களாய துடியர்களும், பாணர்களும், பறையர்களும் பிற்காலத்தில் புறநகரில் ஒதுங்கி வாழ்ந்தவர். அவர்கள் வறியர்களாய் வாழ்ந்து வந்தனர் என்றாலும், அவர்கள் இழிந்தவர்களாக எண்ணப்படவில்லை. பாணர்களையும், பாடினிகளையும், விறலியர்களையும், துடியர்களையும், பறையர்களையும், அரசர்கள் தம் அவைகளில் இடம்பெறச் செய்து அவர்களின் ஆடல் பாடல்களைக் கண்டும், கேட்டும், சுவைத்தும் வந்தனர். பாணர்க்கும், பாடினியருக்கும், விறலியர்க்கும், பிறர்க்கும் பொற்றாமரைப் பூவும், பொன்னரி மாலையும், முத்து வடமும் பரிசளித்து வந்தனர் என்பதை பொருநராற்றுப்படை வரிகள் உணர்த்தி நிற்கின்றன.[27]

பொன்னாற் செய்த தாமரைப் பூவை, பாணனது கறுத்த தலைமயிரிலே பொலிவு பெறச் சூட்டிப் பொன்னரி மாலையை வெள்ளிதாகிய ஒளியையுடைய முத்தத்தோடே பாடினி ஆட வலிமைமிக்க சோழ அரசன் கரிகாற் பெருவளத்தான் நல்கினான் என்பதை இதன் மூலம் உணரலாம். பாணர்களுக்கு அரசர்கள் அளித்த பரிசும், சிறப்பும் புறநானூற்றுப் பகுதியில் விளக்கமுறுகிறது.[28]

பாணர்களில் ஒரு பிரிவினர் பொருநர். இவர்கள் ஏர்க்களம் பாடும் பொருநர், போர்க்களம் பாடும் பொருநர், பரணி பாடும் பொருநர் என மூன்று பிரிவினராகக் காணப்படுகின்றனர். பத்துப்பாட்டுகளுள் ஒன்றாகிய பொருநராற்றுப்படை பொருநன் ஒருவனைக் கரிகாற் பெருவளத்தானிடம் ஆற்றுப்படுத்தியதாகப் பாடப்பெற்ற நூலாகும்.

போர்க்களம் பாடும் பொருநர் வேந்தனின் வெற்றியை வெகுவாகப் புகழ்ந்து பாடுவோர்களாவர். இவர்கள் மன்னர்களால் பொன்னும், பொருளும், மணியும் கொடுத்து ஆதரிக்கப்பட்டு வந்தனர். ஏர்க்களம் பாடும் பொருநர் பெரிய நிலக்கிழார்களைப் பாடி அவர்களால் உணவூட்டப்படுபவர்களாய் இருந்தனர். இவர்களுக்கு மன்னர்கள் பொன்மாலை, முத்துமாலை, யானை போன்ற பரிசுகளை அளிப்பார்கள். சேரமான் வஞ்சி பொருநர்களை ஓம்பியதைப் புறநானூறு செப்புகின்றது.[29]

பொருநர்கள் பறை கொட்டுபவர்கள் என்பதும், பாணரும், பொருநரும் வேறு வேறு தன்மை கொண்டவர்கள் என்பதும் தெளிவாகிறது. அக்காலத்தில் பொருநரின்றிக் கோடியர், வயிரியர் என்று இரு இசைக் குழுவினரும் இருந்தமையும் அறியப்படுகிறது.

**இசைச்சங்கம் :**

தமிழகத்தில் முத்தமிழும் வளர்க்க முப்பெரும் சங்கங்கள் இருந்தன. அவை முதல், இடை, கடை என மூன்று சங்கங்கள். இந்த முத்தமிழ்ச் சங்கம் மூன்றிலும் இசைத் தமிழ் ஆய்வு சிறப்பான இடத்தைப் பெற்றிருந்தது. இசை ஆய்வு நடத்த கண்ணாகனார், கேசவனார், நல்லச்சுதனார் முதலிய இசைப்புலவர்கள் இருந்து வந்தனர்.[30]

**இசை நூல்கள் :**

சங்க காலத்தில் இசை வளர்க்கப் பல புலவர்கள் இருந்து வந்தனர். எண்ணற்ற இசைப் புலவர்கள் இசை பாடியும், இசைக் கருவிகளை இயக்கியும், இசை நூல்கள் இயற்றியும் வந்தனர். சிலப்பதிகார உரையாசிரியர் அடியார்க்கு நல்லார் தம் உரைப் பாயிரத்தில் பண்டிருந்த பல இசை நூல்களின் பெயர்களைத் தந்துள்ளார். அகத்தியம், இசை நுணுக்கம், இந்திர காளியம், குண நூல், கூத்த நூல், செயிற்றியம், தாளவகையோத்து, நூல், பஞ்சபாரதீயம், பஞ்ச மரபு, பரதசேனாபதியம், பரதம், பெருங்குருகு, பெருநாரை, நாடகத்தமிழ் நூல், முறுவல் முதலிய நூல்கள் அடியார்க்கு நல்லார் காலத்தில் இருந்த இசைநூல்கள் ஆகும்.[31] இவையாவும் இன்று இறந்துபட்டன.

**இசைக் கருவிகள் :**

இசையை எழுப்பும் கருவிகள் பலவகைப்படும். இக்கருவிகளைப் பசிய நிறமுள்ள பைகளுக்குள்ளே போட்டு கார்காலத்தில் பழுக்கும் பலா காய்களைப் போன்று தோளில் வைத்துச் சுமக்கும் கம்பின் இருபக்கத்திலும் பாரம் ஒத்திருக்கும்படிக் கட்டித் தூக்கிச் செல்வர் பாணர்.[32] இவ்விசைக்

கருவிகளைத் தொற் கருவிகள், துளைக் கருவிகள், நரம்புக் கருவிகள், மிடற்றுக் கருவிகள் என நான்கு பிரிவுகளாகப் பிரிக்கலாம். சங்க நூல்களில் வில்யாழும், சீறியாழும், பேரியாழும் குறிக்கப்பட்டிருக்கின்றன.[33] பத்துப் பாட்டில் நான்கு பாடல்கள் யாழின் அமைப்பைப் பற்றி விரிவாக விளக்குகின்றன. இதில் பத்தல், தோற்பார்வை, ஆணி, வறுவாய், மறுப்பு, திவவு, நரம்பு என்பன இங்குக் காட்டப்படும் யாழின் உறுப்புகள். இதனை சிறுபானாற்றுப் படைணம், மலைபடுகடாமும், பெரும்பானாற்றுப் படையும், பொருநராற்றுப் படையும் சித்தரிக்கின்றன.[34]

ஆடலிலும், போரிலும், இசை விழாக்களிலும் பறைக் கருவி சிறந்த இடம் பெற்றிருந்தது. பறை முரசு, முழவு என வழங்கப்பட்டன. விழாக்களில் முழவு இமிழ்வதை மதுரைக் காஞ்சி, மலைபடுகடாம் போன்ற நூல்கள் குறிப்பிடுகின்றன.[35] முழவு வாரினால் வரிந்து கட்டப்பட்டிருக்கும் என்பதை மலைபடுபடாம், புறநானூறு வரிகளால் அறியலாம்.[36] ஓசை அமைதிக்காக முழவின் பக்கங்களிற் பூசப்பெறும் பசை மண் எனப்படும்.[37] முழவு ஆடவரின் தோள்களுக்கு உவமையாகக் கூறப்பெறும்.[38] முரசம் அமைந்த விதத்தினைப் பல சங்கப் பாடல்களும் அறிவிக்கின்றன.[39] முரசத்தின் ஒலி இடி முழக்கத்திற்கும், கடலொலிக்கும் அருவி ஒலிக்கும் உவமிக்கப்படும்.[40] போர்க்களங்களிலும் முரசங்கள் முழங்கின. முரசங்கள் காலையில் இயம்புகின்றமையைச் சங்கப் பாடல்கள் சாற்றுகின்றன.[41] பதலை என்னும் ஒரு வகை இசைக் கருவி இருந்தமையைச் சங்க இலக்கியங்களால் உணரலாம்.[42] தொண்டகப் பறை கொண்டு புள் ஓப்பினமையை நற்றிணை சாற்றுகிறது.[43] தொண்டகப் பறையின் தாளத்திற்கேற்ப ஆடவர், பெண்டிரோடு கலந்து தெருக்களில் ஆடுவர் என்பதை அகநானூறு குறிக்கின்றது.[44] மதுரைக் காஞ்சி, மலைபடுகடாம் முதலிய நூல்களில் காணப்படும் சிறுபறை ஆகுளி என்பதாகும். இதன் ஒலியினையும், ஒலிக்கப்படும் விதத்தையும் இவ்விலக்கியங்கள் காட்டுகின்றன.[45] மலைபடுகடாம் குறிக்கும் சிறிய பறை எல்லரி என்பதாம்.[46] விளக்கம் பொருந்திய தாளத்தைக் கொண்டு ஒலிக்கும் வலிய வாயையுடையது.

எல்லரி. தடாரி என்பது கிணைப்பறை. புறநானூற்றடிகளாலும், பொருநராற்றுப்படை அடிகளாலும் சங்க காலத்தில் தடாரிப்பறை இருந்தமை தெளிவாகிறது.[47] குழல், சங்க கால இசைக் கருவிகளில் ஒன்று பாட்டைச் சுருதி குன்றாமற்கைக்கொண்டு நிற்கும் தன்மை வாய்ந்தது. குழல் என்பதை மலைபடுகடாம் புலப்படுத்துகிறது.[48] குழலால் எழுப்பிய பாலைப்பண்ணை பெரும்பாணாற்றுப்படை குறிப்பிடுகிறது.[49]

"ஆம்பலங் குழல்"

"தீங்குழணம்பில்"[50]

என்பன ஆம்பற் பண்ணையுடைய புல்லாங்குழல்களைக் காட்டி நிற்கின்றன. வயிர் என்னும் இசைக்கருவி ஊதுகொம்பு என்று இக்காலத்தில் வழங்கப்படுகின்றது. சங்கப் பாடல்கள் வயிற் என்னும் இசைக் கருவி பற்றி கூறுகின்றன.[51]

"மிக அருகிக் காணப்படும் கஞ்சதாளம்

நுண்ணுருக் குற்ற விளங்கடர்ப் பாண்டில்"[52]

என மலைபடுகடாம் பாண்டிலைப் பற்றிப் பேசுகின்றது. சங்கு என்பதும் அக்காலத்திலிருந்த இசைக்கருவிகளுள் ஒன்றாம். இங்ஙனம் சங்க இலக்கியங்களின் மூலமும், தொல்காப்பியத்தின் மூலமும், சங்க காலத்தில் இசை பெற்றிருந்த சிறப்புப் புலனாகும்.

**கூத்துக்கலை**

தமிழர் போற்றி வளர்த்த கலைகளில் கூத்தும் ஒன்று. இசைக்கலையோடு இணைந்து வளர்ந்த கலை இதுவாகும். இக்கலை ஆடவர், பெண்டிர் இருசாரார்க்கும் பொதுவாகும். விழாக்களின் போது கூத்தர்கள் மக்களைத் தம் ஆடல், பாடல்களால் மகிழ்வித்தனர். மக்களும், மன்னர்களும் கூத்தர்களைப் பேணினர். நாளிலெத்து மக்களும் ஆடிப்பாடி மகிழ்ந்ததற்குச் சங்க நூல்களில் எண்ணற்ற சான்றுகள் உள்ளன. பரதவர், குரவர் போன்ற மக்கள் பொழுதுபோக்கின் போது ஆடுவது தவிர,

இக்கலையைத் தம் வாழ்விற்குக் கருவியாகக் கொண்ட தனி இனத்தவரும் இருந்தனர்.

**கூத்து நூல்கள் :**

சங்க இலக்கியத்தில் கூத்து நூல்கள் பற்றிய குறிப்பேதும் இல்லை, எனினும் பழைய கூத்து நூல்கள் பல இருந்து அழிந்தன என்பதை உரையாசிரியர்கள் மூலம் அறிகின்றோம். மாதவி 'நாடக நன்னூல்' நன்கு கடைப்பிடித்து ஆடினாள். எனவே, நாடக கூத்து நூல் இருந்தது பெறப்படும்.[53] யாப்பருங்கல உரையின் வழிச் செயிற்றியம் சயந்தம் பொய்கையார் நூல் என்பனவற்றை அறிகிறோம்.[54] 'விளக்கத்தார் கூத்து' என்பதொன்றும் இருந்துள்ளது. இன்னும், 'செயன்முறை', 'மதிவாணனார் நாடகத் தமிழ்' என்னும் நூல்களும் அறியப்படும்.

**கூத்துக்கலைஞர்கள்**

விறலியர், பாணர் இனத்தில் ஒரு பிரிவினர். ஆடல் தொழில் புரியும் ஆண்மக்கள் கூத்தர் எனப்படுவர். பெண்கள் விறலியர் எனப்படுவர். பாணனும், பாடினியும் ஒரு வகுப்பார் என்றும், கூத்தரும், கூத்தியும் பாணர்களில் ஒரு பிரிவினர் என்றும், விறலியர் இவ்விரண்டும் அல்லாத ஒரு தனி இனம் என்றும் கூறுவாருமுண்டு. பாடினிகளே விறலியர் என்று மொழி நரும் உண்டு. எண்வகைச் சுவையும் உள்ளத்தில் உதிக்கும் குறிப்புக்களும் வெளிப்பட ஆடுதல். விறலாதலின் அதனை ஆடுபவள் விறலி எனப்பட்டாள். இவர்களை வேந்தர்களும் மன்னர்களும், வள்ளல்களும், நிலக்கிழார்களும் ஆதரித்து வந்தனர். மன்னர்கள் அவர்களுக்குப் பொற்கலங்களைப் பொற்றாமரைப் பூவை, யானையைப் பரிசளித்து வந்தனர். நன்னன் சேய் என்னும் சங்க கால அரசன் விறலியர்க்குப் பேரணிகலங்களைப் பரிசளித்து வந்தான் என்பதை மலைபடுகடாம் உணர்த்தி நிற்கின்றது.

"தலை வன் றாமறை மலைய விறலியர்
சீர்கெழு சிறப்பின் விளங்கிழை யணிய"[55]

விறலியாற்றுப்படை என்பது வேந்தன் புகழைப் பாடுவதும், விறலியை ஆற்றுப்படுத்துவதுமாம். தொகைநூல்கள் பல விறலியறைப் பற்றிப் பேசுகின்றன. விறலியர் என்றால் கூத்தி, ஆடுமகள், ஆடுகளமகள், பாடன் மகடூஉ, பதினாறு வயதுப்பெண் என்று நிகண்டுகளில் குறிப்பிட்டுள்ளது. விறலியர் சங்க காலத்தில் கூத்துக்களையைக் காத்துவந்தனர். இவர்கள் ஆடும் அரங்கை ஆடுகளம்,அரங்கம், அம்பலம், கூத்தம்பலம், ஆடரங்கம், மன்றம் என அழைத்தனர்.

விழாக் காலங்களில் விறலியர் மறலியும் உவக்கும் பல்வேறு கூத்துக்களை ஆடுவர். விழாக்களில் அரங்கேறிய விறலியர் சிறப்புற ஆடினர் என்று கண்டால் அவர்களுக்கு அரசன் அரிய பொன் அணிகலன்களையும், பிற விலையுயர்ந்த பொருள்களையும் பரிசாக அளிப்பான் ; பட்டங்களையும் வழங்குவான். மாதவியாகிய மேதகு விறலிக்கு மன்னன் தலைக்கோல் என்னும் பட்டம் சூட்டினான் என்று இளங்கோவடிகள் காட்டுகின்றார்.[56]

ஆடல், பாடல் வளர்ச்சியுற்றுக் கூத்தாக எழுந்தது கூத்தாடுபவர்கள் கூத்தர் எனப்பட்டனர். கூத்தாடும் மகளிர் கூத்தி எனக் கூறப்படுவர். கூத்தாடும் இடம் அம்பலம் ஆடும். அரங்கு, கூத்தம் பலம், கூத்து மேடை என அழைக்கப் பெறும்.

வயிரியரும் ஒரு வகை ஆடல்மக்கள். பன் அமைந்த நரம்பினையுடைய தோலாற் போர்க்கப்பட்ட யாழையும், மார்ச்சனை நிறைந்த மத்தளத்தினையுமுடைய வயிரியர் என இவரைப் புறநானூறு குறிக்கும்.[57] கோடியரும் கூத்தராவர். விழாவின் கண் ஆடும் கோடியரின் வேறுபட்ட காலம் போல அடைவடைவே தோன்றி இயங்கிப் போகின்ற இயல்பையுடையது. இவ்வுலகம் என உறையூர் முதுகண்ணன் சாத்தனார் பாடுவார்.[58]

**வள்ளிக்கூத்து :**

சங்க நாளில் எல்லாத் துறைகளிலும் ஆடலும், பாடலும் விரவியிருந்தன. பண்டையோர் ஆடிய ஆடல்களில் வள்ளிக்கூத்து என்பதும் ஒன்று. நாட்டுக்கு வளமும், வெற்றியும் கொணர்ந்த வள்ளியின் பெருமைகளைப் பாடி ஆடுவது இதுவாகும். தொல்காப்பியர் இதனை 'வாடா வள்ளி' என்பர்.[59] வாடாவள்ளியினால் வளம் பல தரும் நாடுகளைப் பற்றிப் பெரும்பாணாற்றுப்படை,

வாடா வள்ளியின் வளம்பல தரூஉம்

நாடுபல கழிந்த பின்றை.[60]

என்கிறது. இக்கூத்தினை ஆடவரும், பெண்டிரும் ஆடுவர். இஃது இழிந்தோர் காணும் கூத்தென்பர்.[61]

**குரவைக் கூத்து :**

'காதலையோ, போர் வெற்றியையோ பொருளாகக் கொண்ட குறவைச் செய்யுட்களைப் பாடிக் கொண்டு, எழுவரோ அல்லது ஒன்பதின்மரோ வட்டமாக நின்று, கை கோர்த்துக் கொண்டு ஆடுவது குரவைக் கூத்தாகும்'[62] என்று கலைக் களஞ்சியம் விளக்கம் கூறுகிறது. 'குரவைக் கூத்தே கை கோர்த்தாடல்' (திவாகரம் நூ.1963)என்கிறது திவாகரம். பொதுப்பட அமைந்த இவ்விளக்கங்களால், 'குரவை' ஒன்பது பாட்டொடு கூடியதென்றும், இருபாலார்க்கும் உரியதென்றும் அறியலாம். தழூஉ (கலி.104) தழுவணி (குறு.244) தெற்றி (புற.53) என்னும் பெயர்களாலும் குரவை சுட்டப் படுகின்றது. சங்க காலத்தில் பொழுதுபோக்கு, போர்க்களம், இறை வழிபாடு ஆகிய மூவகைச் சூழ்நிலையில் குரவை ஆடப்பட்டு வந்துள்ளதாகத் தெரிகிறது. இது போரில் வெற்றியின் வெளிப்பாடாகவும், இறைவழிபாட்டில் சடங்காகவும் அமைகின்றது. பாலை ஒழிந்த நெய்தல், குறிஞ்சி, முல்லை, மருத நிலங்களில் வாழ்ந்த மக்கள் குரவைக் கூத்தை ஆடினர். நெய்தலில் கடற்கரை மணலிலும், சோலையிலும் குறிஞ்சி நிலத்தில் கடம்ப மரத்தின் கீழும்,

வேங்கை மரத்தினையுடைய முன்றிலிலும், முல்லை நிலத்தில் மன்றங்களிலும், மருத நிலத்தில் மருதப் பரப்பிலும் நீர்த் துறையிலும், காஞ்சி மர நிழலிலும் இது ஆடப்பெற்றது.[63]

கார்காலத் தைத் திங்களின் எஞ்சி நின்ற குளிர்ந்த மழையினையுடைய இறுதி நாளில் குரவை ஆடப்பட்டதனை இரு பாடல்கள் குறிப்பிடுகின்றன.[64] குரவையாடும் போது மகளிர் மது அருந்தும் பழக்கம் (அக.336) இருந்துள்ளது.[65] 'குறிஞ்சி நிலத்தே' காலைப் பொழுதில் மதுவருந்திய குறவர் தம் மனைவியரோடு சேர்ந்து, சிறுபறை ஒலிப்ப மலையுச்சியில் குரவைக் கூத்தாடியதை மலைபடுகடாம் பாடல் சுட்டுகிறது.[66]

துன்பம் நீங்க வேண்டி வேலன் நடத்தும் வெறியாட்டின் போது மன்றுகள் தோறும் மகளிர் குரவையாடு தலை மதுரைக் காஞ்சியும்[67] கானவர் தேறலை உண்டு குரவையயர, மகளிர் தம் கையினாலே அவர்கள் கையினைத் தழீஇ முதற்கை கொடுத்துக் குரவையாடிய செய்தியை முருகாற்றுப் படையும் கூறுகின்றன.[68] கணவன் தன்னைச் சேரும்படி, மலையில் உறைகின்ற தெய்வம் மனமகிழுமாறு மனைவி, தோழியருடனும், ஆயத்தாருடனும் குரவையாடிய செய்தியைக் குறிஞ்சிக்கலி குறிப்பிடுகிறது.[69] வேங்கைப் பூக்கள் பரந்து பாறைகளை அழகுநுறுத்தும் முற்றத்தில் குறவர்கள் ஆடலில் வல்ல தம் மனைவியரோடு குரவை ஆடுவர்.[70] குறிஞ்சி நிலமக்கள் தங்கள் குரவையின் போது குறிஞ்சி நிலத் தெய்வமான சேயோனை - முருகனைப் - பரவிப் பாடுவர் என அறியலாம். மூங்கிற் குழாயில் பெய்த முற்றிய கள்ளைக் குடித்து விட்டு வேங்கை முற்றத்தில் குரவையாடினர்.[71] குறுகிய இறப்பினையுடைய குடிசையில் வாழும் குறவர் இங்ஙனம் மூங்கிற் குழாயில் விளைந்த கள்ளையுண்டு. குரவையாடியதைப் புறநானூறும் கூறும்.[72]

முல்லை நிலத்தே ஆடும் குரவை, ஆய்ச்சியர் குரவை எனப்படும். முல்லை நிலத்து ஆயர் நடத்தும் ஏறுதழுவுதல் என்னும் விழாவின் இறுதியில்,

விழாவிற் கலந்து கொண்ட ஏறுகளை மேயும் புலத்திற் போக்கிவிட்டு வந்த தம் காதலரின் கைகளைப் பற்றிக் கொண்டு ஆய மகளிர் இன்பமுடன் குரவைக் கூத்தாடுவர்.[73] குரவைக் கூத்தாடும்போது பாடல்கள் பாடுவர். அப்பாடல்களில் ஆய மகளிர், ஆயர் ஆகியோரின் காதலும், வீரமும் இசையோடு கலந்து இன்பம் செய்யும் அவ்வாறு குரவையாடும் போது நாட்டையாளும் மன்னனை வாழ்த்தியும், தெய்வத்தைப் (மாயோனை) பரவியும் பாடியாடுவர்.[74]

'மருதநில மகளிர்' பொன் அணிகளைக் களைதல் இல்லாதவராகிப் புதிது புதிதான குரவைக் கூத்தைப் புகார் நகரத்தே ஆடினர் எனப் பதிற்றுப்பத்தும், நீருண்ணுந் துறையில் குடத்தை வைத்து மகளிர் பலர் ஒருங்கு கூடித் தலைவனது பரத்தமை ஒழுக்கத்தைப் பொருளாகக் கொண்ட பாடல்களைப் பாடிக் காஞ்சிமர நிழலில் குரவைக் கூத்தாடினர் என அகநானூறும் குறிப்பிடுகின்றன.[75]

'நெய்தல்நில மகளிர்' வெண்மணற்பரப்பில் குரவையாடுதலும், பரதவர் மதுவையுண்டு குரவைக் கூத்திற்கு ஏற்ற தாளத்தோடு ஆடுதலும் ஆகிய குறிப்புகளைச் சங்க இலக்கியங்கள் தருகின்றன.[76] நீல மணிபோலும் கழிமுள்ளி மலர் நிரம்பிய மணல் குன்றுகள் நிறைந்த கடற்கானலில் பரதவ மகளிர் ஆடிய குறவையைப் பற்றி மதுரைக் காஞ்சியும் குறிக்கிறது.[77] திமிலையுடைய பரதவர்கள் வெப்புடைய மதுவுண்டு தாளத்தோடு ஆடியதனைப் புறநானூறு பேசுகிறது.[78] போர்க்களிப்பினாலும், வெற்றிக்களிப்பினாலும் போர்க்களங்களில் வீரர், விறலியர் ஆடும் குரவைக் கூத்தைத் தொல்காப்பியமும், புறப்பொருள் வெண்பா மாலையும் கூறுகின்றன.[79]

**துணங்கைக் கூத்து :**

துணங்கையாவது "முடக்கிய இரு கைகளையும் விலாப்புடைகளில் ஒற்றியடித்துக் கொண்டு அசைந்தாடும் ஒருவகைக் கூத்து"[80] என்று தமிழ்ப்

பேரகராதி விளக்கம் கூறுகிறது. இக்கூத்தினை ஆடும் முறைபற்றி "முடக்கிய இருகை பழுப்புடையொற்றி, துடக்கிய நடையது துணங்கையாகும்"[81] என்று திவாகரம் கூறுவது இந்த விளக்குத்துக்கு அடிப்படையாகிறது. இக்கூத்தைச் சிலப்பதிகாரத்தில் அடியார்க்கு நல்லார் 'சிங்கிக் கூத்து' என்பார்.[82] விழாவின் போது தெருக்களில் துணங்கை ஆடினர். இதற்கு ஏற்ப முழவு ஒலித்தது.

> "முழவு இமிழும் அகலாங்கண்
> விழவு நின்ற வியன்மறுகில்
> துணங்கை."[83]

என்று மதுரைக்காஞ்சியும் கூறுகிறது. இத்துணங்கைக் கூத்தில் மகளிர் பங்கு பெறுவர். ஆடவரும், பெண்டிரும் சேர்ந்து ஆடுவர். ஆடவர், மகளிர்க்கு முதற்கை கொடுத்தலைக் கலியும், புறமும், இயல்பும்[84] மகளிர் தம்முள் தழுவியாடும் இக்கூத்து, 'கலிகெழு துணங்கை' குறிப்பிடப்படுகிறது.[85] என்றும் குறிப்பிடுகிறது. தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியனின் பகைவர் நாட்டில், மகளிர் துணங்கைக் கூத்தாடுவதை மறந்திருந்தனர் என்று மதுரைக் காஞ்சி கூறும்.[86] மனமகிழ்ச்சி இல்லாததால் ஆட்டத்தை மறந்திருந்தனர் என்பதை இதனால் உணரலாம். முழவு ஒலிக்கேற்ப மகளிர் ஆடும் துணங்கைக் கூத்திற்குத் தழுவுதலையுடைய தெப்பமாக, முழங்கும் ஏற்றைப்போல ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் முதற்கை கொடுத்து ஆடிவருதலை அறிந்து, அவன் மனைவி ஊடல் கொண்டாள் எனப் பதிற்றுப்பத்துக் காட்டுகின்றது.[87]

தலைவன் பரத்தையுடன் துணங்கையாடுதல், தலைவி வாடுதல், அவர்கள் ஆடும் துணங்கை ஆரவாரம் தலைவியின் துயிலைப் போக்குதல் போன்றவற்றைக் கலித் தொகையினால் அறியலாம்.[88] துணங்கையில் நாட்டங்கொண்ட இறைவியைத் 'துணங்கையஞ் செல்வி' என்று பெரும்பாணாற்றுப்படை (459) சிறப்பிக்கிறது. மகளிர் ஆடும்

துணங்கையேயன்றிப் பேய்கள் ஆடும் துணங்கையும், வீரர்கள் ஆடும் துணங்கையும் சங்க இலக்கியங்களில் கூறப்பட்டுள்ளன.

**கழைக்கூத்து :**

கழைக்கூத்து என்னும் கயிறாடு கூத்து பற்றிய சங்கநூற் குறிப்புகளிலிருந்து, அஃது இரு மூங்கிலை நட்டு, அவற்றைக் கயிற்றால் இணைத்து அக்கயிற்றின் மீதேறி ஆடும் கூத்தென்பதும், கயிற்றின் மீது மகளிர் ஏறி நடந்து, ஆடுவர் என்பதும், அப்போது பறை; பிற இயங்களுடன் முழக்கப் பெறும் என்பதும் தெரிகின்றன.[89] வந்துள்ள பகுதிகளால் இதனை அறியலாம். பிற நாட்டிலிருந்து தமிழகம் போந்த ஆரியர் சிலரும், இவ்வாறு ஆடுவதில் ஈடுபட்டிருந்ததனை "ஆரியர் கயிறாடு பறையில் கால்பொரக் கலங்கி வெண்ணெற்றொலிக்கும்"[90] என்னும் குறுந்தொகைச் செய்யுளால் அறியலாம். ஆரியக் கூத்து என்னும் வழக்கு இதுபற்றி எழுந்ததாகலாம். ஆட்டத்திற்கேற்ற இசை பாடும் மகளிர் தாம் கொண்ட இசைக் கருவியின் நரம்புகள் நிலை திரியவும். அதனைத் தம் வெம்முலையில் தடவிச் சூடேற்றிப் பண்ணுமுறையில் நிறுத்தினர் என நக்கீரர் கூறுவார்.[91]

**அல்லியங்கூத்து :**

ஆணாகவும், பெண்ணாகவும் கோலம் செய்யப்பெற்ற பாவைகளை ஆடச் செய்யும் கூத்து 'அல்லியங்கூத்து' என்று குறிப்பிடப்படுகிறது.

"வல்லோன் தைஇய வரிவனப் புற்ற
அல்லிப் பாவை ஆடுவனப் பேய்ப்ப..."[92]

**பாண்டரங்கம், கொடுகொட்டி, காபாலம் :**

சிவபெருமான் ஆடலாகப் பாண்டரங்கம், கொடுகொட்டி, கபாலம் என்பனவற்றைக் கலித்தொகைக் கடவுள் வாழ்த்துக் குறிப்பிட்டாலும்,[93] அதுபற்றிய விளக்கத்தை அதன் உரையாலும் பிற்கால நூல்களாலுமே அறிய முடிகின்றது. சிவன் அக்கூத்துகளை ஆடுங்கால், உமையம்மை அருகிருந்து அதற்கேற்ற தாளங்களை (சீர் தூக்கு, பாணி) வழங்குவாள் என்று குறிப்பிட்டிருப்பது காட்டுவதாக உள்ளது.

**உண்டாட்டு :**

பாலை நிலத்தில் மறவர்கள் பகைப்புலத்து ஆக்களைக் கொண்டு வந்து, தாம் தரவேண்டிய கள்விலையைக் கொடுத்துவிட்டு, ஆட்டுக் கிடாயை வெட்டிக் கள்ளோடு உண்டு, மடித்த வாயை உடைய தண்ணுமை நடுவே ஒலிக்கத் தம் தோளை அசைத்து ஆடியதைப் பெரும்பாணாற்றுப்படை குறிப்பிடுகிறது.[94]

**வெறியாட்டு :**

சமயச்சடங்கோடு ஆடல் கலை நெருங்கிய தொடர்பு கொண்டிருந்தது. வெறியாட்டு என்பது முருகனை வேண்டிச் செய்யும் சடங்கு. வெறியாட்டில் முருகனுக்குப் பூசை செய்வோன் "வேலன்" என்னும் பெயர் பெறுகின்றான். முருகன் ஆவேசம் தன்மேல் வரக்கொண்டு இவன் ஆடுவான். இவன் பச்சிலைக் கொடியால் நறைக்காயை இடையிட்டு, காட்டு மல்லிகையுடன் வெண்டாளியையும் சேர்த்துக் கட்டின கண்ணியைச் சூடியிருப்பான். நறுமனம் மிக்க சந்தனத்தை மார்பில் பூசியிருப்பான்.[95] இவ்வேலன் வெறியாடி முருகனை வழிபடும் இடம் வெறியார்களம்[96] எனப்படும். இவ்வெறியாட்டு நடுநாளாகிய இரவின் சாமப் பொழுதில் நடைபெறும். வெறிக்களம் பெரும்பாலும் வீட்டின் முற்றமாக அமைந்திருக்கும். அம்முற்றத்தில் மணல் பரப்பப்பட்டிருக்கும்.[97] மேலும் அக்களம் நன்கு அலங்கரிக்கப்பட்டிருக்கும். முருகப் பெருமானை அங்கு எழுந்தருளப் பண்ணுவான். இனிய வாத்தியங்கள் ஒலிக்க, அப்பெருமானின் இருக்கையாகிய கடம்பையும் ஊர்தியாகிய யானையும் புகழ்ந்து பாடுவான்.[98]

அங்குள்ள மரத்தில் ஆட்டுவிடைக் கட்டியிருப்பான். அந்த மறியை அறுத்து, செந்தினையை அதிலிருந்து பெருகும் குருதியுடன் கலந்து பலியாகத் தூவுவான். முருகப் பெருமானின் பெயர்களைக் கூறி விளித்து, அவனுடைய மாண்புமிகு புகழ்களை இசையுடன் கலந்து பாடுவான். பல்வகை மலர்களையும் தூவி வழிபடுவான்.[99]

**பொருநர்க்குப் பரிசு :**

மன்னரின் அரண்மனைகளில் ஆடல் மகளிர் இருந்தனர். கரிகாலன் புலவர்க்களித்த விருந்தின் போது மண்ணமை முழவொடு பெண்கள் ஆடினர்.[100] இத்தகைய கலைமாக்கட்கு மன்னர்கள் பெரும் பொருளைப் பரிசாக நல்கினர். அக்கொடைச் செயல் புலவர்களால் பாராட்டப்படுகின்றது. அவர்கட்குக் களிறும் பொற்றாமரையும் கொடுத்துப் பாராட்டியுள்ளனர்.[101] மன்னர்கள் கூத்தர்களைப் பேணிய சிறப்பால் அவர்கள் கோடியர், தலைவர் எனப் பாராட்டப்பட்டனர். "பாடல் பற்றிய பயனுடை எழா அல் கோடியர் தலைவ" (பொருந. 56:57) எனத் திருமாவளவன் விளிக்கப்படுதல் நோக்குதற்குரியது. பாணர், பொருநர் ஆகியோர்க்கு அடையாத வாயில்கள் என மன்னரின் அரண்மனைகள் பாராட்டப்பட்டன.[102] பகைவர்க்கு நெருங்க முடியாத மன்னர் அரண்மனை விறலியர்க்கும், கூத்தர்க்கும் எளிதாகவிருந்தது.

**நாடகக்கலை :**

கவின் கலைகளில் நாடகக் கலைக்குத் தனியிடமுண்டு. செவிக்கும், கண்ணுக்கும், கருத்துக்கும் ஒரே நேரத்தில் விருந்தளிப்பது நாடகம். இத்தகைய சிறப்புமிக்க அருங்கலை நம் நாட்டில் பன்னெடுங்காலமாக வளர்ச்சியுற்றுப் படிப்படியே முன்னேறி வந்துள்ளது. அவ்வரலாறு சுவைமிக்கதாகும்.

கி.மு. மூன்றாம் நூற்றாண்டினதாகக் கருதப்படும் தொல்காப்பியம், நாடக வழக்கினையும் உலகியல் வழக்கினையும் குறிப்பிட்டுள்ளது.[103] இளம்பூரணர், "நாடக வழக்காவது, சுவை பட வருவனவெல்லாம் ஓரிடத்து வந்தனவாகத் தொகுத்துக் கூறுதல்"[104] என்றார். பரிபாடல், "தெரிமாண் தமிழ் மும்மைத் தென்னம் பொருப்பன்" (பரி 4:1) என்கிறது. எனவே, முத்தமிழ் என்ற வழக்கு மிகத் தொன்மையானது எனவுணரப்படும்.

தொல்காப்பிய மெய்ப்பாட்டியல் நாடகக் கலைஞர்கள் வெளிப்படுத்த வேண்டிய நகை, அழுகை, இளிவரல், மருட்கை, அச்சம், பெருமிதம், வெகுளி, உவகை என்னும் எட்டு மெய்ப்பாடுகளையும், அவை தோன்றுவதற்கு வேண்டும் நிலைக்களன்களையும் குறிப்பிட்டுள்ளது.[105] தொல்காப்பியர் கூறிய இத்தகைய எண்வகை மெய்ப்பாடுகளும், அவை தோன்றும் வழிமுறைகளும் இன்றளவும் நாடக மாந்தர்கள் வெளிப்படுத்த வேண்டிய செயல்பாடுகளாகும்.

நாடகம் என்னும் சொல் நாட்டியம் என்னும் பொருளிலேயே பண்டு ஆளப்பட்டது என்பதனைப் பல சான்றுகளால் அறியலாம். ஆடல் மகள் நாடக மகள் என்று கூறப்பட்டாள். "நாடக மேத்தும் நாடகக் கணிகை" (சிலம்பு அடி.15) என்னும் இலக்கியக் குறிப்பு சான்றாம். ஒரு பாடலைப் பாடி அதில் வரும் உணர்ச்சியை அவிநயத்தால் காட்டுவதும் ஒரு கதையை எடுத்துக்கொண்டு அதனை ஒருவர் நடித்துக் காட்டுவதுமாகிய இரு கூத்துகள் இருந்தனவென அறியலாம். கதை தழுவிய கூத்தே நாடகமெனப்பட்டது போலும்.

"ஆடற் கூத்தினோடு அவிநயந்தெரிவோர்
நாடகக் காப்பிய நன்னூல் நுனிப்போர்"[106]

என்பதில் ஆடற் கூத்தும், நாடகமும் வெவ்வேறாகக் கூறப்பட்டுள்ளன.

"வாயிற் கூத்தும் சேரிப் பாடலும்
கோயில் நாடகக் குழுக்களும்..."[107]

என்ற பெருங்கதைக் குறிப்பும், இதனையே கூறிற்றுப் போலும். கூத்தும் நாடகமும் நடக்கும் களம் ஆடுகளம் எனப்பட்டது. ஆடுகளத்தின் அமைப்பும், அதில் கையாளப்பட்ட திரை வகைகளும் சிலம்பில் விளக்கப்பட்டுள்ளன.[108]

நாடகம் என்னும் சொல்லைப் பட்டினப்பலையும், 'நாடகமாந்தர்' என்னும் தொடர்ப்பெயரைப் பெரும்பாணாற்றுப்படையும் கூறுகின்றன.[109] இவை கொண்டு பண்டு நாடகமும், அதில் ஈடுபடும் நாடகமாந்தரும் இருந்தமையினையும், அங்கு இயங்கள் இசைக்கப் பெற்றமையினையும் உய்த்துணர முடிகின்றது. நாட்டின் சென்ற காலத்தையும், நிகழ்காலத்தையும், எதிர்காலத்தையும் தன்னகத்து அடக்கிக் காட்டுதலால் நாடு+அகம்= நாடகம் என்றாயிற்று[110] என்று கூறும் விளக்கம் ஊகமாகவே கொள்ளப்படும். அரங்கம், எழினி, நாடகமாந்தர் முதலிய நாடகத் தொடர்பான செய்திகளைச் சிலப்பதிகாரத்தாலும், அதன் உரைகளாலுமே அறிய முடிகின்றது.

**கட்டடக் கலை :**

சங்க இலக்கியங்களின் வழியே அக்கால மக்களின் கட்டிடக் கலையின் சிறப்பினை அறிய முடிகிறது. செல்வரும் மன்னரும், வாழ்ந்த வீடுகள் வழியே அக்காலக் கட்டிடக்கலை மாட்சியைக் கண்டு மகிழலாம். சங்க காலத்தில் நகரப் பகுதிகளில் பெரிய வீடுகளும், மாளிகைகளும், அரண்மனைகளும் அமைந்திருந்தன. இவை விண்ணுற உயர்ந்து காணப்பட்டன. வீடுகளுக்கும், வெளிப்புற மதில்களுக்கும் வெண்சுதை பூசப்பட்டது. அது வெள்ளியினால் அமைந்தாற் போல் அவ்வளவு வெண்மையாக இருந்தது.[111]

காவிரிப் பூம்பட்டினத்துச் சாலையோரத்தில் பெரிய மாடங்கள் இருந்தன. வெண்சுதை பூசிய அவ்வீட்டுச் சுவர்கள் தேரோட்டத்தால் எழும் துகளினால் அழகு மாறிப் புழுதியாடிய யானைகள் போல் தோற்றமளித்தன.[112] உயரமான வீடுகள் மாடிகளைக் கொண்டதாக அமைக்கப்பட்டன. மொட்டை மாடிவேயாமாடம் எனப்பட்டது. கோடைக்காலத்தில் நிலவு பயன்கொள்ளுதற்கு நிலா முற்றங்கள் அமைக்கப்பட்டிருந்தன. கூதிர் காலத்தில் காற்றுச் சாளரங்கள் சாளரங்கள் அடைப்பட்டுக் கிடந்தன.[113] விண்ணளாவ வளர்ந்த பல்படைப் புரிசை

வீடுகளில் உயர்ந்த நிலைகள் இருந்தன. அவற்றில் தெய்வ உருவம் பொறிக்கப்பட்டிருந்தது. அதில் நெய் தடவி வழிபட்டதால் கரிந்து காணப்பட்டது. தின்மையான இரட்டைக் கதவுகள் அமைந்திருந்தன.[114] நிலவுப்பயன் கொள்ளும் நிலா முற்றத்திலிருந்து மழை நீர் கீழே வீழ்தற்குக் கிம்புரியின் பிளந்த வாய் போன்ற வடிகுழாய் அமைக்கப்பட்டிருந்ததாம்.[115]

சங்க காலத்தில் மிகப்பெரிய கட்டிடங்கள் எழுப்பப்பட்டன என்பதற்குப் பல எடுத்துக்காட்டுகள் சங்க இலக்கியங்களுள் காணப்படுகின்றன. மதுரையிலிருந்த அந்தணர்பள்ளிக் குன்றினை இடையே குடைந்து அமைத்தாற் போல அவ்வளவு பெரிதாக இருந்தது.[116]

"குன்று குயின்றன்ன அந்தணர் பள்ளியும்"

வீடுகளில் ஓவியங்கள் தீட்டப்பட்டிருந்தன.[117]

தமிழரின் கட்டிடக் கலையின் மேன்மை பற்றி அறிய நெடுநல் வாடை பெரிதும் உதவுகின்றது. இந்நூலில் தான் அக்காலத்தில் மனை நூல்கள் பயில வழங்கியதற்குச் சான்று காணப்படுகிறது. பாண்டியனுடைய அரண்மனையைக் கட்டிட நூலை நன்குணர்ந்த கட்டிடக்கலைஞர்கள் கட்டி முடித்தனர். சித்திரைத் திங்களின் நடுவில் பத்தில் நின்ற யாதானும் ஓர் நாளில் பதினைந்தாம் நாழிகையில் மனையமைப்பதற்குரிய முழுத்தம் செய்யப்பட்டது. சிற்ப நூலையறிந்த கலைஞர் கூரியதாக நூலை நேராகப் பிடித்து, திசைகளைக் குறித்துக் கொண்டு அத்திசைகளில் நிற்கும் தெய்வங்களை நோக்கி, அரசனுடைய பெருமைக்கும் தேவைக்கும் ஏற்ப மனைகளையும், வாயில்களையும் மண்டபங்களையும் வகுத்தமைத்தனர்.

இங்ஙனம் அமைக்கப்பட்ட அரண்மனையின் வாயிலில் பெரிய இரட்டைக் கதவுகள் இருந்தன. இரும்புப் பட்டைகள் ஆணிகளாலே தைக்கப்பட்டன. செவ்வரக் கினையூட்டிச் செந்நிறம் பூசப்பட்டது. உத்திரப் பலகை பொருத்தப்பட்டது. உள்ளே, வலிய தாழ்ப்பாள் இடப்பட்டது. அத்தகு வாயிலில் வெற்றிக் கொடியோடு யானைகள் புகுமளவிற்குக்

குன்றினைக் குடைந்தமைத் தாலொத்த உயரமான வாயில் அமைந்திருந்தது.[118] அரண்மனையில் பல பகுதிகள் இருந்தன. முற்றத்தில் தருமணல் பரப்பினர். அன்னங்கள் அங்கு நடை கற்றன. பல்லுளைப் புரவிகள் குரலெழுப்பின. நிலா முற்றத்திலிருந்து கீழே நீர் விழும் ஓசையும், மாளிகையில் எதிரொலித்தது. யவனர் இயற்றிய பாவை விளக்கின் பெரிய சுடர் மங்கும்தோறும் நெய் வார்த்துக் கொண்டிருந்தனர். மன்னனின் அந்தப்புரம் தனிக் காவலுடன் விளங்கிற்று. வெள்ளி போன்ற சுதை பூசப்பட்டிருந்தது. மணி போன்ற திண்ணிய தூண்கள் இருந்தன. செம்பினால் செய்தாலொத்த சுவர்களில் பல கொடியுருவங்கள் வரையப்பட்டிருந்தன.[119]

வீடுகள் மட்டுமின்றிப் பகையவர்களின் இயக்கத்தைக் கண்டறிவதற்காகக் கட்டப்பட்ட பார்வல் இருக்கைகளும், கலங்கரை விளக்கங்களும் மிகவும் உயரமாகக் கட்டப்பட்டன. பார்வல் பாசறை, "பருந்து பறக்கல்லாப் பார்வல் பாசறை" (மதுரைக்.231)என்று கூறப்படுகிறது. தொண்டை நாட்டிலிருந்த கலங்கரை விளக்கம் வானத்துக்கு முட்டுக் கொடுத்த தூணைப் போல உயரமாக இருந்தது. ஏறமுடியாத உச்சியைக் கொண்ட அது வேயா மாடத்தைக் கொண்டிருந்தது. ஏணியின் உதவி கொண்டு அதில் ஏறினர்.[120]

"இட்டிகை நெடுஞ்சுவர் விட்டம் வீழ்ந்தென
மணிப்புறாத் துறந்த மரம்சோர் மாடத்து
எழுதணி கடவுள் போகலின் புல்லென்று
ஒழுகுபலி மறந்த மெழுகாப் புன்றிணை"[121]

என்னும் சங்கச் செய்யுளால் அக்காலக் கோயில்கள் நெடிய சுவர்களோடு கட்டப்பட்டிருந்தமை அறியப்படும். மேற்காட்டிய சான்றுகளால் தமிழர் ஈராயிரம் ஆண்டுகட்கு முன்பே கட்டிடக் கலையில் சிறந்து விளங்கிப் பிற்காலத் திராவிடக் கலையின் முன்னோடிகளாகத் திகழ்ந்தனர் என்று உணரலாம்.

**ஓவியக் கலை :**

ஓவியக்கலை மிகப் பழமையான கவின்கலைகளில் ஒன்றாகும். இயற்கையோடு இயைந்த வாழ்வு நடத்திய பழங்கால மக்கள் தாம் கண்ட விலங்குகள், பறவைகள், மரங்கள், செடி கொடிகள் ஆகியவற்றின் உருவங்களை வரைந்து மகிழ்ந்தனர். சங்க நாளில் ஓவியக்கலை முழுமையான வளர்ச்சியுற்றிருந்தமையின் அக்கலையின் நுட்பங்களை நுவலும் இலக்கண நூல்களும் எழுந்தன. ஆனால், அவை அழிந்து பட்டன. அந்நாளைய கட்டிடங்கள் அழிந்தமையால் ஓவியங்களும் நிலைபெறாது ஒழிந்தன.

ஓவியம், ஓவம், ஓவு என்பன ஒரு பொருட்கிளவிகளாகும். ஓவியம் என்னும் சொல்லை மிகுந்த அழகு என்னும் பொருள் கொண்டதாக அன்றைய சான்றோர் வழங்கினர். அழகிய வீடுகட்கு ஓவியங்களை உவமை கூறினர். 'ஓவத்தன்ன இடனுடை வரைப்பு' (பதிற் 61) எனப் பாரியின் அரண்மனையினைக் கபிலர் பாராட்டினார். இங்ஙனமே, "ஓவத் தன்ன உருகெழு நெடுநகர்" (பதிற் 88) "ஓவத் தன்ன இடனுடை வரைப்பின்" (புறம் 251) "ஓவத் தன்ன வினை புனை நல்லில்" (அகம் 28) எனப் பிற ஆசிரியரும் கூறுதல் காணலாம். வீடுகட்கு மட்டுமின்றி அழகிய இயற்கைக் காட்சிகட்கும் ஓவியமே உவமையாக்கப்பட்டது. பல பூக்களின் தாதுக்களும் உதிர்ந்து அழகிய காட்சி வழங்கிய நீர்த்துறை "ஓவத்தன்ன உண்டுறை" (சிறுபாண் 70) என்று பாராட்டப்பட்டது.

திருப்பரங்குன்றத்தில் அமைந்திருந்த எழுத்து நிலை மண்டபத்தில் (சித்திர சாலை) சுடர்ச்சக்கரத்தின் சித்திரமும் தீட்டப்பட்டிருந்ததாம். (சுடர்ச் சக்கரம் என்பது ஞாயிறு, திங்கள் உள்ளிட்ட கோள்களும், அவை சுற்றி வரும் நீள் வட்ட வடிவமான பாதையும் ஆகும். அதில் இரதி, காமன் ஆகியோர் ஓவியங்களும், கௌதமன் மனைவியாகிய அகலிகையை இந்திரன் புணர்ந்த போது கௌதமன் அறிந்து சினந்தது, அவனது சாபத்தால் இந்திரன் பூனையாகவும், அகலிகை கல்லாகவும் உருமாறியது போன்ற

நிகழ்ச்சிகளை விளக்கும் ஓவியங்களும் இருந்தன. இவ்வோவியங்கள் பற்றி விளக்கிக் கூறுவோரும் இருந்தனர்.[122]

சித்திரக்காரிகள் பல வண்ணங்கள் கொண்டு சுவரில் பாவை வடிவம் தீட்டுதலும் உண்டு. இங்ஙனம் தீட்டும் சுவர்ப் பாவைகள் இல்லத்திலும், மன்றங்களிலும் தெய்வங்களின் பொருட்டு எழுதப்படுவனவாம்.[123] சுவர்ப் பாவைகளுள் அல்லியம் என்னும் கூத்தாடும் அழகை ஒப்பப் புனையப் பெற்ற பாவைச் சித்திரத்தை 'அல்லிப்பாவை'[124] என்று புறநானூறு கூறுகிறது. ஓவியக் கலைஞர்கள் 'கண்ணுள்வினைஞர்' என்றும், ஓவமாக்கள் என்றும் கூறப்பட்டனர். பாண்டியன் தேவி பள்ளி கொள்ளும் கட்டிலின் மேலாகக் கட்டியிருந்த மேற்கட்டியில் மெழுகு பூசப்பட்டு மேடராசி முதலான இராசிகளில் திரியும் சந்திரனும், ரோகினியும் புதிதாக எழுதப்பட்டிருந்தனவாம். தலைவனைப் பிரிந்து வருந்தும் மாதேவி சந்திரனைப் பிரியாமல் உடனாக இருக்கும் ரோகிணியின் நிலை கண்டு, அது போன்ற நிலை தனக்குக் கிட்டவில்லையே என்று வேதனைப்படுவதாக நெடுநல்வாடை குறிப்பிடுகிறது.[126]

ஓவியம், புனையா ஓவியம், புனைந்த ஓவியம் என இரு வகைப்படும். வண்ணம் தீட்டப் பெறாத ஓவியங்கள் புனையா ஓவியம் என்றும், வண்ணம் தீட்டப்பட்ட ஓவியங்கள் புனைந்த ஓவியம் என்றும் கூறப்படுகிறது. வண்ணங்களைக் குழைத்து வைக்கும் பலகை வட்டிகை எனப்பட்டது. ஓவியம் வரைவதற்குத் துகிலிகை பயன்பட்டது. பாதிரிப் பூ அரக்கு நிறம் கொண்டதாகும். அதனைப் பற்றிக் கூற வந்த புலவர் ஒருவர் ஓவியக் கலைஞர்கள் ஒள்ளிய அரக்கு வண்ணம் ஊட்டிய துகிலிகையொத்த துய்த்தலைப் பாதிரி என்கிறார்.[127] சங்க காலத்தில் துணிகளில் ஓவியம் வரையப்பட்டதற்கு உண்டென செய்திகளையும் காண முடிகிறது.

**சிற்பக் கலை :**

பண்டைக் காலந்தொட்டே வளர்ந்து வந்துள்ள கவின் கலைகளில் ஒன்று சிற்பக் கலையாகும். 'மண்ணீட்டாளர்' என்னும் கலைஞர்கள் மண் உருவங்களைச் செய்தனர். பண்டைய காலத்தில் சிற்பங்கள் மரம், மண், கல், உலோகம் முதலியவற்றால் செய்யப்பட்டன. "வழு அறு மரனும் மண்ணும் கல்லும் எழுதிய பாவையும்"[128] என்ற மணிமேகலை பாடல் இதற்கு சான்று பகர்கிறது. சங்க காலச் சிற்பக் கலையின் வளர்ச்சியை அக்காலத்தில் செய்யப்பட்ட சிறுவர்கள் விளையாடும் பொம்மைகள் (பாவை) தெளிவாகக் காட்டுகிறது

"செய்யுறு பாவை அன்ன என்மெய்"[129]

"வரிப்புனை பந்தொடு பாவை தூங்க..."[130]

என்பவற்றால் வினைஞர்களால் அழகுறக் கை புனைந்து இயற்றப்படுவது பாவை என்பது புலனாகும். இதனால், சிற்பக் கலையின் வளர்ச்சியையும், கலைஞர்கள் அதில் காட்டிய ஈடுபாட்டையும் அறிய முடிகிறது. சிறந்த பொன்னாலாகிய உலோகப் பொருள்களாலும் சிற்பங்கள் செய்யப்படுவது உண்டு என்பதற்குச் சங்க காலத்தில் உருவாக்கப்பட்ட பொற்பாவைகளும் சான்றாகின்றன.[131]

விளக்கினை ஏந்தி நிற்கும் முறையில் பாவையை அமைத்து சிற்பக் கலையின் திறத்தைச் சங்க காலத்தில் வெளிப்படுத்தினர். அழகு மிக்க இப்பாவை விளக்கினை மாடத்தில் வைத்து வழிபட்டனர். யவனர்களால் இயற்றப்பட்ட பாவை அக்காலச் சிற்பக் கலை வளர்ச்சிக்கு ஒரு சிறந்த எடுத்துகாட்டாகும்.[132]

வீடுகளில் தச்சர்கள் அழகிய உருவங்களை நிலைப்படியில் உள்ள உத்தரக் கற்பலகையில் அமைந்தனர். திருமகள் உருவமே அதில் இடம் பெற்றது இருபுறமும் செங்கழுநீர்ப் பூக்களைத் தாங்கிய பிடியுருவங்கள் அமைக்கப்பட்டன. நெடுநல்வாடை இதற்கு சான்று பகர்கிறது.[133]

மரங்களில் கூறிய உளிகளைக் கொண்டு சிற்பிகள் அமைக்கும் அழகு மிக்க சிற்பக்கலையின் நுணுக்கத்தை நெடுநல்வாடை பின்வருமாறு கூறுகிறது.

அரசர்கள் பயன்படுத்துதற்குறிய அழகிய கட்டில்களின் கால்கள் நிறை, சூலியின் பால் கட்டிய மார்பு போன்ற குடத்தைக் கொண்டிருந்தன. உள்ளிப் பூண்டு போன்ற கடைசலைக் கொண்டிருந்தன. யானைக் கொம்புகளை இருபுறமும் ஒப்பச்சீவிக் கூறிய சிற்றுளியினால் இடையிடையே இலைவடிவைச் செதுக்கியமைத்தனர். மூட்டு வாயை ஆணிகளால் தைத்தனர். முத்துக் குஞ்சங்கள் தொங்கவிடப்பட்டன.[134] நெடுநல்வாடை காட்டும் இச்சான்றுகளின் வாயிலாக சங்க காலத்தில் மரத்தால் ஆன சிற்பக்கலை வளர்ச்சியை உணர்ந்து கொள்ள முடிகிறது.

மரத்தால் மட்டுமன்றி மண்ணாலும் சிற்பங்கள் செய்யப்பட்டன. வரலாற்றுச் சிறப்புமிக்க புகார், காஞ்சி, அரிக்கமேடு, கொற்கை போன்ற இடங்களில் அகழ்வாய்வுகள் நடந்த போது கிடைத்துள்ள பல்வேறு மண் உருவங்கள் அக்காலத்துச் சிற்பத்திற்குத் தக்க சான்றுகளாகும்.[135]

மண்ணாலான சிற்பங்கள் போலவே சுதைச் சிற்பங்களும் நன்கு வளர்ச்சியுற்றிருந்தன. சுண்ணாம்பை நன்கு அறைத்துக் கரும்புச்சாறு, வெல்லச்சாறு, நெல்லிக்காயின் சாறு முதலியவற்றை ஊற்றி அரைத்து வச்சிரம் போல் செய்து அதைக் கொண்டு உருவங்கள் செய்வது பண்டைய மரபு.

உருவங்களைச் செய்வதற்கு ஏதுவாக உள்ளே வலிய மரத்தாலான முளையொன்று வைக்கப்பட்டுச் செங்கல், கம்பிகள் முதலியவற்றைப் பொருத்தி, சுண்ணாம்புக்காரை பூசி ; மேலே சுதை பூசி உருவங்கள் அமைக்கப்படும்.[136] காவிரிப் பூம்பட்டினத்து அகழ்வாய்வில் இத்தகு

உருவங்கள் கிடைத்துள்ளன. சங்க கால சிற்பக்கலை வளர்ச்சிக்கு தெய்வ வழிபாடு பேருதவி புரிந்தது எனலாம். சங்க இலக்கியங்களை ஆராயும் போது அதில் சங்ககாலத்தவர் தெய்வங்களை உருவமேற்றி வழிபட்டமை புலனாகும். இதனால் அக்காலத்தவர், தெய்வ உருவங்களை மரம், கல், சுதை, மண் மற்றும் பொன் போன்றவற்றால் செய்திருப்பர் என்று உய்த்துணரலாம். சங்ககாலத்தில் கடைபிடிக்கப்பட்ட நடுகல் வழிபாடு சிற்பக்கலையின் வளர்ச்சிக்கு அடித்தளம் அமைத்தது என்று உணரமுடிகிறது.

**விழாக்கள் :**

மக்கள் பலர் கூடி தெய்வங்களின் பொருட்டுச் செய்யும் சிறப்பே விழா ஆகும். விழவு, சாறு என்றும் குறிக்கப்படும்.[137] சங்க காலத் தமிழர்கள் கொண்டாடிய விழாக்கள் பற்றிய குறிப்புகள் சங்க இலக்கியங்களில் கிடைக்கின்றன. அவற்றுள் சில சமயத் தொடர்பானவை. வேறு சில சமூகத் தொடர்பானவையாகும். பேரூர்களிலும் சிற்றூர்களிலும், பெருவிழாக் கொண்டாடி மக்கள் மகிழ்ந்தனர்.[138]

சிற்சில ஊர்களில் எந்நாளும் விழா நடைபெற்றுக் கொண்டிருந்ததாகவும் தெரியவருகின்றது.[139] விழா எடுக்கும் ஊர்களில் அதனை கண்டு களிக்க உள்ளூர் மக்களும் வெளியூர் மக்களும் வந்து திரள்வர்.[140] விழாவிற்குச் செல்லும் ஆடவர், பெண்டிர் தம்மை நன்கு ஆடை அணிகளால் ஒப்பனை செய்து கொண்டு சென்றனர். மேலும், அவர்களுக்கு விழா நிகழ்ச்சிகள் பேருவகையளிப்பனவாகவும் அமைந்தன.[141]

ஆடவரும் பெண்டிரும் இளையரும் முதியருமாகக்கூடிநின்று கண்டு களிக்கும் வண்ணம் தெய்வத்திற்குரிய சிறப்பு விழாக்கள் தெருவீதிகளில் கொண்டாடப்பெற்றன. இது இக்காலத்தில் ஆண்டுக்கு ஓரிரு முறை

நடைபெறும் வீதி வலம் வரும் பெருவிழாக்களை ஒக்கும். பட்டினப் பாலை அடிகளால் வெறியாடுதற்குரிய முருகவேளுக்கும் பலரும் தொழும் வேறு பிற தெய்வங்களுக்கும் அங்காடித் தெருவில் விழாவெடுத்து வழிபட்டமையை இதற்கு எடுத்துகாட்டாகக் கூறலாம்.[142]

விழாக்கள் சந்திரன் நிலவொளியை மேல்மேல் பரப்பி வளரும் வளர்பிறைக் காலத்தில் கொண்டாடப்பட்டன என்றும் நற்றிணையில் வரும் ஒரு குறிப்பினால் உணரலாம். பால்போல் நிலவு எறிக்கும் இரவில் தெருக்களில் பேரொலி மிக மக்கள் கூடி விழா காண்கின்றனர். விழாக்காலத்தில் மக்கள் தூக்கத்தையும் விடுத்து விழா நிகழ்ச்சிகளில் ஈடுபடுகின்றனர். ஊரே கண்ணுறங்காது உள்ளது.[143]

ஊரில் திருவிழா நடைபெறப் போகும் செய்தியை யாவருக்கும் தெரிவிப்பது ஊர்ப் பொதுவில் வாழும் குயவனுக்குரிய பணியாகும். அரும்பு சுட்டிய நீல மணி போலும் நிறமுடைய ஒளி படைத்த நொச்சிப் பூங்கொத்துக்களால் ஆன மாலையை இவன் அணிந்து செல்வான். ஊரில் விழா நிகழ்ச்சியை அறிவிப்பதுடன் ஊர்ப் பொது மன்றங்களில் உறையும் தெய்வங்களுக்கு கள் முதலியவற்றைப் பலியாக இடுவதும் இவனுக்குரிய கடமையாகும்.[144]

விழாக்காணும் ஊர்கள் நன்கு அலங்கரிக்கப்பட்டிருக்கும். விளக்குகளும், பூக்கள் முதலியனவும் அழகிய காட்சிகளை நல்கும்

"விழவுத் தலைக் கொண்ட பழவிறல் மூதூர் நெய் உமிழ் சுடரின்"(அகம் 17:19-20) என்பதனால் எண்ணெய் விளக்குகள் எங்கும் பரந்து காணப்பட்டமை தெளிவு. யானைகளும் தெருவில் அலங்காரமாகச் செல்லும். யானைகளின் மத அருவி பாய்தலினால் துகள் நிரம்பிய தெருவின்

புழுதி அமர்ந்துவிடும்.[145] விழாவில் ஆடல், பாடல் நிகழ்த்துவோர்க்கும் பிறர்க்கும் சோறு அளித்தலும் உண்டு. ஒரு பேரூரிலே விழாக்கழிந்துவிட்டால் வேறு விழாக் காணும் ஊரைநாடிப் பொருநர், பாணர் முதலியோர் சென்று விடுகின்றனர். இங்ஙனம் அவர்கள் செல்வது விழாவில் அளிக்கப்பெறும் சோற்றினைப் பெறும் பொருட்டும் ஆகும்.[146]

தெருவில் தெய்வம் உலாவரும் காட்சி உண்டு என்பது மாடங்களின் மேலிருந்து விழாக்காணும் மகளிர் கைகூப்பி வணங்குதலால் பெறப்படும். பூண் அணிந்த மாதர் நல்லார் புழுகு, முதலியவற்றின் மணம் தெருவெல்லாம் பரக்க, மேனிலத்திலே இருந்து தொழுகின்றனர். தெருக்களிலே இறைவன் முன்பு நீண்ட கொடித்தண்டுகளிலே பெருங்கொடிகளைக் கட்டி ஏந்தி வருகின்றனர். காற்று எழுந்து வீசுவதனால் திரைச்சீலைகள் அசைந்தாடுகின்றன. இதனால் நிலா முற்றங்கள் தோறும் நின்றுவிழாக் காணும் மகளிர் மஞ்சில் புகுந்து செல்லும் சந்திரன் போல ஒருகால் தோன்றி ஒருகால் மறைந்து காணப்படுகின்றனர்[147] என்று கூடல் மாநகரில் நடைபெறும் விழாக் காணும் மகளிர் சிறப்பிக்கப்படுகின்றனர். விழாவிற்கு வரும் செல்வர்கள் தம் தகுதிக்கு ஏற்ற ஆடை அணிகலன்களுடன் தேர் ஏறி, தேரில் பூண்ட குதிரைகளைச் செலுத்திக் காலாட்கள் சூழ்ந்து வர விழாவில் கலந்து கொள்கின்றனர்.[148] விழாவுக்கு கால் கொள்ளத் தொடங்கிய நாளிற்கு ஏழாம் நாள் அந்தியிலே தீர்த்தமாடுகின்றனர். அப்பொழுது அவ்விழாவிற்காக வந்து திரண்ட நாட்டிலுள்ளோர் ஆரவாரம் செய்து மகிழ்கின்றனர் என்பன மதுரைக் காஞ்சி கூறும் செய்தியாகும். விழாவில் இசையும் கூத்தும் பாட்டும் மக்கள் கண்ணுக்கும் காதுக்கும் விருந்தாக அமைந்து விளங்கின. சேரி விழாவில் இசை கூத்து நிகழ்த்துவோர், பல ஊர்களிலிருந்தும் வந்து குழுமுகின்றனர்.[150] யாழ், குழல், முழவு முதலிய

இசைக் கருவிகளில் இசையெழுப்புவோரும் ஆடல் வல்ல கூத்தரும், ஆடு மகளிரும் தத்தம் திறமை காட்டி மக்களை மகிழ்விக்கவருவர். கூத்துகளில் துணங்கைக் கூத்தும் குரவைக் கூத்தும் முதன்மையாக இடம் பெறுகின்றன.[151]

தவிரவும் போர் மள்ளர்களும் விழாவில் குழுமி விளையாட்டுப் போர் நிகழ்த்தி மக்களை மகிழ்வித்தல் உண்டு. மாயோனுக்கு எடுத்த ஓணநாள் விழாவில் மறவர் சேரிப்போர் நிகழ்த்தி, கள், குடித்து, மகிழ்ந்து திரிதலை மதுரைக் காஞ்சி குறிக்கின்றது.[152] குறுந்தொகைப் பாட்டு வீரர்குழுமி விழாவில் விளையாட்டுப் போர் நிகழ்த்துதலையும், ஆடும் கூத்தர் கூத்தியர் கூத்து நிகழ்த்துதலையும் விவரிக்கிறது.[153] உறையூரில் நிகழும் விழாக்களில் பங்குனி மாதத்தில் நடைபெறும் விழா சிறப்பாக எடுத்துப் பேசப்பட்டுள்ளது. காவிரிப் பேராற்றின் கரை மருங்குள்ள வெண் மணல் மிக்க சோலைகளிலே இப்பங்குனி விழா கொண்டாடப்படுகிறது. இது பங்குனி உத்திர நாளில் நிகழ்ந்ததாக வேறு குறிப்புகளால் தெரியவரும்.

"வருபுனல் நெரிதரும் இருகரைப் பேராற்று
உருவ வெண் மணல் முருகு நாறு தண்பொழிற்
பங்குனி முயக்கம் கழிந்த வழிநாள்
வீஇலை அமன்ற மரம்பயில் இறும்பின்
தீது இல் அடுப்பின் அரங்கம் போல"[154]

என்று இவ்விழா நிகழ்ச்சியை அகநானூறு குறிப்பிடுகிறது.

காவிரியின் அரங்கமாகிய ஆற்று நடுவிடத்தில் விழாக் காணவந்தார் பலரும் உணவாக்கி உண்டனர் என்றும், இங்குச் சுட்டப்பட்டுள்ளது. இளவேனில் காலம் காமவேளுக்குரியதாகக் கொள்ளப்படும். வில்லவன் விழாவென்பது காமனை வேண்டிச் செய்யும் விழாவாகும். தலைவி ஊரில்

காமவேள் விழா நடப்பதைக் கண்டால் கலங்குவாள் எனக்கருதித் தலைவன் தண்டேரேறி வந்ததாகத் தோழி குறிப்பிடுகின்றாள். இதனைக் கலித்தொகை குறிப்பிடுகின்றது.[155]

காமவேள் விழாவின் போது காதலர்கள் களித்து விளையாடுவர்.[156] காமவேள் விழாவின் போது கணவனைப் பிரிந்த மகளிர் வருந்துவர். சில ஆடவர்கள் பரத்தையருடன் கூடியாடுவர்.

திருமாலோடு தொடர்புடைய விண்மீன் திருவோணமாகும். இந்நாளில் கொண்டாடிய விழா ஓணவிழாவாகும்.[158] இந்த நாளில் வீரர்கள் நீலக்கச்சையணித்து விருந்துண்டு களித்தனர். இவ்விழா ஆவணித் திங்களில் கொண்டாடப்பட்டது. சங்க காலத் தமிழர்கள் கொண்டாடிய சமய விழாக்களில் குறிப்பிடத்தக்கது கார்த்திகைத் திருவிழாவாகும். கார்த்திகை விண்மீனை 'அறுமீன்' என்று நற்றிணைச் செய்யுள் ஒன்று குறிக்கிறது. அஃது அறஞ்செய்யத்தக்க சிறப்புடையது. எனவே கார்த்திகைத் திங்களை 'அறஞ்செய்த் திங்கள்' என்றும் குறிப்பிடுகின்றது.[159] வீடுகளும் தெருக்களும் ஒளிவிளக்குகளால் அழகுறுத்தப் பெற்றமையை அகநானூற்றுப் பாடலொன்று குறிப்பிடுகின்றது.[160] இலவ மரத்தில் நெருக்கமாக மலர்ந்துள்ள பூக்கள் பெரு விழாவில் ஏற்றப்பட்ட விளக்கு போல் தோன்றியதாக இன்னொரு செய்யுள் பேசுகின்றது.[161] முக்கண்ணனுக்கு ஆதிரை நாளில் சிறப்பாக விழா எடுக்கப்பட்டது இதுவே திருவாதிரை விழாவாகும். இவ்விழா மார்கழி மாதத்தின் போது கொண்டாடப்பட்டது. ஆதிரை விழாவை,

"கினைக்கும் அதிர்குரல் கார்வானம் நீங்க
பனிப்படுபைதல் விதலைப் பருவத்து
ஞாயிறு காயா நளிமாறிப் பின்குளத்து

மாஇருந் திங்கள் மறுநிறை ஆதிரை

விரிநூல் அந்தணர் விழவு தொடங்க"[162]

எனவரும் பரிபாடற் பகுதியுள் காணலாம். ஆதிரை விழவு தொடங்க என்பதனால். இது பலநாள் கொண்டாடப்பட்ட பெருந்திருவிழா என்பது புலனாகும்.

இந்திர விழா பண்டையக் காலத்தில் கொண்டாடப்படுவது ஆண்டுதோறும் வழக்கமான ஒரு நிகழ்வாக இருந்தது. 'இந்திரவிழவிற் பூவின் அன்ன' (ஐங்குக.62) என்று உவமையாகப் பயன்படும் அளவுக்கு இந்திர விழா சிறப்புற்றிருந்தது. சிலம்பு, மணிமேகலைக் காலத்தில் இந்திரவிழா அரசாங்கவிழாவாகவே கொண்டாடப்பட்டது. கற்பகக் கோட்டத்தில் வெள்ளானைக் கொடியேற்றப்பட்டது. பல தெய்வங்கட்கும் பூசையிடப்பட்டது. இசையும், கூத்தும் கலந்து மக்கட்கு இன்பமூட்டின. நகரம் முழுவதும் அணி செய்யப்பட்டதை மணிமேகலை விழா வறைகாதை தெளிவாக்குகிறது. அறிஞர்கள் குழுமியிருந்து பட்டிமண்டபத்தில் வாதிட்டனர். பல்வேறு சமயத்தவரும் செற்றமும் கலாமும் செய்யாது ஒற்றுமையாக இருக்குமாறு கேட்டுக் கொள்ளப்பட்டனர். தூங்கெயிலெறிந்த தொடித் தோட் செம்பியன் இதனைத் தொடங்கினான் என்று அறிகின்றோம். முருகப்பெருமான் வள்ளியை மணந்து கொண்டதை மணவிழாவாகக் கொண்டாடினர்.[163] பாண்டிய மன்னன் தன் பரிவாரத்தோடு இவ்விழாவிற் கலந்து கொண்டான்.

கொங்கர்கள் உள்ளிவிழாக் கொண்டாடினர் இடுப்பைச் சுற்றிலும் மணியைக் கட்டிக் கொண்டு தெருவில் ஆடுவர்.[164] ஆடும் கலைஞர்கள் கோடியர் எனப்பட்டனர். விறலியர் மயில்போல அசைந்தாடும் தோறும் கூத்தர்கள் முழவினை முழக்கிக் கொண்டு பின்னே செல்வர். இதனை

"கோடியர் விழவுகொள் மூதூர் விறலி பின்றை முழவன் போல்" (அகம் 352) என்னும் உவமை விளக்குகின்றது.

பரிபாடலின் வழியே வைகையில் வெள்ளம் வந்தபோது மக்கள் நீராடி மகிழ்ந்ததை அறிகின்றோம்.[165] மலர்களும் பொன் மீன்களும் கொண்டு வைகை யாற்றுக்கு நீராடச் சென்றனர் மக்கள். முற்காலத்தில் மன்னர்களும் இவ்விழாவில் கலந்து கொண்டனர் என்பதற்கு அகநானூற்றுப் பாடல்கள் சான்றாக அமைகின்றன.[166]

பூந்தொடை என்பது வீரர்களின் கலைப்பயிற்சித் தொடக்க விழாவாகும். மாலைகளால் இடத்தை அழகுறுத்துவர்; வீரனையும் அழகுறுத்துவர் வில்லில் நாணேற்றி அம்பினைக் குறிபார்த்து எய்யும் விழா இதுவெனக் கருதலாம்.[167]

போர்க்குப் புறப்படுமுன் வீரர் முதலியோர்க்கு அளிக்கும் விருந்தை 'பெருஞ்சோற்று விழா' என்பர். மன்னனது கோநகரில் அவனது பெருங்கோயிலில் நிகழ்ந்த பெருஞ்சோற்று விழா நிகழ்ச்சியைப் புறப்பாட்டுப் பகுதியில் காணலாம்.[168] மன்னன் வெற்றியைப் புகழ்ந்து பாணர்கள் பாட்டிசைக்கின்றனர். பாணர்க்கும் வெற்றிக்குதவிய வீரர்க்கும் சோறு படைக்கும் சிறுசோற்று விழாவை மன்னன் நிகழ்த்துகிறான். சேட்சென்னி நலங்கிள்ளி பாசறையிடத்தே நிகழ்த்திய சிறுசோற்று விழாவை 33-ஆம் புறப்பாட்டு வியந்து போற்றுகிறது.

மன்னனின் பிறந்த நாள் விழாக்களும் முடிசூட்டு விழாக்களும் ஆண்டுதோறும் கொண்டாடப்பட்டன வென அறிகின்றோம்.[169] எனவே பண்டைத் தமிழகத்தில் விழாக்கட்டுப் பஞ்சமில்லையென்றும், மக்களின் அன்றாட வாழ்க்கையோடு ஒட்டிச் செய்யப்படும் சிறப்புகளை விழா என்றும் கொள்ளலாம்.

**விளையாட்டு:**

இளையவர் முதல் பெரியவர் வரை, ஆடவர் மகளிர் எனும் வேறுபாடின்றித் தொழிலாக அல்லாமல், வாழ்வில் தாமே விரும்பி மேற்கொள்வது விளையாட்டாகும். விளையாட்டைக் குறிக்கும் சொற்களாகக் ‘கெடவரல்’, ‘பண்ணை’ என்னும் இருசொற்களைத் தொல்காப்பியம் குறிப்பிட்டிருந்தாலும் பண்ணை என்னும் சொல் தொல்காப்பியத்திலும், பிற சங்க நூல்களிலும் வழங்கப்பெறக் கெடவரல் என்னும் சொல் சங்க நூல்களில் வழங்கப்பெறாது கழிந்தது.[170] நாகரிகம் வாய்ந்த பண்டை கிரேக்க நாட்டிற் போலப் பழந்தமிழகத்தில் மிகப்பெரிய அளவில் விளையாட்டிடமும் (அரங்கம்) விளையாட்டுப் போட்டிகளும் இருந்தமைக்கான தெளிவான சான்றுகள் கிடைக்கவில்லை. எனினும் முல்லை நிலத்தில் ஏறுதழுவல் என்னும் வீரவிளையாட்டு, அது மேற்கொள்ளப்பட்ட களங்கள், பங்குபெற்ற வீரவிளையாட்டார், அவ்விளையாட்டின் விளைவு ஆகியவற்றைப் பற்றிய விளக்கமான குறிப்புகளைக் கலித்தொகை காட்டுவது கொண்டு பிறநிலத்து மக்கள் பெரிய அளவிலும், சிறிய அளவிலும் மேற்கொண்ட விளையாட்டுக்களுக்கும் இத்தகு வரலாறுகள் இருந்திருக்க வேண்டுமென்பதனை உய்த்துணரலாம்.

பழந்தமிழ் மக்கள் தம் வாழ்வின் பல்வேறு நிலைகளிலும், ஆடவர் பெண்டிர் என்னும் இயல் பிற்கேற்ப விளையாட்டினை மேற்கொண்டு உடல் நலமும் உள்ள நலமும் பெற்றுத் திகழ்ந்ததனை அவர்கள்தம் இலக்கியங்கள் காட்டுகின்றன. தாமே விரும்பி மேற்கொள்ளும் ஒரு செயல் விளையாட்டாகும். பண்டைக்காலத்தே ஆடவரும், மகளிரும் மேற்கொண்ட எல்லா விளையாட்டுக்களும் இசை நலஞ் சான்ற பாடல்களோடு அமைந்தன. இசையோடு கூடிய விளையாட்டு

மனப்பான்மையைத் தாம் செய்யும் செயலில் ஈடுபடுத்தும் போது, அது எளிதாகவும் இனிதாகவும் முடியக்காணலாம். எடுத்துக்காட்டாக உலக்கைப் பாட்டினைக் (வள்ளைப்பாட்டு) கூறலாம். விளையாட்டை, மெய்யாகத் தானியங்களைக் குற்றும்போது மேற்கொண்டால் செயல்வருத்தம் நீங்கி எளிதில் பயன் விளைவதனை உணரக்கூடும். அதனால் பொழுது போக்குக்குரிய மனமகிழ்ச்சியை ஊட்டும் ஒரு செயலாக விளையாட்டு விளங்குகிறது.[171] என்று தமிழ்ப் பேரகராதி கூறுவது ஏற்கத்தக்கது.

விளையாட்டுகளில் பெரும்பாலானவை இன்பத்திற்கு ஊறு விளைவிக்காத விளையாட்டுக்களாகவே அமைந்துள்ளன. இதனை, 'நகை விளையாட்டு' எனக்குறுந்தொகையும் 'நயந்து விளையாட்டு' என அகநானூறும் சுட்டுகின்றன.[172] உடல்நலமும், மனமகிழ்வும் எய்துவதே சங்க கால மக்களின் விளையாட்டுக் கொள்கையாக இருந்தது என்று கொள்வது ஏற்புடையதாகும்.

குழந்தைப் பருவத்தில் ஆணும், பெண்ணும் வேறுபாடின்றி விளையாட்டில் ஈடுபட்டனர். அப்போது, அவர்களுக்குள் சிறுபிணக்கு தோன்றிச் சண்டையிட்டுக் கொண்டதனை,

"இவன் இவள் ஐம்பால் பற்றவும் இவள் இவன்
புன் தலை ஓரி வாங்குநள் பரியவும்
... ... ... ..
ஏதில் சிறுசெரு உறுப"

என்பதனால் அறியலாம். வானத்திலுள்ள நிலவைக் குழந்தைகளுக்குச் சுட்டி காட்டி-பூமிக்கு இறங்கி வந்து குழந்தையுடன் விளையாட வருமாறு அழைப்பர் இந்நிகழ்வு பெரும்பாலும் குழந்தைகளுக்குச் சோறுட்டும் பொழுது அமையப்பெறும்.[174] சிறுவர்கள்

கிலுகிலுப்பை என்னும் விளையாட்டுக் கருவியினால் ஒலியெழுப்பி விளையாடுதலை இன்றும் காணலாம். சங்க நாளிலும் இம்மரபு இருந்தது என்றும் சிறுபாணாற்றுப்படை வழியாக அறிகின்றோம். உமணர்களோடு சென்று குழந்தைகளைப் போன்ற மந்தி முத்துக்களைக் கிளிஞ்சல்களில் இட்டுக் குழந்தைகளோடு கிலிகிலியாடும் வளம் வாய்ந்த நாடு பாண்டிநாடு[175] என்கிறது

சிறுவர்கள் ஒன்றுகூடி சமமான கற்பனைப் பெயர்களைத் தங்களுக்குள் சொல்லி விளையாடுவது சாமவிளையாட்டாகும் சங்க இலக்கியத்தில் இவ்விளைாயட்டு குறித்த செய்திகள் நேரடியாக இல்லையெனினும் கூடி வருவழக்கின் ஆடியற்பெயரும்[176] என்ற தொல்காப்பிய நூற்பா பகுதி என்னத்தக்கது. சிறுவர்கள் மூன்று கால்கள் உடைய சிறுதேரையுருட்டி விளையாடுவது பற்றிப் பல பாடல்கள் குறிப்பிடுகின்றன.[177]

"பொற்காற் சிறுவர் புரவியினறுருட்டும் முக்காற் சிறுதேர்" மகளிர் எறிந்த குழையினால் தகைக்கப் படுதலைப்பட்டினப்பாலை[178] கூறும் இச்செய்தி பற்றிக் கலியும் குறுந்தொகையும் பிறநூல்களும்[179] கூறுகின்றன. விளையாட்டுக் கருவிகளுள் ஒன்று பறை பறையை ஒலிக்க வைத்துத் தாளத்திற்கேற்பச் சிறுவர்கள் விளையாடுவர்.[180] சிறுமியர் மணலாற் சிறுவீடு கட்டி விளையாடுவது சிற்றில் என்பதாகும். சிற்றில் - வண்டல், வரிமனை என்றும் (அக.275; 90) குறிக்கப் பெற்றுள்ளது. சிறுமியர் சிற்றில் இழைத்து விளையாடுங்கால் அவர்களோடொத்த சிறுவர்கள் அதனைக் காலால் அழித்து விடுவதுண்டு என்பதனை, "தெருவினாமாடு மணற் சிற்றில் காலிற் சிதையா அடைச்சிய கோதை பரிந்து வரிப்பந்துகொண்டோடி"[181] என்னும் கலித்தொகைப் பாடற் பகுதி உணர்த்துகின்றது. தன் மகளைத் தேடிச் செல்லும் செவிலி,

"கூழை நொச்சிக் கீழது என்மகள்

செம்புடைச் சிறுவிரல் வரித்த

வண்டலும் காண்டிரோ காண்ணுடையிரே"[182]

என்று வழிப்போக்கரை வினவுமிடத்தில் மகளிர் சிற்றில் இழைக்கும் செய்தி புலனாகக் காணலாம். தலைவி தோழியருடன் கடற்கரைச் சோலையில் சிற்றில் இழைத்தும் சிறுசோறாக்கியும் விளையாடிய வருத்தம் நீங்க இளைப்பாறியிருந்தாள் என்பதையும், மகளிர் கட்டிய சிற்றிலைக் கடலலை வந்து அழிக்கும் என்பதையும் அகநானூறு காட்டுகிறது.[183]

தலைவியுடன் சிற்றில் புனைந்து விளையாடத் தலைவன் விரும்பியதை கூறுவதுகொண்டு[184] ஆடவரும் மகளிருடன் சிற்றில் விளையாடப் பங்குபெற விரும்புவதை அறியலாம். அவ்வாறு விளையாடும்போது மரச் செப்பையும் (மரப்பானை) மரப்பாவையையும் வைத்து மகளிர் விளையாடுவர்.[185]

பலவகைக் கற்பனைகளோடு பெண்கள் குறிப்பாக, சிறு பெண்கள் சோறு சமைத்து விளையாடுவது சிறுசோறு விளையாட்டாகும். சிற்றில் அமைத்து அதில் சிறு சோறாக்குவர். சமைத்த உணவைத் தானும் உண்டு, மற்றவர்களுக்கும் பரிமாறி உண்ணச் செய்வர் தவிர, மரகதம், வைரம், அகில், பனிநீர், முத்து, செம்மணி, பொன் இவற்றை வைத்தும் விளையாடியுள்ளனர். காலை முதல் மாலை வரை இவ்விளையாட்டில் மிக ஊக்கமாக இருந்துள்ளனர்.[186]

அக்காலத்தில் சிறப்புற்றிருந்த விளையாட்டுக்களில் ஒன்று வட்டாடுதலாகும். இதற்கென்று, அரங்கிழைத்துக் காய்களை நகர்த்தி வட்டாடுவர். திருவள்ளுவரும் கல்லாது கோட்டி கொளல் அரங்கின்றி வட்டாடுதலையொக்கும் (குறள் 401) என்றார். இளங்கீரனார் பாடிய

நற்றிணைப் பாட்டொன்றில் வேப்பமரத்து நிழலில் கல்லாச் சிறுவர் கட்டளையன்ன வட்டரங் கிழைத்து நெல்லிக்காயை வட்டாகக் கொண்டு ஆடுவது பற்றிய குறிப்புள்ளது.[187] பாறையில் உதிர்ந்து கிடந்த பளிங்கு போன்ற நெல்லிக்காய்கள் வட்டுப்போல் தோன்றிய பாலை நிலம் பற்றி அகநானூறும் குறிப்பிடுகின்றது.[188] வட்டாடுதல் வல்லாடுதல் என்றும் வழங்கப்படும். வயது முதிர்ந்த பெரியவர்கள் சூதாடு கருவியை இட்டு இட்டுக் குழிந்து போன பாழ் பொதியில் பற்றிச் சங்க இலக்கியங்கள் குறிப்பிடுகிறன.[189] இவ்விளையாட்டினை சூது என்றும் குறிப்பிடுவதுண்டு.

அரசர், வீரர் முதலியோர் யானை, குதிரை, தேர் போன்றவற்றைச் செலுத்துவது பண்டைய வழக்கமாக இருந்து வந்துள்ளது. இவர்கள் போர்ப்பயிற்சி செய்வதையும் மேற்கொண்டனர் தொழிலாகவும் பொழுதுபோக்காகவும் அமைந்த இவை சில நேரங்களில் விளையாட்டுகளாகவும் விளங்கின. இவ்விளையாட்டு ஊர் பொதுவிடத்தே பலர் காண கூட்டமாகவும் தனிமையிலும் நடைபெற்றது.[190]

ஆடவர்கள் வில்விளையாட்டை மேற்கொண்டனர் வில்லில் அம்பினைச் செறித்துக் குறிபார்த்து எய்தல் வில்வித்தையாகும். இதனைக் கற்றுத்தரக் கைதேர்ந்த ஆசிரியர்கள் இருந்துள்ளனர். இவர்களின் மூலம் பயிற்சி பெற்ற வீரர்கள் விழாநடத்துவது உண்டு இந்நிகழ்வின் போது ஆசிரியருக்கு மரியாதை செய்வர் சிலவகை அடையாளங்களை உருவாக்கி அவற்றின் மீது அம்பெய்தல் இவ்விளையாட்டின் நோக்கமாகும். இப்போட்டியில் வெற்றி பெற்றவர்களுக்குப் பரிசு வழங்கப்படும்.[191] விழா நாட்களிலும் ஓய்வு நேரத்திலும் வீரர்கள் வீர விளையாட்டுக்களில் திளைத்தனர். இதற்காக முரண்களரிகள் இருந்தன. இதனைப் பட்டினப் பாலையால் கண்டு தெளியலாம்.[192]

கருவிகளின் துணையில்லாமல் தமது உடல் வலிமையால் இருவர் தமக்குள் சண்டையிடும் ஒருவகை வீர விளையாட்டு மல்யுத்தமாகும். இது ஒருவகை போர்முறை என்றும் கூறலாம். இவ்விளையாட்டு குறிப்பாக இளைஞர்களால் விளையாடப்படும். ஊர் பொதுவிடத்தே பலர் முன்னிலையில் இவ்விளையாட்டு நிகழ்த்தப்பெறும். சிறப்பாக ஆடுவோருக்குப் பரிசில் பட்டங்கள் வழங்கப்பட்டுள்ளது. ஆட்டத்தில் தவறு நேராமல் பார்த்துக் கொள்ள வேண்டுமென்ற குறிக்கோள் இருந்ததே தவிர, போட்டி பொறாமை உணர்ச்சிக்கு இடந்தராமல் பார்த்துக் கொள்ளப்பட்டது. இது மகிழ்ச்சியை வெளிப்படுத்துவதாக அமைந்தது. இவ்விளையாட்டில் போட்டியிட்டு வெற்றிபெற வேண்டுமென்பதற்காகவே நல்ல ஊட்ட உணவு உட்கொண்டிருப்பது தெரியவருகிறது. விளையாடுவதற்கேற்ற அரங்கு அமைத்து விளையாடப்பட்டது.[193]

முல்லை நிலத்து ஆயர்கள் கூரிய கொம்புகளை உடைய காளைகளை அடக்குவதனை ஒருவீர விளையாட்டாகக் கொண்டனர். அத்தகு வீரர்களையே ஆயர்குடிப் பெண்கள் விரும்பி மணந்தனர்.[194] ஏறு தழுவுதல் பற்றிய செய்திகளை முல்லைக்கலியுள் பரக்க காணலாம். இது இளைஞர்கள் ஆர்வமுடன் கலந்துகொண்ட ஒரு வீர விளையாட்டு.

பண்டு ஆடவர், பெண்டிர் இருசாராரும் தனித்தும், கூடியும் விளையாட்டில் ஆர்வமொடு ஈடுபட்டுள்ளனர். ஒத்த வயதுடைய விளையாடும் மகளிர் தொகுதி ஆயம் 'விளையாட்டு ஆயம்' என்று கூறப்படுகிறது.[195] 'வண்டல்-ஆயம்' என்று பெரும் பாணாற்றுப்படை (பெரு.371) குறிக்கின்றது. அக்காலமகளிர் மனைமுற்றங்கள், மாடங்கள், மணற்குன்றுகள், மலர்ச் சோலைகள், கானல்கள், நீர் நிலைகள் இன்ன

பிறவிடங்களில் விளையாடியுள்ளனர். ஒளிவீசும் மாடங்களிலிருந்து வளையணிந்த மகளிர் தெற்றி ஆடியதைப் புறநானூறும், முத்தினை ஒத்த வார்மணலில் மகளிர் பொற்கழங்காடியதனைப் பெரும் பாணாற்றுப்படையும் குறிப்பிடுகின்றன.[196]

சங்ககால மகளிர் விளையாட்டுக்களுள் ஒன்றாக ஊஞ்சலைக் குறிப்பிடுவர். ஆடவரும் ஊஞ்சலாடி இன்புறலாமாயினும், அக்காலத்தில் இது குறிப்பாகப் பருவ வேறுபாடின்றி மகளிர்க்கே உரியதாக இருந்தமை காணப்படுகிறது. ஊசல், நிலச் சூழலுக்கு ஏற்பவும், செல்வநிலைக்கு ஏற்பவும் அமைக்கப்பட்டதனையும் சங்க இலக்கியம் காட்டுகிறது. நெய்தல் மகளிர் ஞாழல் மரக்கிளையில் தாழை விழுதால் கட்டிய ஊசலிலும்,சுறாமீன் கொம்பாலாகிய பலகையில் தாழை விழுதாலாய கயிற்றினைக் கொண்டு அமைக்கப்பட்ட ஊசலிலும் விளையாடினர் எனத் தெரிகிறது.[197] குறிஞ்சி மகளிர் அசோகு, வேங்கை போன்ற மரத்தில் கட்டிய ஊசலில் விளையாடினர்.[198] கிளி கடிந்தோம்பும் புனத்தயலில் ஊசல் ஆடும்பொழுது ஒருநாள் வந்த தலைவனைச் சிறிது ஊசலாட்டுவாயாகவென வேண்ட, அவனும் நன்றென இசைந்து ஊசலாட்டினான். என்ற செய்தியைக் கலித்தொகை கூறுகின்றது.[199]

பந்தாடல் என்பது ஒருவகை விளையாட்டாகும். இன்று ஆண், பெண் இருவராலும் ஆடப்படுகின்ற இவ்விளையாட்டினைச் சங்க காலத்தில் மகளிர் மட்டுமே ஆடியுள்ளனர் எனத் தெரிகிறது.[200] அன்று ஆடவர் விளையாடியதாகக் குறிப்பு காணப்படவில்லை. இதனைச் செல்வக்குடி மகளிர் விளையாடியுள்ளனர். உழைப்பு நிலையில் ஈடுபட்ட மகளிரும், செல்வநிலையில் குறைந்த மகளிரும் இவ்விளையாட்டில் ஈடுபட்டனரெனத் தெரியவில்லை. இதனால், சமூகத்தின் உயர் நிலையில் இருந்த மகளிர்க்குரிய விளையாட்டாக இது அன்று விளங்கியது எனத் தெரிகிறது.

இவ்விளையாட்டினை வீட்டிற்கு வெளியிலும், முற்றத்திலும், மாடத்திலும் மணல் பரப்பிய பந்தரிலும் விளையாடினர். பந்து நூலினால் செய்யப்பட்டுப் பல வேலைப்பாடுகளுடன் அமைந்திருந்தது என்பதை வரிபந்பந்து, வரியணிப்பந்து, வரிப்புணப்பந்து போன்ற சொல்லாட்சிகளைக் கொண்டு அறியலாம்.[201] சங்கப் பாடல்களில் காணப்படும் ஆடுபந்து எறிபந்து என்னும் தொடர்கள் இவ்விளையாட்டு வகையைக் குறிக்கின்றது.[202] வானைத் தொடுமளவிற்குப் பந்தைத் தூக்கிப் போட்டு விளையாடியதாகக் கலித்தொகை கூறுகின்றது.[203] பேதைப் பருவமகளிர் ; பந்தாடுவதில் நாட்டம் கொண்டிருந்ததனைப் பந்தும் கழங்கும் வெய்யோள் (அகம் 49:1) என்பது போலும் சங்கத் தொடர்களால் அறியலாம்.

மகளிர் விளையாட்டுக்களுள் ஓரையென்பது ஒன்று. ஆமை, நண்டு ஆகியவற்றைக் கோல் கொண்டு அலைத்து விளையாடுவது இவ்விளையாட்டாகத் தெரிகின்றது.[204]

மகளிர் விளையாட்டுகளில் கழங்கு என்பதும் ஒன்றாகும். திண்ணைகளில் பொன்னாலான கழங்கினை வைத்து விளையாடியதாகப் புறநானூறு செப்புகின்றது.[205] இயற்கையில் கிடைத்த காய்களைக் கொண்டு எறிந்தும், எடுத்தும் உயரத் தூக்கிப் போட்டும், கீழே கொட்டியுள்ளதைப் பொறுக்கியுமாக ஆடியுள்ளனர். பெண்கள் தங்களது இல்லங்களின் பின்புறத்திலும், வீட்டு முற்றத்திலும் அமர்ந்து ஆடுவர். இருவர் விளையாடுவது பந்தயங்கூறி ஆடுவது. பாட்டுப் பாடிக் கொண்டே ஆடியுள்ளனர். நாளடைவில் பொன், மணி, முத்து, பூக்களால் ஆன கழங்கு கொண்டு ஆடிய குறிப்பு தெரிகிறது. கைக்குள் அடக்கக்கூடிய கழங்குக் காய்கள் விளையாட்டில் பயன்படுத்தப்பட்டுள்ளன.[207]

ஒருத்தியின் கண்களை மற்றொருத்தி தன் கைகளால் மறைத்து நிற்க, அந்த நேரத்தில் பிற மகளிரெல்லாம் மறைவான இடங்களுக்குச் சென்று, ஒளிந்து கொள்வார்கள். பின்னர், ஒளிந்தவர்களைக் கண்டு வருமாறு கண் பொத்தப்பட்டு நின்ற பெண் அனுப்பப்படுவாள். இத்தகைய விளையாட்டுக்கு கண் புதைத்து ஒளிந்தாடல் என்று பெயர்.[208]

புள் ஓட்டவும், போர் புரியவும், தற்காப்புக்காகவும் மாந்தர்க்குப் பயன்படும் ஒரு கருவி "கைக்கவண்" எனப்படும். இக்கருவியைக் கொண்டு மகளிர் விளையாடுவது பண்டைய கால வழக்கமாகும். மிக உயரமான இடத்தில் காணப்பட்ட தேனடை மீது. கவணில் மணி வைத்து எறிந்து, பெண்கள் விளையாடுவர். வெற்றி கொள்ளுவது இவ்விளையாட்டின் நோக்கம்.[209]இதனை ஒரு தொழிலாகவும் மேற்கொண்டிருந்தனர். கிளிக்கூட்டத்தை ஓட்ட "ஆயோ" என்ற ஒலிக்குறிப்பை எழுப்பிக் கவணில் கல் வைத்துப் பறவைகளை ஓட்டுவர் இது கூட்டமாக விளையாடப் பெறும்.

பாவை என்பது விளையாட்டுப் பொருள்களுள் ஒன்றான பதுமையைச் சுட்டும் பொருளில் ஆளப்பட்டுள்ளது. பாவையை வைத்துச் சிறுமியரும், மகளிரும் விளையாடுவதுண்டு. பாவைகள் மண், மரம், கோரைப்புல், பொன்மலர் போன்ற பொருட்களால் செய்யப்பட்டிருக்கும் அவை. மண்பாவை, மரப்பாவை, பைஞ்சாய்ப்பாவை, பொற்பாவை, மலர்ப்பாவை என்று வழங்கப்படும்.[210] பாவை விளையாட்டைச் சங்கப் பாடல்கள் மகளிர்க்குரியதாகக் குறிப்பிடுகின்றன.[211] பாவையைச் சிறுமியர் தம் மகவாகக் கற்பனை செய்து, உண்ணும் இயல்பில்லாத அதற்குப் பாலூட்டும் பாவனையில் தம் மார்போடு அணைத்து விளையாடுவதை "வண்டல் ஆயமொடு பண்டுதான் ஆடிய ஈனாப்பாவை" என்றும், "உறாஅ வறுமுலை மடாஅ உண்ணாப் பாவையை ஊட்டுவோளே" என்றும் நற்றிணை ஐங்குறுநூறு போன்ற நூல்கள் காட்டும். மகளிர் மரப்பாவைகளை மணமகனாகவும், மணமகளாகவும் கற்பனை செய்து அவற்றிற்கு மணம் பேசி வதுவைச் செய்து விளையாடுவர்.

வண்டலிழைத்தல் என்பது ஒரு வகை விளையாட்டாகும். மணலால் பாவை செய்து அதற்குப் பூச்சூட்டி மகிழும் விளையாட்டிது.[214] மானடி போன்ற கவட்டிலையை உடைய அடும்பின் ஒள்ளிய பூவை வண்டற் பாவைக்குச் சூட்டுவர். இதுபற்றிக் குறுந்தொகை அகநானூறு ஆகிய நூல்கள் கூறுகின்றன.[215] வண்டல் விளையாட்டு மகளிர்க்குரியது என்பதனை 'இளையோர் வண்டல் அயரவும்' என்னும், பொருநராற்றுப்படைத் தொடர்க்கு நச்சினார்க்கினியர், 'அவ்வுழவர் மகளிர் நெய்தல் நிலத்தின் மணற்குன்றிலே வண்டல் இழைத்து விளையாடவும்' என்று கூறியிருப்பதனால் அறியலாம். மேலும், அதனால் இவ்விளையாட்டு மணலில் விளையாடப்படுவது என்பதும் புலனாகின்றது.

பாவை விளையாட்டைப் பல பருவ மகளிரும் விளையாடியுள்ளனர். தான் விளையாடும் வண்டற்பாவையைக் கடல் அலை கவர்ந்து சென்றமையால் ஒரு சிறுமி தன் மையுண்ட கண் சிவக்கும்படி அழுததோடு, நுண் மணலை வாரி வீசி அக்கடலைத் தூர்த்தற்கும் முயன்றுள்ளாள்.[216]

களவொழுக்கத்தில் ஈடுபட்ட மகளிரும், மணமான மகளிரும் பாவை விளையாட்டில் ஈடுபாடு கொண்டு விளங்கினர். தலைவியொருத்தி மணலில் செய்து விளையாடிய வண்டற்பாவையை, அவளைத் தேடிவந்த தலைவனின் தேர் உருளைச் சிதைத்தது என்று அகநானூறும், இல்வாழ்வில் தலைப்பட்ட கணவனும், மனைவியும் கடற்கரையில் பாவை செய்து விளையாடியதைப் பட்டினப் பாலையும் கூறுகின்றன.[217]

ஆடவரும் பெண்டிரும் ஆறுகளிலும் குளங்களிலும் புனலாடி மகிழ்ந்தமையை அகப்பாடல்கள் பல எடுத்துக் கூறுகின்றன. குறிப்பாகப் பரத்தையருடன் ஆடவர் நீராடி மகிழ்தல் மருத செய்யுட்களில் பேசப்படுகின்றது. பரிபாடலில் வையைப் பற்றிய பாடல்கள் பலவற்றில் மாந்தர் புனலாடி மகிழ்வது சிறப்பித்துப் பேசப்படுகின்றது. நுரை சுமந்து வரும் புதுப்புனலில் நீராடிய மகளிர் அணிந்த அணிகளும், மலர்களும், பூசிய

பலவித மணப்பொருட்களும் கலத்தலால் வையைநீர் மணமுடையதாயிற்று என்று பரிபாடல் கூறுகிறது.[218]

மகளிர் நீராடுங்காலத்து ஈரணி எனப்படும் உடைவகையை அணிந்து கொண்டனர்.[219] பெண்கள் பலரும் சூழ்ந்து நிற்கக் கிணற்றுக்குள் துடுமெனப் பாய்ந்து குதித்து மணல் கொண்டு மேலேவந்து அனைவரையும் வியப்பில் ஆழ்த்திய கல்லா இளமைப் பருவத்தினை நினைந்து கழிவிரக்கப்படுகிறார் தொடித்தலை விழுத்தண்டூன்றினார் என்னும் புலவர்,[220]

புதுப்புனல் வருங்காலத்தில் மக்கள் ஆரவாரம் செய்து, துடிமுழக்கி, அனைவரும் நீராட வாருங்கள் என்று அழைப்பர். புனலில் மலர், மாலை, சாந்து, கத்தூரி, இழை (அணிகள்) ஆகியவற்றை இடுவர்.[221] இவ்வாறு செய்வதன் பொருள் மக்களது உயிர் வாழ்க்கைக்கும், இன்ப வாழ்க்கைக்கும் உறுதுணையாக விளங்கும் ஆற்றைத் தெய்வமாகக் கருதியமையாகும். இம்மரபு இன்று வரை தொடர்ந்து வருகின்றது. மகளிர் தனித்தும், தோழியர் குழாத்துடனும், களவு நிலையில் தத்தம் காதலருடனும், கற்பு நிலையில் கணவன்மாருடனும் புனலாடி மகிழ்ந்துள்ளனர்.

ஆடவரும் களவு நிலையில் காதலியுடனும், கற்பு நிலையில் மனைவியருடனும் புனலாடியுள்ளனர். ஆடவருட் சிலர் கற்பு வாழ்வில் பரத்தையுடன் புனலாடி மகிழ்ந்துள்ளதனை இலக்கியங்கள் காட்டுகின்றன. சங்க இலக்கிய மருதப் பாடல்களில் பலவும், பரிபாடலின் வையைப் பாடல்களும் தலைவன் பரத்தையருடன் விளையாடி வருதலையும், அதனால் தலைவி ஊடல் கொள்வதையும் காட்டுவதால் இவ்விளையாட்டுத் தலைவன், தலைவி, பரத்தையர் போன்ற பல்லோராலும் விரும்பி மேற்கொள்ளப்பட்ட இன்ப விளையாட்டாகக் கருதப்படுகிறது. இளையரான சிறுவர் சிறுமியர்க்கும் நீர் விளையாட்டு என்றும் இன்பம் தரும் இயல்பினதாகும்.

கடற்கரைப் பகுதி, நீர் தங்கும் பகுதிகளில் உள்ள அலவன்கள் (அலைகள்) கரை நோக்கி வரும் போது அவற்றைக் கைகளில் பிடித்து ஆட்டியும் மோதவிட்டும் மகிழ்ந்துள்ளனர். இவ்விளையாட்டில் நெய்தல் நில மக்கள் பெரும்பாலும் ஈடுபட்டுள்ளனர். அலவன் நெய்தல் நில மக்களுடைய அன்றாட வாழ்க்கையில் சிறப்பிடம் பெற்றிருந்தமைக்குச் சங்க இலக்கியங்கள் சான்று தருகின்றது. இவ்விளையாட்டு பகல்பொழுதிலும் நிலாக்கால முன்னிரவின் பொழுதும் விளையாடப்பட்டுள்ளது.[222] மகளிர், தோழியரோடு கடலில் விளையாடுதலும், பனை நுங்கின் நீரும், கரும்பின் சாறும், தெங்கின் இளநீரும் பருகி, முந்நீரையுடைய கடல் நீரில் பாய்ந்தாடுதலும் கூறப்பட்டுள்ளன.[223]

இந்நீர் விளையாட்டு இன்பமாகப் பொழுது போகவும், உடல்நலத்தை நோயின்றிக் காக்கவும், மனமகிழ்ச்சிக்காகவும், சங்க காலத்தில் மேற்கொள்ளப்பட்டது.

ஆண், பெண் இருபாலரும் ஒருவரோடொருவர் வேடிக்கையாகப் பேசி மகிழ்வது அசதியாடல் என்ற ஒருவகை விளையாட்டாகும். தனித்தும் ஒருவரைத் தனக்குத் துணையாகச் சேர்த்துக் கொண்டும் விளையாடுவர். நெஞ்சோடு தனக்கு மட்டுமே கேட்பதாகப் பாடி, பேசி, பரிகாசம் செய்வது, அடுத்தவர் காது படவும் கூறுவது, கற்பனை மிகுபட, அந்தந்த இடத்திற்கும், நிகழ்ச்சிக்கும் தக்கவாறு பேசிச் சிரிப்பது, மனம் புன்படாமல் பேசி விளையாடுவது போன்றவை இவ்விளையாட்டின் முறைகளாகும்.[224]

ஆண்களும், பெண்களும், இருபால் சிறுவர்களும் தாங்கள் விரும்புகின்ற பறவை விலங்குகளுடன் விளையாடி மகிழ்வது சங்க கால மக்களின் வழக்கமான நிகழ்வுகளுள் ஒன்றாகும். புலிக்குட்டிகள், யானைக்கன்றுகளுடன் சிறுவர்களும், மான்குட்டிகளுடன் பெண்களும் விளையாடிப் பொழுது போக்கியுள்ளனர். விளையாடும் பொழுதே தங்களது உள்ளக் கிடக்கையைச் சொல்வது பழக்கமாயிற்று. தனித்தும் சில

சமயங்களில் பிறருடன் சேர்ந்தும் பறவை விலங்குகளோடு விளையாடி உள்ளனர்.[225]

**பொழுதுபோக்கு :**

வாழ்க்கையை முழுமையாகவும், நன்றாகவும் வாழ விரும்பிய தமிழர்க்கு அவரது ஒழிந்த நேரங்களைக் கழிக்கப் போதுமான பொழுதுபோக்குகளும் மகிழ்வினைகளும் இருந்தன. நகர்ப்புறங்களில் மக்கள் ஆற்றவேண்டிய சமூகக் கடமைகள் பலவாயினமையின் அவர்களுடைய மகிழ்வினைகட்கு அதிகப் பெழுதிராது. ஆனால், நாட்டுப்புறத்தார் தங்கள் வாழ்வின் பெரும்பகுதியை விரும்பத்தக்கதாயும் வேறு சில இயல்பானதாகவும் இருந்தன.

வீட்டின் நிலா முற்றத்திலும், மேல்மாடியிலும், வீட்டின் பின்புறத்திலும், வெளிப்புறச் சோலைகளிலும், கடற்கரை மணலிலும் உலாவுவது இன்று மட்டுமன்றி சங்க காலத்திலும் பொழுது போக்கான ஒரு நிகழ்வாக இருந்து வந்துள்ளது. பெரும்பாலும் இந்நிகழ்வில் செல்வந்தர்களே ஈடுபட்டுள்ளதாகத் தெரிய வருகிறது. உலவும் பொழுது அதிக அணிகலன்களை அணிவதில்லை. அவசரமாகவோ, வேகமாகவோ, விரைவாகவோ செல்லாமல் நிதானமாக நடப்பதை நோக்கமாகக் கொண்டிருந்தனர்.

"அணங்கு வீழ் வன்ன பூந்தொடி மகளிர்
மணங்கமழ் நாற்றந்தெருவுடன் கமழ
வொண்குழை திகழு மொளிகெழுதிருமுகந்
திண்கா மேற்ற வியலிரு விலேதந்
தென்கடற் றிரையி னசைவளி படைப்ப
திரைநிலை மாடத் தரமியந் தேறும்
மழைமாய் மதியிற் தோன்றுபு மறைய"[226]

என்ற மதுரைக் காஞ்சி காட்டும் பாடலின் வாயிலாக சங்க கால

மக்கள் உலாவி பொழுது போக்கியமை புலனாகிறது. புதல்வரிடத்தும், தோழியரிடத்தும் விலங்குகள் பற்றிய கதைகள் கூறிப் பெண்கள் பொழுது போக்குவதைச் சங்க காலத்தவர் மேற்கொண்டிருந்தனர். இதனைப் பிசி என்றும், நொடி என்றும் கூறுவர்.

"பாட்டு உரைநூலிலே வாய்மொழி பிசியே
ஒப்பொடு புணர்ந்த உவமத்தானும்
தோன்றுவது ணிவினாலும் என்றிரு வகைத் தே
பிசிநிலை வகையே - அதுவே தானும் பிசியொடு மானும்"[227]

என்பன இந்நிகழ்வு பற்றிய தொல்காப்பியம் கூறும் நூற்பா பகுதிகளாகும். இப்பொழுதுபோக்கு நிகழ்வு தொன்மை காலந்தொட்டே இருந்து வந்த ஒரு பழமையான நிகழ்வாகும். யானை. சிங்கம், புலி, கரடி, நரி என்ற விலங்குகளுடன் தொடர்புப்படுத்திக் கதைகளைக் கூறுவர். மகிழ்ச்சியாகப் பொழுதுபோக்குவதும், நினைவாற்றலைப் பெருக்குவதும் மகிழ்ந்து வாய்விட்டுச் சிரிப்பதும் இந்நிகழ்வின் நோக்கமாகும்.[228]

ஓயாது போரிலும் அரசியல் அலுவல்களிலும் ஈடுபட்டு அலுத்த வேந்தர்கள் தம் அவையில் புலவர் பெருமக்களின் இலக்கிய விளக்கங்களைக் கேட்டும், பாணர், கூத்தர், விறலியர்களின் பாடலையும், ஆடலையும் கேட்டும் கண்டும், இன்புற்று அவர்கட்குப் பெரும் பொருளைப் பரிசாக அளித்தனர். போர்மேற் சென்ற போதும் அவர்கள் இக்கலைஞர்களை உடன் கொண்டு போயினர். பாணரும், கூத்தரும், நகைவேழம்பரும் பிறரும் பாசறையில் பொழுது போக்க உதவியாக இருந்தனர். குறவரும், பரதவரும் பிறரும் ஓய்வு நேரங்களில் பாடியும், ஆடியும் மகிழ்ந்த செய்தி கூத்துக்கலை பற்றிய பகுதியில் விளக்கப்பட்டுள்ளது.

வேடுவர்கள் வேட்டையைத் தம் தொழிலாகக் கொண்டிருந்தனர். ஆனால், மன்னர்களோ வேட்டையை வீரமிக்க பொழுதுபோக்காகக் கருதினர். வல்வில்லோரியும், கண்டீரக்கோப்பெரு நற்கிள்ளியும், சிறந்த வேட்டைக்காரர்களாக விளங்கினர். வேட்டை யாடச் சென்ற இடத்தில்

கண்ட புலவர் பெருமானுக்குப் பெரும் பரிசிலை அளித்த செய்தி புறநானூற்றில் இடம் பெறுவது காணலாம். வேட்டையாடுவதை அரசர்கள் மட்டுமன்றி வீரர்களும் மேற்கொண்டனர். கூட்டமாகச் செல்வதை விரும்பினர். வேட்டைக்குச் செல்லும் முன் அதற்குரிய வகையில் பல ஏற்பாடுகளைச் செய்ய வேண்டியிருந்தது. வில், அம்பு இவற்றோடு நாய்களையும் வேட்டைக்குப் பயன்படுத்தினர்.[229]

ஆடவர்கள் மட்டுமன்றி மகளிரும் பொழுதுபோக்குவதை இன்றியமையாத ஒன்றாகக் கொண்டிருந்தனர். சங்க காலத்தில் பயன்பாட்டிற்காக மலர் கொய்தலைக் கொண்டிருந்தாலும் பொழுதுபோக்காகவும் இந்நிகழ்வை மேற்கொண்டனர். தலைவியும், தோழியுமாகச் சேர்ந்து பலவகை மலர்களைப் பறித்துப் பாறையிடத்தே தொகுத்த பாங்கினைக் 'குறிஞ்சிப்பாட்டு' என்னும் சங்கப் பனுவலால் அறியலாம்.[230]

மரங்களிலும், கொடிகளிலும் மலர்ந்துள்ள பல்வகையான மலர்களைப் பறித்தல், அவற்றை மாலையாகத் தொடுத்தல், கூந்தலில் அணிந்து கொள்ளல், ஆடவர்க்கு அணிவித்தல், இறைவனுக்குச் சூட்டுதல் போன்ற செயல்களை மகளிர் மேற்கொண்டனர். இளவயதில் பாவைக்குச் சூட்ட வேண்டியும், விழாக் காலத்தே அழகு செய்யும் பொருட்டும் மலர்களைக் கொய்து அணிசெய்வர்.[231] குறிஞ்சிநில மங்கையர் வேங்கை மரத்திற் பூக் கொய்ய முற்படும்பொழுது, அக்கிளை எட்டாத நிலையில் 'புலி புலி' எனக் கூவுவர் என்றும், அவ்வாறு கூவின் அதன் கிளை பூக் கொள்ள வாய்ப்பாகத் தாழ்ந்து கொடுக்கும் என்றும் அக்காலத்தில் நம்பினர். அவ்வகையில் மகளிர் வேங்கைப் பூக் கொய்யும்போது எழுப்பும் ஆரவாரத்தைச் சங்க இலக்கியங்கள் குறிப்பிட்டுள்ளன.[232] அதிரல், பாதிரி, செங்கருங்காலி ஆகிய மலர்களைக் கொய்து பூச்செப்பில் வைத்திருந்தனர் என்பதை நற்றிணை கூறுகிறது.[233]

செடி, கொடிகளை வளர்ப்பது பெண்களின் பொழுதுபோக்குகளுள் ஒன்றாகும். இச்செயல்பாடு வீட்டு வேலை நேரம் போக ஓய்வு சமயத்தில் மேற்கொள்வது மகளிருக்கு மகிழ்ச்சி நிறைந்த ஒன்றாகும். புன்னை, குவளை, நொச்சி முதலிய செடிகளை வளர்த்து அதன் வளர்ச்சி கண்டு மகிழ்ந்தனர். தான் வளர்க்கும் செடி கொடிகள் வெயில், மழை பிற எவற்றாலும் தாக்கப் படாமல் இருக்க அவற்றைத் தழைகள், மலர்கள் கொண்டு மறைத்துக் காத்தனர். செடிகட்குப் பெயர் கொடுத்து மகிழ்ந்தனர். செடி, கொடி வளர்ப்பினையொட்டிச் சில ஆசைகள் நம்பிக்கைகளையும் பெண்கள் வளர்த்துள்ளனர். உறவாகக் கருதி மகிழும் நிலையும் இருந்துள்ளது. தனது நேரடிப் பாதுகாப்பில் கவனத்தில் வளர்ப்பதை விரும்பினர். தான் வளர்த்து வரும் செடி, கொடிகளைச் சுற்றிப் பாட்டுப் பாடி, கை தட்டி மகிழும் பழக்கத்தைப் பெண்கள் மேற்கொண்டிருந்தனர்.[234]

பறவைகளையும், விலங்குகளையும் பொழுதுபோக்காக பெண்கள் வளர்த்துள்ளனர். இதனால் ஆருயிர்களையும், விரும்பி நேசிக்கும் மனப்பக்குவம் அவர்கட்கு ஏற்பட்டது. தங்களது முழு கவனத்தையும் அவற்றை வளர்ப்பதில் செலவழித்தனர். தாங்கள் வளர்க்கும் பறவைகளும், விலங்குகளும் மற்றவர்கள் வளர்ப்பதை விடச் சிறப்பாகவும், உயர்வாகவும், முதன்மைத் தன்மையாகவும் இருக்க வேண்டுமென்று கருதினர். தங்களுடைய இன்ப துன்பங்களை அவற்றிடம் பகிர்ந்து கொண்டுள்ளனர். ஏறுகோள் என்ற வீர விளையாட்டிற்குரிய எருதுகளைப் பெண்கள் வளர்த்து மகிழ்ந்தனர். குயில், மயில், புறா, மான் குட்டிகள், குரங்கு குட்டிகள் வளர்ப்புக்குரிய பறவைகள், விலங்குகளாக இருந்துள்ளன.[235]

**கள்ளுண்டு களித்திருத்தல் :**

சங்க காலத்தில் கள் குடித்தல், சமுதாயத்தில் பெருவழக்கமாக இடம்பெற்றதன் ஏதுவால், சங்க இலக்கியத்தில் கள் சிறந்த இடம் பெறுகிறது. சங்கப் பொது மக்களோ, சங்க இலக்கியப் புலவரோ கள்ளை ஒரு சமுதாயத் தீங்காக நினைக்கவில்லை. அரசன் முதல், வறுமையில் வாழும்

பாணன் வரை அனைவரும் கள்ளுண்டு களித்ததைச் சங்க இலக்கியம் பல இடங்களில் விவரிக்கிறது. கள் (அகம் 4), மட்டு (புறம் 245), தேறல் (புறம் 24), நறவு (பரி.875), நறவம் (பரி.12, 80), நாரரி (புறப்.301), கலங்கள் (புறம் 298), வெப்பர் (புறம் 269) என்பதாகக் கள்ளின் பெயர்களையும், வகைகளையும் சங்க இலக்கியம் குறிப்பிடுகிறது.

கள்ளின் இனிமையை உணர்ந்திருந்த அரசர், புலவர், பாணர் போன்ற இசைக் கலைஞரை வரவேற்றுத் தரும் விருந்தில் தவறாது கள் தருவதைச் சங்க இலக்கியம் பல இடங்களில் காட்டுகிறது. அரசன் கள்ளும் புலாலும் விருந்தாகத் தருவதைச் சங்க இலக்கியம் ஒரு பாடல் மரபாகவே கொண்டுள்ளது எனலாம்.

"மட்டு வாய் திறப்பவும் மைவிட வீழ்ப்பவும்

அட்டான் றாசைக் கொடுத்துவை பூன்சோறு"[236]

அதியமான் இறந்தபோது பாடிய கையறு நிலைப் பாடலில் சிறு சோறு, பெருஞ்சோறு இரண்டையும் குறித்ததோடு அவன் வீரர் முதலியோருக்குக் கள் வழங்கியமையும் ஒளவையார் பேசுகிறார். கள் குறைவாக இருந்தபோது அதை அதியமான் ஒளவையாருக்குக் கொடுத்து மகிழ்ந்திருக்கிறான். அதிக அளவு கள் இருந்த போது அக்கள்ளைத் தான் குடித்து ஒளவையாரைப் பாடச் சொல்லிப் பாட்டின் இனிமையோடும் கள்ளுண்ட மயக்கத்தோடும் களிப்புற்றிருக்கிறான்.[237] போர்ச் செய்திகளோடு கள்ளைச் சிறப்பாக இணைத்துச் சங்க இலக்கியம் பேசும். அரசர் வீரருக்குக் கள் தரும் காட்சியைப் பல பாடல்கள் விவரிக்கின்றன. வீரத்தைப் பாராட்டும் முறையில் அரசன் வீரனுக்குக் கலங்கலைத் தந்து நேரலைக் கொள்வான்[238] என்னும் பொருளில் ஆவியார் பாடலமைக்கிறார்.

வீரர்க்குக் கள் வழங்கும் போதும் வழிவழியாக மன்னர்க்கு உதவும் வீரர்க்குடி மறவர்க்கு முதலில் வழங்க வேண்டும் என்று மறக்குடியின் நிலையை ஒளவையார் எடுத்து மொழிகின்றார்.[239] போர் முடித்து பின் கள் குடித்து, மகிழ்ந்து உறங்கும் தலைவனை,

"கள்ளின் வாழ்த்திக் கள்ளின் வாழ்த்தி

.................. துஞ்சுவோனே"[240]

என்கிறார் கடையத்தன் வெண்ணாகனார். குன்றவர் தமது சுற்றத்தாருடன் கூடி மலை உறை தெய்வத்திற்கு வழிபாடு செய்கின்றனர். கோடையில் முற்றி முதிர்ந்து பழுத்த தேனினும் இனிய மாங்கனிகளோடு பலாச் சுளைகளையும் இட்டுத் தேனுடன் கூட்டி மூங்கில் குழாய்களிலே இட்டு வைத்து முதிர்ந்த பக்குவம் அடைந்த கள்ளினை மலைத் தெய்வத்திற்குப் படைக்கின்றனர். வழிபட்ட பின், அந்தக் கள் முதலியவற்றை மகளிர் தர உண்டு, தம்மையும் மறந்து கள்ளின் மயக்கிலே ஆழ்ந்து குன்றவர் இன்புறுகின்றனர்.[241]

சங்க காலத்தில் மன்னர்கள் மட்டுமின்றி மக்களும் விருந்தினருக்குக் கள்ளை மிகுதியாகத் தருவர் என்று சங்க இலக்கியம் காட்டுகிறது.[242]

"வெந்நீர் அரியல் விரலலை நறும்பிழி

தண்மீன் சூட்டொடு தளர்தலும் பெருகுவீர்"

"கொழு நிணத் தடியொடு கூர்நறாப் பெருகுவீர்" மலைவாழ் மக்களின் "வேய்ப் பெயல் விளையுந் தேக்கள் தேறலை" (மலைபடு 171) வருவோருக்குத் தருவதை மலைபடுகடாம் காட்டும். மகளிரும் கள்ளுண்டு மகிழ்ந்தனர் என்பதையும் சங்க இலக்கியம் காட்டுகிறது.[243]

மணமகளின் பெற்றோர் மது அருந்திவிட்டு வீட்டை அலங்கரித்து மணலைக் குவித்து, எமது மகளுக்குத் திருமணம் செய்ய நிச்சயித்துள்ளோம் என்னும் செய்தி கூறி திருமணத்தின் முன்னர் செய்யப்படும் திருமண உறுதி விழா ஒன்றும் நிகழ்த்தப்படுகிறது.[244] நடுங்கவைக்கும் குளிரையும் போக்குவதற்கு கள்ளினைக் குடித்துப் பழக்கப்பட்டிருந்தனர் சங்க காலத்தவர்.[245]

நெய்தல் நிலத்து பரதவர் உவாநாளில் கடலுக்கு மீன் பிடிக்கச் செல்லாது. நிறை மதி வேளையில் மணலில் சுறா மீனின் கொம்பினை நட்டு

அதற்கு கள் முதலிய பொருள்களை வைத்து வழிபட்டனர். பின்னர் அக்கள்ளை உண்டு மனைவி மக்களுடன் மகிழ்வோடு களிப்புற்று இருந்தனர்.[246]

தென்னை, பனை மரங்களிலிருந்து இறக்கியக் கள்ளைத் தவிர வீட்டிலேயே சமைத்த ஒருவகைக் கள் "தோப்பி" என வழங்கிற்று. பெரும்பாணாற்றுப் படையில் மறவர்கள் ஆட்டுக்கிடாயினை அறுத்து உண்டு, இல்லத்தில் சமைத்த தோப்பியைப் பருகி தண்ணுமை ஒலிக்கத் தம் வலிய தோளை உயர்த்தி ஆடுவது பேசப்படுகிறது.[247] உள்நாட்டுக் கள்ளைத் தவிர வெளிநாட்டிலிருந்து வருவித்த மதுவகைகளையும் உண்டனர். பெரும்பாலும் மன்னர்களும் செல்வர்களும் இதனையுண்டனர் எனலாம்.[248]

சங்க காலத்தில் கள் குடித்தலை அன்றாட நிகழ்வாகக் கொண்டிருந்தனர். இதனாலேயே அக்காலத்துப் புலவர்களும், சமூகமும் கள் குடித்தலை ஒரு தீங்காகக் கருதவில்லை எனலாம். கள்ளுண்டு களித்திருத்தலை அக்காலத்தில் ஆண், பெண் என்ற வேறுபாடின்றி அனைவரும் விரும்பினர்.

**முடிவுரை :**

கலையும், களிப்பும் நெருங்கிய தொடர்புடையது. களிப்புற்று இருப்பதற்காகவே கலைகள் உருவாக்கப்பட்டதும், கலைகளின் நோக்கமாகிய மக்களைக் களிப்படையச் செய்வதும், இவ்விரண்டினையும் பிண்ணிப் பிணைத்துள்ளதற்குக் காரணம் எனலாம். சங்க காலம் வீரயுகமாக ஒரு புறம் போற்றப்பட, மற்றொரு புறம் அதை ஒரு கலையுகம் என்றும் போற்றலாம்.

சங்க காலத்தில் இசைக்கலை நன்கு வளர்ச்சி பெற்றிருந்தது. ஐந்து நிலத்திற்கும் தனியே, பண், யாழ், பறை முதலியன இருந்தன. பாணர் மற்றும் பாடினிகள் இசையில் பெரும் புலமை பெற்று விளங்கினர். அரசர்களும், பொதுமக்களும் இவர்களை ஆதரித்தனர். இசைநூல்கள் பல

சங்க காலத்தில் இருந்துள்ளன. கூத்துக் கலை பல வகைப்படும். அவை பல நிலைகளில் ஆடப்பட்டன. கூத்தர், விரலியர், பொருநர் என்ற கூத்துக் கலைஞர்கள் இருந்தனர். வாழ்வில் ஒவ்வொரு நிலையிலும் கூத்து இடம் பெற்றிருப்பதைக் காண முடிகிறது. கூத்துக் கலை சார்ந்த பல நூல்கள் அக்காலத்தே இருந்துள்ளன.

தொல்காப்பியர் கூறும் எண்வகை மெய்ப்பாடுகளும் அவை தோன்றும் வழிமுறைகளும் நாடகக் கலைஞர்கள் பின்பற்ற வேண்டியவைகளாகும். இவை மக்களின் வாழ்வில் ஏற்படும் மெய்ப்பாடுகளாக இருப்பினும் வாழ்வை எதிரொலிக்கும் நடிப்புக் கலைக்கும் இவை இன்றியமையாததாக என்றென்றும் போற்றப்படும். நாடகக் கலை அரங்கு அமைத்து நடத்தப்படும். இது கூத்துக் கலையின் ஒரு வளர்ச்சி அடைந்த நிலை எனலாம்.

ஓவியக் கலை நன்கு வளர்ச்சி பெற்றதற்கான சான்றுகள் மிகுதி. அரண்மனை, கோவில், மாளிகைகள் போன்றவற்றின் சுவர்களில் ஓவியம் வரையப்பட்டன. புனையா ஓவியம், வண்ண ஓவியம் என இருவகைப்பட்டன. அரசரின் அரண்மனையில் சித்திரச் சாலை என்ற அமைப்பு இருந்தது. சுவர்ப்பாவையின் குறிப்புகள் வழி சங்க கால ஓவியக்கலை பற்றி அறியலாம்.

சங்க காலத்தில் நகர் புறப் பகுதிகளில் காணப்பட்ட வீடுகள், மாளிகை, அரண்மனை போன்றவற்றின் வழி அக்காலக் கட்டடக்கலையைப் பற்றி அறியலாம். வெந்நிற சுதைச் சுண்ணாம்பு சுவர்களால் ஆன கட்டிடங்கள் மிகப் பெரியதாகவும், விண்ணளாவிய உயர்ந்ததாகவும் காணப்பட்டன. சுவர்களில் ஓவியத்தை வரைந்தும் வீடு அரண்மனை போன்றவற்றை அழகுபடுத்தியும், அக்காலக் கட்டடக் கலையை வெளிப்படுத்தினர். அழகிய சாலரங்களும், நிலா முற்றமும் அமைக்கப்பட்டிருந்தமை கட்டடக் கலையின் வளர்ச்சிக்குச் சான்று பகர்வதாக உள்ளது. கோவில் முதலிய கட்டடங்கள் சுட்ட செங்கல்லாலும் அமைக்கப்பட்டன.

தமிழர்களிடையே காணப்பட்ட நடுகல் வழிபாடே சிற்பக்கலை வளர்ச்சிக்கு அடிப்படையாக அமைந்தது. சுதை, செங்கல், மரம் போன்றவற்றால் சங்க காலத்தில் சிற்பங்கள் உருவாக்கப்பட்டன. தெய்வங்களின் உருவ அமைப்பு பற்றி சங்க கால இலக்கியம் பல இடங்களில் பேசுவதால் அவ்வடிவங்களைச் சிற்பமாகச் செய்து அக்காலத்தில் வழிபட்டிருக்க வேண்டும் என்பது துணிவு. அரண்மணை, மாளிகை ஆகியவற்றின் வாயில்களின் நிலைகளில் சிற்ப பொம்மைகள் செதுக்கப்பட்டிருந்தன.

சங்க காலத்தில் விழாக்கள் சமூகம் சார்ந்ததும், சமயம் சார்ந்ததுமாக இருநிலைகளில் கொண்டாடப்பட்டன. மழைக்காலமும் பனி, பருவமுமில்லாத நிலையில் பெரும்பாலான விழாக்கள் கொண்டாடப்பட்டன. இரவு நேரக் கொண்டாட்டங்கள் நிலவு வெளிச்சத்தில் நடைபெற்றன. வெளியூர்களிலிருந்தும், விழாவைக் காண மக்கள் திரண்டனர். கலை நிகழ்ச்சிகளும் இதில் இடம் பெற்றன.

குழந்தைப் பருவத்தில் ஒன்றாகக் கூடி விளையாடியவர்கள் வளர்ந்த நிலையில் இருபாலரும் தனித்தனியாக விளையாண்டனர். சில சமயங்களில் சில விளையாட்டுகள் இருபாலராலும் சேர்ந்து விளையாடப்பட்டன. பந்து, பாவை போன்றவை மகளிராலும், வீர விளையாட்டுகள் ஆடவராலும், புனல் விளையாட்டு போன்றவை இரு பாலராலும் சேர்ந்து விளையாடப்பட்டன. விளையாட்டுகள் வெற்றி பெறும் நோக்கத்தோடு ஆடப்பட்டன. வென்றவருக்கு இறுதியில் பரிசு வழங்கப்பட்டது.

பண்டைய தமிழர்கள் பொழுதுபோக்குவதற்காகப் பல நிகழ்வுகளை மேற்கொண்டிருந்தனர். அவை உலாவுதல், மலர் கொய்தல் கலை நிகழ்ச்சிகள் போன்றவற்றைக் காணுதல், பறவை, விலங்குகளை வளர்த்தல், கதை கேட்டல், மற்றவர்களோடு நகையாகப் பேசி மகிழ்ந்திருத்தல் என்பனவாகும். இவை காலநேரம் போவது தெரியாமல் மக்கள் மகிழ்ச்சிக்காக மேற்கொள்ளப்பட்ட செயல்களாகும்.

அன்றாட வாழ்வில் சங்க கால மக்கள் கள்ளுண்டு கழித்திருத்தலை வழக்கமான ஒன்றாகக் கொண்டிருந்தனர். ஆடவர் மட்டுமின்றி மகளிரும் கள் குடித்து மகிழ்ந்திருந்தனர். அரசரும், மக்களும் அளிக்கும் விருந்தில் கள் இன்றியமையாத ஒன்றாக இடம் பெற்றிருந்தது.

பனை, தென்னை மரங்களிலிருந்து எடுக்கும் கள்ளைத் தவிர வெளிநாடுகளில் இருந்து இறக்குமதி செய்யப்பட்ட மதுவையும் உண்டு மகிழ்ந்தனர். மொத்தத்தில் வாழ்க்கையை வசப்படுத்திக் கொள்ள கலை நிகழ்ச்சிகளையும், களிப்பூட்டும் நிகழ்வுகளையும் சங்க காலத்தவர் மேற்கொண்டனர். இதன் விளைவு, போராட்டமாக இருந்த சங்க காலத்தவர் வாழ்வு பூந்தோட்டமாக மாறியது எனலாம்.

**சான்றெண் விளக்கம்:**


1. கு.வெ.பாலசுப்ரமணியன் சங்க இலக்கியத்தில் கலையும், கலைக் கோட்பாடும், பக்.62.

2. சிலப்பதிகாரம் 8: 64-65; 14:166-167; 22:138-139.

3. தொல்பொருள் இளம் மர. நூ.-46,47; புறம் 235, 320.

4. மயிலை சீனி. வெங்கடசாமி தமிழர் வளர்த்த அழகுக் கலைகள்-பக்.5.

5. மு.ஆ.நுண்கலைகள்-பக்.4.

6. தொல்.38

7. மதுரை 657-664

8. மலைபடு 468-470.

9. மேலது 534-536 "மருதம் பண்ணிய கருங்கோட்டுச் சீறியாழ்
நரம்புமீ திறவா துடன்புணர்ந் தொன்றிக்
கடவ தறிந்த வின்குரல் விறலியர்"

10. மேலது 358-359. "இறும்பூது கஞலிய வின்குரல் விறலியர்
நறுங்கா ரடுக்கத்துக் குறிஞ்சிப்பாடி !"

11. பெரும்பாண்.182: வில்யாழிசைக்கும் வரலாறு குறிஞ்சி

12. மதுரை 604, 620 "திவவுமெய்ந் நிறுத்தச் செல்வழி பண்ணிக்
குரல்புணர் நல்யாழ் முழவோ டொன்றி
நுண்ணி ராகுளி யிரட்டப் பலவுட்"

13. புறம் 144: 1-3" அருளா யாகலோ கொடிதே யிருள்வரச்
சீறியாழ் செவ்வழி பண்ணி யாழநின்
காரெதிர் கானம் பாடினே மாக"

14. அகம் 214: 13, 15

15. பதிற் 57: 7-9 "பாணர் கையது பணிதொடை நரம்பின்
விரல்கவர் பேரியாழ் பாலை பண்ணிக்
குரல்புண ரின்னிசைத் தழிஞ்சி பாடி"

16. மேலது 65: 14-17 "தீந்தொடை நரம்பின் பாலை வில்லோன்
பையு குறுப்பிற் பண்ணுப் பெயர்த்தாங்குச்
சேறுசெய் மாரியி னளிக்குநின்
சாறுபடு திருவி னனைமகிழானே !"

17. பொருநர். 21-22 "ஆறலைக் கள்வர் படைவிட வருளின்
மாறுதலைப் பெயர்க்கு மறுவின் பாலை"

18. பெரும்பாண்-179-180: குழலினின்றீம் பாலை

19. குறுந்.260: 1-2 "................ பிதலும்
வரிவண்டுதவாய் நெகிழ்ந் தனவே !"

20. அகம் 102: 5-9

21. புறம் 281: 5-9 "இசைமணி யெறிந்து காஞ்சி பாடி
நெடுநகர் வரைப்பிற் கடிநறை புகை இக்

22. மேலது 291: 1-4

23. மங்கள நிகண்டு பாடல் 90

24. மேலது பாடல் 91, 92

25. சிலம்பு 5: 35-37 "குழலினும் யாழினும் குரல்முதல் ஏழும்
வழுவின்றி சைத்து வழித்திறம் காட்டும்
அரும்பெறன் மரபிற் பெரும் பாணிருக்கையும்"

26. புறம் 335 "துடியன் பாணன் பறையன் கடம்பனென்
றிந்நான் கல்லது குடியு மில்லை."

27. பொருணர் 159 - 162 "எரியகைந் தன்ன வேடி றாமரை
சுரியிரும் பித்தை பொலியச் சூட்டி
நூலின் வலவா நுணங்கரின் மாலை
வாலொளி முத்தமொடு பாடினி யணிய"

28. புறம் 29: 1-5

29. புறம் 398: 18 - 29

30. சங்க இலக்கியம் சில பார்வைகள் - ப.76

31. சிலப்பதிகாரம் அடியார்க்கு நல்லார் உரைபாயிரம்

32. மலைபடு 12-13 "கார்கோட் பலவின் காய்த்துணர் கடுப்ப
நேர்சீர் சுருக்கிக் காய கலப்பையர்"

33. பெரும்பாண் 180-182; நெடுநல்-70; மதுரை-559; மலைபடு-37; பெரும்பாண்-462

34. சிறுபாண் 221-235; மலை-21-37; பெரும்பாண்-4-22; பொருநர் 4-18

35. மதுரை 327 - 328; மலைபடு 349:51.

36. மலைபடு 2:3; புறம் 15:23

"............................... பண்ணமைத்துத்
திண்வார் விசித்த முழவொடு
விசிபிணிக் கொண்ட மண்கனை முழவு"

37. பொருநர்.109 : மண்ணமை முழவு

38. மதுரை 99; "முழவுத் தோள்"
புறம் 88:6 "முழவுத் தோளென்ன"

39. மேலது 732-733; "கொல்லேற்றுப் பைந்தோல் சீவாது போர்த்த
மாக்கண் முரசம்"
புறம் 63:7; 36:12 "விசித்து வினை மாண்ட மயிர்க்கண் முரசம்"
"சிலைத்தார் முரசம்"

40. குறிஞ்சி-49; புறம் 350:4; குறுந்.322: 2-3; நற்.176:9

41. மதுரைக - 232; 672; புறம் 161:29; ஐங்.-448:1

42. புறம் 152: 17; "பதலை ஒருகண் பையென வியக்குமின்"
மலை 11; "நொடிதரு பாணிய பதலை"
குறுந்.59:1 "பதலைப் பாணப் பரிசிலர்"

43. நற்.104:4-6 "குறக்குறு மாக்கள் புகற்சியின் எறிந்த
தொண்டகச் சிறுபறைப் பாணி அயலது
பைந்தாள் செந்தினைப் படுகிளிஓப்பும்"

44. அகம்-118: 1-4 "கறங்கு வெள்ளருவி பிறங்குமலைக் கவாஅன்
தேங்கம ழிணர் வேங்கை சூடித்
தொண்டகப் பறைச்சீர் பெண்டிரோடு விரைஇ
மறுகிற் றூங்கும்."

45. மதுரை-605; 606; "நுண்ணி ராகுளி யிரட்ட"
மலை 140, 141 "................ ஆகுளிகடுப்பு
குடிஞை யிரட்டு நெடுகலை யடுக்கத்து"

46. மலை-10: கடிகவர் பொலிக்கும் வல்லெல்லரி

47. புறம் 390:8; 249:4; 398:12; பொருநர்.69:70.

48. மலைபடு-8 : விளிப்பது கவருந் தீங்குழல்

49. பெரும்பாண் - 179-180: குழலி வின்றீம் பாலை

50. நற்.113: 11; ஐங் 215:4

51. மதுரை 185; முல்லை 92; பதிற் 67:6; குறிஞ்சி 219-220; 40:14-15

52. மலைபடு 4

53. சிலம்பு; அரங்கேற்று காதை 158-159

54. அமிர்தசாகர் ப.ஆ.வி.வேணுகோபால் பிள்ளை, யாப்பெருங்கலம், பக்.737-738.

55. மலைபடு 569-570

56. சிலம்பு, அரங்கேற்று காதை 160-161.

57. புறம் 164:11-13 "பண்ணமை நரம்பின் பச்சை நல்யாழ்
மண்ணமை முழவின் வயரியர்
இன்மை தீர்க்குங் குடிப்பிறந்தோயே"

58. புறம் 29: 22-24

59. தொல்-பொருள் புறத்-நூ.63

60. பெரும்பாண்.-370-371

61. தமிழர் நாகரீகமும் பண்பாடும்; பக்.349

62. கலைக்களஞ்சியம், தொகுதி நான்கு - பக்.61

63. நெய்தல் - ஐங்-181; குறுந் 294. குறிஞ்சி மது.610-615; நற்.276, முல்லை-கள-102, மருதம்-பதி.73; அகம் 269, 336.

64. அகம் 269

65. மேலது 336

66. மலைபடு 320-322 "நறவுநாட் செய்த குறவர் தம் பெண்டிரொடு
மான்தோற் சிறுபறை கறங்கக் கல்லென
வான்தோய் மீமிசை அயரும் குரவை."

67. மதுரை 613-615 "கார்மலர்க் குறிஞ்சி சூடிக் கடம்பின்
சீர்மிகு நெடுவேட் பேணித் தழூஉப்பிணையூஉ
மன்றுதொறு நின்ற குரவை."

68. முருகு 195-197; 215-216

69. கலி.39: 26-29

70. அகம் 232: 7-10

71. நற் 276:8-10 "................ பெருமலை
வாங்கமைப் பழுநிய நறவுண்டு
வேங்கை முன்றிற் குரவையும் கண்டே."

72. புறம் 129: 1-3

73. கலி.104: 60-62; 106:31-33

74. கலி.103: 74-79 "குரவை தழீஇயா மரபுளி பாடித்
தேயா விழுப்புகழ்த் தெய்வம் பரவுது
மாசில்வான் முந்நீர் பரந்த தொன்னிலம்
ஆளும் கிழமையொடு புணர்ந்த
எங்கோ வாழியர் இம்மலர்தலை உலகே."

75. பதிற் 73: 6-8; அகம் 336: 6-9

76. அகம் 20: 7; ஐங் 181:2-3

"கொண்டல் இடுமணல் குறவை......"

"................... பொய்யா மகளிர்

குப்பை வெண்மணல் குரவை நிறூஉம்........"

77. மதுரை 96-97 "மணிப்பூ முண்டகத்து மணல் மலி கானல்

பரதவர் மகளிர் குரவையொடு ஒலிப்ப."

78. புறம் 24: 3-6

79. தொல்-பொருள்-இளம்-பறத் நூ.17: 5-6

"தேரோர்............. வென்ற கோமான் முன்தேர் குரவையும்

ஒன்றிய மரபின் பின்தேர்க் குரவையும்."

80. Tamil Lexicon, Vol.IV, p.1969

81. திவாகரம் நூ.964

82. சிலம். அடியார்க்கு நல்லார் உரை பக்.141

83. மதுரை 327-329

84. கலி-73-16-17; புறம் 24:8-9

85. குறுந். 31:2; பரி-13:5

86. மதுரை 159-160

87. பதிற்.52: 14-16

"முழாவிமிழ் துணங்கைக்குத் தழூஉப்புணையாகச்

சிலைப்புவல் லேற்றிற் றலைக்கை தந்துநீ

நளித்தனை வருதல் உடன்றனன் ஆகி"

88. கலி 66: 17-18; 70;13-14; 73:16-17

89. நற்.95: 5-7; குறிஞ்சி 193-194

90. குறுந் 7: 3-5

91. நெடுநல்.67-70

92. புறம் 33: 16-17

93. கலி-கடவுள் வாழ்த்து - 5-16

94. பெரும்பாண் - 142-146

95. முருகு 190-193

96. முருகு 322; குறுந் 53:3; 360:1; அகம்.98:18-19; 114:1-2

97. அகம் 138: 10; நற்.268: 8-9

98. பெரும்பாண்.-75; பரி.19:2

99. நற்.47: 9-10; 173:1-4; 322:10-12; அகம் 22:8-11; 138:7-13; 187:17-18

100. பொருநர்.108-110

101. மதுரை 100-105 "வேறுபல் லுருவின் விரகுதந் திரீஇ

மண்ணமை முழவின் பண்ணமை சீறியாழ்

ஒண்ணுதல் விறலியர் பாணி தூங்க..."

102. சிறுபாண்.203-206 "பொருநர்க் காயினும் புலவர்க் காயினும்

அருமறை நாவின் அந்தணர்க் காயினும்

..................................................

அடையா வாயில் !"

103. தொல்.பொருள.அகம்-56
104. தொல்.பொருள் இளம் உரை பக்.70
105. தொல்.பொருள் மெய் 247
106. மணிமேகலை 79-80
107. பெருங்கதை 37: 88-89
108. சிலம்பு அரங்கேற்று காதை 95-113.
109. பட்டினம் 113; பெரு.55
110. அவ்வை தி.க.சண்முகம் நாடகக்கலை பக்.4
111. புறம் - 378: 6: புதுப்பிறை யன்ன கதைசெய் மாடத்துப்
112. பட்டினம் - 4-8
113. நெடுநல் 60-63
114. மதுரை 352-357
115. நெடுநல் 95-97"நிலவுப் பயன் கொள்ளும் நெடுவெண் முற்றத்துக்

கிம்புரிப் பகுவாய் அம்பணம் நிறையக்

கலிழ்ந்து வீழ் அருவி..."

116. மதுரை 474: குன்று குயின்றன்ன அந்தணர் பள்ளியும்
117. பட்டினம் 49-50: வேறுபாடு வனையோவத்து வெண்கோயில்
118. நெடுநல்.75-88
119. மேலது 106-114
120. பெரும்.346-350
121. பெரும்பாண்.346-349; அகம்-187

122. பரி.19

123. மதுரை 723-724; அகம் 369: 6-8; கலி 22:5

124. புறம் 33: 16-19

125. மதுரை 1 "எண்வகைச் செய்தியும் உவமம் காட்டி
நுண்ணிதின் உணர்ந்த நுழைந்த நோக்கின்
கண்ணுள் வினைஞர்."

126. நெடுநல் 159, 166

127. நற்றிணை 118:7-8 "ஓவ மாக்கள் ஒள்ளரக் கூட்டிய
துகிலிகை யன்ன துய்த்தலைப் பாதிரி"

128. மணி 21: 115-116

129. குறுந் 198:6-7

130. முருகு - 68

131. மதுரை 412; "செந்நீர்ப் பசும்பொன் புனைந்த பாவை"
அகம் -3 "தாஇல் நன்பொன் தைஇய பாவை"

132. முல்லை 85-86; நெடுநல் 101-105

133. நெடுநல் 80-86

134. மேலது 115-135

135. தமிழர் நாகரீகமும், பண்பாடும் பக.236

136. இரா.நாகசாமி, தமிழகக் கோயில் கலைகள் - பக்.79-80

137. குறு 41:2; சிறுபாண் 201; பட்டினம் 215; புறம் 82:1

138. அகம் 206:11; 397:3; நற்றினை 293:4; அகம் 17: 19-20; குறுந் 223:12
புறம் 84:4; 65:4-5; பெரும்411.

139. அகம் 115:1 : அழியாவிழவின் அஞ்சு வரு மூவிர்

140. பட்டினம் 215; பதிற்.30: 20; நற்.90: 1-2; 348:3-4

141. குறுந்.41:1-2; நற்.390:4-6; அகம் 326:7-9; 26:1-3; 70:11-12; 385:4-7;
குறுந்.295:1-3

142. பட்டினம் 154-160

143. நற்.348: 1-4

144. நற்.200:1-4; 293:1-4

145. சிறுபாண்.200-202

146. பொருநர். 1-3 "அறா அயாணர் அகன் தலைப்பேரூர்
சாறு கழிவழிநாள் சோறு நசைஉறாது
வேறு புலம் முன்னிய விறரு அறிபொருந"

147. மதுரை 446-452

148. மேலது 431-432

149. மேலது 427-430

150. மேலது 616-618 "சேரிதோறும் .......................
உரையும் பாட்டும் ஆட்டும் விரைஇ,
வேறு வேறு கம்பலை வெறிகொள்பு மயங்கி"

151. பதிற்.65:14-15; நற்.320:1; அகம்-206:11; 397:3; மதுரை 327-329; அகம் 352:4-6;அகம் 176:14-15; புறம் 29:22-24; பதிற்.56:1-3; 29:7-10.

152. மதுரை 590-599 "மள்ளர் குழீஇய விழவி னானும்,
மகளிர் தழீஇய துணங்கையானும்,
யாண்டும் காணேன், மாண்தக்கோனை !
யானும் ஓர்ஆடுகள மகளே! என்கைக்
கோடு ஈர் இலங்க வளை நெகிழ்ந்த
வீடு கெழு குரிசிலும், ஓர் அடுகள மகனே"

153. குறுந்.31

154. அகம் 137:5-11; 4:14

155. கலி.27 "காமவேள் விழவாயின் கலங்குவள் பெரிதென
ஏமுறு கடுந்திண்டேர் கடவி
நாம் அமர் காதலர் துணை தந்தார் விரைந்தே"

156. மேலது 35 "மல்கிய வருந்தியுள் மகிழ்துணைப் புணர்ந்தவர்
வில்லவன் விழவினுள் விளையாடும் பொழுதன்றோ"

157. மேலது 30 "உறலியாம் ஒளிவாட உயர்ந்தவன் விழவினுள்
விறலிழை யவரோடு விளையாடுவான் மன்றே"

158. மதுரை 590-591 "கணங்கொள் அவுணர்க் கடந்த பொலந்தார்
மாயோன் மேய ஓண நன்னாள்"

159. நற்.202

160. அகம் 141

161. மேலது 185

162. பரி.11:74-78

163. மேலது 19

164. அகம் 368 "கொங்கர் மணியரை யாத்து மறுகின் ஆடும்
உள்ளி விழாவின் அன்ன"

165. பரி.16:11-15

166. அகம் - 368

167. மேலது 187

168. புறம் 261:1-5

169. ந.சுப்ரமணியம், சங்ககால வாழ்வியல், பக்.59-60

170. தொல்பொருள் இளம் மெய் நூ.1; ஐங்-73:2;74:2; அகம் 393:9

171. Tamil Lexicon Vol.p.3730

172. குறுந்.394:6; அகம்.302:7

173. மேலது 229:1-4

174. கலி.80: 18-19

175. சிறுபாண்.55-61.

176. தொல், சொல், பெயர் நூ.11

177. பெரும்பாண்.248:49 "தச்சச் சிறா அர் நச்சப் புனைந்த
ஊரா நற்றேர் உருட் டிய புதல்வர்"

178. பட்டினம் 24-25

179. கலி.81; குறுந்.61; பெரும்பண்.248-249

180. மலைபடு 321; நற்.104:5; குறுந்.375:4

181. கலி 51:1-4

182. அகம் 275:19

183. அகம் 110: 7-9; 90:1-2

184. கலி 111:5-9; 114:15-17; 142:24-25

185. கலி.59: 5-6

186. புறம் 235:4

187. நற். 3:2-5 "பொரியரை வேம்பின் புள்ளி நீழல்
கட்டளையன்ன வட்டரங் கிழைத்துக்
கல்லாச் சிறாஅர் நெல்லிவட் டாடும்
வில்லே ருழவர் வெம்முனைச் சீறூர்"

188. அகம் - 5:9-10

189. புறம் 52:12-15; பரி 11-55; 12-68; 18-42; அகம்-108:17

190. அகம் 1-2; 14-18; குறுந்.385:3

191. குறிஞ்சி.123-124; பதிற்.33:8-9; 45:2-3; பரி.18:40:அகம் 67:5-6; 69:16; 82:11; புறம் 3:20-22; 23:5;324:5-6

192. பட்டினம் 59-71

193. அகம் 386:9

194. கலி.103; 101:41-42; 102:9-12; 102:21-26; 103:63-64
"கொல்லேற்றுக் கோடஞ் சுவானை மறுமையும்
புல்லாளே ஆயமகள்"

195. குறுந்.396:2

196. புறம் 36:3-5; பெரும்பாண்.334-335

197. அகம் 20:5-6; கலி 131:6-11

198. மேலது 38:6-8; 68:4-9; நற்.368:2

199. கலி 37:12-18

200. அகம்.17, 49, 153; ஐங்.295, 377; குறுந்-396; நற்-140,179,305,324; பரி10:107

220. புறம் 243

221. பரி-10:90-99

222. பட்டினம் 100-101; நற்.363:10; குறுந்.303:7; பதிற்.51:7-8; கலி.136:2; அகம்-280:3

223. புறம்.24:11-16; 339:6-8; அகம் 20:8

224. கலி.94:13-16; 94:22-28

225. நற்.277:9; கலி.22-27

226. மதுரைக் 446-452

227. தொல் பொருள் - செய்யுலியல் - 348

228. பெரும்பான்.457-459

229. புறம்-152:6; குறுந்.258:5; 56:1; நெடு.128-129; புறம் 152:24; நற்-59:3; 189:7

230. குறிஞ்சி-61-98

231. புறம்-11:1-5; 243:1-3;அகம்1-3

232. அகம் 48: 6-7; 52:2-4; மதுரை 296:297; ஐங் 311.

233. நற்.337:3-6

234. அகம் 165:8-12; 259:13-15; 275:1-3; நற்.172:1-3; 179:1-2,6

235. பெரும்பாண், 52; குறுந்.3-5:3-5

236. புறம் 113

237. புறம் 233:1-5

238. மேலது 298:1-2

239. மேலது 286

240. மேலது 326

241. அகம் 348:2-10

242. நற்.165: அகம் 348:7-10, பெரும்பாண் 281-282: 345

243. பரி.7,10

244. அகம் 1:1-4

245. புறம் 304: நடுங்கு பனி கனி நரரி பருகி

*246.* பட்டினம் *90-93*

*247.* பெரும்பாண் *140-146*

*248.* புறம் *56*

# முடிவுரை

பண்டைத் தமிழரின் வாழ்வியல் களஞ்சியமாகச் சங்க இலக்கியம் திகழ்கிறது. உலகம் நிலைபெறுவதற்கு ஏதுவாய்த் திகழும் உயர்ப் பண்பாளர்களாகிய சான்றோர்களாலேயே அல்லவை தவிர்த்து நல்லவை நிலவுகிறது. இவர்களாலேயே ஒரு நாடு நன்மதிப்பைப் பெறுகிறது. பிறந்த குழந்தை தாயோடு நட்பு கொண்டு அந்நட்பு உறவினர்களுடன் வளர்ந்து உளம் ஒத்தாரோடு காதலாய் வலு பெறுகிறது. இம்மை வாழ்வில் புகழுடன் வாழ விரும்பிய தமிழர்கள் அது கிடைப்பதற்கு ஏதுவாகிய வீரத்திலும், கொடையிலும் உயர்ந்தவர்களாய் விளங்கினர். அவ்வாறே ஒழுக்க நெறிகளிலும் தலைசிறந்தவர்களாய்த் திகழ்ந்தமையைச் சங்க இலக்கியம் காட்டுகிறது.

சங்கத் தமிழர்கள் அறவுணர்வு மிக்கவர்களாக வாழ்ந்துள்ளனர். தாம் மேற்கொண்ட எச்செயலானாலும் அதனை அறத்தின் வழியிலேயே நிறைவேற்றி உள்ளனர். மனையறம் புரிதலை மகளிரும், வினையறம் புரிதலை ஆடவரும் மேற்கொண்டதால் இல்லறம் சிறந்து விளங்கியது. தனிமனித வாழ்வில் இரத்தல் இழிவாகக் கருதப்படினும் சமூக வாழ்வில் ஈகை உயர்ந்த அறமாகக் கருதப் பெற்றது. அன்பின் முதிர்ச்சியாகிய அருளுடைமையே ஈகைக்கு அடிப்படையாக அமைந்ததோடு உயிர் இரக்கத்தையும் உருவாக்கிற்று எல்லா உயிர்களிடத்தும் இறக்கம் காட்டுதல் சிறந்த அறமாகப் பண்டைத் தமிழர் கருதினர். அரச அறத்தைப் பேசுவதன் வழி செங்கோண்மையைச் சங்க இலக்கியம் வலியுறுத்தி வந்துள்ளது. மறப் பண்பிலும் அறப்பண்பை விரும்பிய தமிழர்கள் களம் கண்டும் காலம் அறிந்தும் ஒத்த வழியாரோடு போரிட்டனர். இல்லறத்தை நல்லறமாக்கியும், உலக நிலையாமையை உணர்ந்தும் கானுறைந்து காவி தரித்து இறுதியில் துறவறத்தை மேற்கொண்டு வாழ்வின் தொடக்கம் முதல் இறுதி வரை அறப்பண்பாளர்களாய் வாழ்ந்துள்ளனர்.

உறவினருக்கு உணவு முதலியன தந்து சுற்றம் போற்றலை மனையற மாண்புகளுள் ஒன்றாகச் சங்க இலக்கியம் பேசுகிறது. மேலும் விருந்தினர் உண்டு. எஞ்சிய மிச்சிலைத் தலைவி தலைவனுக்கு இட உண்ணுதலே சிறந்தது என்றும் கூறுகிறது. இத்தகைய மாட்சிமைமிக்க மனைறயம் மக்கட்பேறால் முழுமையடைகிறது. அச்சமும் நாணமும் மகளிருக்கு அணி செய்யும் மதிப்புமிக்க மாண்புகளாகும். அருந்ததியின் கற்புக்குச் சங்கக் கால மகளிர் சான்றாகத் திகழ்ந்தனர். கணவனை இழந்த மகளிர் காதல் மிகுதியால் உடன்கட்டை ஏறுதல், கைம்மை நோன்பு நோற்றல் போன்ற நெறிகளை மேற்கொண்டனர். இவை தாங்களே விரும்பி ஏற்ற நெறிகளேயன்றிச் சமூகத்தால் வலியுறுத்தப்படவில்லை.

இயற்கை வழி சார்ந்த சமூகம் தொடக்கக் காலத்தில் நிலவியது. இதுவே பின்னர் தொழில் அடிப்படையிலானதாக மாற்றம் பெற்றது. மக்கள் தாம் மேற்கொண்ட தொழிலுக்குத் தக்கவாறு சமூக மதிப்பைப் பெற்றனர். இதுவே, சமூகத்தில் ஏற்றத் தாழ்வுக்கு வழிவகுத்தது. தொழிற் பிரிவுகளே வருண, சாதிப் பாகுபாடுகளுக்குக் காரணமாக அமைந்தன. எனினும் சங்கக் காலத்தில் கடுமையான பிரிவினைகளும் வருண சாதி வெறியும் காணப்பட வில்லை. கல்வியும் பொருளாதாரமுமே சமூக மதிப்பைத் தீர்மானித்தன. இயற்கை சார்ந்த வழி பாட்டில் வருணப் பகுப்பும், சாதிய நெறிகளும் கலந்து சமயங்கள் தோன்றின. சங்க காலத்தில் வைதீக, சமண, பௌத்த, சமயப் பிரிவுகள் காணப்பட்டன. முருகன், சிவன், திருமால், இந்திரன், கொற்றவை உள்ளிட்ட பெருந் தெய்வங்களையும், மழை, காடு, நீர்த்துறை, கருவிகள், வீடுகள் உள்ளிட்ட பொருள்களில் உறையும் சிறுதெய்வங்களையும், நடுகல்லையும் சங்கக்கால மக்கள் வழிபட்டனர். அச்சம் தரக்கூடிய அனைத்துச் சக்திகளையும் தெய்வமாக வழிபட்டனர். சமயப் பிரிவுகள் தோன்றி வாதங்கள் நிகழ்ந்ததேயன்றி வெறுப்புணர்ச்சியோ, வன்முறைகளோ நிகழ இடம் கொடுக்கவில்லை. இம்மை, மறுமை பற்றிய எண்ணங்களும், நிலையாமைக் கருத்துகளும் சமயப் பிரிவுகளால் சமூகத்தில்

தோற்றுவிக்கப்பட்டன. ஆவி, பேய், நிமித்தம் போன்ற பல நம்பிக்கைகள் மக்களிடையே அக்காலத்தில் நிலவின.

பண்டைத் தமிழர்கள் தாம் வாழும் நிலப்பகுதியில் கிடைக்கும் பொருள்களைச் சமைத்து உண்டனர். தங்கள் தகுதிக்கேற்ப உடையணிந்த சங்க காலத்தவர்கள் பருத்தி, பட்டு, உரோமம் போன்றவற்றில் ஆடைகளைத் தயாரித்துக் கொண்டனர். சிறியவர் முதல் பெரியவர் வரை வேறுபாடின்றிப் பல அணிகளை அணிந்தனர். சிறு குடிசைகள், வீடுகள், அரண்மனைகள் பற்றிப் பல குறிப்புகள் சங்க இலக்கியத்தில் கிடைக்கின்றன. வாழ்வியல் ஆதாரங்களைப் பொருத்தே வாழ்க்கையின் போக்கு அமைந்திருந்தது. இனக்குழு வாழ்க்கை முறையின் எச்சங்கள் சங்க இலக்கியத்தில் காணப்படுகின்றன. அவற்றை அடிப்படையாகக் கொண்டு சங்க காலம் அதற்கு முற்பட்ட காலங்களின் வாழ்க்கைப் போக்கினை அறிய முடிகிறது.

பண்டைத் தமிழரின் பண்பாட்டைப் பறைசாற்றுவதில் கலையும், களிப்பூட்டும் நிகழ்வுகளும் பெரும்பங்காற்றுகின்றன. இசைக்கலை நன்கு வளர்ச்சியடைந்திருந்தது. ஐந்து நிலங்களுக்கும் தனித்தனியே பண்ணும், இசைக்கருவிகளும் இருந்தன. கூத்துக்கலை பல வகைப்படும். அவை பல நிலைகளில் ஆடப்பட்டன. கோயில், அரண்மனை, மாளிகை போன்றவற்றின் சுவர்களில் ஓவியம் வரையப்பட்டிருந்தன.

தமிழர்களிடையே காணப்பட்ட நடுகல் வழிபாடு சிற்பக்கலை தோன்ற வழிவகுத்தது. அகன்ற, நீண்ட, நெடிய வீதிகளின் இருமருங்கிலும் குன்றுகளொத்த உயர்ந்த கட்டடங்கள் காணப்பட்டன. இவை அக்காலக் கட்டடக் கலை வளர்ச்சியைக் காட்டுகின்றன. சங்கக் காலத்தில் சமூக அடிப்படையிலும், சமய அடிப்படையிலும் விழாக்கள் கொண்டாடப்பட்டன. குழந்தைப் பருவத்தில் பாலின வேறுபாடின்றி விளையாடியவர்கள் வளர்ந்த நிலையில் தனித்தனியாகவும் சில விளையாட்டுகளைச் சேர்ந்தும் விளையாடினர்.

சங்க இலக்கியம் பண்டைத் தமிழர்களின் பண்பாட்டுக் கருவூலமாகத் திகழ்கிறது. தனிமனித நடத்தை குடும்ப மேம்பாட்டுக்கும் மனையற மாண்புகள் சமூகக் கட்டமைப்பு சிறக்கவும், துணை புரிவதைச் சங்க இலக்கியம் தெளிவாகக் காட்டுகிறது. சமய நெறிகள், உணவு, உடை, அணிகள், உறையுள், கலை போன்றவைத் தமிழரின் பண்பாட்டு முறைகளை வெளிப்படுத்துகின்றன. சங்க இலக்கியம் அக்கால நிகழ்வுகளை உயர்வு நவிர்ச்சியின்றி உள்ளது உள்ளபடி உண்மைநிலையைப் பதிவு செய்துள்ளது. இரண்டாயிரம் ஆண்டுகளுக்குப் பிறகும் சங்க இலக்கியம் நிலைபெற்றுத் திகழ்வதற்கு இத்தகைய உண்மைத் தன்மையே காரணமாகும்.

# துணைநூற்பட்டியல்

1. அகநானூறு (களற்றியானை நிறை) - ந.மு.வேங்கடசாமி ரா.வேங்கடாசலம் பிள்ளை உரை, சை.சி.நூ.கழகம், சென்னை, முதற்பதிப்பு, 1947.

2. அகநானூறு (மணிமிடை பவளம்) - பொ.வே.சோமசுந்தரனார் உரை, சை.சி.நூ.கழகம், சென்னை, சை.சி.நூ.கழகம், சென்னை, இரண்டாம் பதிப்பு, 1949.

3. அகநானூறு (நித்திலக்கோவை) - பொ.வே.சோமசுந்தரனார் உரை, சை.சி.நூ.கழகம், சென்னை, மறுபதிப்பு, 1979.

4. ஐங்குறுநூறு - பொ.வே.சோமசுந்தரனார் உரை, சை.சி.நூ.கழகம், சென்னை, மறுபதிப்பு, 1979.

5. கலித்தொகை - நச்சினார்க்கினிய் உரையும், இ.வை.அனந்தராமையர் (பதி), தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர், 1984.

6. குறுந்தொகை - உ.வே.சாமிநாதைய் உரை, அண்ணாமலைப் பல்கலைக்கழக வெளியீடு, அண்ணாமலை நகர், முதற்பதிப்பு, 1983.

7. நற்றிணை - பின்னத்தூர் அ.நாராயணசாமி ஐயர் உரை.சை.ச.நூ.கழகம், சென்னை. ஐந்தாம் பதிப்பு, 1979.

8. பத்துப்பாட்டு - நச்சினார்க்கினியர் உரையும், உ.வே.சாமிநாதையர் பதிப்பு, தமிழ்ப் பல்கலைக்கழக வெளியீடு, தஞ்சாவூர், 1986.

9. பதிற்றுப்பத்து - விளக்க உரையும், ஔவை சு.துரைசாமிப் பிள்ளை உரை, சை.சி.நூ.கழகம், சென்னை, மூன்றாம் பதிப்பு, 1958.

10. பரிபாடல் - பெருமழைப்புலவர் பொ.வே.சோமசுந்தரனார் உரை, சை.சி.நூ.கழகம், சென்னை, மறுபதிப்பு, 1975.

11. புறநானூறு - உ.வே.சாமிநாதையர் பதிப்பு, தமிழ்ப் பல்கலைக்கழக வெளியீடு, தஞ்சாவூர், 1985.

## துணைமை ஆதாரங்கள்

### அ. இலக்கண நூல்கள்

1. திவாகரம் - கழக வெளியீடு, சென்னை, 1958

2. தொல்காப்பியம் - சொல்லதிகாரம், சேனாவரையம் அண்ணாமலைப் பல்கலைக்கழகம், அண்ணாமலை நகர், சிதம்பரம், 1996.

3. தொல்காப்பியம் - பொருளதிகாரம், இளம்பூரணர் உரை, சை.சி.நூ.கழகம், லிமிட்டெட், 154, டி.டி.டி. கே.சாலை, சென்னை-600 018.

4. தொல்காப்பியம் - பொருளதிகாரம், நச்சினார்க்கினியர் உரை, சை.சி.நூ.கழகம், சென்னை, 1979.

5. சிறுபஞ்சமூலம் (காரி ஆசான்) - வையாபுரிப்பிள்ளை பதிப்பு, சென்னை, 1944.

6. நம்பியகப்பொருள் - சை.சி.நூ.கழகம், சென்னை, 1979.

7. *பிங்கள நிகண்டு* - *பிங்கள முனிவர், கழக வெளியீடு, சென்னை, 1978*

8. *யாப்பருங்கலம்* - பதிப்பாசிரியர், வித்வான் வி.வேணுகோபால் பிள்ளை, உலத்தமிழ் ஆராய்ச்சி நிறுவனம், சென்னை, மறுபதிப்பு -1998.

**ஆ. இலக்கிய நூல்கள்**

1. சிலப்பதிகாரம் - மூலமும் அரும்பதவுரையும் அடியார்க்கு நல்லார் உரையும், உ.வே.சா.பதிப்பு, தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர், பத்தாம் பதிப்பு - 1985.

2. திருக்குறள் - பரிமேலழகர் உரை.சை.சி.நூ.கழகம், சென்னை – 1967

3. திரிகடுகம் (நல்லாதனார்) - வையபுரிப்பிள்ளை பதிப்பு, சென்னை, 1944

4. திருவாசகம் - ஸ்ரீராமகிருட்டிண தபோவன வெளியீடு 83, திருப்பராய்த்துறை – 1985.

5. நாலடியார் உரைவளம் - தஞ்சை சரசுவதி மகால் வெளியீடு, 59, இரண்டாம் பதிப்பு, 1990

6. நாலாயிரம் திவ்ய பிரபந்தம் - தி லிட்டில் பிளவர் கம்பெனி, சென்னை – 17

7. பெருங்கதை மகாமகோபாத்யாய - உ.வே.சாமிநாதையார், நூல்நிலையம் திருவாண்மியூர், சென்னை-41, நான்காம் பதிப்பு – மார்ச் - 1968

8. மணிமேகலை - உ.வே.சாமிநாதையார் பதிப்பு, சென்னை, ஏழாம்பதிப்பு- 1981

**இ. இலக்கிய ஆய்வு நூல்கள்**


1. இராகவன், அ. - தமிழ்நாட்டு அணிகலன்கள், கலைநூற் பதிப்பகம், பாளையங்கோட்டை, முதற்பதிப்பு – 1970

2. இராசமாணிக்கனார் மா. - தமிழ் மொழி இலக்கிய வரலாறு, பாரி நிலையம் சென்னை – 1969

3. மு.ஆ.பத்துப்பாட்டு - சென்னை பல்கலைக்கழகம் சென்னை, முதற்பதிப்பு – 1970.

4. இராமகிருட்டிணன்.ஆ. - அகத்திணை மாந்தர் - ஓர் ஆய்வு, சர்வோதய இலக்கியப்பண்ணை, மதுரை, முதற்பதிப்பு – 1982

5. இராமகிருட்டிணன் - இந்தியப்பண்பாடும் தமிழரும், மீனாட்சி புத்தக நிலையம், மதுரை, முதற்பதிப்பு – 1971

6. இராமச்சந்திரன் - தமிழ்நாட்டு வரலாறு சங்ககாலம், அரசியல் ஆட்சிமுறை, தமிழ்வளர்ச்சித்துறை சென்னை -1983.

7. இராமானுஜசார்யார் - மனுதர்ம சாஸ்திரம், ஸ்ரீபாரதி பதிப்பகம், சென்னை – 1924

8. இளவழகனார் - பண்டைத்தமிழர் இன்பியல் வாழ்க்கை, சை.சி.நூ.கழகம், சென்னை, முதற்பதிப்பு - 1945.

9. கனகசபை - வி.ஆயிரத்தெண்ணூறு ஆண்டுகட்கு முற்பட்ட தமிழகம், கா.அப்பாதுரை (மொ.பெ) சைவசித்தாந்த நூற் பதிப்புக்கழகம் - 1973

10. கந்தசாமி சோ.ந.பௌத்தம்- சென்னைப் பல்கலைக்கழகம் - 1977

11. குளோரியா சந்தரமதி - பகுப்பாய்வு நெறியில் சங்க இலக்கியம், உலகத்தமிழ்க் கல்வி இயக்கம், சென்னை, முதற் பதிப்பு, 1987

12. கைலாசபதி.க - ஒப்பியல் இலக்கியம், சென்னை, புக் ஹவுஸ், சென்னை, மூன்றாம் பதிப்பு, 1982

13. சசிவல்லி.வி.சி. - தமிழர் திருமணம் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, முதற்பதிப்பு – 1985.

14. சஞ்சீவி.ந. - சங்க இலக்கிய ஆராய்ச்சி அட்டவணைகள், சென்னை பல்கலைக்கழகம், சென்னை, முதற் பதிப்பு – 1973

15. சண்முகம் - அவ்வை தி.க.நாடகக்கலை, அண்ணாமலைப் பல்கலைக் கழகம், அண்ணாமலைநகர், 1957.

16. சிவகாமசுந்தரி.சு. - சங்க இலக்கிய விளையாட்டுக் களஞ்சியம், நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை முதற்பதிப்பு – 1995.

17. சுப்ரமணியப்பிள்ளை, கா. - தமிழர் சமயம், வை.சண்முக முதலியார் வெளியீடு, வானியம்பாடி, முதற்பதிப்பு-1940

18. சுப்பிரமணியன் கா. - சங்ககால சமுதாயம் நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை முதற்பதிப்பு 1982.

19. சுப்பிரமணியன் ந. - சங்ககால வாழ்வியல் நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை முதற்பதிப்பு 1986.

20. சுப்புரெட்டியார்.ந. - அகத்திணைக் கொள்கைகள், நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை, முதற்பதிப்பு 1981

21. தட்சிணாமூர்த்தி. ஆ., - தமிழர் நாகரிகமும் பண்பாடும், வெற்றிச்செல்வி வெளியீட்டகம், தஞ்சாவூர், இரண்டாம் பதிப்பு – 1980.

22. தமிழ்நாட்டு வரலாற்றுக்குழு- தமிழ்நாட்டு வரலாறு (சங்ககாலம்-வாழ்வியல்) தமிழ்நாட்டு பாடநூல் நிறுவனம், சென்னை, முதற்பதிப்பு – 1983.

23. திலகவதி.க. - சங்ககால மகளிர் வாழ்வியல் இறையருள் பதிப்பகம் 4/237 முதல்தெரு சக்தி நகர், காட்டூர், திருச்சிராப்பள்ளி 620019. முதற்பதிப்பு – 2001

24. தேவநேயன் நா. - பண்டைத் தமிழக நாகரிகமும் பண்பாடும். நேசமணி பதிப்பகம், காட்டுப்பாடி விரிவு – முதற்பதிப்பு – 1966.

25. நாகசாமி.இரா., - தமிழகக் கோயிற் சாலைகள், தமிழ்நாட்டு அரசு தொல்பொருள் ஆய்வுத்துறை வெளியீடு, இரண்டாம் பதிப்பு-1976.

26. நீலகண்ட சாஸ்திரி.கே.ஏ.,- சோழகர்கள் பகுதி ஒன்று, நியூ, செஞ்சுரி, புக் ஹவுஸ், சென்னை, 1989.

27. பகவதி.தமிழர் ஆடைகள் - உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, முதற்பதிப்பு, 1980

28. பாஸ்கல் கிஸ்பர்ட்.எஸ்.ஜே - (தமிழாக்கம் : ஜெ நாராயணன்), சமூகவியலின் அடிப்படைக் கோட்பாடுகள், தமிழ் வெளியீட்டுக் கழகம், தமிழ்நாடு – 1964.

29. பாலசுப்ரமணியன் கு.வே. - சங்கஇலக்கியத்தில் சமூக அமைப்புகள், தமிழ்ப் பல்கலைக்கழகம், முதற் பதிப்பு – 1994.

30. பாலசுப்ரமணியன்.சி. - கட்டுரைவளம், நறுமலர்ப் பதிப்பகம் சென்னை, முதற்பதிப்பு – 1966

31. - - சங்க இலக்கியம் சில பார்வைகள், நறுமலர்ப் பதிப்பகம், சென்னை, முதற்பதிப்பு – 1989.

32. - - சங்ககால மகளிர், பாரி நிலையம், சென்னை, முதற்பதிப்பு 1983

33. பிள்ளை-கே-கே- - தமிழக வரலாறு-மக்களும் பண்பாடும், தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம், சென்னை – 1974.

34. மாணிக்கம் வ.சுப., - தமிழ்க் காதல், பாரிநிலையம், சென்னை முதற்பதிப்பு – 1962.

35. மாரியப்பன், - தமிழக வரலாறு – ஒரு சமூக பொருளாதாரக் கண்ணோட்டம், காவ்யா, பெங்களூர், 1984.

36. முத்துலக்குமி. வே. - பண்பாட்டுச் சிந்தனைகள் அனிதா - பதிப்பகம் 63

37. வரதராசன்.மு.., - ஓவச் செய்தி – பாரிநிலையம், சென்னை நான்காம் பதிப்பு – 1963.

38. வரதராசன் வெ. - தமிழரின் ஒப்பணைக் கலைத்திறன், தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர், முற்பதிப்பு – 1986.

39. வெள்ளைவாரணன், க., - சங்ககாலத் தமிழ் மக்கள், நே'னல் பப்ளிகேசன் கம்பெனி, சென்னை, முதற்பதிப்பு – 1948.

40. வேங்கடசாமி - மயிலை-சீனி.தமிழர் வளர்த்த அழகுக் கலைகள், பாரிநிலையம், சென்னை, மூன்றாம் பதிப்பு – 1969.

41. - - மு.ஆ.நுண்கலைகள் மணிவாசகா நூலகம், சென்னை இரண்டாம் பதிப்பு 1972.

42. வையாபுரிப்பிள்ளை எஸ். - தமிழ் இலக்கிய சரிதத்தில் காவிய காலம், தமிழ் புத்தகாலயம், சென்னை, முதற்பதிப்பு- 1957.

43. மு.ஆ.தமிழர் பண்பாடு - தமிழர் புத்தகாலயம், சென்னை - 1974.

**ஆங்கில நூல்கள்**

1. Altekar, A.S., - State and Government in Ancient India, Motilal Banarsidass, Delhi, 1977

2. Basham, A.L. - The wonder that was India, Macmilian, New York – 1954

3. Bhargava.P.L. - Fundamentals of Hindusm Munshiram Monoharlal, Delhi – 1982.

4. Devid Dressler - Sociology, Alfred knople (Ed.) New York – 1976.

5. John .M. - Shepard Sociology West Publishing Company, New York – 1960

6. Kaidasabathi.K., - Tamil Heroic Poetry, The Clarendon Press, Oxford – 1968.

7. Kanakasabai.V. – The Tamils Eighteen Hundred Years Ago Published by Kazhagam, Madras, Third Edition – 1966.

8. Kandaswamy S.N. - Buddhism as Expanded in Manimekalai, Annamalai University, 1978.

9. Krishnaswamy Iyengar's - Beginning of South India History, Madras – 1918.

10. Mahadevan C.K. - Cultural Heritage of Ancient Tamil's, Co. New Delhi, XII-1971.

11. Narendranath Law, - Aspect of Ancient Indian Polity, Gian Publishing House, Delhi, 1986.

12. Nilakanta Sastri.K.A., - A History of South India, Oxford University Press, Madras – 1955.

13. Nilakanta Sastri - The Pondiyan Kindom, Swathi Publications, II A.Sriram Nagar, North Street, Madras – 18, 1972.

14. Panikar.K.M. - Geographical Factors in Indian History, Bhartiya Vidya Bhavan, Bombay – 1955.

15. Pillay, K.K.A. - Social History of the Tamils Part I University of Madras, 1969

16. Ramachandra Dikshithar, V.R.- Studies in Tamil Literature and History London, 1930.

17. Sanjeevi, N. - Critical Study of Purananuru, Unpublished M.Litt. Tesis, University of Madras, 1969.

18. Sharma, R.N. - Ancient Indian According to Manu Nag Publisher's, New Delhi – 1980

19. Sivathamby, K. - Drama in Ancient Tamil Sociely, M.C.B.H., Madras, I – 1981.

20. Smith.V.A. - Early History Cholas of India, Ramanand Vidya Bhavan, New Delhi.

21. Smith, V.A. - The Early History of India, Oxford at He Clarendon Press, Amen House London, Fourth Tuficorin – 1957.

22. Srinivasa Iyengar, P.T. - History of the Tamils upto 600 A.D. C.Koomaraswamy & Sons, Madras – 1929.

23. Srinivasa Iyengar, P.T., - The Age of Imperial Unity Bharatiya Vidya Bhavan, Bombay – 1953.

24. Subramanian, N. - Sangam Polity Ennes Publication, Madras – 1980.

25. Suda.J.P. - Religion in India Sterling Publisher's, New Delhi – 1978.

26. William.A. - Hailand Cultural Anthro Peiology University of Vermout U.T.A. 1975.

27. Wilbdurent - The Life of Greace, Simon & Schuster, New York, 1966.

28. Xavier Taminayagam - Nature in Ancient Tamil Poetr, P.I. International Institute of Tamil's Studies, Chennai – 1997.

களஞ்சியங்கள் _ அகராதிகள்

1. கலைக்களஞ்சியம் - தொகுதி நான்கு, தமிழ் வளர்ச்சிக் கழகம், சென்னை, 1956.

2. கழகத் தமிழ் அகராதி - திருநெல்வேலி தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட் 154.டி.டி.கே.சாலை சென்னை – 600018-19ம் பதிப்பு 2004.

3. வாழ்வியற் களஞ்சியம் - தொகுதி எட்டு, தமிழ் பல்கலைக்கழகம் தஞ்சாவூர், 1991.

4. Tamil Lexicon, vol II, IV, VI - University of Madras, 1982.

5. The New Encyclopaedia Britannica micropaedia - Vol.IX, University of Chicago, 1981.

6. The Oxford English Dictionary - Vol, IX, oxford university press London, 1961.

## ஆய்வேடுகள்


1. இராமராசா.ஜ - தமிழ் இலக்கியத்தில் ஊடல் முனைவர்ப்பட்ட ஆய்வேடு, மதுரை காமராசர் பல்கலைக்கழகம், மதுரை, அக்டோபர் 1990.

2. பாலசுப்ரமணியன்,கு.வெ. - சங்க இலக்கியத்தில் கலையும், கலைக் கோட்பாடும், திட்டப்பணி ஆய்வேடு, தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர்,1990